# கீதா மகரந்தம்

சுவாமி வித்யா பிரகாஸானந்தா

தமிழாக்கம்:

பேராசிரியர். கே. சர்வோத்தம ராவ்




திருமலை திருப்பதி தேவஸ்தானம் வெளியீடு.

# கீதா மகரந்தம்

[சுவாமி வித்யா பிரகாஸானந்தா]

## இரண்டாம் பகுதி

(2, 3, 4, 5 அத்தியாயங்கள்)

தமிழாக்கம்:

*பேராசிரியர். கே. சர்வோத்தம ராவ்*



திருமலை திருப்பதி தேவஸ்தானம்,

திருப்பதி.

GITA MAKARANDAM - Vol. II
By
SWAMY VIDYAPRAKASHANANDA

Tamil Translation :
Dr. K. SARVOTHAMA RAO

T.T.D. Religious publication Series No. 575



T.T.D. First Edition :1999

Copies : 2,000

Price :

Cover Page Art: Sri P. Narayanagiri Dattu

Published by :
Dr. I.V. Subba Rao, I.A.S.,
Executive Officer,
Tirumala Tirupati Devasthanams,
Tirupati.

Printed at :
Students Offset Printers
Tirupati.

# பதிப்புரை

"எதனைத் தின்றால் பித்தம் தெளியும்" என்ற நிலையில் மனிதன் இன்று விளங்குகின்றான். ஆம், பிரச்சனைகளே அவனது வாழ்க்கையாக விளங்கிவிட்டது. எது பிரச்சனை? பிரச்சனைகளுக்கு யார் காரணம்? பிரச்சனைகள் தீர வழி என்ன? எனும் கேள்விகளை மனிதன் ஒருநாளும் நடுவுநிலையில் நின்று தன்னைக் கேட்டுக் கொண்டதில்லை. அதுபோது அவனே அவனுக்கு ஒரு பிரச்சனையாகத் திகழ்கின்றான்! அவ்வாறின்றி ஒருமுறை அமைதியாக அவன் தன்னைப்பற்றி அறிந்து கொள்ள முயற்சித்தானாயின் வாழ்க்கை அவனுக்கு ஒரு பூந்தோட்டமாக விளங்கிவிடும். அன்பு, இரக்கம், தியாகம், பொறுமை, கடமை, நேர்மை எனும் பண்புக்கூறுகள் அவனுள் இல்லாவிட்டால், அவற்றை தன்னுள் வளர்த்துக் கொள்ளாவிட்டால் பொறாமை, கோபம், ஏமாற்றம், தோல்வி ஆகியனவே அவனிடம் குடிகொள்ளும். இதனால் உறவுகள் கசந்திடும்; காண்பனவும், கேட்பனவும் எரிச்சலையே தரும். இறுதியில் இவற்றின் விளைவாக அவன் பிறர்க்கும் தனக்கும் பிரச்சனைகளின் மொத்த உருவமாக இருந்திடுவான்.

ஏதோ மனிதனின் பிரச்சனைகள் இந்த யுகத்தில் மட்டுமே ஏற்பட்டன என்பது இல்லை. உலகம் தோன்றியது முதல், அவனுள் ஆசைகள் பிறந்ததுமுதல், அவ் ஆசைகளை அடக்கத்தவறியது முதல் பிரச்சனைகள் தோன்றின என்றே கூறவேண்டும். ஆம் ஆசைகளை அடக்கத்தவறியதால் கடமையை மறந்தான்; கோபத்தைத் துறக்க மறந்ததால், பெருமையை இழந்தான்; அன்பினைக் காட்டத் தவறியதால் வன்முறைக்கு வழிதந்தான். இதனால் தவறுகளை செய்து கொண்டே போக, சுயநலத்திற்கு அடிமையாகி தீவிரவாதத்திற்குத் துணையாகி ஏமாற்றங்களுக்கு இருப்பிடமாகி இறுதியில் அவன் ஒரு 'சமூக பிரச்சினை'யாக விளங்கி விட்டான்.

அத்தகு மனிதனை திருத்திடும்வகையில் அவனுள் இறைநம்பிக்கையினையும், தன்னம்பிக்கையினையும், கடமை உணர்வினையும் விளங்கச் செய்து அவனுக்குத் தியாகத்தின் பெருமையினையும், அன்பின் அருமையினையும், தொண்டின் சீர்மையினையும், ஆன்றோர் மற்றும் சான்றோர் நட்பின் அவசியத்தையும் உணர்த்தி அவன் தன் பிறவி பயனுள்ளதாகத் திகழவே அக்கண்ணபெருமான் 'கீதை' எனும் வாழ்க்கை இலக்கண அமுதினை, போர்க்களத்தில் கடமையை மறந்து, பாசத்திற்கும் இடையில் அகப்பட்டு அமைதி இழந்து, குழப்பத்தின் உச்சியில் இருந்த அர்ச்சுனனுக்கு உபதேசிக்கும் முகத்தான், நமக்கு அளித்துள்ளான்.

அத்தகு பெருமைமிகு கீதைக்குக் காலம் காலமாக ஆசார்யர்களும், அடியார்களும் , அறிஞர்களும் பல மொழிகளில் பல விளக்கவுரைகளை வழங்கி அக்கீதைக்கு உயர்வு தந்து தங்களை இனங்காட்டிக் கொண்டனர்.

இனிப்பு என்றாலே நமக்கு உடன் நினைவுக்கு வருவது தேன் ஆகும். பல மலர்களிலிருந்து சேகரித்துப் பெறப் படும் தேன் ஒரு மருந்தாகவும் பயன்படுகிறது. அதை உண்பதற்கு வயது வரம்பில்லை. அத்தகு தேனாக - இந்து சமயத்தேனாக - ஒப்பற்ற ஆன்மீகத்தேனாக - வாழ்க்கை இலக்கணத் தேனாக கீதைக்கு ஓர் அருமையான விளக்கவுரையினை 'கீதா மகரந்தம்' எனும் தலைப்பில், திருப்பதி அடுத்துள்ள திருக்காளத்தி நகரை ஒட்டி ஓடிடும் ஸ்வர்ணமுகி நதிக்கரையில் அமைந்துள்ள ஸ்ரீசுகப்பிரம்ம ஆஸ்ரமத்தின் ஸ்தாபகரும், அதன் தலைவருமாக விளங்கி ஒப்பற்ற சமயத்தொண்டினைத் தன் இறுதி மூச்சு உள்ள வரை மேற்கொண்டு, அண்மையில் மறைந்த ஸ்ரீவித்யா பிரகாஸானந்த சுவாமிகள் நமக்கு வழங்கி, அதனால் படித்து அறிந்து நாம் உயர்ந்திட, நமக்கு ஓர் அரிய வாய்ப்பினை நல்கியுள்ளார். அவர்தம் மூல நூலான இத்தெலுங்கு கீதா மகரந்தத்தினை டாக்டர். எம். சர்வோத்தமராவ் அவர்கள் தமிழில் தெளிவாகவும், எளிமையாகவும் மொழிபெயர்த்து

தமிழர்களின் 'கீதா தாகத்'தினை தீர்த்து வைத்துள்ளார் எனில் அது மிகையாகாது. இந்நூலுக்கு நூலாசிரியர் தந்துள்ள முன்னுரையே ஒரு நூல் அளவில் வெளியிடும் அளவிற்கு கீதையின் பெருமையும், சிறப்பும் பரக்கப்பேசப் பெற்றுள்ளன. கீதை எனும் மாளிகையின் அடித்தளமாக சுவாமிகளின் முன்னுரை அமைந்துள்ளது.

வேதங்களின் சாரமாகத் திகழ்ந்திடும் கீதையின் பெருமை பேசும் இக்கீதா மகரந்தம் எனும் இந்நூலினை திருப்பதி தேவஸ்தானம் தன் வெளியீடாக வெளிக்கொணர்வதில் மிகவும் பெருமிதம் கொள்கிறது. ஒவ்வொரு தமிழர் வீட்டிலும் இருக்கவேண்டிய இந்நூலினை அனைவரும் பெற்றுப் பயன்பெறுவார்களேயாயின் அதுவே தி.தி. தேவஸ்தானம் தனது சமய நூல் வெளியீட்டுப் பணியில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டதில் முழு வெற்றி அடைந்துள்ளது என்றே கருதும்.

செயலாட்சித்தலைவர்
திருமலை திருப்பதி தேவஸ்தானம்

# கீதா மகரந்தம்

## இரண்டாம் அத்தியாயம்

## சாங்கிய யோகம்

**இந்த அத்தியாயத்தின் பெயர் விளக்கம்:**

'சாங்கிய யோகம்', சங்கியம் எனில் எண்ணிக்கை. எண்ணிக்கையுடன் கூடியது சாங்கியம். சாங்கியம் என்றால் ஞானம், ஞான விசாரணையில், அநாத்மா சம்பந்தமானவை எவை என எண்ணிக்கை செய்வதால், எண்ணிக்கையை பயன்படுத்துவதால் சாங்கியம் எனப்பட்டது. இயற்கையில் உள்ள 24 தத்துவங்கள் அல்லது 96 தத்துவங்களை நன்றாக சோதித்துப் பார்த்து அவை அநாத்மா ரூபம் என்று உணர்ந்து அவற்றிற்கு சாட்சியாய் நிற்கும் பரமாத்மாவை பற்றுவதே சாங்கிய வித்தை; ஆத்மா, அநாத்மா விவேக உருவான விஞ்ஞானமே சாங்கியம். இந்த அத்தியாயத்தில் ஆத்ம சொரூபம் நன்கு வர்ணிக்கப்படுவதாலும், ஐம்பூதங்களால் ஏற்பட்ட தேகத்தின் அழிவு விளக்கப்படுவதாலும் ஞானத்தின். தொடர்புடைய அம்சங்கள் மிகுதியாக சொல்லப்படுவதாலும் இதற்கு சாங்கிய யோகமென்ற பெயர் வந்தது.

**இந்த அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள முக்கியமான விஷயங்கள்:**

1. அர்ஜுனன் தனது மானசீகஉபாதையை ஸ்ரீ கிருஷ்ண பரமாத்வாவிற்கு எடுத்துக் கூறி, அதற்கான நிவாரண முறைகளைக் கேட்டல். (1 -10) வரை.
2. ஆன்ம சொரூப வர்ணனை (11 முதல் 30 வரை)
3. க்ஷத்திரிய தர்மத்தை அனுசரித்து யுத்தம் செய்வது அவசியம் என நிரூபித்தல் (31 முதல் 38 வரை)
4. நிஷ்காம கர்மயோகத்தைப் பற்றியது (39 முதல் 53 வரை)
5. ஸ்திதப்ரக்ஞனின் இலட்சணங்கள், அவனின் மகிமை (54 முதல் 72 வரை)

**முதல் அத்தியாயத்திற்கும் இவ்வத்தியாயத்திற்குமுள்ள தொடர்பு:**

ஸ்ரீகிருஷ்ணர் அர்ஜுனனின் ரதத்தை இரண்டு சேனைக்களுக்கிடையில் நிறுத்தவும், கண்ணெதிரில் அணிவகுத்து நின்ற சுற்றத்தாரைக்கண்டு சோகம் நிறைந்து, அவர்களை எவ்வாறு கொல்வேன் என்று மனத்தில் அச்சம் கொண்டு காண்டீபத்தை நழுவவிட்டு ரதத்தின் மேல் சோர்ந்து

அமர்ந்தமை இதற்கு முன் அத்தியாயத்தில் கூறப்பட்டது. அர்ஜுனனின் தீனமான நிலைமையைக் கண்டு ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா இவ்வத்தியாயத்தில் அவனுக்கு தைரியத்தை உண்டாக்குவதற்காக ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை, கர்மரகசியத்தைப் போதிக்கிறார்.

**முன்னுரை :**

அர்ஜுனனின் மனநிலையை வர்ணித்து ஸஞ்சயன் இந்த அத்தியாயத்தைத் தொடங்குகிறார்.

**ஸஞ்சயஉவாச:**

**1. தம்ததா க்ருபயா ஆவிஷ்டமச்ருபூர்ணாகுலேக்ஷணம் ।**
**விஷீதந்தமிதம் வாக்யமுவாச மதுசூதனஹ ॥** (1)

ஸஞ்சயன் சொன்னது :

**கருத்துரை :**

ததா - அங்ஙனம்; க்ருபயா - இரக்கத்துடன், ஆவிஷ்டம் கூடியவனாய் உள்ள: அச்ருபூர்ண ஆகுலாக்ஷணம் - நீர் நிறைந்து பார்வை குறைந்த கண்களுடன் காணப்பட்டவனும், விஷீதந்தம் - துக்கித்துக் கொண்டிருப்பவனும் தம் அந்த அர்ஜுனனைக் குறித்து, மதுசூதனஹ - மதுசூதனன் (ஸ்ரீ கிருஷ்ணர்), இதம் வாக்யம் -இந்த (சொல்லப்போகிற) வாக்கியத்தை, உவாச - சொன்னார்.

**கருத்துரை :**

இவ்வாறாக இரக்கம் மேலிட்டு கண்களில் நீர்நிறைந்தவனாய், துக்கப்பட்டுக் கொண்டிருந்த அர்ஜுனனைப் பார்த்து ஸ்ரீகிருஷ்ணர் இவ்வாறு சொன்னார்.

**விளக்கம் :**

'அச்ருபூர்ணாகுலேக்ஷணம்' - தீவிரமான வைராக்யம் நிறைந்தவனின் இயல்பு இவ்வாறாகவே இருக்கும். இவ்வுலக போகங்களின் மீது, காட்சிப் பொருள்களின் மீது விரக்தி ஏற்பட்டு, சம்சாரத்தின் மீது வெறுப்பு தோன்றி அவனின் கண்களில் தாரை தாரையாக கண்ணீர் பெருகி வழிந்தோடும். இவ்வுலக வைபவங்கள் பெரும் பாரமாக தோன்றும். இத்தகைய நிலையே அர்ஜுனனுக்கு ஏற்பட்டது. பிரம்மோபதேசத்திற்கு இத்தகைய வைராக்கியம் ஒரு தேவையான தகுதி.இது இல்லாதவனுக்கு

ஆன்மீக வித்தை போதிக்கப்பட்டாலும் அசுத்தமான துணியில் சாயம் ஏற்றியதைப் போல் பலன் இன்றிப் போகும். ஸ்ரீகிருஷ்ணர் சொல்லப்போகிற ஆன்மீக தர்ம உபதேசனைக்கு அர்ஜுனன் (இத்தகைய வைராக்கியம் மேற்கொண்டதால்) தகுதியைப் பெற்றவனாகிறான் என்பது தெளிவு.

''க்ருபயா ஆவிஷ்டம்'' - கிருபை, தயை, இரக்கம், இவை நற்குணங்களே. ஆயின் காட்டத்தகாதவர்கள் மேல் இரக்கம் காட்டிய போதும், காட்டக்கூடாத சமயத்தில் காட்டினாலே அது பலன் இன்றிப்போகும். பொருந்தாத இடத்தில் நட்பும் காருண்யமும் பயன் இல்லாதவை. அதர்மத்திற்குப் பேர் போனவர்களின் மீது அர்ஜுனன் இரக்கத்தைக் காண்பித்தான். இது யுத்த தர்மத்திற்கு மாறானது. எனவேதான் 'இத்தகைய இரக்கம், இத்தகையோர்களிடம் இந்த சமயத்தில் காட்டுதல் தகாது' என்பதும், க்ஷத்திரிய தர்மத்தின. வழி செயலாற்றுமாறும் அர்ஜுனனுக்கு போதிக்கப் படுகின்றது. 'மதுசூதனன்', 'மது' என்ற அரக்கனைக் கொன்றதால் ஸ்ரீ கிருஷ்ணருக்கு அந்தப் பெயர் ஏற்பட்டது. (மது வென்றால் தேன் என்பது பொருள். அஹங்காரம், சப்தாதி விஷயங்கள், காட்சிப் பொருள்கள், போகங்கள் இவை தேனைப் போன்றே முதலில் இனிப்பாகத் தோன்றும். கடைசியில் விஷம் போன்றே பாதிக்கும். எனவே, அவற்றை ஒதுக்குதல் வேண்டும். அதுவே மதுசூதனத்வம், அத்தகைய மதுசூதனத்வம் பொருந்தியவனே பரமாத்மாவை சேரத் தகுதியானவன்).

**முன்னுரை :**

அர்ஜுனனின் தீனமான நிலையைக் கண்டு ஸ்ரீ கிருஷ்ணர் அவனுக்கு தைரியத்தை ஊட்டுகிறார்.

**ஸ்ரீ பகவானுவாச :**

**2. குதஸ்த்வா கச்மலமிதம் விஷமே ஸமுபஸ்திதம் !**
**அனார்யஜுஷ்டமஸ்வர்க்யமகீர்த்திகரமர்ஜுன !! (2)**

ஸ்ரீ பகவானுவாச - பகவான் ஆன ஸ்ரீ கிருஷ்ணர் சொன்னது.

**சொற்பொருள் :**

அர்ஜுன - ஏ அர்ஜுனா ! - அனார்யஜுஷ்டம் - பாமரர்களிடத்தே காணப்படும். அஸ்வர்க்யம் - சுவர்க்கத்தை அடைவதற்குத் தடையாவதும்; அபகீர்த்திகரம் - இழிவை ஏற்படுத்துவது; இதம் - இந்த, கச்மலம் - (மோஹம்) மனக்கலக்கம் விஷமே - இந்த மாதிரியான நெருக்கடியில் த்வா -

உன்னை குதஹ - எங்கிருந்து (அல்லது எந்த காரணத்தினால்), ஸமுபஸ்திதம் - அடைந்தது?

**கருத்துரை :**

ஸ்ரீ கிருஷ்ண பக்வான் சொன்னார் - 'ஏ அர்ஜுனா!, பாமரர்களே பின்பற்றுவதும், சுவர்க்கத்திற்குத் தடையாவதும், இழிவை ஏற்படுத்துவதுமான இந்த மோஹம் இந்த நெருக்கடியான சமயத்தில் உனக்கு எங்கிருந்து வந்தது?

**விளக்கம் :**

''கச்மலமிதம்'' கோழைத்தனம், சோகம், மனக்கலக்கம், முதலியவற்றை 'கச்மலம்' - (அழுக்குகள்) என்கிறார். சரீரத்திற்கு அசுத்தம் ஏற்படுவதைப் போல் மனதிற்கு சோகம், மோஹம், விருப்பு, வெறுப்பு போன்ற அழுக்குகள் பற்றுவதுண்டு. தேகம் மீதான அழுக்குகளை 'சோப்' () கடலைமாவு முதலியவற்றால் தேய்த்துக் கழுவி போக்குவதைப் போல் மனவழுக்குகளை பரமார்த்த போதனையால் சுத்தம் செய்து கொள்ள வேண்டும். அர்ஜுனனின் இவ்வழுக்குகள் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்வாவின் திவ்யஞான உபதேசத்தால் போக்கப்படுகிறது. அவ்வாறே ஒவ்வொருவருவரும் அவரவர் சித்தத்தைப் பரிசோதித்துக் கொண்டு அஞ்ஞானம் எனும் அழுக்கினை கீதா பிரபோதம் எனும் துடைப்பத்தால் துடைத்து எறிதல் வேண்டும்.

''அனார்யஜுஷ்டம்'' - இவ்வுலகில் இரண்டு பகுதியினரே உள்ளர். அவர்கள் ஆரியர்கள், ஆரியல்லாதவர் (அனார்யர்கள்) சன்மார்க்கத்தைப் பின்பற்றுபவர். புனிதமானவற்றையே பற்றுபவர், ஒளியை விரும்புவோர், தைர்யம், உற்சாகம், இவை கொண்டோர் ஆரியர், துன்மார்க்கத்தைப் பின்பற்றுவோர், புனிதமற்றவை, கெட்டவை, உலகில் இருளையே பரப்புவோர். அதைரியம், உற்சாகமின்மை, நிரந்தரமான பயம், இவை கொண்டிருப்போர் ஆரியர் அல்லாதார், நாம் ஆரியரா ஆரியல்லாதாரா என ஒவ்வொருவரும் தமக்குத்தாமே வினா எழுப்பிக் கொண்டு ஆரியராக இருப்பதற்கே முயல வேண்டும்.

**வினா :**

அதைரியம், சோகம், பீதி இத்தகைய கெட்ட குணங்கள் எத்தகையவை?

**விடை :**

(1) அவை மனதில் அழுக்கு, (2) ஆரியரல்லாதாரால் போற்றப்படுவது (3) ஸ்வர்க்க முதலான உத்தம லோகங்களுக்குத் தடையாவது. (4) இகழ்வை ஏற்படுத்துவது.

**3. க்லைப்யம் மா ஸ்ம கமஹ பார்த்த நைதத் த்வய்யுபபத்யதே!**
**க்ஷுத்ரம் ஹ்ருதயதௌர்பல்யம் த்யக்த்வோத்திஷ்ட பரந்தப!! (3)**

**சொற்பொருள்:**

*பார்த்த ! - ஏ அர்ஜுனா ! க்லைப்யம் - அதைரியம், மா ஸ்ம கமஹ - அடையாதே, ஏதத் - இது, த்வயி - நின்னிடத்து ந உபபத்யதே - பொருந்தாது, பரந்தப - எதிரிகளை தவிக்கச் செய்யும். அர்ஜுனா ! க்ஷுத்ரம் - இழிவான, ஹ்ருதய தௌர்பல்யம் - மனத் தளர்ச்சியை, த்யக்த்வா - விடுத்து, உத்திஷ்ட - (யுத்தத்திற்கு) எழுந்திரு.*

**கருத்துரை:**

*அர்ஜுனனே! அதைரியத்தை அடையாதே! இது உனக்குத் தகாது. இழிவான இம் மனத் தளர்ச்சியை விடுத்து யுத்தத்திற்கு எழுந்து புறப்படு.*

**விளக்கவுரை:**

*'க்லைப்யம்' - எனின் அலித்வம், ஆண்மையற்றமை, கோழைத்தனம், அதைரியம், 'இதனை நீ அடையாதே' என்று பகவான் அர்ஜுனனை எச்சரிக்கின்றார். அதைரியம் மிகுந்த கீழ்த்தரமான பண்பு. ஆதலால் 'க்லைப்யம்' (அலித்வம்) என்று அதனை வர்ணித்து, அதனைக் கடைப்பிடித்ததால் அர்ஜுனனை பகவான் ஏளனம் செய்கிறார்.*

*நற்குணங்களில் தைரியம், பயமின்மை இவை மிகவும் முக்கியமானவை. அவை இருந்தால் மற்றைய நற்குணங்கள் யாவும் தாமே வந்து சேரும். எனவேதான் பகவான் கீதை 16ஆவது அத்தியாயத்தின் ஆரம்பத்தில் 26 நற்குணங்களை பெயரிட்டு முதலில் 'அபயம்' பயமின்மை என நற்குணங்களின் அரசனாக பயமின்மையை வர்ணிக்கின்றார். "அபயம் ஸத்வஸம் சுத்திர் ஞானயோக வ்யவஸ்திதிஹ"! (16-1).*

**உத்ஸாஹம் ஸாஹஸம் தைர்யம் புத்திஸ்ஸக்திஹ் பராக்ரமஹ**
**ஷடேதே யத்ர திஷ்டன்தி தத்ர தேவோ அபிதிஷ்டதி.**

உற்சாகம், சாகசம்,' தைரியம், நற்குணம், சக்தி, பராக்கிரமம் என்ற இவ்வாறு குணங்கள் எங்கு இருக்கின்றதோ, அங்கு சாக்ஷாத் பகவானே இருக்கிறார் எனப் பெரியோர்கள் சொல்வர். அவ்வாறில்லையெனின் ஸ்ரீ கிருஷ்ணர் கீதையில் 'ஓம்' என்று ஆரம்பிக்கையிலேயே எதற்காக தைரியம் என்ற நற்குணத்தை வலியுறுத்த வேண்டும்? பகவான் தன் திருவாயைத் திறந்தவுடனேயே அவரது முகார விந்தத்தினின்றும் பயமின்மை என்ற மந்திரம் வெளிப்பட்டது. கீதாச்சார்யன் பல தத்துவங்களையும் கூறக் கருதி முதன் முதலாக பயமின்மை போதிப்பதைப் பார்க்க இதில் ஏதோ சிறந்த மகத்துவம் பொதிந்துள்ளது என்பது நிச்சயமாகிறது. அர்ஜுனனின் நோய் மிகத் தீவிரமானது. அதைக் கண்டு ஸ்ரீ கிருஷ்ணர் எனும் வைத்தியர் தன் மருந்துப் பெட்டியில் வைத்துள்ள பலவிதமான மருந்துகளில் பயமின்மை எனும் ராமபான ஔஷதத்தையே முதன்முதலில் பிரயோகித்தார். அஞ்ஞானத்தினால் ஏற்பட்ட மனத் தளர்ச்சியே அர்ஜுனனின் வியாதி, ஆத்ம ஞானத்தினின்றும் திறக்கும் மிக்க தைரியமே கிருஷ்ணரின் ஔஷதம்.

**"உத்திஷ்ட" - உத்திஷ்டத ! ஜாக்ரத ! ப்ராப்ய வராந்நிபோதத'-**

'எழுந்திரு ! விழித்துக்கொள் ! மகனீயர்களை அடைந்து ஞானத்தை பெறு ', - என்று உபநிடதங்கள் கோஷிக்கின்றன. அவ்வாறே பகவான், 'எழுந்திரு ! செயலில் தீரன் ஆகுக ! உன் கடமையை ஆற்று' என்று அர்ஜுனனை இங்கு எச்சரிக்கிறார்.

'பரந்தப' - ஏ அர்ஜுனா ! நீ இதுவரை எத்தனையோ எதிரிகளை புறங்கண்டாய். அவர்கள் அனைவரும் உனக்கு வெளிப்படையான எதிரிகள். இப்போது உன் உள் எதிரிகளான சோகமோகங்கள், அதைரியம், மனத்தளர்ச்சி இவற்றைக் கூட வெற்றிகாண்பாய்', என்று 'பரந்தப' என்ற இச்சொல்லால் குறிப்பாகச் சொல்கிறார்.

**முன்னுரை:**

*ஸ்ரீ கிருஷ்ணரின் இப்போதனையைக் கேட்ட அர்ஜுனன் தன் பழைய நிலையையே பற்றிக்கொண்டு அதனையே வெளிப்படுத்தி, பீஷ்மர், துரோணாச்சாரியர்களை எதிர்ப்பது பாவத்திற்குக் காரணமாகாதா என்று கேட்கிறான்.*

**அர்ஜுன உவாச:-**

**4. கதம் பீஷ்மஹம் ஸங்க்யே த்ரோணம் ச மதுசூதன।**
**இஷுபிஹ் ப்ரதியோத்ஸ்யாமி பூஜார்ஹாவரிஸூதன॥ (4)**

**சொற்பொருள்:**

*அரிசூதன - பகைவரை நசித்துப் போகச் செய்யும், மதுசூதன - ஏ கிருஷ்ணா ! பூஜார்ஹௌ - பூஜிக்கத் தகுந்தவர்களாகிய, பீஷ்ம - பீஷ்மரையும், துரோணம் ச - துரோணரையும், ஸங்க்யே - யுத்தத்தில், அஹம் - நான், இஷுபிஹ் - பாணங்களால், கதம் - எவ்வாறு, ப்ரதியோத் ஸ்யாமி - எதிர்த்துப் போர் புரிவேன்?*

**கருத்துரை:**

*ஓ கிருஷ்ணா ! பீஷ்ம துரோணர் இருவரும் பூஜிக்கத் தக்கவர்கள். அவர்கள் மேல் நான் எவ்வாறு பாணங்களை எய்தி யுத்தம் புரிவேன்?*

**விளக்கவுரை:**

*எதிரிகள் பக்கத்தில் சேர்ந்திருந்தாலும் பீஷ்ம துரோணர்கள் மீது அர்ஜுனனுக்கு மிகுந்த மரியாதை, பக்தி உள்ளது என்பது இச் சுலோகத்தினால் தெரிகின்றது.*

**5. குரூனஹத்வா ஹி மஹானுபாவான்**
**ச்ரேயோ போக்தும் பைக்ஷ்யமபீஹ லோகே।**
**ஹத்வார்த்தகாமாம்ஸ்து குரூனிஹைவ**
**புஞ்ஜீய போகான் ருதிரப்ரதிக்தான்॥ (5)**

**சொற்பொருள்:**

*மஹானுபாவான் - மேன்மை பொருந்திய, குரூன் - ஆசார்யார்களை, அஹத்வா - கொல்லாமல், இஹலோகே - இவ்வுலகில், பைக்ஷ்யம்அபி - பிக்ஷை அன்னம் கூட, போக்தும் - புசிப்பது, சிரேயஹஹி - நிச்சயமாக நல்லதல்லவா? குரூன் - குருமார்களை, ஹத்வா து - கொன்றால், இஹைவ - இவ்வுலகிலேயே, ருதிரப்திக்தான் - ரத்தத்தால் பூசப்பட்ட, அர்த்த காமான் - அர்த்த காமங்களான (தன சம்பத்து, காமிய வஸ்துக்களையும்) போகான் - போகங்களையும் புஞ்ஜீய - அனுபவிப்பவானாவேன்.*

**விளக்கம்:**

*'குரூன் மஹானுபாவான்' துரோணாச்சாரியார், கிருபாச்சாரியார் முதலிய குருமார்கள்; பீஷ்மர், பாஹிகர், சோமதத்தர், பூரிசிரவஸ், சல்யார் முதலிய மகனீயர்கள் என்று பொருள்.*

**6. ந சைதத் வித்மஹ கதாந்நோ கரீயோ**
**யத்வா ஜயேம யதிவா நோ ஜயேயுஹ॥**
**யாநேவ ஹத்வா ந ஜிஜீவிஷாமஸ்**
**தேஅவஸ்திதாஹ ப்ரமுகே தார்தராஷ்ட்ராஹா॥ (6)**

**சொற்பொருள்:**

*நஹ - எங்களுக்கு கதரத் - எது, கிரீயஹ - மேலானதோ, ஏதத் ச - இதை கூட; ந வித்மஹ - நாம் அறியோம் ; ஜயேம மத்வா - (நாம்) ஜயிப்போமோ: (அல்லது) நஹ - நம்மை, ஜயேயுஹ - (அவர்களே) ஜயிப்பார்களோ; யான் - எவரை; ஹத்வா - கொன்று: ந ஜிஜீவிஷாமஹ - உயிர் வாழ விரும்ப மாட்டோமே; தே தார்த்தராஷ்ட்ராஹா ஏவ - அத்தகைய திருதராஷ்டிரர் சம்பந்தமான பீஷ்மர் முதலானோர், ப்ரமுகே - எதிரில் அவஸ்திதாஹா - நின்று கொண்டிருக்கிறார்கள்.*

**கருத்துரை:**

மேலும், இந்த யுத்தத்தில் நாம் வெற்றி காண்போமோ அல்லது அவர்களே வெற்றி அடைவார்களோ என்பதை நாம் சொல்ல முடியாது. இவை இரண்டிலும் நமக்கு எது மேன்மையானது என்பதும் நமக்குத் தெரியாது. எவரைக் கொன்று நாம் வாழ விரும்பமாட்டோமோ, அத்தகைய பீஷ்மர் முதலானோர் யுத்தத்தில் நமக்கு எதிராக நின்றுள்ளனர்.

**முன்னுரை:**

தனது கடமை என்பது அறியாமல் அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ணரை சரணடைகிறான்.

**7. கார்பண்யதோஷோபஹதஸ்வபாவஹ**
**ப்ருச்சாமி த்வாம் தர்மஸம்மூடசேதாஹ|**
**யச்ச்ரேயஹ ஸ்யாந்நிஸ்சிதம் ப்ரூஹி தன்மே**
**சிஷ்யஸ்தே அஹம் சாதி மாம் த்வாம் ப்ரபன்னம்|| (7)**

**சொற்பொருள்:**

கார்பண்ய தோஷ உபஹதஸ்வபாவ - கார்பண்யம் என்ற தோஷத்தினால் கெட்டுப் போன தன்மையையுடைய (நான்), தர்மஸம்மூட சேதாஹ, தர்மவிஷயத்தில் குழப்பங் கொண்ட மனத்தையுடையவனாய் த்வாம் - உம்மை, ப்ருச்சாமி - கேட்கிறேன், யத் - எது, நிச்சிதம் - நிச்சயமான, ச்ரேயஹ - சிறந்தது, ஸ்யாத் - ஆகுமோ; தத் - அதனை, மே - எனக்கு, ப்ரூஹி - சொல்லுங்கள், அஹம் - நான், தே - உமக்கு, சிஷ்யஹ - சிஷ்யன், த்வாம் - உம்மை, ப்ரபன்னம் - சரணமடைந்த, மாம் - என்னை, சாதி - உபதேசித்தருளும்.

**கருத்துரை:**

(ஏ கிருஷ்ண!) ஆத்மஞான சூன்யம் எனும் தோஷத்தினால் சூழப்பெற்ற நான் தர்மத்தினை அறியாது, சந்தேகமடைந்து நின்னைக் கேட்கிறேன். எனக்கு எது நிச்சயமாக மேன்மை

தரக் கூடியதோ அதனைச் சொல்வீராக !- நான் உமது சிஷ்யன்; உம்மை சரணடைந்த என்னை (இவ்வாறு நடந்துகொள் என்று) உபதேசித்தருளும்.

**விளக்கம்:**

***'கார்பண்ய தோஷம்'***

'க்ருபணம்' என்றால் ஏழ்மை என்பது சாதாரணமான பொருள். ஆத்மஞானம் இல்லாதவன் என்பது இன்னு மொருபொருள். 'யோவாஏநதகாரம் கார்ப்பண்ய விதித்வா அஸ்மாஸ்லோகாதைசக்ருபணஹ? (பிரம்ம "உபநிஷத் -3-8-10) முதலில் சொன்ன பொருள் அர்ஜுனனுக்குப் பொருந்தாது. ஏனெனில் அர்ஜுனனுக்கு ஏழ்மை என்பதில்லை. எனவே கார்பண்யம் என்றால் உபநிடத்தில் சொல்லப்பட்டவாறு ஆத்மஞானம் இல்லாமை, அல்லது ஆத்மஞானம் என்றே இங்கு பொருள் கொள்ள வேண்டும்'.

முதல் அத்தியாயத்தில் பெரும்பாலும் அர்ஜுனனின் கூற்றே இடம் பெற்றது. அச்சமயத்தில் ஸ்ரீ கிருஷ்ணர் ஏதும் பேசவில்லை. அர்ஜுனனே அனைத்தும் தெரிந்தவன் போல தர்மங்களை பகவானின் முன் எடுத்துக் கூறினான்.

'நாப்ருஷ்டஹ 'கஸ்ய த்ருப்பயாத்' என்றபடி கேட்டவுடன் ஏன் சொல்ல வேண்டும் என்றே என்னவோ ஸ்ரீ கிருஷ்ணர் அதன்பிறகும் மௌனமாக இருந்து விட்டார். அர்ஜுனன் மேன்மை பொருந்தியவன் ஆதலால் தன் நிலையை உடனேயே உணர்ந்து இனிதான் உபன்யாசம் செய்வதால் பலன் ஏதுமில்லை என்று தன் நிலையிலிருந்து இறங்கி வந்து பகவானிடம் சரணடைந்தான். சரணாகதி ஒன்றே தன் குழம்பிய மன நிலையில் சரியான வழி யென்று நினைத்தான். சிஷ்யன் என்ற பாவனையை அப்போதே ஏற்றுக் கொண்டான்.

சிஷ்யன் எந்த அளவு பணிவுடன் இருக்கின்றானோ அந்த அளவு குருவிற்கு அவன் மேல் அன்பு ஏற்படும். எனவே அர்ஜுனன் எப்போது பிரபத்தியின் வழி,

சரணாகதியின் வழி, ஆத்மார்ப்பணம் வழி தன் சிஷ்யதர்மத்தை பின்பற்றினானோ, அப்போதே ஸ்ரீகிருஷ்ணர் தன் குருதர்மத்தை பின்பற்றினார். நன்முறையில் ஆன்மீக போதனையால் அவனைக் கடைத்தேற்றினார். அர்ஜுனன் சிஷ்யன் என்ற நிலையை ஏற்றுக் கொண்டிராவிட்டால், கிருஷ்ணரும் குரு என்ற நிலையை ஏற்றுக் கொண்டிருக்கமாட்டார், நமக்கு கீதையும் கிடைத்திருக்காது. எனவே தனது ஆத்மார்ப்பணத்தினால் உலகிற்குப் பேருபகாரம் செய்தவனாகிறான். முமுக்ஷுக்கள் அனைவரும் கீதையில் தெரிவிக்கப்பட்டுள்ள இந்த குரு சிஷ்ய நியாயத்தை நன்றாக தெரிந்து கொண்டு மேன்மையுற வேண்டும்.

"உபஹதஸ்பாவஹ" - ஒவ்வொருவரின் இயல்பும் உண்மையில் நிர்மலமானதே, ஆயின் இயற்கையான தோஷங்களால் அது தாக்கப்பட்டு மறைந்து போகிறது ,சிலருக்கு காமம் என்ற தோஷத்தால் தாக்கப்படுகிறது, சிலருக்கு குரோதத்தால் தாக்கப்படுகிறது, ஆயின் அர்ஜுனனுக்கு க்ருபணத்வம் (அஞ்ஞானம்) என்ற தோஷத்தால் சித்தம் தாக்கப்பட்டு தர்ம அதர்மம் எது என்ற அறிவாற்றல் இல்லாது போகிறது. தன் நிர்மலமான இயல்பு தோஷங்களால் குறைபட்டுப் போனாலும், விவேகமற்றோர் அத்தோஷங்களைப் போக்குவதற்கு எவ்வித முயற்சியும் செய்வதில்லை. அர்ஜுனன் அவ்வாறின்றி, தன் சித்தத்தில் இருந்த தோஷத்தை உடனேஅறிந்து கொண்டு அதனைச் சரிப்படுத்த வழியென்ன என்பதை ஆலோசிக்கிறான். அது என்ன வழி? சத்குருவைச் சேர்வதே, எவர் அந்த குரு? ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவே, அர்ஜுனன் அந்த கணத்திலேயே பகவானிடம் சரணடைந்து 'நான் உம் சிஷ்யன்;' எனக்கு உபதேசிப்பீராக' என வேண்டிக் கொண்டான். ஸ்ரீகிருஷ்ணரின் அடி பணிந்தான். அகங்காரத்தை விடுத்தான். தலை வணங்கினான். பரமார்த்த நிலையில் முன்னேறுவதற்கு இது ஒன்றே வழி, 'அஹம்' (நான்) என்ற நிலையை கைவிட்டு. சத்குருவினைச் சேர்வதே சம்சாரக் கடலைத் தாண்டுவதற்கு

ஒரேவழி. சத்குருவெனும் படகோட்டியின் ஆதரவு கிடைத்துவிட்டால் அவன் பவமெனும் சாகரத்தை எளிதாக தாண்ட வியலும். எனவே முமுக்ஷுக்கள் அனைவரும் அர்ஜுனனைப் போன்று சத்குருவினிடம் பணிவுடன் சென்று ஆத்ம ஞானம் பெற்று, ஜன்மஈடேற்றம் அடைதல் வேண்டும்.

**முன்னுரை:**

அத்தகைய சரணாகதி தவிர தன் மனக்கலக்கத்தைப் போக்குவதற்கு வேறு வழி எதுவும் தனக்குத் தோன்றவில்லை என அர்ஜுனன் எடுத்துரைக்கிறான்.

**8. நஹி ப்ரபச்யாமி மமாபனுத்யாத்**
**யச்சோகமுச்சோஷமிந்த்ரியாணாம்।**

**அவாப்ய பூமாவஸபத்னம்ருத்தம்**
**ராஜ்யம் ஸுராணாமபி சாதிபத்யம்॥ (8)**

**சொற்பொருள்:**

பூமௌ - பூமண்டலத்தில், அஸபத்னம் - எதிரிகள் இல்லாத, ருத்தம் - நிறைவானதாகயுள்ள, ராஜ்யம் - ராஜ்யத்தையும் (மற்றும்) சுராணாம் - தேவர்களுக்கும் ஆதிபத்யம் - அதிபதியாய் இருப்பதையும், அவாப்ய அபி - அடைந்த பிறகும், இந்த்ரியாணாம் - இந்திரியங்களுடைய, உச்சோஷணம் - மிகுந்த தாபத்தை எரிக்கின்ற, மம என்னுடைய, சோகம் - துக்கத்தை, யத் - எதுவும், அபனுத்யாத் - போக்கடிக்கும், (தத் - அதனை) ந ப்ரபச்யாமி - காண்பதற்கு இயலாதவனாய் இருக்கின்றேன் அல்லவா?

**கருத்துரை:**

இப்பூவுலகில், எதிரிகளேயில்லாத, நிறைந்துள்ள ராஜ்யத்தையும், (ஸ்வர்கத்தில்) தேவர்களுக்கு அதிபதியாய் இருக்கும். பேறு பெறினும், இந்திரியங்களை எரித்துப் பொசுக்கி அழிக்கின்ற என் துன்பத்தை எதுவும் போக்கும் என்று தோன்றவில்லை.

**விளக்கம்:**

வெளியுலகில் எத்துணை ஐசுவரியங்கள், அதிகாரம், பதவி இவற்றை அடைந்தாலும், அது மனிதனின் மனத்தில் உள்ள கலக்கத்தைப் போக்கக்கூடியதல்ல, மனோவியாதியை அவை தீர்ப்பதில்லை, எனவே பூலோகம், ஸ்வர்க்கலோக (அதிபதித்வம்) தலைமைப் பதவி இரண்டும் சேர்ந்தாலும் தன் மனத்துக்கத்திற்கு நிவாரணம் அளிக்காது என்று அர்ஜுனன் சொல்கிறான், மனோவியாதிக்கு ஆத்மஞான மொன்றே பரமஔஷதம், அதனையே அர்ஜுனனுக்கு பகவான் அளிக்கப் போகிறார். எனவே இவ்வுலகில் ஒவ்வொருவரும் சம்பாதித்துக் கொள்ள வேண்டியது வெளியுலக வசதிகள், பதவிகள், போகங்கள் அன்று என்றும், ஆத்ம விஞ்ஞானமே என்றும் தெளிவாகிறது.

**முன்னுரை:**

இவ்வாறு சொல்லி கடைசியில் அர்ஜுனன் என்ன செய்தான் என சஞ்சயன் சொல்கிறார்.

**ஸஞ்சய உவாச:**

**9. ஏவமுக்த்வா ஹ்ருஷீகேசம் குடாகேசஹ பரந்தபஹ।**
**ந யோத்ஸ்ய இதி கோவிந்தமுக்த் வா தூஷ்ணீம் பபூவஹ॥ (9)**

ஸஞ்சய உவாச - ஸஞ்சயன் சொன்னது।

**சொற்பொருள்:**

பரந்தப - பகைவரை வாட்டுபவனான; குடாகேசஹ - அர்ஜுனன், ஹ்ருஷீகேசம் - ஸ்ரீகிருஷ்ணரிடம், ஏவம் - இவ்வாறாக, உக்த்வா - சொல்லி, ந யோத்ஸ்யே - யுத்தம் செய்யேன், இதி - என்று கோவிந்தம் - (அந்த) கிருஷ்ண பரமாத்மாவிற்கு, உக்த்வா - சொல்லிவிட்டு, தூஷ்ணீம் பபூவ ஹ - பேசாது இருந்தான்.

**கருத்துரை:**

இவ்விதமாக அர்ஜுனன் ஸ்ரீகிருஷ்ணருக்குச் சொல்லி, 'நான் யுத்தம் செய்யேன்' என்று சொல்லிவிட்டு வாளா இருந்தான்.

**முன்னுரை:**

அதன்பிறகு ஸ்ரீ கிருஷ்ணர் என்ன செய்தார் என்பதை சஞ்சயன் கூறுகிறார்'.

**10. தமுவாச ஹ்ருஷீகேசஹ் - ப்ரஹஸன்னிவ பாரத|**
**ஸேனயோருபயோர்மத்யே விஷீதந்தமிதம் வசஹ|| - (10)**

**சொற்பொருள் :**

பாரத! - ஏ திரிதராஷ்டிரரே! உபயோஹோ - சேனயோஹோ - இரண்டு சேனைகளுக்கும்; மத்யே - இடையில், விஷீதந்தம் - விசனப்படுகிற, தம் - அந்த அர்ஜுனனைக் குறித்து, ஹ்ருஷீ கேசஹ - ஸ்ரீ கிருஷ்ணர், ப்ரஹஸன் இவ - சிரிப்பவர் போல், இதம் வசஹ - இங்கு சொல்லப் போகும் வாக்கியத்தை, உவாச - சொன்னார்.

**கருத்துரை:**

திரிதராஷ்டிர மகாராஜா! இரண்டு சேனைகளுக்கு மிடையில் விசனப்பட்டுக் கொண்டிருக்கிற அர்ஜுனனைக் கண்டு நகைப்பவர் போல் இங்கு (கீழ்) வாக்கியங்களை ஸ்ரீகிருஷ்ணர் சொன்னார்.

**விளக்கவுரை:**

"ப்ரஹஸன்னிவ" - ஹஸன் - நகைத்த வண்ணம், ப்ரஹஸன் - நன்றாக நகைத்தவண்ணம்; அஞ்ஞானநிலையில் இருப்பவரைப் பார்த்து, அவர்களது சேஷ்டைகளை பரிகசித்து ஞானிகளுக்கு நகைப்பு வருவது இயல்பு. அர்ஜுனனுக்கு தர்மரகஸ்யம் தெரியாததால் நிலைமை குழம்பிப் போய் சோகத்தைத் தந்தது. தர்மரகசியத்தை அறிந்த

ஸ்ரீகிருஷ்ணருக்கு, இது நகைப்பிற்கிடமான விளையாட்டாக இருந்தது, மாயைத் தாண்ட இயலாதவன் மாயையின்றும் தோன்றும் தேக இந்திரியங்களுடன், ஏனைய இவ்வுலக விஷயங்களிலும் மிகவும் ஒன்றி அதன் குணங்களைத் தானும் அடைந்து துக்கம் அடைகிறான். விவேகிகளான ஞானிகள் அம் மாயையை வென்று, மிகவும் இழிவான இந்திரியங்களுக்கு அடிமையாகி விடாமல், அவற்றின் குணங்கள் தம்மீது தாக்க விடாமல், காட்சியாய் நின்று பார்த்துக் கொண்டிருப்பர். அத்தகையோருக்கு மாயைக் குட்பட்டவரின் சேஷ்டைகள் நகைப்பை ஏற்படுத்தும்,கயிறு என்று தெரிந்தவன் அதனையே ஒருவன் பார்த்து பாம்பு என்று பயந்து அழுபவனைப் பார்த்து நகைப்பர் அல்லவா? ஏளனம் செய்வாரல்லவா? அறியாப் பாலகன் செய்யும் சேஷ்டைகளைப் பார்த்து தந்தை நகைப்பதை போல், அஞ்ஞானிகளின் செயல்கள் ஞானிகளுக்கு நகைப்பிற்கிடமாய் இருக்கும், அஞ்ஞானிக்கு 'கோஷ்பதம் சாகராயிதே' என்பதை போல் பசுவின் காலடியளவுள்ள சம்சாரமே பெரிய கடலாகத் தோன்றும், ஞானிக்குக் 'சாகரோ கோஷ்பதாதே' சம்சார மஹாசாகரம் சிறிய நீர் நிலையாகத் தோன்றும், எனவே இங்கு பெரிய கிரஹஸ்தனான அர்ஜுனனின் விந்தையான செயல்கள் பரமஞானியான ஸ்ரீ கிருஷ்ணருக்கு நகைப்புக் கிடமாய் தோன்றிற்று. ஒருவர் முகத்தில் விசனத்தின் சாயை (விஷீதந்தம்) மற்றொருவர் முகத்தில் ஆனந்தம் (ப்ரஹஸன்) இதுவே ஞானிக்கும், அஞ்ஞானிக்கும் உள்ள வேறுபாடு.

**முன்னுரை:**

இனி ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனுக்கு சொல்லிய திவ்ய உபதேசத்தை சஞ்சயன் விவரிக்கிறார் - முதன் முதலில் எவரெவரைக் குறித்து வருந்தக் தகாது என்பதை பகவான் எடுத்துரைக்கிறார்.

**ஸ்ரீ பகவானுவாச:**

**அசோச்யானன்வசோசஸ்த்வம் ப்ரக்ஞாவாதான்ஸ்ச பாஷஸே।**
**கதாஸூனகதாஸூன்ஸ்ச நானுசோசந்தி பண்டிதாஹா॥**

*ஸ்ரீபகவானுவாச - கிருஷ்ணபரமாத்மா சொன்னது -*

**சொற்பொருள்:**

*த்வாம் - நீ அசோச்யான் - துக்கப்படுவதற்கு தகுதியுடையவரல்லாதவரைக் குறித்து; அன்வசோச்சஹ - துக்கப்படுகிறாய்; (ப்ரக்ஞாவாதான்ஸ்ச) புத்திவாதத்துடன் கூடிய, பேச்சினைக் கூட, பாஷஸே - பேசுகிறாய், பண்டிதாஹா - ஆத்மஞானம் உடையவர்கள், கதாஸூன் - மரணம் எய்திய வர்களைக்குறித்தும், அகதாஸூன் - உயிருடன் இருப்பவர்களைப் பற்றியும், ந அநுசோசந்தி - துக்கப்படமாட்டார்கள்.*

**கருத்துரை:**

*ஸ்ரீகிருஷ்ணபகவான் சொன்னது. (ஏ அர்ஜுனா!) நீ துக்கப்படத் தகுதியில்லாதவரிடத்து துக்கப்படுகிறாய் மேலும் புத்திவாதத்துடன் கூடிய வாக்கியங்களைக் கூடப் பேசுகிறாய். ஞானியர் இறந்தவர்களைப் பற்றியோ, உயிருடன் இருப்பவர்களைப் பற்றியோ எப்போதும் துக்கமடைவதில்லை.*

**விளக்கவுரை:**

*கீதையின் போதனை இந்த சுலோகத்திலிருந்தே ஆரம்பமாகிறது. எனவேதான் இந்த சுலோகம் கீதா சாஸ்திரத்தின் வித்தாக கருதப்படுகிறது. ("அஸ்ய ஸ்ரீபகவத் கீதா சாஸ்த்ரமஹா மந்த்ரஸ்ய; அசோச்யானன்வசோசஸ்த்வமிதி பீஜம்) ஒரு பெரிய மரமனைத்தும், அதன் விதைக்குள் அடங்கியிருப்பதைப் போல, கீதையின் தத்துவமனைத்தும் இச்சுலோகத்தில் அடங்கியுள்ளது.*

*கீதாபோதனை 'அசோச்யான்' என்ற சொல்லுடன் தொடங்கி கடைசி அத்தியாயத்தில் 'மாசுசஹ' என்னும் சொல்லுடன் முடிவடைகிறது. எனவே சோகத்தை விலக்குவதே கீதையின் முக்கியமான இலக்கு என்பது தெரிகிறது.*

'அசோச்யான்' - இவ்வுலகில் உள்ள ஒவ்வொரு வஸ்துவும் அஸ்தி, பாதி, ப்ரிய முதலான ஐந்து நாமரூபங்களால் ஏற்படுகிறது. அதில் முதல் மூன்றும் (சத், சித், ஆனந்தம்) சத்தியங்கள். மற்றைய நாம ரூபங்கள் கற்பனையானவை, முதல் மூன்று மாத்திரமே ஜீவனின் உண்மையான சொரூபமே, நாமரூபங்கள் அல்ல. உண்மையான தன் சொரூபம் எக்காலத்தும் அழிவதில்லை, எனவே அதற்காக துக்கித்திருத்தல் அவசியமில்லை. அசத்தியமான நாம ரூபங்கள் மாறினாலும், அழிந்தாலும் அவை அதன் சுயரூபமல்லவாகை யால் அதற்காக சோகமடைவதில் பலன் இல்லை. எனவே இனி துக்கமடைதல் எதற்காக? என்று பகவான் கேட்கிறார்'

'ப்ரக்ஞாவாதாம்ஸ்ச' - புத்திவாதத்துடன் கூடிய வாக்கியங்களை - புத்திசிறிது தூரம்மட்டுமே செல்லக் கூடியது. புத்திக்கும் அப்பாற்பட்டது ஆத்மா. (ஏவம் புத்தேஹ் பரம்புத்வா;) புத்தி (conscious state) இயற்கைக்கருட்பட்டது. எனவே புத்திவாதத்தில் ஓரளவு குறைகள் இருப்பதற்கு வாய்ப்புள்ளது. புத்தியைத் தாண்டி ஆத்மாவை உணர்ந்தவனுக்கு (Super Conscious state) தடைகள் எதுவுமிராது. அவன் பரமார்த்த தத்துவத்தையும், இயல்பு நடைகளையும் உணர்ந்தவனாகிறான். அர்ஜுனன் இன்னும் அத்தகைய நிலைக்கு வரவில்லை. எனவே தான் புத்தியெனும் அளவினால் அளந்து தனக்குத் தோன்றிய வண்ணம் கூறினான். "இவையனைத்தும் பிரக்ஞா வாதத்துடன் சேர்ந்தது" என்று ஒரே வார்த்தையில் அவன் பேசியவை யனைத்தையும் தாக்குகிறார்.

"நானு சோசந்தி பண்டிதாஹா" - சாதாரணமாக பண்டிதன் என்றால் காவ்ய நாடக அலங்காரங்களில், கவிதையில், வல்லவராயிருப்பவன் என்ற பொருளில் பயன்படுத்துதல் வாடிக்கை. ஆயின் இங்கு எவருக்காகவும் எதற்காகவும் துக்கப்படுபவன் அல்லாதான் பண்டிதன் என பகவான் இங்கு சொல்கிறார்.

1) கதாஸூனகதாஸூம்ஸ்ச நானுசோசந்தி பண்டிதாஹா (2 - 11)

2) "ஞானாக்னி தக்த கர்மாணாம் தமாஹு~ஹ் பண்டிதம் புதாஹா" (4 - 19)

3) சுனிசைவ ஸ்வாபாகே ச பண்டிதாஸ்ஸமதர்சினஹ (5 - 18)

இதுவேயன்றி ஞானாக்கியினால் தன் செயல்கள் அனைத்தையும் சாம்பலாக்கி விடுபவனே பண்டிதன் என 4 ஆவது அத்தியாயத்திலும், எல்லா ஜீவன்களிடத்தும் சமபாவத்துடன் இருப்பவனே பண்டிதன் என 5ஆவது அத்தியாயத்திலும் கூறுகிறார். இத்தகைய நற்குணங்கள் உடையவனையே பண்டிதன் என்ற விருதுடன் அழைக்கிறார் பகவான். எனவே மக்கள் கல்வி கேள்விகளில் சிறந்திருப்பதோடு ஆத்மஞானம் அடைந்து உத்தமமான பாண்டியத்தையும் சம்பாதித்து ஸர்வேசுவரனின் அன்புக்கு பாத்திரர்கள் ஆவார்களாக!

**வினா:**

பண்டிதர்கள் என்றால் எவர்?

**விடை:**

உயிருடன் இருப்பவரைப் பற்றியாவது, இறந்தவரைப் பற்றியாவது, அல்லது எந்த ஒரு பொருளைப் பற்றியாவது துக்கமடையாதவனே பண்டிதன்.

**முன்னுரை:**

பந்துக்களைக் குறித்து எதற்காக துக்கித்தல் அவசியமில்லை என்ற காரணத்தைத் கூறி ஆத்மாவின் நிலையான தன்மையைக் கூறுகிறார்.

**12. ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜனாதிபாஹா|**
**நசைவ ந பவிஷ்யாமஹ ஸர்வே வயமதஹ் பரம்|| (12)**

**சொற்பொருள்:**

அஹம் - நான், ஜாது - எப்பொழுதாவது, நாஸம் - (இது) இருந்ததில்லை, நது ஏவ - இல்லவே இல்லை, த்வம் - நீ, (ந ஆஸீஹ் - இது) ந - இல்லை யென்பது இல்லை, இமே - இந்த, ஜனாதிபாஹா - அரசர்கள், (ந ஆஸன்இதி) ந - இருந்ததில்லை அதஹ் பரம் - இனிமேலும், வயம்ஸர்வே - நாம் அனைவரும், ந பவிஷ்யாமஹ - (இதி)ச - இருக்க மாட்டோம் என்பதும் ந ஏவ - இல்லை.

**கருத்துரை:**

அர்ஜுனா! நான், நீ (யுத்தபூமியில் உள்ள) அரசர்கள், ஆகியோர் இதற்குமுன்பு இல்லாதிருந்ததில்லை. இதற்கு பிறகும் இல்லாதிருக்க மாட்டோம்.

**விளக்கம்:**

இச்சுலோகத்தின் மூலம் பகவான் 'தத்வமஸி' என்னும் மகாவாக்கிய உபதேசத்தைச் செய்கிறார். "நான், நீ, அனைத்துஜீவர்கள்" அனைவரும் நிலைத்த ஆத்ம சொரூபமே என்று கோஷிக்கிறார். ஜீவனையும், சிவனையும் ஒரே மேடையில் சமமான நிலையில் வைக்கிறார். இது பரம இரகசியமான ஆன்மீக தத்துவம். பிரம்மஞானத்தின் சாராம்சம் இதுவே. அர்ஜுனன் திரைலோக்ய பதவியும் வேண்டேன் என்று ஒதுக்கித்தள்ளி தீவிரமான வைராக்யத்தை மேற்கொண்டதால், பிரம்மஞானத்தை அடைவதற்கு அதிகாரமுடையவன் என்று நிர்ணயித்து பகவான் மிகவும் உன்னதமான பரமார்த்த சத்யத்தை அவனுக்கு இவ்விதமாக போதிக்கத் தொடங்குகிறார்.

'நீ, நான், இந்த அரசர்கள் அனைவரும் எப்போதும் நிரந்தரமாக இருப்பவர்கள்' என்று சொல்வதால் கீழ்க்காணும் உண்மைகள் போதிக்கப் படுகின்றன.

(1) ஆத்மாவின் நிலைபேறு

(2) நாம் ஆத்மாவேயன்றி தேகமல்ல

(3) எல்லா ஜீவர்களிடத்தும் ஒரே ஆத்மாவே வியாபித்துள்ளது.

இத்தகைய போதனையால் ஜீவனுக்கு மிக்க தைரியமும் ஆனந்தமும் ஏற்படும். ஏனெனில், தான் எப்போதும் அழிவதில்லை எனத் தெரிந்தவுடன் தன்னைப் பற்றியோ, பிறரைப்பற்றியோ மரணம் குறித்த துக்கத்திற்கு இடமேயில்லை, ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனுக்கு தைரியத்தை ஊட்டுவதற்காக ஒரு வழியை ஆலோசித்து, உண்மையான ஆத்ம போதனையால் அன்றி, வேறெதாலும் அது சித்திப்பதில்லை என்று நிச்சயித்து முதலிலேயே கம்பீரமான ஆத்மவித்தையைப் உபதேசிக்கிறார்.

"ஸர்வே வயமதஃபரம்" - (நம்அனைவரையும்) என்று சொல்வதால் ஆத்மதிருஷ்டியில் பகவான், 'பக்தன், குரு, சிஷ்யன், என்ற பேதங்கள் இல்லை என்பதும், எல்லோரும் ஒரே 'சத்வஸ்து' (சத்தியமான பொருள்) என்பதும் வெளியாகிறது. எனவேதான் ஆஞ்சநேயர் ஸ்ரீராமனிடம் (ஆத்ம யுத்தாய த்வமேவாஹம்) ஆன்மதிருஷ்டியில் நீயும் நானும் ஒன்றே! என்று சொல்கிறார். உபாதிகளாலேயே ஜீவத்வம் என்பது ஏற்பட்டது. உபாதிபாவம் விட்டபோது ஜீவன் சிவனாக வல்லவன் (சிவோஹம்) எனவே தேகம் அழிந்தாலும் துக்கப்படுவது தேவையில்லை. (நாம் நிலையான ஆத்மாவேயாதலால்). மற்றும் எவர் தான் மிகவும் தாழ்ந்தவன், சிறியோன் என்று பயப்படத் தேவையில்லை. (தான் உண்மையில் பரமாத்ம ஸ்வரூபமேயாதலால்), இவ்விதமாக, ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா ஒரு சிறிய தர்மசூக்ஷ்மத்தால் கலங்கிய மனத்தவனான அர்ஜுனனிடம் மிக்க தைரியத்தை ஊட்டினார்.

**வினா:**

ஜீவன் யார்?

**விடை:**

ஆத்மாவேயன்றி தேகமல்ல,

**வினா:**

ஆன்மா எத்தகையது?

**விடை:**

முந்தும் இருந்தது, இப்பவும் இருப்பது, இன்னும் இருக்கப்போவது, அதற்கு அழிவில்லை, அது நிலையானது.

**வினா:**

இவ்வுண்மை சிலருக்குமட்டுமே புலப்படுமா?

**விடை:**

அல்ல, எறும்பு முதல் இறைவன் வரை பிரம்மாவின் படைப்பில் அனைவருக்கும் கிடைக்கும், அனைவரும் ஜனன மரணம் இல்லாத ஆன்ம சொரூபமே ஆதலால்.

**முன்னுரை:**

தேகம் அழிந்துபட்டாலும் ஆத்மா இருந்தே தீரும் என்பதை தெரிவிக்கிறார்.

**13. தேஹினோ அஸ்மின்யதா தேஹே கௌமாரம் யௌவனம் ஜரா।
ததா தேஹாந்தரப்ராப்திர்தீரஸ்தத்ர ந முஹ்யதி॥ (13)**

**சொற்பொருள்:**

தேஹினஹ - ஜீவனுக்கு அஸ்மின் தேஹே - இத்தேகத்தில், கௌமாரம் - குழந்தைப் பருவம், யௌவனம் - இளமைப்பருவம், ஜரா - முதுமை, யதா - எவ்வாறு ஏற்படுகிறதோ ததா - அவ்வாறே, தேஹாந்தரப்திஹி - வேறொரு தேகத்தை எடுப்பதும் (நடக்கின்றது), தத்ர - அதைப்பற்றி, தீரஹ - ஞானி, ந முஹ்யதி - மோஹமடைவதில்லை (துக்கிப் பதில்லை).

**கருத்துரை:**

ஜீவனுக்கு சரீரத்தில் பால்யம், இளமை, மூப்பு என்ற இவை உண்டாவதைப் போலவே மரணத்திற்குப்பின் மீண்டும்

சரீரத்தை அடைவது நிகழ்கின்றது. எனவே இவ்விஷயத்தைக் குறித்து ஞானியானவன் அதன் பொருட்டு மோஹத்தை (சோகத்தை) அடைவதில்லை.

**விளக்கம்:**

(1) குழந்தைப் பருவம் (2) இளமை (3) மூப்பு (4) தேகத்தின் முடிவு என்ற இந்நான்கும் ஜீவனுக்கு ஏற்படுகின்றது என்று பகவான் தெரிவிக்கிறார்.

'தேஹே' என்று சொல்லப்படுவதால் இந்த மாற்றங்கள் தேகத்திற்கேயன்றி ஆன்மாவிற்கு அல்ல என்பது தெளிவாகிறது. குழந்தைப்பருவம் இளமைப்பருவம் எய்தும் போது எவரும் வருந்துவதில்லை. இளமைப்பருவம் போய் முதுமை எய்தும் போதும் வருந்துவதில்லை.

அப்படியிருக்கையில் வயோதிகம் போய் மரணம், அதாவது தேகத்தின் முடிவிற்குமட்டும் ஏன் வருந்த வேண்டும் என்பது பகவானின் கேள்வி? இந்த இரகசியத்தை அறிந்து மகனீயர்கள் அதனைக் குறித்து பெரிதாக எண்ணாமல் அவை நேர்ந்த போது மேருவைப் போன்று தீரர்களாக கம்பீரமாக நிற்கின்றனர். மேற்சொல்லப்பட்ட குழந்தைப்பருவம் முதல் நான்கு நிலையிலும் முதல் மூன்றும் இருப்பதாகத் தெரியுமேஅன்றி நான்காவது (தேகத்தின் முடிவு) உள்ளது என்பது தெரியாது. ஆயின் பகவான் முதல் மூன்றும் எவ்வாறு உண்மையோ, அவ்வாறே, நான்காவதான மரணமும் நிச்சயமானது, எனவே அதனைக் குறித்து பயப்பட வேண்டிய தேவையில்லை. தீரர்களாக இருத்தல் வேண்டும் என்று போதிக்கிறார். ஆயின் ஞானிக்குக் கர்மா என்பது தொடர்வதில்லையாதலால் அவனுக்கு மாத்திரம் தேகத்திற்கு அழிவு என்பது இல்லை. சாமான்ய மனிதர்களுக்கு மாத்திரமே தேக அழிவுண்டு என்பதை நாம் கிரகித்துக் கொள்ள வேண்டும்.

**தேகத்தின் சக்கரம் (Cycle of the Body)**




கர்மதோஷம் இருக்கும் வரை உபாதிக்கு இந்நான்கு அவஸ்தைகளும் சக்கரம் போன்று சுழற்சியில் மாறிமாறி வந்து கொண்டேயிருக்கும். ஞானத்தினால் கர்மாக்கள் எரிந்து சாம்பலாய் போனால் மாத்திரமே தேகமும் அதற்குத் தொடர்பான இந்நான்கு அவஸ்தைகளும் இருப்பதில்லை. அதுவே மோக்ஷ நிலை.

**வினா:**

ஜீவிக்கு எத்துணை அவஸ்தைகள்? அவை யாவை?

**விடை:**

ஜீவனுக்கு நான்கு அவஸ்தைகள், அவை முறையே, குழந்தைப்பருவம், இளமை, மூப்பு, மரணம் முதலானவை.

**வினா:**

தீரன் யார்?

**விடை:**

பால்ய, யௌவனத்தில் இருப்பதைப் போலவே, மரணம், தேகத்தின் பிறப்பு இவை நிகழும் போதும் எள்ளளவும் துக்கமின்றி இருப்பவன் தீரன்.

**முன்னுரை:**

அத்தகைய பந்துமித்ரர்களால் ஏற்படும் இன்பதுன்பங்கள் என்ற இரண்டும் நிலையானவையல்ல என்றும், அவற்றைப் பொறுத்துப்பழகுபவன் உறுதியைப் பெறுகிறான் என்றும் சொல்லப்படுகின்றது.

**14. மாத்ராஸ்பர்சாஸ்து கௌந்தேய சீதோஷ்ணஸுகதுஹ்கதாஹா!**
**ஆகமாபாயினோ அநித்யா தாம்ஸ்திதிக்ஷஸ்வ பாரத!! (14)**

**சொற்பொருள்:**

கௌந்தேய ! - அர்ஜுனனே! மாத்ராஸ்பர்சாஹா - இந்திரியங்களுக்கு இந்திரியார்த்தங்கள் ஆகிய சப்தாதிவிஷயங்களின் இணக்கம், சீதோஷ்ண சுகதுஹ்கதாஹா - சீதம், உஷ்ணம், இன்பம், துன்பம் இவைகளைக் கொடுக்கின்றவைகளாகவும், ஆகமாபாயினஹ - தோன்றி மறையும் தன்மை யுடையவாகவும், அநித்யாஹா - நித்தியமல்லாதவைகளாயும் - (உள்ளன) தான் - அவற்றை ; பாரத - பரதகுலத்துதித்த அர்ஜுனா? திதிக்ஷஸ்வ - பொறுத்துக்கொள்.

**கருத்துரை:**

ஏ அர்ஜுனா! இந்திரியங்களின் சப்தஸ்பர்சங்கள் முதலான விஷயங்களின் இணக்கத்தினால் குளிர், வெப்பம், இன்பம், துன்பம் முதலியன உண்டாகின்றன. மற்றும் அவை தோன்றி மறைதலும், நிலையாமையும் உடையவை. எனவே அவைகளைப்பொறுத்துக் கொள்.

**விளக்கம்:**

உலகம் இத்தகையது என்ற ஞானம் இல்லாதவன் வெளியுலகில் உலவுவதால் அப்பொருள்களில் அதனோடு பொருந்துவதால் இந்திரியங்களுக்கு குளிர் வெப்பம், இன்பம் துன்பம் முதலிய விகாரங்களை உண்மையென்றெண்ணி அவற்றை தனதாக்கிக் கொண்டு துன்பமடைகிறான். இவ்விகாரங்கள் யாவும் இயற்கையோடு பொருந்தியவே என்றும், ஆன்மா செயலற்றது, பற்றற்றது, என்று அறிபவர்க்கு

அத்தகைய துன்பம் நேராது. எனவே ஸமபுத்தியினால் இவற்றை பொறுத்துக் கொள்ள வேண்டும் என்று பகவான் அர்ஜுனனுக்குப் போதிக்கிறார். "சுகதுக்கதாஹா" - சப்தாதி விஷயங்களினால் ஏற்படும் இன்பம் இன்பம் மட்டுமன்று அதனுடன் துக்கமும் இணைந்தேயுள்ளது. ஏனெனில் அது இன்பமே யாயின் துன்பம் அதனைத் தொடர்தல் கூடாது. ஆயின் அது அவ்வாறில்லை. அது ஒருவேளை இன்பம் தரினும் அதனைத் தொடர்ந்து அபரிமிதமான துக்கம் காத்துக் கொண்டிருக்கும். எனவேதான் அவற்றை 'சுகதாபாஹா' எனாது 'சுகதுக்கதாஹா' என்று பகவான் வர்ணிக்கிறார்.

"ஆகமாபாயினஹ" - தோன்றி மறைவது, உலகசுகங்கள் ஏற்படும் போது எவரும் அதில் மூழ்கிப் போய் விடலாகாது. ஏனெனில் அது வருவதுமட்டுமே உள்ளதன்று. அது மறைவதும் உண்டு. சுற்றத்தாரைப் போன்று வரும், போகும். அவை அநித்தியமானவை, எனவே, அவற்றின் மேல் ஆசை, மமகாரம், அன்பு இவை வைத்தல் கூடாது. அத்தகையோனே தீரன்' என முன் சுலோகத்தில் கூறிப் போனார். அந்த தளுக்கிமினுக்கும் சுகங்களின் மீது ஆசை ஏற்பட்டு அதன்பின் ஓடுபவன் துக்கத்தையே வரவேற்றவனாகிறான். அவன் சம்சாரசாகரத்தில் விழுந்து விடுகிறான். எனவே, அத்தகைய நிலையில்லாத சுகத்திற்காக அலையாமல் நிரந்தரமான ஆத்ம சுகத்திற்காக முயற்சிசெய்தல் வேண்டும்.

"தாம்ஸ்திதிக்ஷஸ்வ" - திதிக்ஷ என்றால் பொறுமை, குளிர், வெப்பம் இவை ஏற்படும் போது சமபாவத்துடன் அவற்றைப் பொறுத்துக் கொள்ளுதல் வேண்டும். பொறுமை நற்குணங்களில் ஒன்று.

**வினா:**

ஒலி, வடிவம் முதலான சப்தஸ்பர்சஆதி விஷயங்களின் இயல்பு எத்தகையது?

**விடை:**

அவை (1) குளிர், வெட்பம், சுகம், துக்கம் முதலானவை. (2) தோன்றி மறைபவை (3) அநித்தியமானவை.

**வினா:**

குளிர் வெட்பம் முதலியவை உண்டாகும் போது என்ன செய்ய வேண்டும்?

**விடை:**

சமதிருஷ்டியுடன் அவற்றைப்பொறுத்திருந்து தைரியத்துடன் இருத்தல் வேண்டும்.

**முன்னுரை:**

அவ்வாறு விஷயங்களின் மூலமாக ஏற்படும் சுக துக்கங்களை சமதிருஷ்டியுடன் பார்ப்பவனுக்கு எத்தகைய பலன் கிடைக்கும் என்பதை எடுத்துச் சொல்கிறார்.

**15. யம் ஹி ந வ்யதயந்த்யேதே புருஷம் புருஷர்ஷப।**
**ஸமதுஃகஸுகம் தீரம் ஸோ அம்ருதத்வாய கல்பதே॥ (15)**

**சொற்பொருள்:**

புருஷரிஷப - புருஷ சிரேஷ்டனான அர்ஜுனனே! ஏதே - சப்த ஸ்பர்சாதி விஷயங்கள், சமதுக்கசுகம் - இன்ப துன்பங்களை சமமாகப்பார்க்கும், தீரம் - தைரியசாலியான, யம் புருஷம் - எந்தமனிதனை, ந வ்யதயந்தி - தாக்குவதில்லையோ (அசைப்பதில்லையோ) ஸஹ ஹி - அவனே, அம்ருதத்வாய - மோக்ஷத்திற்கு, கல்பதே - தகுதியுடையவன் ஆகிறான்.

**கருத்துரை:**

புருஷசிரேஷ்டனான அர்ஜுனா! எவனை இந்த சப்தஸ்பர்சாதி விஷயங்கள் பாதிப்பதில்லையோ (அசைப்பதில்லையோ), இன்பதுன்பங்களில் சமபாவமுடைய அத்தகைய தீரனே மோக்ஷத்திற்கு தகுதி யுடையவனாகிறான்.

**விளக்கம்:**

'புருஷரிஷப' (புருஷசிரேஷ்டா) இந்திரியங்களை வென்று, விஷயங்களினால் சலனமுறாது, சுகதுக்கங்களை சமமாக பாவித்து, (லௌகீகமான மேம்பாடேயன்றி) ஆன்மீக

மேன்மையையும் சம்பாதித்துக் கொள், அர்ஜுனா!' என எச்சரிப்பதற்காகவோ என்னவோ 'புருஷரிஷப' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

'சமதுக்க சுகம்தீரம்' - இன்பதுன்பங்களில் சமமாக நினைத்திருப்பதே தீரம். ஆன்மாவில் நிலைத்து சுகதுக்கங்கள் இரண்டையும் மனமடையும் மாற்றமாக மட்டுமே நோக்கக் கூடியவனே அத்தகைய தீரன். துக்கம் எவ்வாறு ஒரு மன விகாரமோ அவ்வாறே சுகமும். எனவே மனதிற்கு சாட்சியான ஆத்மாவில் நிலைத்திருக்கும் தீரர்களான மகான்கள் இரண்டையும் சமமாகவே நோக்குவர். (ஜனகரின் அவையில் இருந்த சுகரைப்போல.)

'ஸோ அம்ருதத்வாய கல்பதே' - மோக்ஷத்திற்கு அம்ருதத்வம் என்ற பெயர் உண்டு. இந்த நாம, ரூப காட்சிப் பொருளான உலகம் எல்லாம் அழியக் கூடியவை. பிறப்பு இறப்பு இவற்றோடும் அழிவோரும் கூடியது. ஆத்மஸ்திதி ரூபம் மரணமில்லாதது. எனவே மோக்ஷம் என்றால் ஆகாசத்திலோ, சுவர்க்கத்திலோ உள்ள ஏதோவொரு பொருள் அல்ல. அம்ருதத்வ பதவியே மோக்ஷம். மரணமில்லாத ஆன்ம நிலையே மோக்ஷம். அதனை அடைந்தவர் மறுபடியும் மரணமடைவதில்லை. பிறப்பதுமில்லை. (யத்கத்வா ந நிவர்த்ததேத் த தாம் பரமம் மம) மோக்ஷமடைவதற்கான தகுதியுடைவராக ஒரு சாதியினரையோ, மதத்தினரையோ, குலத்தினரையோ, குறிப்பிட்டு சொல்லவில்லை. எவர் இந்திரியங்களைக் கட்டுப்படுத்தி, விஷயங்களில் ஈடுபடுத்தாது இன்ப துன்பங்களில் சமமான நோக்குடைய தீரர்களே மோக்ஷத்திற்கு தகுதியுடையவர் என்கிறார். ஆஹா! கீதை எத்தகைய சமநோக்குடையது பாருங்கள்!

**வினா:**

மோக்ஷம் என்றால் என்ன?

**விடை:**

மரணமற்ற நிலையான ஆனந்த பதவியே மோக்ஷம்.

**வினா:**

அதனை எவர் அடைய வல்லவர்?

**விடை:**

சப்தஸ்பர்சாதி விஷயங்களில் ஈடுபடாதவன், இன்பதுன்பங்களை சமமாகப் பாவிப்பவன் ஆகிய தீரனே மோக்ஷத்தை அடையக் கூடும்.

**வினா:**

தீரர்கள் என்றால் எவர்?

**விடை:**

சப்தஸ்பர்சாதி விஷயங்களை வென்று, இன்ப துன்பங்களை சமபாவத்துடன் காண்பவரே தீரர்கள்.

**முன்னுரை:**

ஸத் எது அஸத் எது என்று வேறுபடுத்திக் காட்டுகிறார்.

**16. நாஸதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதே ஸதஹ|**
**உபயோரபி த்ருஷ்டோ அந்தஸ்த்வனயோஸ்த்தத்வதர்சிபிஹி||**
**(16)**

**சொற்பொருள்:**

அசதஹ - இல்லாததற்கு, பாவஹ - இருப்பு, ந வித்யதே - இல்லை சதஹ - இருப்பவற்றிற்கு, அபாவஹ - இல்லாமை, ந வித்யதே - கிடையாது, அனயோஹோ - இந்த, உபயோரபி - இரண்டின், அந்தஹ - முடிவு, நிச்சயமோ தத்வதர்சிபிஹி - ஞானிகளினால் திருஷ்டஹ - காணப்படுகிறது.

**கருத்துரை:**

அசத்தியமாய் (நாமரூபமாகவும், அழியக்கூடிய இயல்புடையவாயும்,) உள்ள தேகம் முதலானவற்றுக்கு இருப்பு இல்லை, சத்தியமான ஆத்மாவிற்கு இருப்புண்டு. தத்வ ஞானியர் இரண்டின் தன்மையும் நன்கு தெரிந்திருக்கின்றனர்.

**விளக்கம்:**

"தத்வதர்சிபிஹி" - "தர்சிபிஹி" - என்பதால் தத்வத்தை நேராகக் கண்டவர் என்பது பொருள். வெறும் வாயால் சொல்பவர் அல்லர் (தத்வவாதிபிஹி) சத்தியத்தை உள்ளங்கை நெல்லிக்கனியாக வைத்திருப்பவர் என்று பொருள். அத்தகைய ஞானியர்க்கு சத்தியம், அசத்தியம் எது என்பது பற்றி நன்றாகத் தெரிந்திருக்கும். அதாவது எது இருப்பது எது இல்லாதது என்பதை அறிவர். இத்தேகம் முதலான காட்சிப் பொருள்கள் அனைத்தும் அழியக் கூடிய தாகையால் ஆன்மிக நிலையில் இல்லாதவைகளே. அத்தகைய இல்லாத வொன்றுக்கு இருப்பு எப்போதும் இருப்பதில்லை. அவ்வாறு ஒரு வேலை சிறிது காணப்பட்டாலும் அது கானல் நீரைப் போன்று மயக்கும் தன்மையுடையது. ஆத்மாவோ நிலையான சத்யமான பொருள். அதற்கு எப்போதும் அழிவில்லை . இவ்வுண்மை நிலையை ஞானிகள் மாத்திரமே அறிவர். மற்றையோர் இந்த உண்மையை யறியாது இல்லாதவற்றிற்கு இருப்பையும், இருப்பவற்றிற்கு இன்மையையும் கற்பித்துக் கொண்டு நாநாவித அவஸ்தைகள் படுகின்றனர்.

(1) இருக்கும் இறையை (ஆத்மா) இல்லை என்பது ஒரு குறை

(2) இல்லாத உலகை உள்ளது என்பது இன்னுமொரு குறை

முன்னது அசம்பாவனை என்றும், இரண்டாவது விபரீத பாவனை என்றும் கூறுவர். அஸம்பாவனையால் சத்யமானது அவர்களுக்கு தூரமாக விலகிப் போவதால் நித்யானந்தம் அவர்களிடமிருந்தும் விலகிப்போகிறது. விபரீதமான பாவனையால் அசத்தியமானது இடையில் வருவதால் துக்கம் அடைய வேண்டியுள்ளது.

அத்தகைய துக்கம் முழுமையாக மறைய வேண்டுமெனின் உள்ளதை உள்ளவாறே, இல்லாததை இல்லாததாகவே பார்த்தால் போதும். இதுவே சாந்திக்கு வழி. துக்கம்

இன்மைக்கு வழி. தத்துவ ஞானி அழிவையுணர்ந்து தத்தம் வாழ்க்கையை பயனுள்ளதாக ஆக்கிக் கொண்டனர். அஞ்ஞானிகள் இதை தெரிந்து கொள்ளாமல் சம்சார சக்கரத்தில் சிக்கித் துன்புறுகின்றனர்.

**வினா:**

தத்துவ ஞானிகள் எத்தகைய அனுபவம் பெறுகின்றனர்.

**விடை:**

நாமரூபத்துடன் கூடிய காட்சிப் பொருளான உலகத்தை இல்லாததாகவும் சச்சிதானந்த பரமாத்வை இருப்பதாகவும் காண்கின்றனர்.

**முன்னுரை:**

மேற் சொல்லப்பட்ட ஸத், அசத் இரண்டிலும் சத்வஸ்துக்களைப்பற்றி மேலும் கூறுகிறார்.

**17. அவிநாசி து தத்வித்தி யேன ஸர்வமிதம் ததம்।
விநாசமவ்யயஸ்யாஸ்ய ந கஸ்சித்கர்துமர்ஹதி॥ (17)**

**சொற்பொருள்:**

இதம் ஸர்வம் - இவ்வுலக மெல்லாம், யேன - எதனால் (எந்த பரமாத்மாவினால்), ததம் - வியாபிக்கப் பட்டிருக்கிறதோ, தத் து - அதனை, அவிநாசி - விநாசம் அடையாததாய், வித்தி - அறிவாயாக, அஸ்ய - இந்த, அவ்யயஸ்ய - மாறாத் தன்மையுடையதற்கு, வினாசம் - நாசத்தை, கர்தும் - அடையச் செய்வதற்கு - கச்சித் - எவரும், ந அர்ஹதி - அருகதையுடையவன் அல்லன்.

**கருத்து:**

அர்ஜுனனே! இவ் உலகமெலாம் எந்த பரமாத்மாவால் வியாபிக்கப்பட்டுள்ளதோ, அது நாச மற்றது, அழியாப் பொருள் என்று அறிக. அழியாப் பொருளான ஆத்மாவை அழித்தல் எவருக்கும் இயலாது.

**விளக்கம்:**

இச் சராசரமனைத்தும் இருதயத்தில் உள்ளதான ஆத்மாவால் வியாபிக்கப்பட்டிருப்பதால் -

(1) எல்லா ஜீவர்களையும் ஆத்மரூபமாக எண்ணி அவர்களிடத்து, அன்பு, தயை, கருணை இவற்றுடன் இருக்க வேண்டும்.

(2) பகவானான ஆத்மா நமக்கு மிக அருகிலேயே இருப்பதால் எக்காலத்தும் பாவம் செய்தல் கூடாது.

(3) தன் உண்மை சொரூபமான ஆத்மாவை அழிப்பதற்கு எவனும் இணங்கமாட்டான். எனவே சாதகன் மிக்க தைரியத்துடன் ஆனந்தமாக நிரந்தரம் அத்தகைய ஆத்மாவைக் குறித்து சிந்தித்த வண்ணம் அதில் நிலைத்திருத்தல் வேண்டும்.

**வினா:**

ஆன்மா எத்தகையது?

**விடை:**

(1) எல்லா பிரபஞ்சத்திலும் வியாபித்திருப்பது

(2) அழிவில்லாதது

(3) அதனை அழித்தல் எவருக்கும் இயலாது.

**முன்னுரை:**

இவ்வாறு சத்வஸ்துவை குறித்து விவரித்து, இனி அசத்திய வஸ்துவைக் குறித்துக் கூறுகின்றார்.

**18. அந்தவந்த இமே தேஹா நித்யஸ்யோக்தாஹ் சரீரிணஹ|**
**அநாசினோ அப்ரமேயஸ்ய தஸ்மாத் யுத்யஸ்வ பாரத|| (18)**

**சொற்பொருள்:**

நித்யஸ்ய - நித்தியத்தினுடைய, அநாசினஹ் - நாசமடையாததனின், அப்ரமேயஸ்ய - அளவிடமுடியாதவனுமான, சரீரிணஹி - தேஹி (சரீரி) யான ஆத்மாவின்,

இமேதேஹாஹா - இந்த சரீரங்கள், அந்தவந்த - அழியக்கூடியவையென, உக்தஹ - சொல்லப்படுகின்ற, தஸ்மாத் - இந்த காரணத்தினால், பாரத - ஓ அர்ஜுனா! யுத்யஸ்வ - யுத்தம் செய்.

**கருத்துரை:**

ஏ அர்ஜுனா! நித்தியமாய், நாசமற்றதாய், அளவிட முடியாததாய் உள்ள தேஹி (ஆத்மா) வின் இந்த தேகங்கள் அழியும் தன்மையுடையவை எனசொல்லப் படுகின்றது. ஆத்மா வொன்றே நிலையானது. எனவே (ஆத்மாவைக் குறித்தோ, தேகத்தைக் குறித்தோ துக்கிப்பதை விடுத்து) நீ யுத்தம் செய்!

**விளக்கம்:**

"அந்தவந்த இமேதேஹாஹா" - தேகத்திற்கு முடிவு உண்டு (இறப்பு) நான் தேகம் அல்ல தேஹி, சரீரமல்ல சரீரி, தேகங்கள் அழியக்கூடியவை. ஆயின் தேஹியான ஆத்மா அழியாது. இவ்வாறு அழியக்கூடிய தேகத்தின் மீது நீ ஒரு போதும் நம்பிக்கை வைத்தல் கூடாது. அதனால் தன்வயமான நிலையான ஆத்மாவையே நம்பி, அதுவே தான் என எண்ணுதல் வேண்டும். "சரீரிணஹா" - என்பதால் ஆத்மா வெகு தூரத்தில் இல்லை. சரீரத்திலேயே வியாபித்து இருக்கிறது என்பது வெளிப்படை. எனவே சரீர பாவத்தை விட்டு சரீரிபாவம் கொண்டிருத்தல் வேண்டும்.

"தஸ்மாத் யுத்யஸ்வ" - ஆத்மா அழிவதில்லை ஆதலால், நீ தேகமல்ல என்றுணர்ந்து துக்கத்தை விடுத்து தைரியத்துடன் உனக்குண்டான கர்மத்தை செய்து வருதல் வேண்டும். ஞானத்தோடு கூடிய கர்மாவை செய்துவா என்று பகவான் இங்கு அர்ஜுனனுக்கு இதமாக நற்போதனை செய்கிறார்.

**வினா:**

தேகத்தின் இயல்பு யாது?

**விடை:**

அது அழியக்கூடியது.

**வினா:**

தேஹி யான ஆத்மா எத்தகையது?

**விடை:**

*(1)நிலையானது (2) அழிவில்லாதது*

**19. ய ஏனம் வேத்தி ஹந்தாரம் யஸ்சைனம் மன்யதே ஹதம்I**
**உபௌ தௌ ந விஜாநீதோ நாயம் ஹந்தி ந ஹன்யதேII**
**(19)**

**சொற்பொருள்:**

*யஹ - யார், ஏனம் — இந்த (சரீரத்திலுள்ள) ஆன்மாவை, ஹந்தாரம் - கொல்லு கிறவனென்று, வேத்தி - அறிகிறானோ, யஸ்ச - எவன் ஒருவன், ஏனம் - இந்த ஆன்மாவை, ஹதம் - கொல்லப்பட்டவனாகக், மன்யதே - நினைக்கிறானோ, உபௌ தௌ - அவ்விருவரும், நவிஜாநீதஹ - அறிந்தவர்களல்லர், அயம் - இவ்வாத்மா, ஹந்தி - கொல்லுகிறதில்லை, ந ஹன்யதே ச - கொல்லப்படுவதுமில்லை.*

**கருத்துரை:**

*எவன் ஆத்மாவை கொலை செய்பவனென்று, எண்ணுகிறானோ, அல்லது எவன் கொல்லப்படுபவன் என்றும் எண்ணுகிறானோ, அவ்விருவரும் உண்மையை அறிந்தவர் இல்லை. உண்மையில் ஆத்மா கொல்லுவது மில்லை, கொல்லப் படுவதுமில்லை.*

**விளக்கம்:**

*கடோபநிஷத்தில் இந்த சுலோகத்தை யொத்து ஒரு சுலோகம் உள்ளது. "ஹன்தா சேன்மன்யதே ஹன்தும் ஹதசேன் மன்யதே ஹதம்*

**பௌதௌ ந விஜநனிதோ நாயம் ஹன்தி ந ஹன்யதே"**
**(கடோபநிஷத்II - 19)**

*1) ஆத்மா கொல்பவனில்லை என்பதால் கர்த்தருத்வம் - செய்பவன் - கர்த்தா என்பது இல்லை. ஆத்மா செய்பவன் அல்ல. செய்விப்பதும் அல்லன். செயல் முதலானவை புத்திக்கேயன்றி, புத்தியின் சாட்சியான ஆத்மாவிற்கில்லை, ஆத்மாவிற்கு செயலை ஏற்றிக் கூறுபவன் புத்தியற்றவன் என கீதை சொல்கிறது.*

*2) ஆத்மா கொல்லப்படுவதில்லை என்று சொல்லுவதால் நிலையானவன், விகாரமில்லாதவன் (மாற்றம் இல்லாதவன்) என்பது வெளியாகிறது. எனவே சாதகன், 'தான் ஆத்ம சொரூபனென்றும், மரணமற்றவன் என்றும் மரணம் தேகத்திற்கேயென்றும், தான் தேக சாட்சியாய், நித்ய நிரஞ்சனன் ஆன தெய்வத்தின் ஒளியாய் பிரகாசிப்பவ னென்றும் எண்ணிவருதல் வேண்டும்,*

**வினா:**

*ஆன்மா எத்தகையது?*

**விடை:**

*கொல்பவன் இல்லை, கொல்லப்படுபவன் இல்லை, (அகர்த்தி, அவிநாசி)*

**முன்னுரை:**

*ஆன்மா ஏன் கொல்லப்படுவதில்லை என்பதை விவரித்து, அது விகார மற்றது என்று கூறுகிறார்.*

**20. ந ஜாயதே ம்ரியதே வா கதாசிந்**
**நாயம் பூத்வா பவிதா வா ந பூயஹ|**
**அஜோ நித்யஹ் சாச்வதோ அயம் புராணோ**
**ந ஹன்யதே ஹன்யமானே சரீரே|| - (20)**

**சொற்பொருள்:**

*அயம் - இவ்வாத்மா, கதாசித் - ஒருபோதும், ந ஜாயதே - பிறப்பது இல்லை, ந ம்ரியதேவா - (இதுவரை) இல்லாதிருந்து, பூயஹ - மறுபடியும், பவிதா வா ந - (புதிதாகப்)*

உண்டாவதில்லை, (அல்லது) (பூத்வா - இருந்து, பூயஹ - மறுபடியும். ந பவிதா ந - இல்லாது இருப்பதில்லை) அயம் - இவ்வாத்மா, அஜஹ - பிறவாதது, நிஇத்யஹ் - மரணமில்லாதது, சாச்வதஹ் - எப்போதும் இருப்பது, புராணஹ் - புராணன், தொன்மையானது, சரீரேஹன்ய மானே - சரீரம் கொல்லப்பட்டாலும், ந ஹன்யதே - கொல்லப்படுவதில்லை.

**கருத்துரை:**

இவ்வாத்மா ஒரு போதும் பிறப்பதில்லை, இறப்பதுமில்லை. இதுவரை இல்லாது இருந்து மறுபடியும் புதிதாக உண்டாவது மில்லை. (இதுவரை இருந்து மறுபடியும் இல்லாது போவதுமில்லை) இது பிறப்பு இறப்பில்லாதது, தேயாதது, வளராதது, சரீரம் கொல்லப்பட்டாலும் ஆன்மா கொல்லப்படுவதில்லை.

**விளக்கம்:**

இந்த ஸ்லோகத்தைப் போன்றே கடோபநிஷத்திலும் ஒன்று உண்டு.

**" ந ஜாயதே ம்ரியதே வா விபஸ்சி**
**நாயம் கிதஸ்சின்ன பபூவ கஸ்சித்**
**அஜோ நித்யசாச்வதோ அயம் புராணோ**
**ஹன்யதே ஹன்ய மானே சரீரே"**

**- (கடஉப II - 18)**

கீதை உபநிஷத்சாரம் என்பதற்கு இவையேசான்று, சரீரம் அழிந்து பட்டாலும் ஆத்மா அழிவதில்லை என்பதால் சரீரத்தினின்று ஆத்மா வேறாக சாட்சியாக இருக்கிறது என்பது தெரிகிறது. எனவே மனிதன் சரீரத்தைப்பற்றிக் கவலையுறாது அழிவற்ற ஆத்மாவேதான் என்று எப்போதும் எண்ணியிருத்தல் வேண்டும். அதனால் மிக்க தைரியம் ஆனந்தம் இவை ஏற்படும். பயம் விலகும் மரணபயம் தொலைந்து போகும்.

**வினா:**

ஆன்மாவின் சொரூபம் எத்தகையது?

**விடை:**

(1) அது பிறப்பிறப்பு இல்லாதது (2) எப்போதும் இருப்பது. (3) நிலையானவன் (4) மாறாதவன். (5) புராணன் (6) சரீரம் அழிந்தாலும் தான் அழியாதவன்.

**முன்னுரை:**

ஆன்மா இன்னொருவரை ஏன் கொல்வதில்லை என்பது விவரிக்கிறார்.

**21. வேதா அவிநாசினம் நித்யம் ய ஏனமஜமவ்யயம்|**
**கதம்ஸ புருஷஹ பார்த்த கம் காதயதி ஹந்தி கம்|| - (21)**

**சொற்பொருள்:**

பார்த்த - ஏஅர்ஜுனா ! யஹ - எவனொருவன், அஜம் - பிறவாததாகவும், அவ்யயம் - குறையாததாகவும், அவிநாசினம் - நாசமற்றதாகவும், நித்யம் - நித்ய மானதும், வேத - அறிகிறானோ, ஸஹ புருஷஹ - அந்த மனிதன், கதம் - எவ்வாறு, கம் - எவரை, காதயதி - கொல்லச் செய்கிறான்? கம் - எவரை, ஹந்தி - கொல்வான்?

**கருத்துரை:**

அர்ஜுனனே! இவ்வாத்மாவை எவன் பிறப்பிறப்பு அற்றதாகவும், அழிவற்றதாகவும், நிலைத்திருப்பதாகவும் கருதுகிறானோ, அத்தகையோன் எப்படி இன்னொருவரை கொல்லச் செய்வான், கொல்லுவான்?

**விளக்கம்:**

ஆத்மா நித்யமானவன் ஆகையால் அவன் எவரையும் கொல்வதில்லை, கொல்லுதல் இயலாது என்பது பொருள்.

**முன்னுரை:**

தேகம் அநித்யமானது. தேஹியான ஆத்மா நித்யமானவன் என்பதை உவமானங்களுடன் விளக்குகிறார்.

**22. வாஸாம்ஸி ஜீர்ணானி யதா விஹாய**
**நவானி க்ருஹ்ணாதி நரோஅபராணி।**
**ததா சரீராணி விஹாய ஜீர்ணான்**
**யன்யானி ஸம்யாதி நவானி தேஹீ॥** **(22)**

**சொற்பொருள்:**

நரஹ - மனிதன், ஜீர்ணானி - சிதிலமான (கிழிந்து போன), வாஸாம்ஸி - வஸ்திரங்களை, விஹாய - விடுத்து, அபராணி - மற்றவைகளை, நவானி (வாஸாம்ஸி) - புதிய வஸ்திரங்களை, யதா - எவ்வாறு, க்ருஹ்ணாதி - எடுத்துக் கொள்கிறானோ, ததா - அவ்வாறே, தேஹ - தேஹியான ஆன்மா, ஜீர்ணானி - சிதிலமான, சரீராணி - தேகத்தை, விஹாய - விடுத்து, அன்யானி - மற்றவைகளை நவானி (சரீரானி) புதியசரீரத்தை, ஸம்யாதி - அடைகிறான்.

**கருத்துரை:**

கிழந்து போன பழைய ஆடைகளை விடுத்து மற்றைய புதிய ஆடைகளை எவ்வாறு போட்டுக் கொள்கிறோமே, அவ்வாறே தேஹியான ஆத்மா பழைய சிதிலமான சரீரத்தைவிடுத்து மற்றைய புதிய சரீரத்தை எடுக்கிறான்.

**விளக்கம்:**

கீதையில் பகவான் சில நல்ல உவமானங்களின் வழி போதனை செய்துகொண்டே போவார். எடுத்துக் காட்டுகளுடன்கூடிய போதனை சாமான்ய மனிதனுக்குக் கூட எளிதில் விளங்கும். இங்கு அத்தகைய எளிய உவமானத்தையே கையாண்டுள்ளார்.

சலவைத் தொழிலாளிக்கு அழுக்கான துணிகளைப் போடும்போது எவரும் வருந்துவதில்லை. செடிகளில்,

மரங்களில் இலையுதிர்காலத்தில் இலைகள் உதிரும் போது எவரும் வருந்துவதில்லை. ஏனெனில் புதிதாக அவை மறுபடியும் துளிர் விடும் என்ற தைரியத்தினால். மரணமும் அவ்வாறே என இங்கு பகவான் தெரிவிக்கிறார். ஜீவன் தன் பழுதுபட்ட சரீரத்தை விடுத்து புதிய சரீரத்தை எடுக்கப் போகிறான். எனவே மரணம் என்பது துக்கப்படுவதற்கான விஷயம் இல்லை என்று ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா தெரிவிக்கிறார். அப்படியாயின் ஞானத்தைப் பெற்று கர்மாக்களை செய்து வந்து, மறு பிறப்போ, மரணமோ இல்லாது செய்து கொள்வதே மிகவும் உத்தமம் என்று பகவான் சொல்கிறார்.

'சரீராணி' - என்ற பன்மையைப் பயன்படுத்தியதால் (ஞானாக்னியால் கர்மபலன்களை அழித்து விட்டால்) ஜீவன் அநேக பிறப்புகள் எடுக்க வேண்டிவரும் என்பது தெளிவாகிறது.

ஜீர்ணானி' - என்ற சொல்லிற்கு சிதிலமான, பழுதுபட்ட கர்மாவையுடைய தேஹம் என்று பொருள் சொல்ல வேண்டும். ஏனெனில் எல்லோரும் மூப்பினால் மட்டும் இறப்பதில்லை, இளமையில் குழந்தை பருவத்தில் கூட இறப்பு ஏற்படுகிறது. அப்போது அவர்களின் தேகங்கள் புதிதாகவே இருக்குமே யன்று சிதைந்து போவதில்லை. 'தேஹி' என்பதால் மரணம் தேகத்திற்கேயன்றி தேஹியான ஆன்மாவிற்கு அல்ல என்பது தெரிகிறது. உபாதிகள் மாறினாலும் அவற்றின் சாட்சியான ஆன்மா சிறிதளவும் மாறாது (அசலோ அயம் ஸநாதனஹ) சலனமின்றி இருக்கிறது. அதுவே ஜீவனின் உண்மை சொருபமேயன்றி தேகமல்ல,

**முன்னுரை:**

ஆத்மாவிற்கு பஞ்சபூதங்கள் எவற்றாலும் பாதிப்பு இல்லை என்கிறார்.

**23. நைநம் சிந்தந்தி சஸ்த்ராணி நைநம் தஹதி பாவகஹ| ந**
**சனம் க்லேதயந்த்யாபோ ந சோஷயதி மாருதஹ|| (23)**

**சொற்பொருள்:**

*ஏநம் - இந்த ஆத்மாவை, சஸ்த்ராணி - ஆயுதங்கள், ந சிந்தந்தி - வெட்டுதல் இயலாது, பாவகஹ - அக்னி, ஏனம் - இந்த ஆத்மாவை, ந தஹதி - தகிக்கிறதில்லை. ஆபஹ்ச - நீரும், ஏனம் - இந்த ஆத்மாவை, ந க்லேதயந்தி - நனைக்கிறதில்லை, மாருதஹ்ச காற்றும், ந சோஷயதி - உலர்த்துவதில்லை.*

**கருத்துரை:**

*இந்த ஆத்மாவை ஆயுதங்கள் எவையும் வெட்டமாட்டா. அக்னி எரிக்காது, நீர் நனைக்காது, காற்றும் உலர்த்தாது.*

**விளக்கம்:**

*ஜீவனுக்கு (1) சரீரம் (2) மனம் (3) ஆத்மா என்ற மூன்றும் உண்டு. இவற்றில் ஒன்றில் ஒன்று மிகவும் சூக்ஷ்மமாக பொருந்தியுள்ளது. ஸ்துலபஞ்ச பூதங்கள் (சஸ்திரஜலங்கள்) ஸ்துலமான சரீரத்தையே பாழ்படுத்துமேயன்றி சூக்ஷ்மமான மனதையல்ல. அவ்வாறிருக்கையில் அதிசூக்ஷ்மமான ஆத்மாவை எவ்வாறு அவை பாதிக்கக்கூடும்?*

*ஆன்மீக நோக்கில் பார்த்தாலும் ஸ்தூல சூக்ஷ்ம தேகங்கள் இரண்டும் ஆத்மாவில் கயிறை பாம்பாக எண்ணுவதை போன்று ஏற்பட்டதே யாகும். கற்பனையான பொருள், மூலப்பொருளை சிறிதும் பாதிப்பதில்லை. கானல் நீர், களர் நிலத்தை ஈரப்படுத்த முடியாதல்லவா? ஆன்மாவின் இத்தகைய இயல்பை மனனம் செய்து வந்தால் ஜீவனுக்கு எல்லையில்லாத தைர்யம் ஏற்படும்.*

**முன்னுரை:**

*ஆத்மாவின் அழியாத்தன்மையத் தொடர்கிறார்.*

**24. அச்சேத்யோ அயமதாஹ்யோ அயமக்லேத்யோ அசோஷ்ய ஏவ ச**

**நித்யஹ் ஸர்வகதஹ் ஸ்தாணுரசலோயம் ஸநாதனஹ॥ (24)**

**சொற்பொருள்:**

அயம் - இந்த ஆத்மா, அச்சேத்யஹ - வெட்டப் படாதவன்; அயம் - இந்த ஆத்மா, அதாஹ்யஹ - தகனமடையாதவன், (மற்றும்) அக்லேத்யஹ - நனையாதவன், அசோஷ்யஹ ஏவ ச - உலர்ந்து போகாதவனும் ஆன, அயம் - இந்த ஆன்மா, நித்யஹ - நித்யமானவன். ஸர்வகதஹ - எங்கும் நிறைந்தவன், ஸ்தாணுஹ - ஸ்திரமானவன், அசலஹ - சலன மில்லாதவன், ஸநாதனஹ - அநாதியானவன்.

**கருத்துரை:**

இந்த ஆத்மா வெட்டுண்ணான், வேகான்., நனையான்., உலரான். இவன் நித்யன், எங்கும் நிறைந்து, நிலையாய், அசைவற்று என்றுமிருப்பவன்.

**விளக்கம்:**

ஐம்பெரும் பூதங்கள் ஐம்பெரும் பூதங்களால் ஆகிய பொருள்களையே பாதிக்க வல்லது. ஆத்மாவோ பஞ்ச பூதங்களால் ஆனதன்று. எனவே அதன் மீது பஞ்சபூதங்களின் செயல் பாதிப்பதில்லை.

'நித்யஹ, ஸர்வகதஹ' - என்னும் இரண்டு சொற்கள், ஆத்மா கால தேசத்தைக் கடந்தது என்று விவரிக்கிறது, எக்காலத்தும் இருப்பவன் நித்யன், எல்லாதேசத்தும் நிறைந்திருப்பவன் எங்கும் நிறைபொருள். தேசகாலம் இரண்டிலும் வியாபித்திருந்து ஆத்மா அதனின்றும் அதீதமானது என்கிறார். இவ்வுலகில் உள்ள ஒவ்வொரு பொருளும் ஒரு குறிப்பிட்ட காலமே இருக்கக்கூடியது. காலத்திற்குட்படாத பொருள் இவ்வுலகில் எங்குமில்லை, பிரம்மாண்டம் அனைத்தும் காலக்கருவில் கலந்துவிடும்.

இவ்வாறாக காலம் என்பது அனைத்தையும் விழுங்கக் கூடியதாய் இருக்கையில், ஆன்மாவே அக்காலத்தையே விழுங்கக் கூடியது" எனவேதான் ஆன்மாவிற்கு 'அந்த காந்தகன் என்ற பெயருண்டு' அவ்வாறே ஆன்மா எங்கும்

நிறைபொருள் ஆகிறது. சராசரத்திலுள்ள எல்லா பிராணி கோடிகளிலும் ஆன்மா சத்து சாமான்ய ரூபமாக விளங்குகிறது. இந்த உண்மையை அறிந்தவன் பாவம் செய்வதற்கு எங்ஙனம் இணங்குவான்?

சர்வ சாட்சியான பரமாத்மா எங்கும் நிறை பொருளாய் அனைத்தையும் காண்கையில் அவன் சன்னதியில் பாவம் எவராயினும் செய்வதற்கு இயலுமா? எனவே இந்த உண்மையை நன்றாக மனதிற் கொண்டு சித்தத்தில் அழுக்குகள் ஏதும் சேராத வண்ணம் பார்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

ஆன்மா சர்வ வியாபி ஆதலால் அவன் இன்னுமொரு இடத்திற்கு நகர்வது என்பதில்லை, அவன் இல்லாத இடமென்பது இல்லையாதலால் அவன் நகரும் இடமும் இல்லை. எனவே 'ஸ்தாணு' என்று கூறப்படுகிறான். மற்றும் சநாதனன் என்று வர்ணிக்கப்படுகிறான். ஆத்மா எப்போது மிருப்பதாகையால் அதனைப் பற்றிய தத்வ விசாரணை சநாதன தர்மம் ஆகும். எப்போதும் இல்லாதிருக்கும் அதாவது சநாதனமில்லாது இருக்கும் வஸ்துக்களைப்பற்றிய விசாரணையினால் ஒருபோதும் முக்தி கிட்டாது. எனவே ஆன்ம விசாரணையான சநாதன தர்மத்தையே ஜீவன் பின்பற்றுதல் வேண்டும்.

**வினா:**

ஆத்மா எத்தகையது?

**விடை:**

அழிவற்றவன், எரிக்க இயலாதவன், நனையாதவன், உலராதவன், நித்தியமானவன், சலனமற்றவன், சநாதனன்.

**முன்னுரை:**

இவ்வாறு ஆன்மா நிலையானது என்று உணர்ந்து துக்கத்தை விடுத்தல் வேண்டும் என்று கூறுகிறார்,

**25. அவ்யக்தோ அயமசிந்த்யோ அயமவிகார்யோ அயமுச்யதே।**
**தஸ்மாதேவம் விதித்வைனம் நாநுசோசிதுமர்ஹஸி॥ (25)**

**சொற்பொருள்:**

அயம் - இவ்வாத்மா, அவ்யக்தஹ - இந்திரியங்களுக்கு புலப்படாதது., அயம் - இவ்வாத்மா அசிந்த்யஹ - மனதால் சிந்திக்க முடியாதது., அயம் - இவ்வாத்மா, அவிகார்யஹ - விகாரமில்லாதது (மாறுபடாதது), (இதி - என்று) உச்யதே - சொல்லப் படுகிறது, தஸ்மாத் - ஆகையால், ஏனம் - இவ்வாத்மாவை, ஏவம் - இவ்வாறாக, விதித்வா - அறிந்து, அனுசோசிதம் - துக்கிப்பதற்கு, ந அர்ஹஸி - அருகதையில்லை.

**கருத்துரை:**

இவ் வாத்மா இந்திரியங்களுக்கு புலப்படாதது., சிந்தனைக்கு எட்டாதது, மாறுபாடு அடையாதது, என்று சொல்லப்படுகின்றது. எனவே இவ்வாத்மாவை இங்ஙனம் அறிந்து நீ துன்பத்தை அகற்றுக,

**விளக்கம்:**

ஸ்தூல வடிவமான பஞ்ச பூதங்களின் சேர்க்கையால் ஆன பொருளாயின் அது கண்களுக்கு புலப்படவல்லது. ஆயின் ஆத்மா அத்தகையதல்ல. எனவே தான் கண்ணுக்கு புலப்படாதவன். அவ்வாறே சூக்ஷ்ம பஞ்ச பூதங்களால் ஆனதாயின் மனதிற்கு எட்டவல்லது. ஆயின் ஆத்மா அத்தகையதல்ல, எனவே மனதிற்கு எட்டாதவன். மனம்லயித்தவுடன் மிகுந்திருப்பதுதான் ஆத்மா. மனதைத் தூய்மை படுத்துவதால் அதனை அதிஷ்டானத்தில் லயிக்கச் செய்தால் மிகுந்திருப்பதே ஆத்மா. இவ்வாறாக மனம் செயலற்றிருக்கையில் எட்டும் பொருளான ஆத்மா மனதிற்கு எவ்வாறு எட்டக்கூடும்? எனவேதான் ஆத்மா சிந்தனைக்கு எட்டாதது என வர்ணிக்கப்படுகிறது. மற்றும் இவ்வுலகில் காணும் எல்லா பொருள்களும் பிறப்பு, வளர்தல், முதலான

ஆறு விதமான விகாரங்களை (மாற்றங்களை) அடைகின்றன. ஆத்மா அத்தகைய கண்ணுக்கு புலப்படும் பொருளல்ல. கண்ணுக்குப்புலப்படாதவன். தேசகாலாதீதனான சச்சிதானந்தரூப ஸர்வ சாக்ஷி, மற்றும் கார்யம் மாற்றமடைந்து எப்பொழுதாயினும் தன் காரணத்தில் லயிக்கும்.

ஆன்மாவோ காரியமல்ல. எல்லா காரணங்களுக்கும் காரணமானது. எனவே மாற்றம் என்பதே அங்கு ஏற்படாது.

"தஸ்மாதேவம் விதித்வைநம் நானுசோசிதுமர்ஹஸி" - சோகத்திற்கு மூலமான காரணம் ஸ்வஸ்வரூபத்தைக் குறித்து ஞானம் இல்லாமல் போவதே. தானேதேகம் என்றும், மனம்மென்றும் எண்ணி, அதனுடன் ஜீவன் எப்போது ஐக்கியமடைகிறானோ, உடனேயே அவனுக்கு துக்கம் வந்து சேரும். ஆயின், தான் உண்மையில் தேகம் அல்ல, மனமல்ல, மாற்றமடையாத ஆத்மாவேயென்று சத்குருவின் மூலமாக, நல்ல சாத்திரங்களின் வழியாக அறிந்தால், துக்கத்திற்கு இடமேது? எனவே ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனுக்கு அத்தகைய ஆத்ம ஞானம் அடைந்து துக்கமின்றி வாழ் என போதிக்கிறார்.

இதைக் கொண்டு, தாபத்திரயத்துடன் கூடிய மிகவும் பயங்கரமான சம்சார துக்கத்தில் உழன்று துன்பப்படும் மக்களின் துக்கத்தைப் போக்குவதற்கான ஒரே வழி ஆத்ம ஞானமே என்பது இப்பகவத் வாக்கியத்தால் புலனாகிறது. எனவே ஆத்மாவைப் பற்றியே அனைவரும் அறிய முயலுதல் வேண்டும்.

"ஆத்மாநா அரே த்ருஷ்டவ்ய ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்யஹ" - (ப்ரு உப)

ஆத்ம ஞானமொன்றே இந்த சம்சார பேரிருளில் ஒளிகாட்டும் விளக்கு.

**வினா:**

ஆன்மாவின் இலட்சணங்களை இன்னும் சிறிது விவரமாக கூறவும்.

**விடை:**

அவன் (1) இந்திரியங்களுக்குப் புலப்படாதவன் (2) மனதிற்கு எட்டாதவன். (3) மாற்றமடையாதவன்.

**வினா:**

சோகநிவாரணத்திற்கான வழி என்ன?

**விடை:**

இவ்வாறாக ஆன்மாவையுணர்ந்து, அவ்வாத்மனுபூதியை அடைதலே சோக நிவாரணத்திற்கு வழி.

**முன்னுரை:**

இனி, வாழ்க்கை முறையைவைத்துப் பார்த்தாலும் ஆத்மாவைக் குறித்து வருந்துவதற்கு தேவையேயில்லை என்கிறார்.

**26. அத சைனம் நித்யஜாதம் நித்யம்வா மன்யஸே ம்ருதம்|**
**ததாபி த்வம் மஹாபாஹோ நைனம் சோசிதுமர்ஹஸி|| -(26)**

**சொற்பொருள்:**

மஹாபாஹோ! - மிகுந்ததோள் வலிமையுடைய அர்ஜுனா! - அத ச- ஒருவேளை ஏனம் - இந்த ஆத்மாவை - நித்யஜாதம்வ - யாண்டும் பிறப்பதாகவும், நித்யம் - எப்போதும், ம்ருதம்வா - இறப்பதாகவும், மன்யஸே - நினைக்கிறாய், ததாபி - அவ்வாறாயினும், ஏவம் - இவ்வாறாக, சோசிதும் - வருந்து வதற்கு, த்வாம் - நீ, ந அர்ஹஸி - தகுந்த வனாகாய்.

**கருத்துரை:**

அர்ஜுனா! ஒருவேளை இவ்வாத்மா (தேகத்துடனும்) என்றும் பிறந்து மடிகின்றது என்று எண்ணினாலும், அப்போதும் நீ இவ்வாறாக துக்கித்தல் தகாது.

**விளக்கம்:**

'மஹாபாஹோ'! அர்ஜுனா நீ மிகுந்த தோள்வலிமை யுடையவன். அதுமட்டும் போதாது, ஆன்மீக பலம் கூட வேண்டும். அது இல்லாமையால் நீ விசனப் படுகிறாய். உன் தோள்வலிமை உன் மன வியாகூலத்தைப் போக்கும் சக்தி இல்லாதிருக்கிறது. எனவே உடல் சக்தியுடன் ஆன்மீக சக்தியையும் சம்பாதித்துக் கொள்" என்று சொல்வதற்காக மஹாபாஹோ' என்று குறிப்பாக சொல்கிறார்.

ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனை உற்சாகப் படுத்தும் நிமித்தமாக ஆன்மா நிலையினின்றும் இறங்கி வந்து சாமான்யர்கள் எண்ணிப்பார்க்கும் ஜீவ திருஷ்டியைத் தற்காலிகமாகக் கைக் கொண்டு அந் நிலையில் துக்கத்திற்கு நேரமில்லை என்கிறார்.

'அத ச' - 'ஒருவேளை' என்று சொன்னதால் இது கொள்கைக்காக வன்று என்றும், சாமான்ய மனிதர்களது பார்வையை அனுசரித்து சொல்லப்பட்ட விஷயமே என்றும் தெளிவாகிறது. ஆத்மா தேகத்துடன் கூட பிறந்து, இறந்து இருப்பினும் கூட சோகத்திற்கு இடமில்லை யெனில், இனி உண்மையிலேயே பிறப்பு, இறப்பு இல்லாதிருக்கையில் ஆன்மாவை குறித்து வேறாகச் சொல்ல வேண்டுமா என்பது இதன் பொருள்.

**27. ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யுர் த்ருவம் ஜன்ம ம்ருதஸ்ய ச॥
தஸ்மாதபரிஹார்யே அர்த்தே ந த்வம் சோசிதுமர்ஹஸி॥ - (27)**

**சொற்பொருள்:**

ஜாதஸ்ய - பிறந்தவனுக்கு - ம்ருத்யுஹு - இறப்பு, த்ருவோஹி - நிச்சயம் அல்லவா?, ம்ருதஸ்ய - இறந்தவனுக்கு, ஜன்ம ச - பிறப்பது, த்ருவம் - நிச்சயம், தஸ்மாத் - அக்காரணத்தினால், அபரிஹார்யே - தவிர்க்க முடியாத, அர்த்தே - இவ்விஷயத்தில், த்வம் - நீ, சோசிதும் - துக்கித்திருப்பதற்கு, ந அர்ஹஸி - அருகதையுடைய வனல்லன்.

**கருத்துரை:**

(ஒருவேளை நீ இவ்வாத்மாவை, பிறப்பு இறப்பு இருப்பதாக எண்ணினாலும்) பிறந்தவனுக்கு இறப்பு தப்பாது. இறந்தவனுக்கு பிறப்பு தப்பாது. இவ்வாறு தவிர்க்கமுடியாத விஷயத்திற்காக நீ துக்கிப்பது சரியல்ல.

**விளக்கம்:**

இது மேற்தெரிவிக்கப்பட்ட சாமான்யர்களின் பார்வையை அனுசரித்து சொல்லப்பட்டதே யாகும். உண்மையில் ஆன்மாவிற்கு பிறப்பும் இல்லை இறப்பும் இல்லை.

"அபரிஹார்யே அர்த்தே" - ஆத்ம ஞானம் அடையும் வரை இந்த பிறப்பு இறப்பு தவிர்க்க முடியாததே, ஆத்ம ஞானம் அடைந்தபின் சம்சார சக்கரச்சுழற்சி நின்றுவிடும். அதன் பின் அவை தவிர்க்க முடியாதது அல்ல. எனவே ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா கர்மாவை தீர்க்க இயலாத சாமானியர்களைக் குறித்தே இந்த சுலோகத்தை சொன்னார் என்று ஊகித்துக் கொள்ளலாம். அவ்வாறு இல்லையெனில் 'ந ஜாயதே ம்ரியதே வா கதாசித்' முதலான சுலோகங்களில் சொல்லப்பட்ட உண்மைகளுக்கு இடர்ப்பாடு நேரிடும். இங்கு பகவான் சாமான்ய மனிதனின் பார்வையில் பார்த்தால் கூட ஆத்மா துக்கப்படுதல் இல்லையெனில், ஞானதிருஷ்டியில் வேறாக எவ்வாறு இருத்தல் இயலும் என்பதை தெரிவிப்பதாக நாம் ஊகித்துக் கொள்ளலாம்.

**28. அவ்யக்தாதீனி பூதானி வ்யக்தமத்யானி பாரத!**
**அவ்யக்தநிதனான்யேவ தத்ர கா பரிதேவனா!! - (28)**

**சொற்பொருள்:**

பாரத - ஏ அர்ஜுனா! பூதானி - பிராணிகள் (பிராணிகளின் சரீரங்கள்), அவ்யக்தாதீனி - ஆதியில் (பிறப்பதற்கு முன்பு) கண்ணுக்கு தென்படாதவைகளாயும், வ்யக்தமத்யானி - இடையில் (பிறந்தபின்) தென்படுபவைகளாகவும், அவ்யக்த நிதனான்யேவ - மரணத்திற்கு பின் (முடிவில்)

காணப்படாதவைகளாகவும், (பவந்தி - இருக்கின்றன). தத்ர - அவ்விஷயத்தில் (இன்னும்) பரிதேவனா - துக்கம், கா - ஏன்?

**கருத்துரை:**

அர்ஜுனா! பிராணகோடிகள் அனைத்தும் பிறப்பதற்கு முன் கண்ணுக்கு புலப்படாதவைகளாகவும், பிறந்த பின் (தேகத்துடன்) புலப்படுபவைகளாகவும், மரணத்திற்கு பின் மறுபடியும் புலப்படாத வைகளாகவும் உள்ளன. அவ்வாறிருக்கையில் அதன் விஷயத்தில் துக்கிப்பது எதற்காக? (முதலில் புலப்படாது, மறுபடியும் புலப்பட்டு, மீண்டும் மறைந்து போகும் மாயாரூபமான இந்த தேகத்திற்காக துக்கிப்பதற்கு என்ன இருக்கிறது என்பது பொருள்) (அல்லது முதலில் அவ்யக்தரூபமாக இருந்து மறுபடியும் அவ்வக்தமாகும் இந்த தேகத்திற்காக வருந்துவது ஏன் என்று பொருள் கொள்ளலாம்).

**விளக்கம்:**

பிராணிகள் பிறப்பதற்கு முன் இந்த தேகத்துடன் எவ்விதமான தொடர்பும் இல்லை, மரணத்திற்கு பின்பும் இல்லை, இடையில் மாத்திரமே உண்டு. முதலில் இல்லாது இடையில் மாத்திரமே தென்படுவது மித்யாவஸ்துவேயாகும்.

**("யன்னாதௌ யச்சநாதஸ்யந்தே தன்மத்யே பாதமப்யஸத்**
**அதோ மித்யா ஜகத்ஸர்வமிதி வேதாந்த டிண்டிமஹ"**
**- ஸ்ரீ சங்கராச்சாரியார்.)**

'எது முதலில் இல்லையோ, பின்பும் இல்லையோ அது இடையில் தோன்றினும் இல்லாததேயாகும். எனவே சிருஷ்டிக்கு முன்பே இல்லாததும், பிரளயத்திற்குப் பின்பும் இல்லாததும் ஆன இந்தஜகமனைத்தும் இடையில் இப்போது காணப்படுபவையாயினும் மித்யாவஸ்துவே என வேதாந்தம் பகர்கிறது. இவை வெறும் பிரமையே, கனவு என்பது நித்திரைக்கு முன்பு இருப்பதில்லை, நித்திரையினின்றும் விழித்தபின் இருப்பதில்லை, இடையில் நித்திரையில்

மாத்திரமே இருக்கிறது. கனவு எவ்வாறு இடையில் மாத்திரமே இருக்கிறதோ அவ்வாறே தேகம் முதலான காட்சிப் பொருள்கள் கானல் நீரைப் போன்று உண்மையானவையல்ல, பிரமையை ஏற்படுத்துபவை. அத்தகைய இடையில் வந்தவர்களுக்காக வருந்துவதெதற்கு? என்று பகவான் கேட்கிறார்.

இவ்வாறாக, அநேக யுக்திகளின் வழி ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனின் சோகத்தைப் போக்குவதற்கு முயற்சி செய்கிறார் - இதுவரை அவர் போதித்த யுக்திகள் சுருக்கமாக இங்கு தரப்படுகின்றன.

(1) ஆன்மா நிலையானது, உறவினர்கள் அனைவரும் ஆத்ம சொரூபமுடையவர்களே. எனவே அவருக்காக வருந்த வேண்டியதில்லை.

(2) ஆன்மா விகாரமடைவதில்லை, அது கிழிந்து போன ஆடையைப்போன்று பழைய சரீரத்தை விட்டு புதிய சரீரத்தை எடுத்துக் கொள்கிறது. எனவே அச்சரீரத்திற்காக துன்பப்படுவதில் அர்த்தமில்லை.

(3) ஒருவேளை ஆன்மா எப்போதும் பிறப்பு இறப்பு அடைவதாகக் கருதினாலும் இறந்ததும் மறுபடியும் பிறப்பதால் வருந்த வேண்டியதில்லை.

(4) இச் சரீரங்கள் பிறப்பதற்கு முன் இல்லை, இறந்தபின் இருப்பதில்லை. இடையில் மாத்திரமே சிறிது காலம் கண்களுக்குத் தென்படுகின்றன. எனவே அவை பிரமையே. அதற்காகவும் நாம் துக்கித்தல் தவறு.

இவ்வாறு ஆன்மாவைக் குறித்தோ, சரீரத்தைக் குறித்தோ வருந்தத் தேவையில்லை என்பதை பலவிதமாகக் கூறி அத்தகைய அற்புதமான ஆன்ம சொரூபத்தை நேரில் காண்பவர் மிக அரிதானவர் என்கிறார்.

**29. ஆஸ்சர்யவத் பச்யதி கஸ்சிதேனம்**
**ஆஸ்சர்யவத் வததி தஸ்தவ சான்யஹ:॥**
**ஆஸ்சர்யவச்சைனமன்யஹ் ச்ருணோதி**
**ச்ருத்வாப்யேனம் வேத ந சைவ கஸ்சித்॥ - (29)**

**சொற்பொருள்:**

*கஸ்சித் - ஒருவன், ஏனம் - இவ்வான்மாவை, ஆஸ்சர்யவத் - ஆச்சரியமானதைப் போல, பஸ்யதி - காண்கிறான், ததைவ - அவ்வாறே, அன்யஹ்ச - இன்னுமொருவன், ஆச்சர்யவத் - ஆச்சரியம் போல, ஏனம் - இவ் வாத்மாவை, வததி - சொல்கிறான் அன்யஹ்ச - இன்னுமொருவன், ஏனம் - இவ்வாத்மாவை, ஆஸ்சர்யவத் - ஆச்சரியமானதாகக் ச்ருணோதி - கேட்கிறான், ச்ருத்வாபி - கேட்டாலும், ஏனம் - இவ்வாத்மாவை, கஸ்சித்ச - (அவர்களில்) எவரும், வேத ந ஏவ - அறிவதேயில்லை, (சாக்ஷாத் அனுபூதியை அடைவதேயில்லை).*

**கருத்துரை:**

*இவ்வாத்மாவை ஒருவன் ஆச்சரியமாகப் பார்க்கிறான். இன்னுமொருவன் விந்தையென வியந்து கூறுகிறான். அவ்வாறே மற்றுமொருவன் விந்தையாக கேட்கிறான் இவ்வாறு, கண்டும், சொல்லியும், கேட்டும் கூட எவரும் அதனை சரியாக உணர்ந்தவர் இல்லை. (உண்மையில் அனுபவித்தவர் இல்லை).*

**விளக்கம்:**

*ஆன்மீக வித்தை வெறும் ஆராய்ச்சியுடனோ விளக்கங்களுடனோ நின்று விடுவதில்லை (Theory) அது நடைமுறை விஞ்ஞானம் (Practical Science) அதனை குறித்து ஒவ்வொரு விஷயமும் நேரில் அனுபவித்து அறிந்தால் மட்டுமே அதனை முழுமையாக உணர்தல் இயலும். எனவே அத்தகைய அனுபூதியை அடைவதற்கு பல ஜன்மங்கள் புண்யம் செய்து மனப் பரிபாகம், சித்த நிர்மலம்) ஜன்ம*

வாசனை களற்று இருத்தல் இவை மிக முக்கியம். எனவேதான் சாதனைவழி முறைகளை கடைபிடிப்பவனுக்கே பிரம்ம ஞானத்தின் வாயிலில் நுழைவதற்கு மாத்திரமே இடம் கிடைக்கிறது. மற்றையோர் பிரம்ம ஞானம் ஆன்ம விசாரம் இவற்றில் ஈடுபட்டிருப்பினும் முழுமையான பலன் கிடைப்பதில்லை. இதயக் கோயிலில் நற்குணங்கள் நிறைந்திருப்பின், ரஜோதமோகுணங்கள் அகன்று, தூய்மையாக இருப்பின் தூய்மையான கண்ணாடியில் நன்றாக பிம்பம் தெரிவதைப் போல நன்றாக துவைக்கப்பட்டத் துணியில் சாயம் நன்றாக ஏறுவதைப் போல, பண்படுத்தப்பட்ட நிலத்தில் நன்கு விதைகள் முளைப்பதைப் போல, பிரம்மசாக்ஷாத்காரம் நன்கு அனுபவத்திற்கு வரும். இவ்வாறான சித்த சுத்தியுடையவர் உலகில் மிகவும் அரிதாகையால் ஆத்மானுபூதியடைந்தவரும் மிகவும் குறைவாகவே உள்ளனர் என்று பகவான் பகர்கிறார்.

இதே பொருளே கீழ்க்கண்ட கடோபஷித் சுலோகத்திலும் காணப்படுகிறது:-

**“ச்ரவணாயாபி பஹுபிர்யோ நலப்யஹ**
**ச்ரண்வத்னோ அபி பஹவோ யம் ந வித்யஹு**
**ஆஸ்சர்யோ வக்தா குசலோ அஸ்ய லப்தா**
**ஆஸ்சர்யோ ஜ்ஞாதா குசலானு சிஷ்டஹு”.**

**-(கடோபநிஷித் 1-2-7)**

**“கஸ்சித்தீரஹ ப்ரத்யகாத்மான மைக்ஷத்**
**அவ்ருத்த சக்ஷுரம்ருதத்வமிச்சன்“**

இந்திரியக் கட்டுப்பாட்டுடன், உலக விஷயங்களில் ஈடுபடுத்தாது சித்தத்தை அடக்கி, மனத்தை உள்முகமாகத் திருப்பி, மோக்ஷத்தைக் குறித்த தீவிரமான ஆசையுடன் முயற்சி செய்யும் தீரனே, தன் ஆத்மாவை தரிசித்தல் இயலும் என்று கடோபநிஷத் சொல்கிறது.

ஆன்மா காட்சிப்பொருளைப் போன்று காணக் கூடியதல்ல, கேட்கப்படுவதல்ல, சொல்லக்கூடியதல்ல. அது

இந்திரியங்களுக்கு அப்பாற்பட்டது. மிகவும் சூட்சுமமாக இதயக் குகையில் மறைந்திருப்பது. நிஷ்காம கர்மா, பக்தி, வைராக்கியம், தியானம், அமானித்வம் முதலான நற்குணங்கள் சாதனைகளின் மூலமாக இதயத்தினை தூய்மைப்படுத்திக் கொண்டு, ஆன்ம விசாரணையின் மூலம் அதனை அனுபவத்திற்குக் கொணர்தல் வேண்டும். இங்கு 'வேத ந சைவகஸ்சித்' என்றது, எவரும் ஆன்மாவை அறிவதில்லை என்பது பொருள் அல்ல. அறிந்தவர் மிகவும் அரிதானவர் என்பதே, ஆன்மா காட்சிப் பொருள்களைவிட பல விதத்திலும் வேறுபட்டது ஆகையால் அதனை அனைவரும் ஆச்சரியமாகக் காண்கிறார்கள்.

இச்சுலோகத்திற்கு இன்னுமொரு பொருள் கூட இயம்புதல் இயலும். ஆத்மாவைக் குறித்து, பார்த்தவர், கேட்டவர், சொன்னவர், (ஆன்மானுபவம் அடைந்தவர்) உலகில் மிகவும் அரிதாகவே உள்ளனர் ஆகையால் அவர்கள் ஆச்சரியப்படத் தகுந்தவர்கள்.

**முன்னுரை:**

இதுவரை ஆத்மாவை குறித்து விசாரணை செய்து, அதனை இங்கு முடித்துக் கொண்டு ஆன்மா நித்யமானது எனவே எவரும் எவருக்காகவும் துக்கித்தல் கூடாது மறுபடியும் வலியுறுத்திக் கூறுகிறார்.

**30. தேஹீ நித்யமவத்யோஅயம் தேஹே ஸர்வஸ்ய பாரத!**
**தஸ்மாத் ஸர்வாணி பூதானி ந த்வம் சோசிதுமர்ஹஸி|| (30)**

**சொற்பொருள்:**

பாரத - அர்ஜுனா! ஸர்வஸ்ய - எல்லா பிராணிகளுடைய, தேஹே - தேகத்தில், (இருக்கின்ற), அயம் தேஹீ - இவ்வாத்மா, நித்யம் - எப்போதும், அவத்யஹ - வதை செய்யப்படாதது, தஸ்மாத் - அதனால், ஸர்வாணி - எல்லா, பூதானி - உயிர்களைக் குறித்தும் - த்வாம் - நீ, சோசிதும் - விசனப்பட, ந அர்ஹஸி - அருகதையுடையவனாகாய்.

**கருத்துரை:**

அர்ஜுனா! எல்லா பிராணிகோடிகளின் தேகத்தில் உறைகின்ற இந்த ஆன்மா எப்பொழுதும் வதை செய்யப்படாதது. எனவே எந்தப் பிராணியைக் குறித்தும் நீ வருந்துதல் தகாது.

**விளக்கம்:**

தேகம், அழிந்தாலும் தேகத்திலுள்ள ஆன்மா கொல்லப்படுவதில்லை. 'தேஹீ' என்றதால், ஆத்மா, தேகத்திலேயே இருந்து, தேகத்திற்குச் சாட்சியாய், நிற்கிறான் என்பது பொருள். 'நித்யம்' என்றதால் இந்த உண்மை ஏதோ ஒரு காலத்தில் இருப்பதன்று, எப்போதும் ஆன்மா வதைபடாதவன் என்கிறார்.

இச்சுலோகத்தில் 'ஸர்வ' என்ற சொல் இருமுறை பயன்படுத்தப்பட்டுள்ளது - 'ஸர்வஸ்ய' 'ஸர்வாணி பூதானி'. இதனை வைத்துப் பார்த்தால் எல்லா உயிர்களிடத்தும், தேகத்திலும், - இந்த தேகம் எந்த ஜாதி, மதம், ஆண், பெண், விலங்கு, தாவரம் இவையனைத்திலும் வசிக்கிறான் என்பது தெளிவாகிறது. தேகம் மரணமடையும் போதும், வியாதியால் அவதியுறும் போதும் தாமே மரணமடைவதாகவும் தாமே நோயால் அவதியுறுவதாகவும் நினைத்து வருந்துவர். அவ்வாறு நினைத்தல் தவறு என்று பகவான் இச் சுலோகத்தில் வெளிப்படையாகக் கூறுகிறார். தேகம் பாதிக்கப்பட்டாலும், மரணமடைந்தாலும் தேகத்திலுள்ள ஆன்மாவான தான் உண்மையில் பாதிக்கப் படுவதில்லை, மரணமடைவதில்லை. எனவே சோகத்திற்கு வழியே இல்லை என்று பகவான் தெளிவாக்குகிறார். சோகம் தொலைவதற்கு, தான் தேகம் அல்ல என்றும், தேஹியான ஆன்மாவே என்றும் நினைப்பது மாத்திரமே வழி. எனவே தான் ஆன்மாவேயென்று எப்போதும் எண்ணி இருத்தல் வேண்டும்.

'பாரத' - 'பா' என்றால் பிரகாசம், ஒளி. 'ரதஹ' - பராக்கிரமம் நிறைந்தவன். ஏ அர்ஜுனா! இத்தகைய ஆத்ம ஞான ஒளியால் பிரகாசிப்பாய் தேகாபிமானம் என்ற தவத்தில்

மூழ்கிவிடாதே! என்று 'பாரத' என்றழைத்து அர்ஜுனனை எச்சரிக்கிறார் பகவான்.

**வினா :**

தேகத்தின், தேஹியின் இயல்பு எத்தகையது?

**விடை :**

தேகம் வதைக்கப்படக்கூடியது, அழியக்கூடியது. தேஹியான ஆன்மா வதைக்கப்படான், அழியான்.

**வினா :**

சோகம் தொலைவதற்கான வழி யாது?

**விடை :**

தேகத்தினையே தான் என்று கருதாது, தான் ஆத்மாவே என்று கருதுவதால் சோகம் நீங்கும்.

**முன்னுரை :**

இதுவரை சாங்கிய யோகத்தின் சாரமான ஆத்மாவின் நித்யத்தைப் போதித்து, இனி வரும் ஏழு சுலோகத்தின் வாயிலாக க்ஷத்திரிய தர்மத்தின்படியும் நீ துக்கித்தல் தகாது என அர்ஜுனனுக்கு பகவான் போதிக்கிறார்.

**31. ஸ்வதர்மமபி சாவேக்ஷ்ய ந விகம்பிதுமர்ஹஸி।**
**தர்மயாத்ஹி யுத்தாச்ச்ரேயோ அன்யத் க்ஷத்ரியஸ்ய ந வித்யதே॥**

**சொற்பொருள்:**

ச - மற்றும், ஸ்வதர்மம் - ஸ்வதர்மமான (க்ஷத்திரிய) தர்மத்தை, அவேக்ஷ்ய அபி - நோக்குமிடத்தும், விகம்பிதும் - நடுங்குவதற்கு, ந அர்ஹஸி - அருகதையுடையவனாகாய், க்ஷத்திரியஸ்ய - க்ஷத்திரியனுக்கு, தர்ம்யாத் - தர்மமயமான,

யுத்தாத் - யுத்தத்தைக் காட்டிலும், அன்யத் - வேறு, ச்ரேயஹ - சிறப்பு, ந வித்யதே ஹி - இல்லையல்லவா?

**கருத்துரை :**

ஏ அர்ஜுனா! மற்றும் உன் சுதர்மமான க்ஷத்திரிய தர்மத்தை நோக்குமிடத்தும் யுத்தத்தினின்றும் பின்வாங்குதல் நல்லதல்ல. ஏனெனில், க்ஷத்திரியனுக்கு தர்மயுத்தத்தைக் காட்டிலும் மேலானதொன்று இல்லையல்லவா?

**விளக்கம் :**

கடமையாற்றுதல், ஸ்வதர்மத்தைச் செய்தல், தர்மத்திற்கு எதிரான காரியங்களை மேற்கொள்ளாதிருத்தல் ஆகியவற்றில் கிருஷ்ணருக்கு எத்துணை ஈடுபாடு என்பது இந்த சுலோகத்தினால் தெரிய வருகிறது. சரீரம் உள்ளவரை ஒவ்வொருவரும் ஏதோ ஒரு செயலை ஆற்றவேண்டியுள்ளது. அத்தகைய ஸ்வதர்ம காரியங்களை நிஷ்காம்யமாக செய்து வந்தால் மனிதனுக்கு மிக உன்னதமான நிலையையடைவதுடன், சித்த சுத்தி ஏற்பட்டு அதன்வழி மோக்ஷத்தை அடைதல் கூடும். இங்கு 'தர்ம்யாத்' என்பதால் தர்மயுத்தத்தையே க்ஷத்திரியன் மேற்கொள்ள வேண்டுமென்பதும் அதர்ம யுத்தமல்ல என்பதும் தெளிவாக்கப்பட்டுள்ளது.

**32. யத்ருச்சயா சோபபன்னம் ஸ்வர்கத்வாரமபாவ்ருதம்|**
**ஸுகினஹ க்ஷத்ரியாஹ பார்த்த லபந்தே யுத்தமீத்ருசம்|| (32)**

**சொற்பொருள்:**

பார்த்த - அர்ஜுனா ! யத்ருச்சயா - எதிர்பாராது (தற்செயலாய்), உபபன்னம் - நேர்ந்துள்ள, அபாவ்ருதம் - திறந்துள்ள, ஸ்வர்க த்வாரம் - சுவர்க்க வாயில், ஈத்ருசம் - இதுபோன்ற, யுத்தம் - யுத்தத்தை, க்ஷத்திரியாஹ - க்ஷத்திரியர்கள், லபந்தே - அடைகிறார்களோ, (தே - அவர்கள்) சுகினஹ - சுகவான்கள் (பாக்கியவான்கள்)

**கருத்துரை:**

பார்த்தா! முயற்சியின்றி தானாகவே கிடைக்கக்கூடியதும், திறந்துள்ள சுவர்க வாயில் போன்றதும், ஆன இத்தகைய யுத்தத்தை எவர் அடைகிறார்களோ அவர்கள் பாக்யவான்கள்.

**விளக்கம் :**

'பார்த்த' - அர்ஜுனனை 'பார்த்தா' என்று அழைப்பது ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனின் தாயான (குந்தி தேவி) க்ஷத்திரிய தர்மத்தைப் போற்றக் கூறி அனுப்பிய செய்தியை அவனுக்கு ஞாபகப்படுத்தியதைப் போல் உள்ளது. யுத்தத்திற்கு முன்பாக குந்திதேவி ஹஸ்தினாபுரத்தினின்றும் கிருஷ்ணரின் மூலமாக அர்ஜுனனுக்கு கீழ்வரும் செய்தியை அனுப்பினாள். "எதன் நிமித்தமாக க்ஷத்திரியமாதா பிள்ளையை ஈன்றெடுப்பாளோ, அத்தகைய சந்தர்ப்பம் இப்போது வந்தது".

**("ஏததன இயோ வாச்யோ நித்யோத்யுக்தோ வ்ருகோதரஹ**
**யதர்த்தம் க்ஷத்ரியா நூதே தஸ்ய காலோ அயமாகதஹ!!**
**(மஹாபாரதம் - 2.137-910)**

குந்திதேவி - "ஏ கிருஷ்ணா! எதன் நிமித்தமாக க்ஷத்திரிய மாதா பிள்ளையை ஈன்றெடுக்கிறாளோ, அத்தகைய சந்தர்ப்பம் இப்போதே வந்ததென்று அர்ஜுனனிடமும், எப்போதும் யுத்தத்திற்கு தயாராய் நிற்கும் பீமனிடமும் சொல்க!")

வெளிப்படையான யுத்தம் க்ஷத்திரியர்களுக்கு மாத்திரமேயுண்டு. உள்முகமான யுத்தம் (காமக் குரோதம், விருப்புவெறுப்பு, கெட்ட சகவாசம்) இவைகளுடனான போர் ஒவ்வொருவருக்கும் உண்டு. வெளிப்படையான போர் தர்மயுத்தமாக இருப்பின் சுவர்க்கம் கிடைக்கும். உள்முகமான போராட்டத்தில் வெற்றி கண்டவர்க்கோ மோக்ஷம் கிடைக்கும். உண்மையான க்ஷத்திரிய வீரர்கள் யுத்தம் எப்போது வரும் என்று காத்து நிற்பர். அவ்வாறே தீவிரமான முமுக்ஷுக்கள் மாயை, அஞ்ஞானம் இவற்றுடன் எப்போது யுத்தம் புரிவோம் என்று காத்து நிற்பர். க்ஷத்திரியர்களுக்கு

யுத்தம் போன்று முமுக்ஷுக்களுக்கு அவித்தையுடன் போராடுதல் என்றால் மிக விருப்பம்.

**33. அத சேத் த்வமிமம் தர்ம்யம் ஸங்க்ராமம் ந கரிஷ்யஸி|**
**ததஹ் ஸ்வதர்மம் கீர்த்திம் ச ஹித்வா பாபம் அவாப்ஸ்யஸி|| (33)**

**சொற்பொருள் :**

அத - ஆனால், த்வாம் - நீ இமம் - இந்த, தர்ம்யம் - தர்மமயமான சங்கிராமம் - யுத்தத்தினை, ந கரிஷ்யஸி சேத் - செய்யாமல் போவாயானால், ததஹ - அதனால், ஸ்வதர்மம் - ஸ்வதர்மத்தை, கீர்த்திஞ்ச - கீர்த்தியையும் ஹித்வா - இழந்து, பாபம் - பாவத்தை, அவாப்ஸ்யஸி - அடைவாய்.

**கருத்துரை :**

இனி நீ அறப்போராகிய இந்த யுத்தத்தினை ஆற்றாவிட்டால், அதனால் ஸ்வதர்மத்தை விட்டவனாய், கீர்த்தியையும் இழந்து பாவத்தை அடைவாய்.

**34. அகீர்த்திஞ்சாபி பூதானி கதயிஷ்யந்தி தே அவ்யயாம்|**
**ஸம்பாவிதஸ்ய சாகீர்த்திர் மரணாததிரிச்யதே|| (34)**

**சொற்பொருள்:**

அபி ச - மற்றும், பூதானி - உயிர்கள் (மக்கள்) தே - உன்னைப்பற்றி, அவ்யயாம் - எப்போதும் மாறாத, அகீர்த்திம் - அபகீர்த்தியை, கதயிஷ்யந்தி - பேசுவர், ஸம்பாவிதஸ்ய - இதுவரை நன்கு கௌரவமாகப் போற்றப்படுபட்டிருப் பவனுக்கு, அகீர்த்திஹி - அபகீர்த்தியானது, மரணாத்ச - மரணத்தைக் காட்டிலும், அதிரிச்சயதே - அதிகமாகும்.

**கருத்துரை :**

மேலும் மக்கள் உன்னை யாண்டும் இகழ்ந்து கடைசிவரை பேசுவர், கௌரவமாக போற்றப்பட்ட ஒருவனுக்கு அபகீர்த்தி மரணத்தை காட்டிலும் இழிவானது.

**விளக்கம்:**

செய்யக்கூடாததை செய்யும்போது, செய்யவேண்டியதை செய்யாமலிருக்கும் போது, உலகில் அபகீர்த்தி பெருகும். செய்ய வேண்டிய தர்மயுத்தத்தைச் செய்யாவிட்டால் அபகீர்த்தியடைவான் என்று ஸ்ரீ கிருஷ்ணர் எச்சரிக்கின்றார். கௌரவத்துடன் வாழ்ந்தவனுக்கு அபகீர்த்தி மரணத்தைக் காட்டிலும் கொடியது. ஏனெனில், மரணம் சரீரத்தை மட்டுமே பாதிக்கக் கூடியது. அபகீர்த்தியோ வம்சத்தையோ பாதிக்கக் கூடியது.

**உட்பொருள்:**

ஜீவன் ஆன்ம சொரூபமானவன். மிகவும் போற்றற்குரியவன். அத்தகையவன் இந்திரியம், மனம் முதலானவற்றிற்கு அடிமைப்பட்டால் அபகீர்த்தியை யடைவான், எனவே ஆத்ம திருப்தியை அடைந்து மாயையும், இந்திரியங்களையும் வென்று, அத்தகைய அபகீர்த்தி வராமல் பார்த்துக் கொள்ளுதல் அவனது கடமையாகும்.

**35. பயாத்ரணாதுபரதம் மம்ஸயந்தே த்வாம் மஹாரதாஹா।**
**யேஷாம் ச த்வம் பஹு²மதோ பூத்வா யாஸ்யஸி லாகவம்॥(35)**

**சொற்பொருள்:**

ச - மற்றும், யேஷாம் - எவரிடத்தில், த்வாம் - நீ, பஹு²மதஹ் பூத்வா - பெருமையாகப் போற்றுதலுடன் இருந்தாயோ, லாகவம் - சிறுமையை (அகௌரவத்தை) யாஸ்யஸி - அடைவாய், (தே - அத்தகைய) மஹாரதாஹா - மகாரதர்கள், த்வாம் - உன்னை, ரணாத் - யுத்தத்தினின்றும், பயாத் - பயத்தினால், உபரதம் - புறங்காட்டியவனாய், மம்ஸ்யந்தே - நினைப்பர்.

**கருத்து :**

இதுவரை எத்தகைய மகாரதர்கள் உன்னைப் பெருமையாகக் கருதியிருந்தார்களோ, அவர்களே,

பயத்தினால் நீ யுத்தத்தினின்றும் புறங்காட்டி ஓடினாய் என்று எண்ணுவார்கள்.

**36. அவாச்யவாதாம்ஸ்ச பஹூன் வதிஷ்யந்தி தவாஹிதாஹா!**
**நிந்தந்தஸ்தவ ஸாமர்த்யம் ததோஹாதுஹ் கதரம் நு கிம்||(36)**

**சொற்பொருள்:**

தவ - உன்னுடைய, அஹிதாஹா - எதிரிகள், தவ - உன்னுடைய, சாமர்த்யம் - சாமர்த்தியத்தை, நின்தந்தஹா - நிந்திக்கிறவர்களாக, பஹூன் - பலவான, அவாச்யவாதாம்ஸ்ச - தான் - சொல்லத்தகாத வார்த்தைகளைக் கூட, வதிஷ்யந்தி - சொல்லுவார்கள், ததஹ - அதைவிட துக்கதரம் - பெருந்துன்பத்தைத் தரக் கூடியது, கிம் நு - யாது உள்ளது?

**கருத்துரை :**

அதுவேயன்றி உன் பகைவர்கள் உன் திறமையைப் பழித்து பலவாறான கடுஞ்சொற்களைக் கூட சொல்வார்கள், அதைவிட பெருந்துன்பம் யாது உளது?

**முன்னுரை:**

தர்மயுத்தத்தினால் இகபரலோகத்தில் அடையக்கூடிய சிறப்பைக் கூறுகிறார்.

**37. ஹதோ வா ப்ராப்ஸ்யஸி ஸ்வர்கம் ஜித்வா வா போக்ஷ்யஸே மஹீம்!**
**தஸ்மாதுத்திஷ்ட கௌந்தேய யுத்தாய க்ருதநிஸ்சயஹ|| (37)**

**சொற்பொருள்:**

கௌந்தேய - அர்ஜுனா! ஹதோவா - (நீ) கொல்லப்பட்டாலோ, ஸ்வர்கம் - ஸ்வர்கத்தை, ப்ராப்ஸ்யஸி - அடைவாய், ஜித்வா வா - வெற்றி பெற்றாலோ, மஹீம் - இராஜ்யத்தை, போக்ஷ்யஸே - அனுபவிப்பாய், தஸ்மாத் - அதனால், யுத்தாய - யுத்தத்திற்காக, க்ருதநிச்சயஹ - நிச்சயித்துக் கொண்டு, உத்திஷ்ட - எழுக!

**கருத்து:**

அர்ஜுனா! ஒருவேளை நீ இந்த தர்மயுத்தத்தில் எதிரிகளால் கொல்லப்பட்டால் வீர சுவர்க்கத்தை அடைவாய். அங்ஙனமின்றி, நீ வெற்றி பெற்றால் பூலோக இராஜ்யத்தை அனுபவிப்பாய். இவ்வாறு இரண்டு விதத்திலும் நன்மையை யடைவாய். எனவே எழுக! யுத்தத்திற்கு தயாராக எழுந்திரு!

**விளக்கம்.**

இச்சுலோகம் முமுக்ஷுக்களுக்கு உயிர் போன்றது. இது ஒரு மகா மந்திரம், சாதனையில் நிராசை, அதைரியம், உற்சாகமின்மை இவை ஏற்படும் போதெல்லாம். இதனைப்படித்து வந்தால் மிக்க தைரியம் ஏற்படும். ஏனெனில், தர்மத்தைப் பின்பற்றி யுத்தத்தில் வீரன் வென்றால் ராஜ்யத்தை, கொல்லப்பட்டால் வீர சுவர்க்கத்தையும் எவ்வாறு அடைவானோ, அவ்வாறே மாயையுடன் (அவித்தை) நடக்கும் யுத்தத்தில், ஆத்மா அநாத்மாவிற்கிடையேயான யுத்தத்தில், ஆத்மா அநாத்மாவிற்கிடையேயான யுத்தத்தில், சாதகன் வெற்றி பெற்றால் மோக்ஷத்தையும், மரணமடைந்தால் உத்தம லோகத்தையும் அடைகிறான். எனவே இரண்டு விதமாகவும் அவனுக்கு மேன்மையே கிடைக்கின்றது. ஆன்மீக சாதனை முடிவடையும் முன்பே ஒருவேளை இடையிலேயே முமுக்ஷுவுக்கு மரணம் ஏற்பட்டால், அவனுக்கு எவ்விதத்திலும் துர்க்கதி நேராது என்றும், உத்தம லோகத்தில் சுகங்களை அனுபவித்து மறுபடியும் பூலோகத்தில் உத்தம வம்சத்திலோ அல்லது யோகிகளின் குலத்திலோ அவதரித்து தான் இதுவரை விட்ட சாதனைகளைத் தொடர்வான் என்று பகவான் பின்வரும் 6ஆவது அத்தியாயத்தில் சொல்லப் போகிறார். முமுக்ஷு தன் ஆன்மீக சாதனையை, இயற்கைப் போராட்டத்தை எந்த நிலையிலும் நிறுத்தக் கூடாது என்ற திடமான நிச்சயத்துடன் முன்னேறுதல் வேண்டும் என்று அர்ஜுனனை முன் வைத்து உலக மக்களுக்கு எச்சரிக்கை விடுக்கிறார். "க்ருத நிச்சயஹ" - என்பதால் இலட்சியத்தினை அடையும் வரை சாதனையை எந்நிலையிலும் விட்டுவிடுதல்

கூடாது என்பது தெளிவாகிறது. திடமான நிச்சயம், பற்றுதல் இல்லாதவர்களை மாயை கீழே தள்ளிவிட்டுவிடும். எனவே எச்சரிக்கையாக இருத்தல் வேண்டும்.

**“தஸ்மாதுத்திஷ்ட“**

(உத்திஷ்ட, ஜாக்ரத, ப்ராப்யதவரான்னிபோத (கடோபநிஷத்) எழுக! விழித்துக்கொள்! மகனீயர்களை அணுகி ஞானத்தை பெறுவாய்)

எழுக என்று பகவான் அர்ஜுனனுக்குத் தைரியத்தை ஊட்டுகிறார். சம்சாரத்தில் பலவிதமான துன்பங்களையும், தாபத்ரயத்திலும் விழுந்து, கணநேர சுகத்திற்காக, பாடுபட்டு, பலவிதமான அவஸ்தைகளையும் படுவோர்க்கு இத்தகைய தைரியத்தை ஊட்டக்கூடிய உற்சாக வாக்கியங்கள் மிகவும் தேவையானவையே!

**முன்னுரை :**

காரியங்களை எவ்விதமாக ஆற்றினால் மனிதன் பாவத்தை அடையமாட்டான் என்பதை அடுத்துக் கூறுகிறார்.

**38. ஸுகதுஃக்கே ஸமே க்ருத்வா லாபாலாபௌ ஜயாஜயௌ।**
**ததோ யுத்தாய யுஜ்யஸ்வ நைவம் பாபமவாப்ஸ்யஸி॥ (38)**

**சொற்பொருள்:**

சுகதுக்கே - சுகதுக்கங்களை, லாபாலாபௌ - லாப நஷ்டங்களையும், ஜயாஜயௌ - ஜய அபஜயங்களையும் ஸமே க்ருத்வா - சமனாகக் கருதி, ததஹ - அதன்பிறகு, யுத்தாய - யுத்தத்தின் பொருட்டு, யுஜ்யஸ்வ - ஆயத்தப்படு, ஏவம் - இங்ஙனம் செய்தால், பாபம் - பாபத்தை, ந அவாப்ஸ்யஸி - அடையமாட்டாய்.

**கருத்துரை :**

சுகதுக்கங்கள், லாபநஷ்டங்கள், ஜய அபஜயங்கள் ஆகியவற்றைச் சமனாகக் கருதி யுத்தத்திற்கு தயாராகு. இவ்வாறு செய்தாயானால் நீ பாபம் அடையமாட்டாய்.

**விளக்கம்:**

இச் சுலோகத்தில் பகவான் கர்ம இரகசியத்தைப் போதிக்கிறார். கர்மாவை செய்துவரும் போதும் எந்த விதமான பாவமும் தொடராமல் செய்வதற்கான விதங்களைச் சொல்கிறார். அதுவே சம நோக்கு (Balance of Mind) இன்பதுன்பங்களில் சமநோக்குடன் காரியங்களை ஆற்றுதல் வேண்டும். அதனால் மனிதனுக்கு பாவத்தின் தாக்கல் இருக்காது. இன்பத்தை எதிர்கொண்டபோது மனம் பொங்கிப் போய், கர்வம்கொண்டும், துன்பம் வந்தபோது குறுகிப்போய் விசாரப்படுதலும் இன்றி சமபுத்தியைக் காத்துக் கொள்ளவேண்டும் சமசித்தத்திலேயே ஆன்மா நன்றாகப் பிரதிபலிக்கும். அத்தகையோனை பாவம் எவ்வாறு அடையும்? கர்மம் பந்தத்திற்குக் காரணமென்றும், ஜன்மம் எடுப்பதற்கு காரணமென்றும் சிலர் எண்ணுவர். ஆயின் பகவான் அவ்வாறு சொல்லவில்லை. சமபுத்தியுடன் செயலாற்றி வந்தால் அந்த கர்மாவினால் பாவம் என்றும் வராதென்று கீதாச்சார்யன் ஆணித் தரமாகக் கூறுகின்றார். கர்மாவில் தோஷம் இல்லை. கர்மாவைச் செய்யும் முறையிலேயே உள்ளது' என்று சாதகர்கள் முறையறிந்து சமபுத்தியுடன் செயலாற்ற வேண்டும்.

"ததோ யுத்தாய யுஜ்யஸ்வ' என்று சொல்வதால் கர்மாவில் பிரவேசிப்பதற்கு முன் அதனை எவ்வாறு செய்தல் வேண்டும் என்பதை தெரிந்து கொள்ள வேண்டும் என்பது தெளிவாகிறது. 'ததஹ' - அதன்பிறகு - யுத்தம்செய் என்று பகவான் கூறுகிறார். எதன்பிறகு? இன்பதுன்பங்களில் சமபுத்தியுடன் இருந்து பழகிக் கொண்டபின்பு. அத்தகைய சமத்துவத்தை முதலில் பயிற்சி செய்யாது கர்மாவைச் செய்யத் தொடங்கினால் அழிவு நிச்சயம்' அத்தகைய கர்மா மேடுபள்ளங்கள் நிறைந்ததாய் மன சஞ்சலங்கள், பாவங்கள்

இவற்றைச் சேர்க்கும். கர்மத்துடன் ஞானம் இணைய வேண்டும். அப்போது அது பரிமளிக்கும். அதனால்தான் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனுக்கு எடுத்தவுடனேயே, ஞானத்தை உபதேசித்து அதன்பின்னர் கர்மாவை போதிக்கிறார்.

**வினா:**

கர்மாவை எப்போது 'பின்பற்றுதல் வேண்டும்?

**விடை:**

இன்ப துன்பங்களில் சமபுத்தியுடன் நோக்கும் சக்தி வந்தவுடன்.

**வினா:**

கர்மாவை செய்து வரும்போது பாவம் தொடராதிருக்க என்ன செய்ய வேண்டும்?

**விடை:**

சித்தத்தில் இன்பதுன்பங்களின் பால் சமமான பார்வை கொண்டிருத்தல் வேண்டும். அப்போது கர்மாவைச் செய்தால் பாவம் தொடராது.

**முன்னுரை:**

இதுவரை சாங்கிய யோகத்தைக் குறித்து போதித்து, இனி கர்மயோகத்தைப் பற்றிச் சிறிது கூறுகிறார்.

**39. ஏஷா தே அபிஹிதா ஸாங்க்யே புத்திர் யோகேத்விமாம் ச்ருணு|**
**புத்த்யா யுக்தோ யயா பார்த்த கர்மபந்தம் ப்ரஹாஸ்யஸி||(39)**

**சொற்பொருள்:**

பார்த்த - ஏ அர்ஜுனா! ஸாங்க்யே - ஆத்ம தத்துவ விஷயத்தில், ஏஷா - இங்கு சொல்லப்பட்ட, புத்தி - ஞானம், தே - உனக்கு, அபிஹிதா - சொல்லப்பட்டது, யயாபுத்யா - எத்தகைய விவேகத்துடன், யுக்தஹ - கூடினவனானால்,

கர்மபந்தம் - கர்மபந்தத்தை, ப்ரஹாஸ்யஸி - விடக்கூடுமோ, (தாம் - அத்தகைய), யோகே து - கர்மயோக விஷயத்தில், இமாம் - இனி சொல்லப்போகும் (நிச்சயத்தை), ச்ருணு - கேள்.

**கருத்துரை:**

ஏ அர்ஜுனா! இதுவரை சாங்கிய சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட ஆன்ம தத்துவ அறிவு உனக்கு புகட்டப்பட்டது. இனி யோக சாஸ்திரத்தில் கர்மயோக சம்பந்தமான விவேகத்தைப் பற்றி கூறப்போகிறேன். அதனை நீ அறிவாயாகில் கர்மபந்தத்தினின்றும், சுலபமாக விடுபடுவாய். எனவே சிரத்தையுடன் கேட்பாயாக!

**விளக்கம்:**

கர்மாவைச் செய்தாலும், அதனால் கட்டுப்படாது இருத்தல் வேண்டுமாயின், அதனை எவ்வாறு செய்தல் வேண்டுமோ அதனக் குறித்து விவேகம் தேவையானது. அத்தகைய விவேகத்தையே 'புத்தி' என்பர், அத்தகைய புத்தியுடன் கர்மாவைச் செய்தால் ஜீவன் கர்ம பந்தத்தில் கட்டுப்படமாட்டான். பந்தத்தை உண்டாக்கும் கர்மாவே அதன்பிறகு மோக்ஷத்திற்கு காரணமாக மாறிவிடும். எனவே பகவான் தெரிவிக்கப்போகும் அத்தகைய புத்தியை, கர்மயோக ரகசியத்தை ஒவ்வொருவரும் கைக் கொண்டு பந்தவிமுக்தியடைதல் வேண்டும்.

**முன்னுரை:**

கர்மயோகத்தின் மகிமையை வர்ணக்கிறார்.

**40. நேஹாபிக்ரமநாசோ அஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே!
ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத்!! (40)**

**சொற்பொருள்:**

இஹ - (மோக்ஷமார்க்கமான) இந்த கர்மயோகத்தில், அபிக்ரமநாசஹ - ஆரம்பிக்கப்படும் முயற்சி வீண்போதல், ந

அஸ்தி - இல்லை, ப்ரத்யவாயஹ - தோஷமும் (அல்லது குற்றமோ) ந வித்யதே - இல்லை, அஸ்ய தர்மஸ்ய - கர்மயோகம் என்கிற தர்மத்தின், ஸ்வல்பமபி - சிறிதாயினும், மஹதஹ - பெரும், பயாத் - பயத்தினின்றும், த்ராயதே - காப்பாற்றுகிறது.

**கருத்துரை :**

இங்கு ஆரம்பிக்கப்பட்ட கர்மயோகத்தில் பலன் இன்றிப் போதல் இல்லை. முழுவதும் பூர்த்தியாவதற்கு முன்பாகவே எக் காரணத்தை கொண்டேனும் இடையில் நிறுத்திவிட்டாலும் குற்றம் ஏதும் இல்லை. இந்த கர்மயோக அனுஷ்டான தர்மம் ஓரளவே சிறந்ததாயினும் (பிறப்பு இறப்பு எனும் பிரவாக ரூபமான) சம்சார பயத்தினின்றும் காப்பாற்றக் கூடியது.

**விளக்கம் :**

புத்தியுடன் (விவேகத்துடன்) கூடிய இந்த கர்மயோகம், அதாவது நிஷ்காம கர்மயோகத்தினை (ஆன்மீக சாதனையை) தொடங்கினால் அது பலனின்றிப் போதல் இல்லை. அது தவறாது நற்பலனை அளிக்கும். ஒருவேளை ஏதாவது எதிர்பாராது இடைஞ்சல் ஏற்பட்டு இடையில் நிறுத்தப்பட்டாலும் குற்றமில்லை. விதையை நாட்டிய பிறகு அதற்குத் தேவையான நீர் முதலியவற்றை ஊற்றிப் பாதுகாத்து வந்தால் மாத்திரமே பலன் நம் கைக்குக் கிடைக்கும். இடையில் சரிவர கவனிக்கப்படாவிட்டால் அச் செடி காய்ந்துபோய் பலன் கொடுக்காது. நிஷ்காம கர்மயோக அவ்வாறில்லை. எத்தனை செய்தோமோ அதற்கான பலன் கிடைக்குமேயன்றி அதனால் குற்றம் ஒருபோதும் நேர்வதில்லை.

"த்ராயதே மஹதோ பயாத்" - விவேகத்துடன் கூடிய கர்மா, அல்லது நிஷ்காம கர்மயோகம், ஓரளவே பின்பற்றப் பட்டாலும், பெரும் பயத்தினின்றும் ஜீவனை காப்பாற்றும் எனச் சொல்லப்பட்டது. உலகில் எல்லா பயங்களைவிட பெரும்பயம் எது? மரணபயம், ஜனனமரண ரூபமான சம்சார பயம். அதனை நிஷ்காம கர்மானுஷ்டானம் போக்க வல்லது.

சிறிய நெருப்பாயினும் பெரும் காட்டையே எரித்து சாம்பலாக்கக் கூடியது. அதைப்போலவும், சிறிய படகேயாயினும் பரந்த கடலையே தாண்டக் கூடியது அதைப் போலவும் இவ்வான்மீக சாதனையில் ஓரளவே செய்தாலும் கோரமான சம்சார விபத்தினின்றும் காப்பாற்றவல்லது. முதன்முதலில் முழுமையான பலன் கிடைக்காவிட்டாலும் சாதனையை விட்டுவிடாது தொடர்ந்து செய்துவரல் வேண்டும். சிறிய பூசையாவது, சிறுமந்திரமாவது, ஏதேனும் ஒரு புண்யகாரியமாவது ஏதேனும் ஒன்றை நன்றாக பற்றிக் கொண்டு அதில் பூரண நம்பிக்கை வைத்து, பின்பற்றிவந்தால், முறையே அதுவாகவே சம்சார சமுத்திரத்தினின்றும் காப்பாற்றும் உபாயமாய் மாறும். மருந்து சிறிதளவேனும், பத்தியத்தைக் கைவிடாது தொடர்ந்து உண்டு வந்தால் பெரும் வியாதி கூட குணமாய் விடுமல்லவா?

கர்மயோகமெனும் தர்மத்தை சிறிதாயினும் சம்சார பயத்தினின்றும் ஜீவனைக் காப்பாற்றுமென்று பகவான் இச்சுலோகத்தில் சொன்ன இவ்விஷயம் சாதகர்களுக்கு எத்தனையோ அமைதியை அளிக்கவல்லது. ஏனெனில், "இந்த பலவிதமான சம்சார துக்கத்தினை எவ்வாறு தாண்டுவோம், கோர தாமஸ குணத்தை எவ்வாறு வெல்வோம், அது ரிஷிகளுக்கே சாத்தியம், எம்மைப் போன்ற சாமானியர்களுக்கு எவ்வாறு இயலும்? எல்லா தர்மங்களையும் பின்பற்ற இயலாதே, சாதனைகளைச் சரிவர செய்தல் எங்ஙனம் சாத்தியம்?' என இவ்வாறு எண்ணுவோர்க்கு தைரியம் அளித்து, மோக்ஷம் அடைவதற்கு, சம்சார பயத்தைப் போக்குவதற்கு, பகவான் இங்கு நல்ல வரப்பிரசாதம் அருளியுள்ளார். எனவே பகவான் வாக்கில் நம்பிக்கை வைத்து நிஷ்காம கர்மயோகத்தை ஆன்மீக தர்மத்தை ஓரளவேனும் கடைப்பிடித்து மக்கள் பந்த விமுக்தியடைவாராக!

**வினா:**

நிஷ்காம கர்மமெனும் தர்மத்தின் உண்மை நிலையை விவரிக்க?

**விடை:**

*(1) அதனை ஆரம்பித்தால் பலன் இல்லாமல் போவதில்லை, (2) சிறிதே பின்பற்றி இடையில் நிறுத்திவிட்டாலும் குற்றமில்லை (3) சிறிதாக ஆரம்பித்து செய்து வந்தாலும் சம்சார பயத்தினின்றும் காப்பாற்றும்.*

**வினா:**

*சம்சார பயத்தினின்றும் தப்பிப்பதற்கான உபாயம் என்ன?*

**விடை:**

*விவேகத்துடன் கூடிய கர்மாவைச்செய்தல், (நிஷ்காம கர்மானுஷ்டானம்)*

**முன்னுரை:**

*உத்தம கர்மயோகியின் நிலையான சித்தத்திற்கும், போக சக்தியான சஞ்சலமான மனதிற்கும் உள்ள வேறுபாட்டை எடுத்துக் கூறுகிறார்.*

**41. வ்யவஸாயாத்மிகா புத்திரேகேஹ குருநந்தன।**
**பஹுசாகா ஹ்யனந்தாஸ்ச புத்தயோ அவ்யவஸாயினாம்॥**
**(41)**

**சொற்பொருள்:**

*குருநந்தன! - ஓ அர்ஜுனா! இஹ - இக் கர்மயோகத்தின் அனுஷ்டானத்தில், வ்யவஸாயாத்மிகா - நிச்சயத்துடன் கூடிய, புத்திஹி - புத்தி, ஏகா - ஒன்றே, அவ்யவஸாயினாம் - நிச்சய புத்தியில்லாதவர்களுடைய, புத்தயஹ - புத்திகள், பஹுசாகா - பல விதமாக வியாபித்திருக்கக் கூடியனவாய் அனந்தாஸ்சஹி - பலவகைப்பட்டனவாகவும் இருக்கின்றன அல்லவா!*

**கருத்துரை:**

*அர்ஜுனா! இந்த கர்மயோக அனுஷ்டானத்தில் நிச்சயத்துடன் கூடின புத்தி ஒன்றேயாம். உறுதியில்லாத*

வர்களுடைய புத்திகள் பலவிதமாகவும், எண்ணிக்கையற்றவை யாகவும் உள்ளன.

**விளக்கம்:**

தெய்வத்திடம் (ஆன்மாவிடம்) நிச்சயத்துடன் கூடிய புத்தி ஒன்றேயுள்ளது. ஏனெனில் தெய்வத்தைத்தவிர வேறொன்றை நினைப்பதும் இல்லை அது பல கிளைகளாக விரிவடைவதில்லை. தெய்வம் என்ற இலட்சியத்தின் மீதே நிலைத்து இருக்கும். அத்தகைய நிச்சயபுத்தியுடையவர் செய்யும் ஒவ்வொரு காரியமும், எண்ணமும் தெய்வத் தன்மை பொருந்தி இருக்கும். பலனை எதிர்பாராது ஈசுவரார்ப்பணமாக அவர்கள் காரியங்களை ஆற்றிவருவர். அத்தகைய தெய்வ இலட்சியம் இல்லாதவர் பலவிதமான உலகப் பொருள்களின் மீது ஆசைப்பட்டு, காட்சிப் பொருள்களாக ஓடி, அதனை அடைவதையே தம் இலட்சியமாக எண்ணி சஞ்சலபுத்தியுடன் இருப்பர்' அவர்களது புத்தி ஒருநிலைப்பாட்டுடன் இருத்தல் இல்லை போல் பல கிளைகளாகப் பிரிந்து, உலக வஸ்துக்களின் மீது விழுந்து மிக்க பலனை எதிர்பார்த்து, போகங்களின் மீது ஆசைப்பட்டு, பலவிதமான கர்மபலன்களில் சிக்கி அதனால் ஒருமுனைப்பாடின்றி சிதறி நிற்கும். பலவிதமான பின்னபின்னமாகச் சிதறும் சூரியகிரணங்கள் பூதக் கண்ணாடியின் வழியே பிடிக்கப்பட்டால் அதே கீழேயுள்ள காகிதத்தைக் கூட எரித்து சாம்பலாக்கிவிடும். அக்கிரணங்களே வேறு வேறாக பிரிந்து இருக்கும் போது அத்தகைய சக்தி அதற்கில்லை அவ்வாறே நிச்சயத் தன்மையுடன் கூடிய ஒருமுனைப்பட்ட புத்தியில் மனதில் அகண்ட சக்தி நிறைந்திருக்கும். உலக விஷயங்களில், காட்சிப் பொருள்களில் மனதுடையவன், தன் ஆசைகளைப் பூர்த்தி செய்வதிலேயே தன் சக்தியனைத்தையும் விரயமாக்கிக் கொண்டிருப்பான். அத்தகையோனது சித்தம் சஞ்சலமாய், பல கிளைகளாகப் பிரிந்து இருப்பதாலேயே அமைதியின்றி அலைகிறது. எனவே விவேகத்துடன் தெய்வத்தின் மேல் (மோக்ஷத்தின் மேல்) நிச்சயத்துடன் கூடிய புத்தியையே கைக் கொண்டு,

பலகிளைகளுடன்கூடிய நிச்சயமற்ற புத்தியை கைவிடுதல்வேண்டும்.

**முன்னுரை:**

*நிச்சயமான புத்தியில்லாதவரின் இயல்பு எத்தகையது என்று வர்ணிக்கிறார்.*

**42. யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்யவிபஸ்சிஸஹ।**
**வேதவாதரதாஹ் பார்த்த நான்யதஸ்தீதிவாதினஹ॥ (42)**

**43. காமாத்மானஹ் ஸ்வர்க்பராஹ் ஜன்மகர்மபலப்ரதாம்।**
**க்ரியாவிசேஷபஹுலாம் போகைச்வர்யகதிம் ப்ரதி॥ (43)**

**44. போகைச்வர்யப்ரஸக்தானாம் தயாபஹ்ருதசேதஸாம்।**
**வ்யவஸாயாத்மிகா புத்திஹ் ஸமாதௌ ந விதீயதே॥ (44)**

**சொற்பொருள்:**

*பார்த்த - ஓ அர்ஜுனா! வேதவாதரதாஹா - வேதத்தில் பலனைப்பற்றிச் சொல்லுகின்ற பகுதியை (அர்த்த வாதத்தில்) விருப்பமுடையவர்கள், நான்யதஸ்தீதி வாதினஹ - அதில் கூறப்பட்டுள்ள சுவர்க்கத்தைத் தவிர மிக்க பேறு வேறொன்றும் இல்லை என்று வாதிப்பவர்கள், காமாத்மானஹ - ஆசைகள் நிறைந்த மனதுடையவர்கள், சுவர்க்கபராஹா - சுவர்க்கத்தின் மீது ஆசையுடைவர்களாயும், இருப்பவர்கள், அவிபஸ்சிதஹ - விவேகமற்றவர்கள், (தத்வத்தையறியாத ஞானமற்றவர்கள்), ஜன்மகர்மபலப்ரதாம் - ஜன்மத்தையும், கர்மபலனையும், கொடுக்கிற, போகைச்வர்யகதிம்ப்ரதி - போகத்தையும், ஐசுவரியத்தையும் அடைதற்கு, க்ரியா. விசேஷ பஹுலாம் - பலவித கர்ம விசேஷங்கள் நிறைந்ததும், புஷ்பிதாம் - பலன் அளிக்காத வெறும் அலங்காரமான பூவைப் போன்ற யாம் இமாம் - எந்த, வாசம் - வாக்கியத்தை, ப்ரவதந்தி - விசேஷமாக சொல்கிறார்களோ, தயா - அதனால், அபஹ்ருத - அபகரிகப்பட்ட, சேதஸாம் - மனமுடையவர்களை, போகை சுவர்ய ப்ரஸக்தானாம் - போகத்தைக் குறித்தும் ஐசுவரியத்தைக் குறித்தும் மிக்க பற்றுடையவர்களுக்கு வ்யவஸாத்மிகா*

புத்திஹி - நிச்சயமான புத்தி (ஒருமுனைப்பாடு), ஸமாதௌ - தெய்வ தியானத்தில் (சமாதி நிஷ்டையில்), ந வித்யதே - நிலைப்பதில்லை.

**கருத்துரை:**

ஏ அர்ஜுனா! வேதத்தில் பலனைப் பற்றிக் கூறும் பகுதியில் மிக விருப்பம் உடையவரும், அதில் கூறப்பட்ட சுவர்க்கம் முதலான பலன்களைவிட அதிகமானது வேறெதுவுமில்லை என வாதிடுவார்களும், ஆசையில் கட்டுண்ட சித்தத்தை உடையவர்கள், சுவர்க்கமே முடிவான பேறு எனக்கருதும், அல்பர்கள், ஜன்மம், கருமம் இவற்றை பலனாக அளிக்கவல்லதும், போக ஐசுவர்யத்தில் பற்றுடைய வரும், அவர்களுடைய புஷ்பாலங்காரமான, பலன் சூன்யமான, சொல்லப்படும் சொற்களினால் 'கவரப்பட்டவராய் உள்ள சித்தத்தினை உடைய வரும் (அவ்வாக்கியத்தினை நம்பி அதன் மீது பற்றுடையவரும்) போக ஐசுவர்ய பிரியர்களான மக்களுக்கு தெய்வ தியானத்தில் (சமாதி நிட்டையில்) நிச்சயமான (ஒருமுனைப்பாடு) புத்தி உண்டாவதில்லை.

**விளக்கம்:**

'புஷ்பிதாம் வாசாம்' - பலனளிக்காத வாக்கியங்கள் - உட்பலன் இல்லாத மோதுகை, சாமந்தி முதலான பூக்களைப் போன்றவை. மேலாகப் பார்க்கும் போது அலங்கரமான தோன்றி உட்புறத்தே சத்தில்லாத பூக்கள்.' மோக்ஷத்தைப் பலனாக அளிக்கவியலாத காம்யகாரியங்களைக் குறித்த வாக்கியங்கள் என்பது பொருள்.

"ப்ரவதந்தி" - 'வதந்தி' எனாது 'ப்ரவதந்தி' என்றதால் சாரமற்ற வார்த்தைகளை அவர்கள் வெகுவாகப் பேசுவர் என்பது பொருள். (Empty vessels make much noise)

'அவிபஸ்சித ஹ" - விவேக மற்றவர்கள், ஞானமற்றவர்கள் - காமிய கர்மங்களைச் செய்பவர்கள், சுவர்க்கம் முதலான போகங்களின் மீது ஆசைப்படுபவர்கள், அறிவற்றவர்கள்

என்று இங்கு சொல்லப்படுகின்றனர். அவர்களை அறிஞர்களுடன் பகவான் சேர்க்கவில்லை. எனவே எத்தகைய மஹாபண்டிதன் ஆனாலும், வேத விற்பன்னராயினும், காம்யபுத்தியுடன் சுவர்க்கயோகங்களில் ஆசைப்படுபவராயின் ஆன்மீக நோக்கில் அவர்கள் விவேகமற்றவரே யாவர். அத்தகையோரின் கண்களை திறப்பதற்காக பகவான் இவ்வாக்கியங்களைக் கூறுகிறார். சுவர்க்க போகங்களைக் குறித்தும் பகவானுக்கு எத்தகைய எண்ணம் கொண்டுள்ளார் என்பதும் இச்சுலோகத்தின் வாயிலாகத் தெரிய வருகிறது.

'வேதவாதரதாஹா' - வேதங்களில் பலன்களை தெரிவிக்கும் அர்த்த வாதம் சில உண்டு. இதன்படி இவ்விவற்றைச் செய்தால் இத்தகைய சுவர்க்க போகங்கள் கிடைக்கும்' என்பதாக உண்டு. அப்பகுதியையே பற்றிக் கொண்டு திரிபவர் சிலர். வேத வேதாந்தங்களில் மோக்ஷ பிராப்திக்காக உபதேசிக்கப்பட்ட மொழிகள் பல உண்டு. அவற்றை விடுத்து, காம்ய கர்மங்களை அளிக்கக்கூடிய பகுதியையே பற்றிக்கொண்டு, உலகில் இவற்றைத் தவிர வேறெதுவும் இல்லவே இல்லை' என்று அவர்கள் வாதிடுவர். வேதத்தில் மூன்று பகுதிகள் உண்டு. அவை (1) கர்ம காண்டம் (2) உபாசனா காண்டம் (3) ஞானகாண்டம். இச்சுலோகத்தில் சொல்லப்பட்ட விவேகமற்றவர்கள் கர்ம காண்டத்தையே பற்றிக் கொண்டு, அதிலுள்ள சுவர்க்கம் முதலான பலன்களைப் பற்றிச் சொல்லும் பகுதியையே அனுஷ்டித்து, மற்றைய இரண்டையும் விட்டுவிடுவர். அதுசரியன்று என கீதாச்சார்யன் கூறுகிறார்,

"காமாத்மானஹ"- ஆசைகளே உருவானவர், உடம்பெல்லாம் ஆசையால் நிரம்பப் பெற்றவர்கள் என்று பொருள்' செல்வம், மனைவி, மக்கள், என்று ஆசைகளுடன் என காமப் பிசாசிடம் அடிமைப்பட்டவர். இவ்வாறிருத்தல் தவறு. இதயத்தில் பகவானுக்கு இடமளிக்க வேண்டுமேயன்றி. காமம் முதலான துஷ்டசக்திகளுக்கல்ல.

தெய்வாத்மாக்கள், கருணாத்மாக்கள், பரமாத்மாக்களாக ஆகவேண்டுமேயன்றி காமக்குரோதாத்மாக்களாக அல்ல.

"சுவர்க்கபராஹூா" - இவர்கள் மோக்ஷத்தை நாடுவோர் அல்ல. சுவர்க்கத்தை நாடுவோர். ஆன்மீகக் கோயிலில் சுவர்க்கத்திற்கு இடமில்லை. சுவர்க்கம் முதலான சுகங்களைத் துறந்தவர்க்கே மோக்ஷம் கைகூடும் என்று சொல்லப் பட்டுள்ளது. எனவே சாமான்யர்களின் பார்வையில் சுவர்க்கம் மேலாகத் தோன்றக்கூடும் ஆயின் ஞானிகளின் பார்வையில் அல்ல. ஏனெனில் இப்போக, பௌதிக வஸ்துக்கள் ஓரளவு தரமானவையாயினும் அதனால் பயன் ஏதும் இல்லை. நிலையானதும் அல்ல. மேலும் அது புண்யத்தைக் கொடுப்பதாயினும் ஆன்மீக நிலையில் மறுபடியும் தாழ்ந்து போவதேயல்லவா? (க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி - 9-21) எனவே விஷய போகங்களில் அழுத்தி, ஜீவனை விலங்காக மாற்றி, வீடுபேற்றிற்கு காத தூரம் விலக்கிச் செல்லும் சுவர்க்கத்தினால் மனிதனுக்கு எவ்விதமான ஆன்மீக பலனும் இல்லை, விவேகிகள் அதற்கு ஆசைப்படார். மேலும் அதனை கர்ம பந்தத்தை உண்டாக்குவதாகக் கருதுவர். பகவான் இங்கு சுவர்க்கபோகத்தை விரும்புவோரை மிக வன்மையாகக் கண்டிக்கிறார். எனவே வைராக்கிய சீலர்கள், மோக்ஷத்திற்கு ஆசைப்படுவர் அவற்றின் மீது சிறிதும் எண்ணம் கொள்ளலாகாது.

"ஜன்ம கர்மபல ப்ரதாம்" - காம்ய கர்மங்கள், பிறவாபெரும் பேற்றை, எக்காலத்தும் அளிக்கவல்லதல்ல. கர்மம், ஜன்மம், - ஜன்மம், கர்மம், என்று சம்சார சக்கரத்தில் அவை ஜீவனை தள்ளக் கூடியவை. எனவேதான் பகவான் கீதையில் நிஷ்காம கர்மாவையே ஊக்குவிக்கிறாரேயன்றி, காம்ய கர்மாவையல்ல. எனவே ஜன்மா கர்மா ரூபமான காம்யகர்மாவை முமுக்ஷுக்கள் பின்பற்றலாகாது.

"கிரியாவிசேஷபஹுலாம் போகைச்வர்யகதிம் ப்ரதி" - சுவர்க்கம் முதலான போகங்களை வேண்டி செய்யப்படும் பலவித யக்ஞங்களைச் செய்து, கர்மகாண்டத்தில் அவர்கள் மூழ்கிவிடுவர். அவர்கள் முயற்சிப்பது நிலையான தெய்வ சுகத்திற்கல்ல. க்ஷண நேரத்தில் அழியக் கூடிய உலக சுகங்களுக்காகவே.

"தயா அபஹ்ருதசேதஸாம்" - காம்ய கர்மாவை ஆசைப்படுபவர்கள் பேசும் இனிமையான வார்த்தைகளால் மக்கள் மயங்கி மோசம் போகிறார்கள். எனவே அத்தகையோரிடம் தொடர்பு வைத்தல் தகாது. சத்புருஷர்கள், சாதுக்கள், வைராக்கியமுடையவர் தொடர்பு வைத்திருந்தால் சித்தம் தெய்வத்திடம் திரும்பும்.

'வ்யவசாயாத்மிகாபுத்திஹ் ஸமாதௌ ந விதீயதே" - அத்தகைய போக ஐசுவர்யங்களால் ஏற்படும் நஷ்டம் என்னவென்றால், அவர்களுக்கு தியானத்தில், தெய்வ சிந்தனையில் மனம் ஈடுபடாது. சித்தம் வெளியிலேயே உலவும். அத்தகையோர்க்கு சமாதி நிலை எக்காலத்தும் கைகூடாது. காற்றில் விளக்கின் சுடர் அலைபாய்வதைப் போல அவர்கள் மனம் இருக்கும். அதனால் அமைதியின்மை, அமைதியின்மையால் துன்பம் ஏற்படும். எனவே மோக்ஷத்திற்கு மிகவும் தேவையான தியான நிட்டை கூடுவதற்காக, விஷய போகங்களில் மனம் ஈடுபடாதிருத்தல் வேண்டும்.

**வினா:**

போக ஐசுவரியங்களின் மீதுள்ள ஆசையால் ஏற்படும் நஷ்டம் யாது?

**விடை:**

அதனால் தெய்வ தியானத்தில் மனம் ஈடுபடாது.

**முன்னுரை:**

விஷய போகங்களின் மீதான ஆசையை விடுத்து ஆத்மானுபவம் அடைய வேண்டுகிறார்.

**45. த்ரைகுண்யவிஷயா வேதா நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுன।**
**நிர்த்வந்த்வோ நித்யஸத்வஸ்தோ நிர்யோகக்ஷேம ஆத்மவான்॥**
**(45)**

**சொற்பொருள்:**

*அர்ஜுனா - அர்ஜுனா! வேதாஹா - வேதங்கள் (அதன் முதல்பாகமான கர்ம காண்டம்) த்ரைகுண்ய விஷயாஹா - முக்குண மயமான பிரபஞ்ச விஷயத்தைத் தெரிவிப்பன, (த்வாம் - நீ), நிஸ்த்ரைகுண்யஹ - முக்குணங்களையும் விடுத்தவன், (அல்லது முக்குணங்களால் நேரும் விஷய ஆசைகளைவிடுத்தவன்) நித்வந்தவஹ - இன்ப துன்பங்கள் என்ற இருமைகள் இல்லாதவன், நித்யஸத்வஸ்தஹ - எப்போதும் சுத்த ஸத்துவதுத்தில் (நடுநிலையில்) இருப்பவன், நிர்யோகக்ஷேமஹ - யோகக்ஷேமங்களற்றவன், ஆத்மவான் - ஆத்ம ஞானியாக பவ - ஆகக் கடவாய்.*

**கருத்துரை:**

*அர்ஜுனா! வேதங்களின் (அதில் முதல் பாகமான கர்ம காண்டம்) முக்குணங்களின் மயமான (ஸம்சார) விஷயங்களை தெரிவிப்பனவாய் உள்ளன. நீ முக்குணங்களை விட்டவன், இருமைகள் இல்லாதவன், எப்போதும் சுத்தசத்துவமாய் நடுவு நிலையில் நின்று, யோகக்ஷேமங்கள் அற்று, ஆத்ம ஞானியாய் ஆகுக!*

**விளக்கம்:**

*"த்ரைகுண்ய விஷயா வேதாஹா - முன் சுலோகத்தில் சொல்லப்பட்ட வேதத்தின் முன்பாகமான கர்மகாண்டத்தில் சொல்லப்பட்ட யக்ஞ யாகங்களைக் குறித்தே இங்கு குறிப்பிடுகிறார் என்பது நன்கு தெளிவாக உள்ளது. வேதங்களின் பிறபாகங்கள் திரிகுணங்களுக்கப்பாற்பட்ட பரப்பிரம்மத்தையே குறிப்பிடுகின்றன. காட்சிப் பொருளான இவ்வுலகமனைத்தும் முக்குணங்களோடு பொருந்தியவையே. அது அற்பமானது, ஆத்ம சொரூபம் ஒன்றே முக்குணங்களுக்கப்பாற்பட்டது. அது மிக உத்தமமானது. குணங்களுக்குட்பட்டவனுக்கே பந்தங்கள், துன்பங்கள், பிறப்புகள், கருமங்கள் முதலானவை வந்து சேரும். குணங்களைத் தாண்டி ஆன்மாவில் நிலைத்திருக்கும் ஞானிக்கு*

இவை எதுவும் அண்டாது. எனவே பகவான் அர்ஜுனனை குணாதீதனாக ஆன்ம சொரூபமாக ஆகுமாறு பணிக்கிறார்.

**நித்யசத்வஸ்தஹ:**

இங்கு சொல்லப்பட்ட சத்வம் முக்குணங்களில் உள்ள சத்வமன்று, முக்குணங்களைக் கடக்குமாறு பணித்தவர் சத்வகுணத்தை பற்றுக எனக் கூறார். இங்கு சொல்லப்பட்டது 'விசுத்தசத்வம்' அல்லது 'ஆன்மநிலை' என்றே பொருள் கொள்ள வேண்டும். 'க்ஞசித்தம்ஸத்வமுச்யதே' (ஆத்மஞானியின் பிரம்மாகாரமான சித்தம் சத்வமெனப்படும்) என்று வசிஷ்டர் சொல்லியுள்ளார். 'நித்யஸத்வஸ்தஹ" - என்று சொல்லப்பட்டதால், ஏதோ குறிப்பிட்ட காலத்தில் மட்டுமின்றி, நிரந்தரமாக சத்வத்தைப் பற்றி, ஆன்மநிலையில் நிலைபெறுதல் வேண்டுமென்பது கருத்து.

'நிர்யோகக்ஷேம ஆத்மவான்" - யோகமெனின் இல்லாத பொருளை அடைதல். க்ஷேமம் என்றால் அதனை காப்பாற்றுதல் - இவை இரண்டும் இல்லாதிருக்குமாறு பகவான் கூறுகிறார். ஏனெனில் ஆன்மாவில் நிலைத்திருப்பவனுக்கு எல்லாப் பொருள்களையும் அடைந்தவனேயாவான். ஆகையால் அவன் எதை அடைதல் வேண்டும். ஆத்மவான் ஆகுக என்கிறார் பகவான். 'தனவான், சௌந்தர்யவான், அதிகாரியாகுக என்று கூறாமல் 'ஆத்மவான்' ஆகுக என்றதால் பிரபஞ்சத்தில் உள்ள எல்லா வஸ்துக்களையும் விட, பதவிகளையும்விட ஆன்மநிலேயே மிகச் சிறந்தது எனத் தெரிவித்ததாகிறது.

**வினா:**

எவ்வாறு வாழ்தல்வேண்டும் என ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனுக்குப் போதிக்கிறார்?

**விடை:**

(1) முக்குணங்களை கடந்தவனாக வேண்டும் (2) இருமைகள் இல்லாதிருக்க வேண்டும் (3) எப்போதும் விசுத்த

சத்வத்தில் (ஆன்மாவில்) நிலைபெற்றிருத்தல் வேண்டும் (4) யோகக்ஷேமங்களின்பால் மனம் செல்லுதல் கூடாது (5) ஆத்மஞானியாய் வாழ்க.

**முன்னுரை:**

ஆத்மஞானியின் மகிமையைப்பற்றிக் கூறுகிறார்.

**46. யாவானர்த்த உதபானே ஸர்வதஹ் ஸம்ப்லுதோதகே।**
**தாவான் ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜானதஹ॥**
**(46)**

**சொற்பொருள்:**

உதபானே - கிணறு முதலானவற்றில், யாவானர்த்தஹ - எத்தகைய பிரயோஜனமுள்ளதோ, ஸர்வதஹ்ஸம்ப்லு தோதகே - எங்கும் நீர்பெருக்கெடுத்து இருக்கையில், தாவான் (+ அர்தஹ) - அவ்வளவு உபயோகமே (யதா + பவத்) - கிடைக்கிறது - அதில் எவ்வாறு பொதிந்துள்ளதோ, ஸர்வேஷு வேதேஷு - எல்லா வேதங்களிலும் (வேதோக்தமான கர்மங்களனைத்திலும்) (யாவானர்த்தஹ - எவ்வளவு பிரயோஜனமுள்ளதே) (தாவான் அர்த்தஹ - அவ்வளவு பிரோஜனம்) விஜாநதஹ - ஆத்ம சொரூப அனுபவம் உடைய, ப்ராம்மணஸ்ய - பிரம்ம நிஷ்டனுக்கு, ததா + பவதி - அவ்வாறே பயன்படுகிறது - பிரம்மானந்தம் பொதிந்துள்ளது)

**கருத்துரை:**

குளிப்பதற்கும் குடிப்பதற்கும் பயன்படும் சிறிதளவு நீர் உடைய கிணறு முதலானவை எந்த அளவு உபயோகப்படுகிறதோ, அந்தளவு உபயோகம் பெரிய நீர் பெருக்கத்திலும் உள்ளது. அவ்வாறே வேதங்களில் சொல்லப்பட்ட எல்லா கர்மங்களினாலும் எத்தகைய பயன் உண்டோ, அந்த அளவு பயன் பிரம்மஞானத்தை அடைந்த பிரம்ம நிஷ்டனுக்கு பிரம்மானந்தத்திலும் உண்டு.

இன்னுமொரு பொருள்: நீர்நிறைந்துள்ள நீர்த்தேக்கம் முதலானவற்றால் குளியல் முதலானவற்றுக்கு எந்த அளவுக்கு மனிதனுக்கு பயன்படுமோ அந்த அளவு பயன் பிரம்ம நிஷ்டனுக்கு வேதங்களால் உண்டு.

**விளக்கம்:**

சிறிய கிணற்று நீர் மனிதனுக்கு ஸ்நான பானங்களுக்கு பயன்படுகிறது. எங்கும் நீர்மயமாயுள்ள தடாகம் முதலானவை இருக்கையில் கிணற்று நீரைத் தேடுவார் எவருமிலர். அவ்வாறே வேதங்களில் சொல்லப்பட்ட கர்ம காண்டத்தின் பலன் அனைத்தும் ஆந்மானுபவம் உடைய பிரம்மஞானியிடத்தில் மறைந்துள்ளது. எனவே அத்தகைய பிரம்மநிஷ்டன் வேதத்தில் கூறப்பட்ட காம்ய கர்மாக்களின் பலனை ஒருகாலும் விரும்பமாட்டான். 'சதே பஞ்சாசத்' நியாயத்தை அனுசரித்து (நூறில், ஐம்பது அடங்குவதைப் போல்) யானையின் பாதங்களில் ஏனைய பிராணிகள் அனைத்தின் பாதங்களும் அடங்கிவிடுவதைப் போல ஆன்மசுகத்தில் ஏனைய சுகங்களனைத்தும் அடங்கியுள்ளது. எனவே ஆத்மானுபவம் உடைய ஞானி வேதோக்தமான சுவர்க்கம் முதலான காம்ய கர்ம பலனுக்காக ஆசைப்படார். இங்கு 'ஜானதஹ" என்று சொல்லாமல், 'விஜானதஹ' என்று சொன்னதால் மேற்போக்கான அறிவு (Superficial Knowledge) மட்டும் போதாது, அனுபவ அறிவு தேவை என்பது விளங்குகிறது.

இந்த சுலோகத்தை இராமானுஜர் முதலானோர் வேறொரு விதமாக விளக்குகிறார். தாகமுடையவர்க்கு மிகுந்த நீர்ப்பெருக்கில் உள்ள நீரால் உபயோகம் இல்லை. சிறிதளவே நீர் அருந்தினால் போதும். வியாதியஸ்தன் எல்லா மருந்துகளையும் உட்கொள்ளவேண்டிய தேவையில்லை. தேவையான ஏதோ ஒரு மருந்தை உட்கொண்டாலே போதும். பசியெடுத்தவன் பாத்திரத்திலுள்ள அன்னம் அனைத்தையும் உட்கொள்ள வேண்டிய அவசியமில்லை. சில கவளங்களே அவனது பசியாற்றப் போதுமானது. அவ்வாறே

விவேகிகளுக்கு பிரம்மானுபவத்திற்கு தேவையான சில சாதனைகளை மேற்கொண்டு பிரம்மானுபவம் அடைந்தால் போதும். மற்றைய காம்ய கர்மாக்களினால் அவனுக்கு பயன் ஏதுமில்லை. வேதத்தில் அநேக மந்திரங்கள், உபாசனைகள், கர்மாக்கள் சொல்லப்பட்டிருப்பினும், அனைத்திலும் பவரோகத்தை தீர்த்து மோக்ஷத்தை அடைவதற்கு சாதகனுக்கு, ஏதோ ஒரு மந்திரமோ, உபாசனையோ, தியானமோ இருந்தால் போதும். அதனை நன்கு முறையாக அனுஷ்டித்தால் போதுமானது. எல்லாவற்றையும் நாம் செய்யவில்லையே என்று எவரும் கலங்க வேண்டியதில்லை என பகவான் இங்கு பக்தர்களுக்கு ஆறுதல் அளிக்கிறார்.

**முன்னுரை:**

இனி கர்மயோக வழிமுறைகளைக் கூறுகிறார்.

**47. கர்மண்யேவாதிகாரஸ்தேமாபலேஷு கதாசன।**
**மா கர்மபலஹேதுர்பூர்மா தே ஸங்கோஅஸ்த்வகர்மணி॥ (47)**

**சொற்பொருள்:**

தே - உனக்கு, கர்மண்யேவ - கர்மத்தில், அதிகாரஹ - அதிகாரம் (அஸ்தி - உள்ளது), கதாசன - ஒருபோதும், பலேஷு - (அதன்) பலனில், (அதிகாரஹ - அதிகாரம், மா - ஆகாது, கர்ம பல ஹேதுஹு - கர்ம பலத்திற்கு காரணமானவன், மாபூஹ் - ஆகாதே, அகர்மாணி - கர்மம் செய்யாதிருப்பதில், தே - உனக்கு ஸங்கஹ - பற்றுதல், மா அஸ்து - உண்டாகாது இருக்கட்டும்!

**கருத்துரை:**

(அர்ஜுனா) உனக்கு கர்மாவை செய்தற்கு மட்டுமே அதிகாரமுண்டு. கர்மபலனை ஆசைப்படுவதற்கு எக்காலத்தும் அதிகாரம் இல்லை. கர்ம பலத்திற்கு நீ காரணபூதன் ஆகாதே மற்றும், கர்மாவை செய்யாதிருக்க ஆசைப்படாதே!

**விளக்கம்:**

அர்ஜுனா! கர்மாவைச் செய்வதுமட்டுமே உன் முறை. பலனைக் கோருதல் அன்று, என்று பகவான் இங்கு கூறுகிறார். அதாவது, பலனை எதிர்பாராது, ஈசுவரார்ப்பண புத்தியுடன், தானே கர்த்தா அதாவது நாமே செய்தோம் என்ற எண்ணம் கொள்ளாது கர்மாவைச் செய்து வருக என்கிறார். 'கதாசன' - என்று சொல்வதால் எக்காலத்தும் ஆசைப்படாதே என்று எச்சரிக்கிறார். பலனை எதிர்பார்த்து செய்யும் செயலால் சித்த சுத்தி ஏற்படாது. சித்த சுத்தி ஏற்படாவிடின் ஆத்ம ஞானம் பெறுவதற்கில்லை. ஆத்மஞானம் இல்லாவிடின் மோக்ஷம் சித்திக்காது. எனவே மோக்ஷத்தை அடைய நிஷ்காம கர்மா மிகமிக அவசியமாகிறது.

"மா தே ஸங்கோ அஸ்த்வகர்மணி" - கர்மாவின் பலன்களுக்கு ஆசைப்படாதே என்றாரல்லவா? அதனால் செயலாற்றாமலே இருந்து விட்டால் என்ன என்று கருதக்கூடாது என்கிறார். எனெனில், அது சோம்பேறித் தனத்திற்கு இடம் கொடுத்துவிடும். அது தமோகுணம். அது சிறந்ததல்ல. உறக்கத்தில் எவரும் எக்காரியமும் செய்யார். சுவர் எதையும் செய்வதில்லை. அதனால் அதற்கு எந்தவிதமான சிறப்பும் இல்லை. எனவே தமோகுணத்தில் பிறக்கும் செயலாற்றாமையை தூரவிலக்குதல் வேண்டுமென்கிறார் பகவான். சோம்பேறிகளுக்கு இவ் வாக்கியம் கோடாலியைப் போன்றது. சிலர் சமாதி என்ற பேரில் தாமஸ குணத்திலேயே காலம் கடத்துகின்றனர். அத்தகையோர் இகம் பரம் இரண்டிற்கும் பயன்படாதவர். அவர்களே ஏதோவொரு நற்காரியம் மேற்கொள்ளுதல் நல்லது. அதனையே நிஷ்காம கர்மாவாக செய்து வந்தால் பகவான் திருப்தியடைகிறார். அவ்வாறு செய்து வந்தால்மேன்மையடையலாம். கீதையின் முக்கியமான செய்தியில் இந்த அநாசத்தி யோகமுமொன்று. கர்மாவைச் செய்யாது சித்தம் கலங்கி நின்ற அர்ஜுனனை கர்மவீரனாக மாற்றிய போதனை இதுவே. எனவே இத்தகைய நிஷ்காமகர்ம தத்துவத்தை நன்றாக அறிந்து மக்கள் தம் வாழ்க்கையை பண்படுத்திக் கொள்ளவேண்டியுள்ளது.

**வினா:**

மனிதனுக்கு எதன்மீது அதிகாரமுள்ளது?

**விடை:**

கர்மாவைச் செய்வதில் மட்டுமே அதிகாரம் உள்ளதேயன்றி அதன் பலனில் ஆசைப்படுவதில் ல்லை.

**வினா:**

எதனை விடுத்தல் வே டும்?

**விடை:**

கர்மபலனை, கர்ம யத்துவத்தை (ப செய்யா திருப்பதை) ர டையும் விடுதல் வே டும்.

**வினா:**

அப்படியாயின் தனால் பலன் என்ன?

**விடை:**

கர்மாவைச் செய்து வந்து பலனை விடுத்தல் வே டும்.

**48. யோகஸ்தஹ குரு கர்மா ஸங்கம் த்யக்த்வா தனஞ்ஜய ।**
**ஸித்த்யஸித்த்யோஹ ஸமோ பூத்வா ஸமத்வம் யோக உச்யதே ॥**
**(48)**

**சொற்பொருள்:**

தனஞ்ஜய - தனஞ்ஜயனே! (த்வம் - நீ) யோகஸ்தஹ - யோகநி டையில் ருந்து, ஸங்கம் - (நான், எனது என்ற) பற்றுதலை, ஆசையை த்யக்த்வா - விட்டுவிட்டு, ஸித்த்யஸித்த்யோ - வெற்றி கிடைப்பினும் கிடைக்காவிட்டாலும், ஸமோபூத்வா - சமமாகக் கருதி, கர்மா - கர்மாக்களை, குரு - செய், ஸமத்வம் - (அத்தகைய) சமபுத்தியே, யோகஹ - ( துவே) - யோகமென்று உச்யதே - சொல்லப்படுகிறது.

**கருத்துரை:**

ஏ அர்ஜுனா! நீ யோகத்தில் நிலைபெற்று, பற்றற்று, வெற்றிதோல்விகளில் சமமாகக் கொண்டு, கருமத்தை செய், அத்தகைய சமத்துவ புத்தியே யோகமெனப்படும்.

**விளக்கம்:**

யோகநிஷ்டையில் இருந்து கர்மாக்களை செய் என்று பகவான் ஆணையிடுகிறார். யோகமென்றால் என்ன? கார்யசித்தி, அசித்தி இவை இரண்டையும் சமமாகக் கருதியிருத்தலே. அவ்வாறாயின் நிர்விகார நிலையை எவ்வாறு பெறுதல் கூடும்? சமத்துவ புத்தியை (Equilibrium of Mind) காப்பாற்றிக் கொள்ளுதல் எங்ஙனம்? மனதைத் தாண்டி ஆத்மாவில் நிலைபெற்றிருந்தால் மாத்திரமே அத்தகைய நிலை கைகூடும். அதுவே யோகநிலை. மனம் ஆன்மா இவற்றின் கலப்பே யோகம். ஜீவாத்மா பரமாத்மாவின் சேர்க்கையே யோகம் அத்தகைய யோகநிலையிலேயே இத்தகைய நிர்விகார நிலை தோன்றும். எனவே யோகமென்ற பெயர் இங்கு வழங்கப்படுகிறது. யோகத்தில் நிலைத்திருந்து, அதாவது ஆன்மாவில் நிலைபெற்று காட்சிப் பொருள்களில் பற்றினை விட்டு பலாபலன்களைச் சமமாகக் கருதி செயலாற்றுங்கள் என்று பகவான் ஆணையிடுகிறார்.

செயல்களை ஆரம்பிப்பதற்கு முன், 'யோகேசுவரன்' ஆகவேண்டும். யோகத்தில் நிலைபெற கற்றுக் கொள்ளுதல் வேண்டும். தெய்வபுத்தி, ஆத்மபுத்தி இவற்றை நன்றாகப் பயிலுதல் வேண்டும். இல்லையெனில் அச்செயல்கள் பந்தங்களை ஏற்படுத்தும். அவ்வாறு யோகத்தினை பயிலாமல் செயல்களை ஆற்றுவதால், பலரும் வெற்றிதோல்வி, லாப நஷ்டங்கள், இவற்றால் சித்தத்தில் கலக்கம் அடைவதால் அமைதியின்மை உண்டாகிறது. இதனை வைத்துப் பார்த்தால் கர்மாவைச் செய்வதற்கு முன் ஆத்ம விசாரணை, ஆத்மசிந்தனை தவறாது இருத்தல் வேண்டுமென்பதும், அப்போதே கர்மா யோகமாகிறது.

இக்காரணத்தாலேயே கீதையில் கர்மயோகத்திற்கு முன்பாகவே சாங்கிய யோகம் (ஞானம்) உபதேசிக்கப்பட்டது.

**வினா:**

யோகமென்றால் என்ன?

**விடை:**

சமபுத்தியுடன் இருத்தலே யோகம்.

**வினா:**

கர்மாவை எவ்வாறு செய்தல் வேண்டும்?

**விடை:**

(1) யோக நிஷ்டையில் இருந்து (2) பற்றுதலை (ஆசை, அபிமானம்) விட்டு (3) காரியம் பலன் அளித்தாலும் அளிக்காவிட்டாலும் சமபுத்தியுடன் இருந்து செயலாற்ற வேண்டும்.

**முன்னுரை:**

காம்யகர்மாவை விட்டு சமத்துவ புத்தியுடன் கூடிய கர்மாவை செய்தல் எங்ஙனம்? என போதிக்கின்றார்.

**49. தூரேண ஹ்யவரம் கர்ம புத்தியோகாத் தனஞ்ஜய।**
**புத்தௌ சரணமன்விச்ச க்ருபணாஹ் பலஹேதவஹ॥ (49)**

**சொற்பொருள்:**

தனஞ்சய! - அர்ஜுனா! புத்தியோகாத் - சமத்துவ புத்தியுடன் கூடிய, நிஷ்காம கர்மத்தைவிட, கர்ம - பலன்களைக் கருதி செய்யப்படும் காம்யகார்யம், தூரேண - மிக்க, அவரம்ஹி - கீழானதல்லவா? (எனவே) புத்தௌ - (அத்தகைய) சமத்துவ புத்தியுடன் சரணம் - தஞ்சம், அன்விச்ச - அடைக, பலஹேதவஹ - பலனைக் கருதுவர்கள், க்ருபணாஹா - கீழோர்.

**கருத்துரை:**

*அர்ஜுனனே! (மேற்சொல்லப்பட்ட) சமபுத்தியுடன் கூடிய நிஷ்காம கர்மத்தைவிட பலனைக் கருதி செய்யப்படும் காம்ய கர்மாவானது மிகவும். கீழ்த்தரமானது அல்லவா? எனவே சமபுத்தியுடன் கூடிய நிஷ்காம கர்மாவையே நீ செய்க! பலனைக் கருதுபவர்கள் கீழோர். தீனர்கள்.*

**விளக்கம்:**

*அர்ஜுனனை 'தனஞ்ஜய' என இங்கு அழைத்தல், இரண்டு சுலோகங்களிலும் அதனையே வரிசையாகப் பயன்படுத்துதல் இங்கு கவனிக்கத் தக்கது. பௌதிக செல்வமேயன்றி, ஞானதனம், யோகதனம் இவற்றைக் கூட நீ அடைவாய் அர்ஜுனா என்று குறிப்பாக பகவான் சொல்வதற்கு இங்கு தனஞ்ஜய என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார்.*

*கீதையின் முன்பாக சிலவிடங்களில் புத்தி யோகம், என்ற சொல் ஞானயோகம் என்ற பொருளில் உபயோகப் படுத்தப்பட்டுள்ளது. இங்கு சமத்துவ புத்தியுடன் கூடிய நிஷ்காம கர்மயோகம் என்ற பொருளில் இப்போது பயன்படுத்தப்பட்டுள்ளது. காம்ய கர்மா ஜனன, மரணத்திற்கு காரணமாவது. எனவே இவ்விரண்டிற்கும் தொடர்பே இல்லை. காம்ய கர்மா மிகவும் கீழ்த்தரமானது. அதனை கோருபவர்கள் தீனர்கள், அல்பர்கள். (க்ருபணாஹா, பலஹேதவஹ). அவர்கள் பிறப்பு இறப்புடன்கூடிய சம்சார பிரவாகத்தில் அடித்துப் போகப்படுவர். அத்தகைய தீனமான நிலையை, கீழ்த்தரமான நிலையை எவரும் அடைதல் கூடாது என்று பகவான் இங்கு எச்சரிக்கின்றார். மனிதர்களாகப் பிறந்து பகவான் அளித்த புத்தியை சக்தியை, கெட்ட வழிகளில் செலுத்தி, காட்சி பொருள்களில் ஆசை ஏற்பட்டு, பலனைக் கருதி கர்மாக்களை செய்து ஏன் லோபிகளாக வாழ்தல் வேண்டும்? அது மிகவும் வருந்தத்தக்கது , எனவே அத்தகைய தீனநிலையைவிட்டு 'புத்தௌ சரணமன்விச்' என்று பகவான் சொல்லியவாறு, ஞானி சமத்துவ புத்தியுடன் நிஷ்காம கர்மாவையே செய்தல் வேண்டும். காம்ய கர்மாக்களை விட்டு*

விடுதல் வேண்டும். தன் புத்தியிடமே சரணடைந்து மேன்மையுறுதல் வேண்டும். புத்தியை சமத்துவத்துடன் கூடியதாக நிஷ்காம பாவத்துடன் கூடியதாகவே கருதி அதனையே பின்பற்றினால் அதுவே பிறப்பில்லாமைக்கு காரணமாகும் என்று பகவான் இங்கு தெரிவிக்கிறார்.

**வினா:**

பலனைக்கோரி செய்யப்படும் செயல் எத்தகையது?

**விடை:**

மிகவும் கீழ்த்தரமானது (நிஷ்காம கர்மாவே உத்தமமானது)

**வினா:**

மனிதன் எதனைச் சரண்அடைதல் வேண்டும்?

**விடை:**

தத்தம் புத்தியை சமத்துவத்திலும், நிஷ்காம பாவனையுடன் கூடியதாகச் செய்து கொண்டு அத்தகைய புத்தியிடமே சரணடைதல் வேண்டும்.

**வினா:**

பலனை எதிர்ப்பார்த்து கர்மாக்களை செய்பவன் எத்தகையவன்?

**விடை:**

மிகவும் கீழ்த்தரமானவன். அவர்கள் சம்சார சமுத்திரத்தில் அடித்தும் செல்லப்படுபவர்கள்.

**முன்னுரை:**

அத்தகைய சமத்துவபுத்தியுடன் செய்யப்படும் நிஷ்காம கர்மாவிற்கு பலனைக்கூறி அதனையே பின்பற்ற வேண்டும் என்று போதிக்கிறார்.

**50. புத்தியுக்தோ ஜஹாதீஹ உபே ஸுக்ருததுஷ்க்ருதே।**
**தஸ்மாத்யோகாய யுஜ்யஸ்வ யோகஹ் கர்மஸு கௌசலம்॥ (50)**

**சொற்பொருள்:**

*புத்தியுக்தஹ - சமபுத்தியுடையவன் உபே சுக்ருததுஷ்க்ருதே - (நன்மை, தீமை), புண்யம் பாபம் இரண்டையும், இஹ - இம்மையில் (இந்த ஜன்மத்திலேயே) ஜஹாதி - நீக்குகிறான், தஸ்மாத் - ஆகையினால், யோகாய - சமத்துவ புத்தியுடன் கூடிய நிஷ்காமகர்ம யோகத்திற்காக, யுஜ்யஸ்வ - சேர்வாயாக, கர்மஸு - கர்மங்களில் கௌசலம் - வல்லமை, யோகஹ - (இது) யோகம் (என்று) உச்யதே - சொல்லப்படுகிறது.*

**கருத்துரை:**

*சமத்துவபுத்தியுடையவன் புண்யம், பாவம் இரண்டையும் இப்பிறவியிலேயே துறக்கிறான். எனவே அத்தகைய சமத்துவபுத்தியுடன் கூடிய நிஷ்காமகர்ம யோகத்தைச் சேருவதற்கு முயற்சி செய். கர்மாவை செய்தலில் வல்லமை பொருந்தியிருத்தலே யோகம் எனப்படும்.*

**விளக்கம்:**

*'புத்தியுக்தன்' என்றால் சமத்துவ புத்தியுடன் அநாயாசமாக நிஷ்காமமாகச் செயலாற்றுபவன். அத்தகையோனுக்கு பாபம், புண்யம் இரண்டும் அண்டுவதில்லை. ஏனெனில் ஆசையுடன், பலனை எதிர்பார்த்து செய்பவர்க்கே பாவபுண்ணியங்கள் சேரும். சமபுத்தியுடன் நிஷ்காமமாக பணியாற்றுவோருக்கு பாபபுண்ணியங்கள் சேராது. ("யக்ஞாயா சரதஹ கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே) (4 - 23) அவர்கள் பந்த விமுக்தி பெற்று ஒளிர்வர். ஆயினும் மகனீயர்கள், உலக நன்மைக்காக நிஷ்காமமாக சில புண்ய காரியங்களை செய்து கொண்டேயிருப்பர். கீதையில் பகவான் புண்ய காரியங்களை ஆங்காங்கே செய்யும்படி தூண்டுகிறார் (7 - 28, 18 - 5)*

சாதகன் பாவ காரியங்களை விட்டு விட்டு புண்ய காரியங்களை முதலில் மேற்கொள்ளுதல் வேண்டும். அதனைத் தான் செய்வதாகக் கருதாமல், பலனை எதிர்பாராது சமபுத்தியுடன் செய்துவந்து கர்மபந்தத்தினின்றும் விடுபடுதல் வேண்டும். அந்நோக்கிலேயே இங்கு நிஷ்காமயோகி புண்யபாபம் இரண்டையும் விடுகிறான் என்று சொல்லப்பட்டது. நிர்விகல்ப சமாதி நிலையில் மட்டுமே மனிதன் ஆத்மாவில் நிலைத்து பணி ஆற்றாது இருப்பான். மற்றைய சமயங்களில் புண்யகாரியங்களை மகனீயர்கள் செய்து கொண்டேயிருப்பார், எனவே மற்றையோரும் தம் சித்த சுத்திக்காக, ஆன்ம ஞானயோகத்திற்காக, புண்ய காரியங்கள், தெய்வகாரியங்களை இவற்றை விடாது நிஷ்காம புத்தியுடன் செய்து வரல் வேண்டும். ஆன்மா சிறப்படைய இதுவே வழி.

"கௌசலம்" - சமத்வ புத்தியுடன் காம்ய கர்மாக்களின்றும் மனதை விடுவித்துக் கொள்ளும் வல்லமையே யோகம். இதன் மூலம் கர்மாவைச் செய்வதில் திறமையுடன் செயலாற்றுதலே யோகம் என்று சொல்லப்படுகிறது. கர்மாக்களைச் செய்யும் போதே அதில் ஈடுபடாமல், பந்தங்களில் கட்டுறாமல், செய்யும் கலையே யோகம். அதாவது, சமத்துவ புத்தியுடன் நிஷ்காம மாக, அநாயாசத்துடன் செய்வதே யோகம் என்று இங்கு கூறப்படுகிறது.

**வினா:**

யோகமென்றால் என்ன?

**விடை:**

கர்மாவைச் செய்யும் போது திறமையுடன் செய்வதே யோகம் (அநாயாசமாகச் செய்தல்)

**51. கர்மஜம் புத்தியுக்தாஹி பலம் த்யக்த்வா மனீஷிணஹ!**
**ஜன்மபந்தவினிர்முக்தாஹ் பதம் கச்சந்த்யனாமயம்!! (51)**

**சொற்பொருள்:**

புத்தியுக்தாஹா - சமத்துவ புத்தியுடன் கூடிய, மனீஷிணஹ - விவேகிகள், கர்மஜம் - கருமாவால் ஏற்படக்கூடிய, பலம் - பலனை, த்யக்தவா - தியாகம் செய்து, ஜன்மபந்த வினிர்முக்தாஹா - பிறப்பெனும் தளையினின்றும் விடுபட்டு, அநாமயம் - துன்பமற்ற பதம் - நிலையை, கச்சந்திஹி - அடைகிறார்கள்.

**கருத்துரை:**

சமத்துவ புத்தியுடன் கூடிய விவேகிகள், கர்மங்களை ஆற்றிவந்தாலும் அதன் பலனைத்தியாகம் செய்து, பிறப்பிறப்பெனும் பந்தத்தினின்றும் விடுதலை பெற்று துன்பமற்ற மோக்ஷ பதவியை அடைகிறர்கள்.

**விளக்கம்:**

மனீஷ - என்றால் பிரக்ஞை. புத்தி, பிரக்ஞை இவையுடையவன் கர்மாவைச் செய்வதற்கு முன் விவேகம் மிக அவசியம் என்பது தெரிகிறது.

கர்மங்களை பற்றுடன், பலன் கருதி செய்வதால் ஏற்படும் நஷ்டம், நிஷ்காம மாக, பற்றின்றி செய்யப்படுவதால் ஏற்படும் மேன்மை இரண்டையும் நன்றாக அறிந்திருப்பவனே கர்மபலனை தியாகம் செய்து உத்தம பதவியை அடைய வல்லவன். எனவேதான் இங்கு புத்தியுக்தர்கள், பிரக்ஞையுடையர்கள் மட்டுமே கர்மபலத்தியாக சாமாத்தியம் உடையவர்கள் எனப் பட்டது

நிஷ்காம கர்மாவினால் சித்தம் சுத்தமடைவதோடு, அத்தகைய நிர்மலமான சித்தத்தில் ஆத்ம ஞானம் தோன்றுவதால் அவர்கள் பிறப்பெனும் பந்தத்தினின்றும் விடுபடுகின்றனர். இதனால் கர்ம மார்க்கம் மோக்ஷத்திற்கு எங்ஙனம் உதவுகிறது என்பது தெளிவாக்கப் பட்டுள்ளது. கர்மாவால் எங்ஙனம் மோக்ஷம் கிடைக்கும் என சிலர் சந்தேகிக்கக் கூடும். ஆயின் பகவான் அங்கு இதற்கு சரியான விளக்கம் கொடுத்துள்ளார். கர்மாவை பலனைக்கருதாது, தானே செய்கிறோம் என்று எண்ணாது செய்பவர் நிர்மல,

நிருபத்ரவ, பவபந்த ரஹித மோக்ஷ பதவியினை தவறாது அடைவர் என்கிறார் கீதாச்சார்யன்.

"ஜன்பந்த விநிர்முக்தாஹா" - இவ்வுலகில் ஒவ்வொருவரும் பந்தங்கள் எவ்வாறு விலகும் என்று எண்ணுவர் அத்தகைய பந்த விமுக்திக்கு பகவான் இங்கு சுலபமான வழியைக் கூறியுள்ளார். "ஜீவர்களே! நீங்கள் பந்த விமுக்தி பெற்று, நிராமயமான மோக்ஷபதவியை அடைய வேண்டுமானால் நிஷ்காமமாக, ஈசுவரார்ப்பண புத்தியுடன் செயலாற்றுங்கள். இதனால் சித்த சுத்தியடைந்து, ஆன்ம ஞானம் தோன்றி தவறாது மோக்ஷ நிலையை அடைவீர்" என்று ஸ்ரீகிருஷ்ணர் பக்தர்களை ஆசுவபாசப் படுத்துகிறார்.

"மனீஷிணஹ" - ஒருவனுக்கு பிரக்ஞை உள்ளதா இல்லையா என்பதை தெரிந்து கொள்வதற்கு அவனது அறிவை பரீட்சை செய்தல் அல்ல, அவனது நிஷ்காம பாவம், அநாசக்தி இருக்கிறதா இல்லையா என்று பார்ப்பதே யாகும். கர்ம இரகசியத்தை அறிந்து உலகில் அநாயாசமாகக் கருதுபவனே உண்மையில் பிரஜ்ஞையுடையவன் அன்றி உலகியல் அறிவில் பண்டிதன் அல்லன்.

"பதம் கச்சன்த்யநாமயம்" - உலகில் அநேக சிறந்த பதவிகள் உண்டு. சக்ரவர்த்தி பதவி, தேவேந்திர பதவி முதலானவை. ஆயின் அவை எவ்வளவு உயர்ந்ததாயினும் சம்சார சக்கரத்தில் உழல்பவையே யாகும். பிறப்பு, இறப்பு, துன்பம் இவற்றினின்றும் இவை மனிதனை கடைத் தேற்ற வல்லதல்ல, எல்லாப் பதவிகளையும் விட சிறந்தது, துன்பம் என்பதே சிறிதளவும் இல்லாதது, பந்தங்களின்றும் விடுவிப்பது ஆகிய ஒரே ஆத்மபதவியே. பிரம்ம பதவி. அதனை அடைவதே ஒவ்வொரு ஜீவியின் இலட்சியமும். அதனை அடையும் வழியே இங்கு சொல்லப்பட்டது.

**வினா:**

*பிரக்ஞாசீலர்களின் (புத்திமான்) இலக்கணம் யாது?*

**விடை:**

நிஷ்காம கர்ம ஆசரணை.

**வினா:**

அதனால் அவர்கள் எதனை அடைகிறார்கள்?

**விடை:**

பிறப்பிறப்பினின்றும் விடுபட்டு, நிராமயமான மோக்ஷ பதத்தை அடைகிறார்கள்.

**வினா:**

பரமாத்ம பதம் எத்தகையது?

**விடை:**

(1)ஜன்மபந்தம் இல்லாதது (2) நிராமயமானது (துன்பமில்லாதது).

**முன்னுரை:**

அத்தகைய மோக்ஷ நிலையை மக்கள் எப்போது அடையக்கூடும் என்பதை நிரூபிக்கிறார்.

**52. யதா தே மோஹகலிலம் புத்திர்வ்யதிதரிஷ்யதி||**
**ததா கந்தாஸி நிர்வேதம் ச்ரோதவ்யஸ்ய ச்ருதஸ்ய ச| (52)**

**சொற்பொருள்:**

யதா - எப்போது, தே - உன், புத்திஹி - புத்தி, மோஹகலிம் - அஞ்ஞானம் எனும் (குற்றத்தை), அழுக்கை, - வ்யதிதரிஷ்யதி - தாண்டுமோ, ததா - அப்போது, ச்ரோதவ்யஸ்ய - கேட்கவேண்டிய அறிவுரையிலும், ச்ருதஸ்ய ச - கேட்டதிலும், நிர்வேதம் - விரக்தியை, கந்தாஸி - அடைவாய்.

**கருத்துரை:**

அர்ஜுனா! உன் புத்தி எப்போது அஞ்ஞானம் எனும் அழுக்கினைக் கடந்து பரிசுத்தமாகிறதோ, அப்போது

கேட்டதிலும், கேட்கப் போவதிலும் நீ பற்றின்மையைப் பெறுவாய்.

**விளக்கம்:**

ஜீவனின் இலக்கு மோஹத்தைத் தாண்டி அப்பால் செல்வதே, அம்மோஹத்திற்கே அஞ்ஞானம், மாயை, இயற்கை, முதலான பெயர்கள் உண்டு. தமோகுணத்தைத் தாண்டி பரமாத்மா உள்ளார். "தமஸஸ்து பாரே" என்ற வேத வாக்கியம் இந்த உண்மையையே பகர்கின்றது. ஒளி மயமான பரமாத்மாவை சேர்வதற்குத் தடையாக உள்ள மோஹ (தமோகுணம்) த்தைத் தாண்ட வேண்டியுள்ளது. நிஷ்காமகர்மாவைச் செய்வதால், கேட்டல், மனனம், தியானம், ஆன்ம விசாரணை, இவற்றால் அதனைச் சாதிக்கவியலும். இவ்வாறாக புத்தி எப்போது அஞ்ஞானமென்ற அழுக்கினை தாண்டுகிறதோ, அதற்கு அப்பாற்பட்ட பரமாத்மாவின் சன்னிதானத்தை அடையுமோ, அப்போது வஸ்துவான பரமாத்மாவின் மீது நிலைத்திருக்கும். எனவே கேட்டல் முதலியவற்றில் ஆசை இருக்காது. ஆயின் இது ஆன்மநிலையை அடைந்தவர்க்கேயன்றி சாதனை செய்பவர்களுக்கு கூறப்பட்டதல்ல என்பதை அறிதல் வேண்டும். சாதகர்கள் சாஸ்திரங்களை தவறாது கேட்டல் வேண்டும்.

"மோஹகலிலம்" - என்று சொல்வதால், மக்கள் இதயத்தில் அஞ்ஞான மெனும் அழுக்கு சேர்ந்துள்ளது, அதனை முயற்சி செய்து, நிஷ்காம கர்மாவை செய்வதன் மூலம், ஆன்ம விசாரணையின் மூலம் அகற்றி, ஆத்ம சாக்ஷாத்தாரம் அடைதல் வேண்டு மென்பது தெளிவாகிறது.

**53. ச்ருதிவிப்ரதிபன்னா தே யதா ஸ்தாஸ்யதி நிஸ்சலா।**
**ஸமாதாவசலா புத்திஸ்ததா யோகமவாப்ஸ்யஸி॥ (53)**

**சொற்பொருள்:**

ச்ருதிவிப்ரதிபன்னா - பலவிதமானவற்றையும் கேட்டுக்கலங்கியுள்ள, தே - உன்னுடைய புத்திஹி -

புத்தியானது, யதா - எப்போது, நிஸ்சலா - சலிக்காததாய், ஸமாதௌ - சமாதிநிலையில் பரமதியானத்தில், அசலா - உறுதியாய், ஸ்தாஸ்யதி - நிற்குமோ, ததா - அப்போது, யோகம் - யோகத்தை (பகவத் ஐக்கியத்தை, ஆத்மசா க்ஷாத்காரத்தை) அ்வாப்ஸ்யஸி - அடைவாய்.

**கருத்துரை:**

பலவிதமானவற்றையும் கேட்டுக் கலக்கமடைந்துள்ள உன் புத்தி என்று அசையாது உறுதியாய் ஆத்மாவின் கண் நிலைபெறுமோ, அப்போது நீ ஆத்மாசாக்ஷாத்காத்தை அடைவாய்.

**விளக்கம்:**

வேதத்தில் இந்த பலனுக்காக இக் கர்மாக்கனைச் செய்தல் வேண்டும் - என்று சொல்லப்பட்டுள்ள அர்த்த வாதரூபமான வாக்கியங்கள் பலவற்றையும் கேட்டதால் புத்தி ஒன்றின் மேல் நிலைகொள்ளாமல் கலங்கியுள்ளது. அத்தகையபுத்தி இருக்கும் போது, அதனை ஆன்ம விசாரணையால் அஞ்ஞான அழுக்கைத் துடைத்து, இஹலோகபரலோக போகங்களின் மேலுள்ள ஆசையை விட்டு. பரமாத்ம தியானத்தில் நிலையாக நின்றிருக்கையில் அப்போதே மனிதன் ஜீவன்முக்தியை அடையக் கூடும். அத்தகைய நிலையே 'யோகம்' எனப்படுகிறது.

இங்கு சொல்லப்பட்ட 'யோகம்' என்ற வார்த்தைக்கு ஐக்கியம், ஜீவான்மா பரமாத்மா சேர்க்கை என்று அர்த்தம். புத்தி ஆத்மாவில் நிலைப்பதே யோகம்... அநேக விதமான போதனைகளைக் கேட்டு கடைசியில் புத்தி ஆன்மவிசாரணையால் காட்சிப் பொருள்களினின்றும் மாறி புத்திக்கு சாட்சியாய் நிற்கும் ஆத்மாவில் எப்போது நிச்சலனமாக நிற்கிறதோ அப்போது ஒரு உப்புக் கல் கடலில் கலந்து விடுவதைப் போல் ஆத்மாவில் நிலைத்து பரம சாந்தியை, ஆனந்தத்தை அடையும். அப்போதே யோகம் சித்தித்ததாகும் என்று பகவான் இங்கு சொல்கிறார்.

சித்தம் சபலமடைந்தால் தியானமோ, யோகமோ கை கூடுவதில்லை என்று தெளிவாக எடுத்துக் காட்டுகிறார். எனவே தான் 'நிச்சலா' 'அசலா' என்று இரண்டு சொற்களால் சிறப்பித்துக் கூறுகிறார் கை நடுங்கும் போதோ, நூலின் முனை சன்னமாக இல்லாவிடின் எப்படி நூல் ஊசிமுனையில் நுழையாதோ, அவ்வாறே மனம் ஒருநிலைப்பாடு இன்றி இருப்பின் மனம் ஆன்மாவில் நுழைவதில்லை.

எனவே சாதகன் (1) கேட்பதை ஓரளவு வரையறுத்துக் கொண்டு, மனனம், தியானம் இவற்றை அதிகமாக்கிக் கொள்ள வேண்டும். கேட்டல் மட்டும் போதும் என்றும் நினைக்கக் கூடாது. கேட்டதை நடைமுறையில் கொணர்தல் அவசியம் (2) இனி காட்சிப் பொருள்களினின்றும், போகங்களினின்றும் சித்தத்தைத் திருப்பி, அந்தர்முகமாக செலுத்தி ஆன்மாவில் நிலைநிறுத்த வேண்டும். சித்தம் ஒரு முனைப்பட்டிருத்தல் வேண்டும். சபலத்தை விட்ட 'த்வேயாகாரத்திலேயே' நிலைத்தல் வேண்டும்.

மனிதன் எப்போது ஆத்ம சாக்ஷாத்காரம் அடைவான் என்ற கேள்விக்கு விடை இச்சுலோகத்தில் சொல்லப்பட்டது. ஆத்மானுபூதிக்கு காலநியமம் இல்லை. எப்போது சித்தம் உலக விஷயங்களினின்றும் முக்தியடைந்து. ஒருமுனைப் படுகிறதோ அப்போதே மோக்ஷஸ்திதியை அடைகிறது. எனவே 'யதா' (எப்போது) 'ததா' (அப்போது என்று சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**வினா:**

ஜீவ பிரம்ம ஐக்கியத்துவமான யோகம் மனிதனுக்கு எப்போது சித்திக்கும்?

**விடை:**

புத்தி எப்போது நிச்சலனமாக, நிர்விஷயமாக, ஆத்மதியானத்தில் நிலையாக நிற்குமோ அப்போதே ஜீவ பரமாத்ம ஐக்கிய யோகம் சித்திக்கும்.

ஸ்திர புத்தியுடன் கூடிய ஜீவன் முக்தனைக்குறித்து பகவான் சொல்லிய இவ்வாக்கியத்தைக் கேட்டு, அத்தகைய ஸ்தித பிரக்ஞனின் இலக்கணம் தெரிந்து கொள்ள ஆசைப்பட்ட அர்ஜுனன் கீழ்க்கண்டவாறு கேள்வி எழுப்பினான் - அர்ஜுன உவாச .,-

**54. ஸ்திதப்ரக்ஞஸ்ய கா பாஷா ஸமாதிஸ்தஸ்ய கேசவ!**
**ஸ்திததீஹ் கிம் ப்ரபாஷேத கிமாஸீத வ்ரஜேத கிம்!! (54)**

*அர்ஜுன உவாச - அர்ஜுனன் சொன்னது.*

**சொற்பொருள்:**

கேசவ - கிருஷ்ணா! ஸமாதிஸ்தஸ்ய - ஸமாதியில் இருக்கிற, ஸ்திதப்ரக்ஞஸ்ய - நிலைத்த புத்தியுடைய வனுடைய, பாஷா - இலக்ஷணம், கா - எது? ஸ்திததீஹி - உறுதியான அறிவுடையவன், கிம் - எதை, ப்ரபாஷேத - பேசுகிறான்? கிம் - எவ்வாறு, ஆஸீத - இருக்கிறான்? கிம் - எவ்வாறு, வ்ரஜேத - நடக்கிறான்?

**கருத்துரை:**

ஏ கிருஷ்ணா! ஸமாதியில் உள்ள, ஸ்திதபிரக்ஞனான ஜீவன் முக்தனின் இலட்சணம் யாது? அவன் எவ்வாறு இருக்கிறான்? எவ்வாறு நடக்கிறான்?

**விளக்கம்:**

ஸமாதி நிட்டையில் யோகியின் அதாவது, ஆத்மஞானியான ஜீவன்முக்தனின் இலட்சணங்கள் எவை என இங்கு அர்ஜுனன் தெரிந்து கொள்ள விரும்பினான். சில வேஷதாரிகள் மேல்போக்காக ஆடம்பரமாக ஸமாதி நிட்டையில் இருப்பதுபோல் நடிப்பர், எனவே உண்மையான ஸமாதி நிட்டையில் இருப்பவரை தெரிந்து கொள்ளும் வழி அனைவரும் அறிந்து கொள்ள வேண்டியுள்ளது. அர்ஜுனனே இதனைக்குறித்து வினவினான். ஒருவன் சரியான ஆன்மீக

நெறியில் நடக்கிறானா அல்லவா, அவன் உண்மையான யோகியா அல்லது மோசக்காரனா என்பதை அறிந்துகொள்ள அர்ஜுனன் தெரிந்து கொள்ள விரும்பிய மூன்று கேள்விகளே போதுமானது.,-

(1) அவன் பேச்சு (2) அவன் இருப்பிடம் (3) அவன் நடை, ஒவ்வொருவனின் குணமும் அவன் செயல்களில் பிரதிபலிக்கும். அஞ்ஞானியின் ஒவ்வொரு காரியத்திலும் தமோகுணம், ரஜோகுணம், புனிதமற்ற தன்மை புலப்படும். பிரம்ம ஞானியின் தினசரி நடவடிக்கையில் தெய்வத்தன்மை, அமைதி, புனிதத் தன்மை காணப்படும். எனவே ஸ்தித பிரக்ஞன் மகனீயர்களின் இலட்சணம், தோற்றம், இயல்பு, தினசரி வாழ்க்கை முறை இவை தெரிந்திருந்தால், அதனைப்பிறரும் பின்பற்றி மேன்மையுறுதல் கூடும் என்ற உத்தேசத்துடன் அர்ஜுனன் இவ்வினாவை கேட்டிருத்தல் கூடும்.

ஸ்தித + ப்ரக்ஞஹ, தீஹி - ப்ரஞை அல்லது புத்தியை ஆன்மாவில் நிலையாக நிறுத்துபவன் என்பது பொருள்.

மற்றையோர் 'அஸ்திப்ரக்ஞர்கள்' அவர்களின் புத்தி 'ப்ரக்ஞ ஆன்மாவில் (தெய்வத்திடம்) நிலை பெறாது, காட்சிப் பொருள்களின் மேல் (விஷயங்களின்மேல்) நிற்கும் என்பது பொருள். எனவே விவேகிகள் ஸ்தித பிரக்ஞனின் இலட்சணங்களை அறிந்து அதனைப்பின்பற்றி பவபந்தங்களினின்றும் விமுக்தி யடைதல் வேண்டும். ஸ்திதபிரக்ஞனின் இலட்சண்ங்களைக் கூறும் இப்பகுதி - (54 - 72 சுலோகங்கள்) கீதையின் மிக முக்கியமான பகுதியாகும். காந்தி மகாத்மா தினமும் இந்தப் பகுதியைப் பாராயணம் செய்து வந்தார்.

**வினா:**

ஸ்தித பிரக்ஞனின் எந்தெந்த இலட்சணங்களை அர்ஜுனன் அறிய விரும்பினான்.

**விடை:**

*(1) அவனது பேச்சு (2) அவன் நிவாசம் (3) அவனது நடவடிக்கை இவற்றைத் தெரிந்து கொள்ள விரும்பினான்.*

**முன்னுரை:**

*அர்ஜுனனின் வினாவிற்கு விடையாக ஸ்ரீ கிருஷ்ணர் 18 சுலோகங்களில் ஸ்தித பிரக்ஞனின் நிலையை விளக்குகிறார்.*

*ஸ்ரீ பகவான் உவாச -*

**55. ப்ரஜஹாதி யதா காமான் ஸர்வான் பார்த்த மனோகதான்।**
**ஆத்மன்யேவாத்மனா துஷ்டஹ ஸ்திதப்ரஞ்ஞஸ்ததோச்யதே॥**
**(55)**

*ஸ்ரீ பகவான் உவாச ஸ்ரீ பகவான் சொன்னது।*

**சொற்பொருள்:**

*பார்த்த - ஏ அர்ஜுனா! யதா - எப்போது, மனோகதான் - மனதில் எழுகின்ற ஸர்வான் - எல்லா, காமான் - ஆசைகளையும், ப்ரஜஹாதி - முழுவதுமாக விட்டொழிக்கிறானோ, ஆத்மனி ஏவ - ஆத்மாவில் மட்டும், ஆத்மானா - ஆத்மாவைக் கொண்டு (ஆத்மாவில் நிலைத்த மனதினால்) துஷ்டஹ - திருப்தியடைந்தவனாய், (பவதி - இருக்கிறானோ), ததா - அப்போது, ஸ்திதப்ரக்ஞஹ (இது) - ஸ்திதபிரக்ஞன் (நிச்சலமான புத்தியுடையவன் என்று ) உச்யதே - சொல்லப் படுகிறான்.*

**கருத்துரை:**

*அர்ஜுனா! மனிதன் எப்போது தன் மனதினின்றும் ஆசைகளை அறவே யொழித்து, ஆன்மாவில் ஆன்ம திருப்தி (நிர்மலமான சித்தத்துடன்) அடைகிறானோ, அப்போது அவன் ஸ்திதப்பிரக்ஞன் எனப்படுகிறான்.*

**விளக்கம்:**

பலரும் தம் குருவினிடம் சென்று, 'அய்யா! எமக்கு மோக்ஷம் எப்போது கிடைக்கும், இந்த சம்சார பந்தம் எப்போது விலகும்?' எனக் கேட்பர், அப்போது குருமார்கள் இந்த சுலோகத்தில் பகவான் சொல்லிய பதிலையே சொல்வர். மக்களின் மோக்ஷபிராப்திக்கான முகூர்த்த நேரம், சுபவேளை அவரவர் கையிலேயே உள்ளது, "யதா - எப்போது நீ சாதனை செய்கிறாயோ, ததா - அப்போது நீ மோக்ஷத்தை அடைவாய்" என்று சுருக்கமாகச் சொல்லப்பட்டுள்ளது. இச்சுலோகத்தில் சொல்லப்பட்ட இயல்புகள் (யோக்யதை) எந்த கணத்தில் ஒருவனுக்கு வந்து சேர்கின்றனவே அப்போதே அவனுக்கு முக்தி உள்ளங்கை நெல்லிக்கனியாகும், எனவே தனக்கு இன்னும் அமைதி கிடைக்கவில்லையே, துன்பம் தீரவில்லையே என்று வருந்தி, பெரியோர்களையும், சாஸ்திரங்களையும் விமர்சித்துப் பலனில்லை. நாம் செய்ய வேண்டிய சாதனைகளைச் சரிவரச் செய்துவர வேண்டும்.

அச்சாதனை எத்தகையது? - ப்ரஜஹாதி யதா காமான் ஸர்வான் -

(1) முதலில் தன்னிடத்துள்ள ஆசைகளை அறவே ஒழித்தல் வேண்டும். இங்கு 'ஜஹாதி' (விடுகிறான்) எனாது, 'ப்ரஜஹாதி' என்பதால் ஆசைகளை அறவே ஒழித்தல் வேண்டுமென்பதும், 'ஸர்வான்' என்றதால் ஒன்று கூட மிகுதியாகாமல் அனைத்து ஆசைகளையும் விடுதல் வேண்டும் என்பதும் தெளிவாகிறது. வாசனை, அக்னி, ருணம், ரோகம், சத்ரு, விருப்பு, வெறுப்பு, விஷம் முதலானவை சிறிதளவே மிகுந்திருப்பினும், மோஹம் ஏற்படும். ஆதலால் அதனை முழுவதுமாக தொலைத்தல் வேண்டும் என்று சாஸ்திரங்கள் இயம்புகின்றன.

**(வாஸநாயாஸ்ததா வஹ்ரேமஹ் ருணவ்யாதி த்விஷாமபி ஸ்நேக வைர நிஷாணாம்ச சேஷஹ ஸ்வல்போபி அபிவர்ததே")**

அஸம்பூர்ணமாக எல்லா ஆசைகளையும் விட்டாலும், அல்லது முழுவதுமாக சில ஆசைகளைமட்டுமே துறந்தாலும்

பலனில்லை, முழுமையாக எல்லாவற்றையும் விட்டால்தான் விரும்பிய மோக்ஷம் கிடைக்கும், என்பதை தெரிவிக்கவே இச்சுலோகத்தில் 'ப்ரஜஹாதி' 'ஸர்வான்' என்ற இரண்டு சொற்களைப் பயன்படுத்தியுள்ளார்'

ஆசைகள் மனத்தின் எங்கோ ஒரு மூலையில் மறைந்திருக்கும். வாசனைகளின் உருவில் அவை சேர்ந்திருக்கும். எனவேதான் 'மனோகதான்' என்கிறார். குற்றமோ, பந்தமோ வெளியில் இல்லை. மனதில்தான் இருக்கிறது. எனவே மனமெனும் இருட்குகையில் விவேகமெனும் விளக்கின் உதவியால் மறைந்துள்ள ஆசைகளைத் தேடிக் கொணர்ந்து வெளியே எறிதல் வேண்டும். அன்னத்தில் உள்ள கல்லை, பயிரின் நடுவில் உள்ள களையை, தோட்டத்தில் உள்ள முட்கள், காய்கறிச் செடிகளில் உள்ள இலைப்புழுவை எவ்வாறு பார்த்து பார்த்து நீக்குகிறோமோ, அவ்வாறே மனதில் உள்ள ஆசைகளை முழுவதுமாக விலக்குதல் என்று பகவான் இங்கு கூறுகிறார். இவ்வாசைகள் பல பிறவிகளாகத் தொடர்ந்து ஜீவனைத்துரத்தி வந்து, வாசனைகளின் ரூபமாக உருவெடுத்து காரணதேகத்தில் நன்றாகப் பதிந்து காலூன்றிக் கொண்டு பிறப்பு இறப்புகளை அடையச் செய்கிறது. எனவே வாசனைகளற்று, அதன் மூலத்தைக் கண்டறிந்து அதனையும் களைந்து எறிதல் வேண்டும். ஒன்றே ஒன்று மிகுந்திருந்தால் கூட ஆபத்தே, ஏனெனில் சிலர் எல்லா ஆசைகளையும் விட்டு ஏதோ ஒன்றின்மேல் 'மமத்துவம்' (எனது) வைத்து மறுபடியும் பந்தத்தில் விழுந்து விடுகின்றனர். அக்னியில் அனைத்தும் எரிந்து பின்பு ஒரு நெருப்புத்துகள் இருப்பினும் அது கனிந்து மறுபடியும் பெரு நெருப்பாகி விடுகின்றதல்லவா? எனவேதான் பகவான் 'எல்லா ஆசைகளை முழுமையாக விட்டொழித்தல் வேண்டுமென வலியுறுத்திக் கூறுகின்றார். இங்கு தியாகம், ஆன்ம விசாரணை, வைராக்கியம் இவை ஆசைகளை ஒழிப்பதற்குத் துணைபுரியக்கூடும்.

(2) இரண்டாம் சாதனை - "ஆத்மன்யேவாத்மனா துஷ்டஹ" - தன் ஆன்மாவிலேயே ஆத்ம திருப்தியடைதல்.

துஷ்டி - ஆனந்தம் எங்கு கிடைக்கும்? என்ற வினாவிற்கு இங்கு விடை கூறப்படுகிறது. ஆனந்தம் வெளியில் இல்லை. காட்சிப் பொருளில் இல்லை. இந்திரிய சுகங்களில் இல்லை.

ஈரேழு பதினாறு புவனங்களையும் அங்குலம் அங்குலமாக தீவட்டி பிடித்துக் கொண்டு தேடினாலும், திருப்தி, ஆனந்தம் இவற்றை வெளியில் விலைகொடுத்து வாங்குவது இயலாது. அது தன் ஆத்மாவிலேயே கிடைக்கும். மனதில் உள்ள ஆசையெனும் அழுக்கு எப்போது போகிறதோ அப்போது ஆன்மாவில் ஒளிரும் ஆத்மானந்தம் ஜீவனுக்கு ஏற்படும். இதுவே வேதாந்தத்தில் சொல்லப்பட்டுள்ள பிரம்மானந்தம் புதிதாக தயார் செய்யப்படுவதில்லை, அது சுயமாகவே எப்போதும் இருப்பதே. ஆயின் முன்பிருந்தே தொடரும் அஞ்ஞானத்தால் அது ஒதுங்கியிருக்கிறது. விவேக, வைராக்யம் வற்றால் மனதிற்கு பீடித்துள்ள காமம் முதலான ஒட்டடையைத் துடைத்தால் உள்ளிருக்கும் இயல்பான ஆத்மானந்தம் புலப்படும். பாசியை விலக்கினால் சுத்தமான தண்ணீர் புலப்படுவதைப் போல், தூசியைத் துடைத்தால் கண்ணாடியில் பிரதிபிம்பம் நன்றாகத் தெரிவதைப் போல, ஆன்மாவின் நிர்மலமான ஸ்வரூபம் புலப்படுவதைப் போல், காட்சிப் பொருள்கள் முதலான தோஷங்கள், வாசனைகள், ஆசைகள் இவை முழுமையாக அழிந்து விட்டால் மாத்திரமே திரிக்ஸ்வரூபமான ஸ்வயம்பிரகாச பரமாத்மா வெளிப்படும். எனவேதான் இச்சுலோகத்தில் முதல் பாதத்தில், 'ஆத்ம திருப்தி, ஆத்மானந்தம்' என்ற இரண்டையும் அடையக் கூடிய பொருளாக பகவான் சொல்கிறார். சாதனை செய்தால் கிடைப்பது சாத்தியம் என்கிறார்.

இவ்வாறாக ஆசைகளனைத்தையும் முழுமையாக கைவிட்டு, எப்போதும் ஆத்மாவிலேயே திருப்தியடைபவன், ஸ்திதபிரக்ஞன், ஜீவன் முக்தன், ஞானி என்று சொல்லப்படுகிறான். இவ்வடையாளங்களை வைத்து ஒருவன் பூரண நிலையை அடைந்தவனா இல்லையா என்பதை நன்கு தெரிந்து கொள்ளலாம். ஜீவன் முக்தனின் முகத்தில் எப்போதும் திருப்தி, ஆனந்தம் தாண்டவ மாடும், ஆசைகள்

நிறைந்தவன் முகத்தில் பயம், துன்பம், பீடித்திருக்கும். ஸ்தித பிரக்ஞன் இனி அடைய வேண்டியது எதுவுமில்லையாதலால், தன் இதயத்திலேயே உள்ள பிரம்மானந்த அமிர்த சாகரத்தில் முழுகியிருப்பான். இதுவே அவனது அடையாளம்.

**வினா:**

ஸ்தித பிரக்ஞனின் இலட்சணங்கள் யாவை?

**விடை:**

(1) மனதில் ஆசைகளை அறவே ஒழித்தல்

(2) நிரந்தரம் ஆன்மாவிலேயே திருப்தி அடைதல்.

**வினா:**

இவ்வுலகில் பூர்ணானந்தம் எங்கு கிடைக்கும்?

**விடை:**

தன் ஆன்மாவிலேயே கிடைக்கும்.

**56. துக்கேஷ்வனுத்விக்னமனாஹ் ஸுகேஷு விகதஸ்ப்ருஹஹ|**
**வீதராகபயக்ரோதஹ் ஸ்திததீர்முனிருச்யதே|| (56)**

**சொற்பொருள்:**

துக்கேஷு - துக்கத்தில், அனுத்விக்நமனாஹா - குரோத மற்ற மனதையுடையவன், ஸுகேஷு - சுகத்தில், விகதஸ்ப்ருஹஹ்ஹ - நாட்டமிலாதவனாய், வீதராகபயக்ரோதஹ - பற்றுதல், பயம், கோபம், இல்லாதவனும் (ஆன) முனிஹி - (ஆத்ம) மனத்தை கட்டுப்படுத்தியவன், ஸ்திததீஹி - உறுதியான அறிவுடையவன் ஞானி என்று, உச்யதே - சொல்லப்படுகிறான்.

**கருத்துரை:**

துக்கத்தில் கலங்காத மனதுள்ளவன், சுகத்தில் நாட்டமில்லாதவன், பற்று, அச்சம், கோபம் அற்றவன் ஆன (ஆத்ம) மனக் கட்டுப்பாடுடையவன் ஸ்திதப்பிரக்ஞன் எனப் படுகிறான்.

**விளக்கம்:**

புத்தியை ஆன்மாவில் ஸ்திரமாக நிலை நிறுத்துபவன் ஸ்தித பிரக்ஞன். சாமான்யர்களின் புத்தி, வெளி உலகில், தேகம் முதலான காட்சிப் பொருள்களின் இடையில் அகப்பட்டு தெய்வத்தின் மீது நிலைபெறாது இருக்கும். எனவே அவர்கள் ஸ்தித பிரக்ஞர்கள் அல்ல. இங்கு ஸ்திதபிரக்ஞனுக்கு மூன்று குணங்கள் கூறப்படுகின்றன.

*அவை யாவை யெனின்-*

(1) துக்கத்தில் அவன் மனது எந்நிலையிலும் அலைப் புறுவதில்லை. கலக்கமடைவதில்லை. மேகத்தின் கீழுள்ளவருக்கு மழையால் ஏற்படும் துன்பமோ இடியால் உண்டாகும் உபத்திரவமோ மேகத்தின் மேலுள்ள சூரியனுக்கு இல்லாததைப் போல, மனதிற்கு இவ்வலயத்தில் இருக்கும் மனோதர்மமான சுகதுக்கங்கள் ஆத்ம ஞானத்திற்கு இருப்பதில்லை. சாட்சியை சாட்சி தர்மங்கள் ஒருபோதும் பாதிப்பதில்லை. எனவே துக்கம் முதலானவற்றில் ஒருவிதமான பயமும் இருக்காது. பெரிய மலையின் மீது விடுக்கும் விடுத்தாலும் அதனால் அதற்கு ஏதும் பாதிப்பு ஏற்படுத்தாததைப்போல், கடல் அலைகள் கரையில் இருக்கும் மலையை அசைக்க இயலாததைப்போல், தாமரைத் தண்டினால் ஆன கயிற்றால் மதயானையைக் கட்டுதல் இயலாததைப் போல், துன்பம்முதலானவை ஞானியை ஒருபோதும் தாக்குவதில்லை என்று ஸ்ரீ வசிஷ்டமுனிவர் முன்பு ஸ்ரீ ராமனுக்கு போதித்துள்ளார்.

(2) அவ்வாறே சுகங்கள் வந்து சேரும்போது மனம் பொங்கிப் போவதென்பது ஞானிக்கு இருக்காது. துக்கத்தைப் போலவே சுகமும் ஒருவாறு மனோவிகாரமே. எனவே மனதை மீறி ஆன்மாவைச் சேர்ந்த ஸ்தித பிரக்ஞன் அம்மனோவிகாரங்கள் எதுவும் செய்ய இயலாது. மேலும் அகண்ட பிரம்மானந்த ஸாகரமே தன் ரூபமாக இருக்கும் ஞானி எங்கேயாவது வெளிக்கு பிம்பமாகப்புலப்படும் உலக சுகத்திற்கு ஆசைப்படுவானா? விழித்திருப்பவர் கனவுலக

சுகங்களை வேண்டுவரா? ஒருவேளை அவ்வாறு விரும்பினால் அவன் இன்னும் உறக்கத்தினின்றும் விழிக்க வில்லை என்று பொருள். ஜனகனின் அரசவையில் சுகமுனிவர் மகாவைபவங்கள் மீது ஆசைப்படாமல், துன்பங்கள் மிகுந்த போதும் கலங்காமல் இருந்ததால் அவரை ஸ்திதபிரக்ஞன் என நிச்சயமாகச் சொல்லமுடியும். அவ்வாறே எவராயினும் இத்தகைய இலட்சணங்கள் பொருந்தி இருப்பவரை ஸ்திதப் பிரக்ஞன் என்று சொல்ல இயலும்.

(3) மற்றும் ஸ்திதபிரக்ஞர்கள் விருப்பு, வெறுப்பு, பயம், குரோதம் இவை இல்லாமல் இருப்பர். ஞானியின் பார்வையில் எல்லாமே ஆன்ம சொரூபமாகவே புலப்படும். எனவே "தத்ர கோமோஹ கஷ்ற சோகஹ ஏகத்வ மனுபச்யதஷ்ற" என்று இவ்வாக்கியத்தை அனுசரித்தவருக்கு எங்ஙனம் விருப்பு வெறுப்பு, கோபம், பயம், குரோதம் இவை ஏற்படும். எனவே ஆத்மானுபவம் பெற்ற ஸ்திதப் பிரக்ஞனுக்கு இத்தகைய விகாரங்கள் எவையும் இருப்பதில்லை.

முனி என்றால் மனம் சீலம் உடையவன். மகனீயர்கள் ஆன்மீக உண்மைகளை நன்றாக மனனம் செய்துவருவர். எனவே அவருக்கு முனிகள் என்ற பெயர் ஏற்பட்டது. அவ்வாறு மனனம் செய்ததை தியானம் செய்யாவிடில் ஆன்மீக உண்மைகள் எவருக்கும் அனுபூதி ஏற்படாது. மனன சீலர்களே ஸ்திதபிரக்ஞத்வம், ஜீவன்முக்தியை அடையக்கூடும். இதனை தெரிவிப்பதற்காகவே 'முனி' என்ற சொல் இங்கு பயன்படுத்தப் பட்டுள்ளது. சோம்பேறிகள் 'சோஹம்' என்ற மலையை எக்காலத்தும் தகர்க்க முடியாது. மனன சீலர்கள், சாதனையாளர்கள் மாத்திரமே ஜீவன் முக்தி நிலையை அடைய வல்லவர்.

**வினா:**

ஸ்தித பிரக்ஞனின் இன்னும் சில இலட்சணங்களைக் கூறுக?

**விடை:**

*(1) துக்கத்தில் துன்பமடையாதிருத்தல் (2) சுகத்திற்கு ஆசைப்படாதிருத்தல் (3) விருப்பு, வெறுப்பு, பயம், குரோதம் இவை இல்லாதிருத்தல்.*

**57. யஹ்ஸர்வத்ரானபிஸ்நேஹஸ்தத்தத் ப்ராப்ய சுபாசுபம்।
நாபிநந்ததி ந த்வேஷ்டி தஸ்ய ப்ரக்ஞா ப்ரதிஷ்டிதா॥ (57)**

**சொற்பொருள்:**

*யஹ - யார், ஸர்வத்ர - எல்லா விஷயத்திலும், அனபிஸ்னேஹ - அபிமானமின்றி, தத்தத் — அந்தந்த, சுபாசுபம் - பிடித்தமான, பிடிக்காத விஷயங்களை, ப்ராப்ய - (ஒரு வேளை) அடைந்தாலும், ந அபிநந்ததி - மகிழ்ச்சியடைவ தில்லை, ந த்வேஷ்டி - வெறுப்படைவதில்லையோ, தஸ்ய - அத்தகையோனை, ப்ரக்ஞா - பிரக்ஞானம், ப்ரதிஷ்டிதா - மிகுந்த ஸ்திரமானது (அத்தகையோன் ஸ்தித பிரக்ஞன்)*

**கருத்துரை:**

*எவனொருவன் எல்லா விஷயங்களிலும் (தேகம், போகம்) இவற்றில் ஆசைகள் இல்லாதிருக்கிறானோ, அவ்வாசைகளை அடைய நேரிட்டாலும், சந்தோஷமோ, வெறுப்போ இன்றியோ இருப்பானோ, அத்தயையோனது ஞானம் மிகுந்த நிலையானது. (அத்தகையோன் ஸ்தித பிரக்ஞன்)*

**விளக்கம் :**

*"யஹ" - (எவன்) - கீதையில் பல இடங்களில் இந்த 'யஹ' சப்தம் உபயோகப் படுத்தப்பட்டுள்ளது. 'எவன் இத்தகைய யோகத்தை அடைய பெற்றுள்ளானோ, அவன் முக்தியடைவான் என்று சொல்லப்பட்டதேயன்றி, ஜாதி, மத, இன, வேறுபாடுகள் இங்கு சொல்லப்படவில்லை. இதுவே கீதையின் பரந்த மனப்பான்மைக்குச் சான்று.*

*'ஸர்வத்ரானபிஸ்னேஹ:' எல்லா விஷயங்களின் மீதும் ஆசையில்லாதிருக்க வேண்டும் எனப்பட்டது. சாதாரணமாக*

நமக்குப் பிரியமில்லாத பொருளின் மீது எவருக்கும் அபிமானம் இருப்பதில்லை. அவ்வாறே பிரியமான விஷயங்களின் மீது எவருக்கு அபிமானம் இல்லாதிருக்கிறதோ அவனே ஸ்திதப்பிரக்ஞன். பிரியமோ, பிரியமில்லாததோ. எல்லாம் மாயையில் காட்சிப் பொருளில், இயற்கையில் அடங்கும் எனவே மாயாதீத பரமாத்விடம் நிலைத்திருப்பவனுக்கு எவ்விதத்திலும் ருசிப்பதில்லை. எனவே அவற்றின் மீது அபிமானம் இருப்பதில்லை.

எப்போதேனும் தான் ஆசைப்பட்டாலும் ஞானிக்கு தெய்வீகமாக பிரியமானவையோ, பிரியமல்லாதவையோ கிடைக்கும். அப்போதும் பிரியமானதின் என்பதால் சந்தோஷமோ, பிரியமில்லாதது என்பதால் வெறுப்போ அவன் கொள்வதில்லை. மலையைப் போன்று அசைவற்றிருப்பதே ஸ்தித பிரக்ஞனின் அடையாளம்.

**வினா:**

ஸ்தித பிரக்ஞனின் இதர லட்சணங்கள் இங்கு என்ன சொல்லப்பட்டுள்ளது?

**விடை:**

(1) எல்லா விஷயங்களிலும் அபிமானம் இல்லாதிருத்தல் (2) பிரியமானது, பிரியமற்றது எதுவாயினும், சந்தோஷமோ, வெறுப்போ அற்றிருத்தல். என்ற இரண்டு லட்சணங்கள் இங்கு கூறப்பட்டுள்ளது.

**58. யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோ அங்கானீவ ஸர்வசஹ|**
**இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ்தஸ்ய ப்ரக்ஞா ப்ரதிஷ்டிதா||**
**(58)**

**சொற்பொருள்:**

யதா - எப்போது, அயம் - இவன் (யோகி), கூர்மஹ - ஆமை, அங்கானீவ - அவயவங்களைப் போல, இந்தியார்த்தேப்யஹ - இந்திரிய விஷயங்களின்றும் (சப்த, ஸ்பர்சாதி), இந்த்ரியாணி - இந்திரியங்களை, ஸர்வசஹா -

எல்லா பக்கங்களினின்றும், ஸம்ஹரதே - இழுத்துக் கொள்கிறானோ, (ததா - அப்போது), தஸ்ய - அவனின், பிரக்ஞா - ஞானம், ப்ரதிஷ்டி தா - நிலைபெறுகிறது.

**கருத்து:**

ஆமை எவ்வாறு தன் அவயவங்களை அடக்கிக் கொள்வதைப் போல, யோகி எப்போது தன் இந்திரியங்களை, இந்திரிய விஷயங்களினின்றும், முழுவதுமாக உள்ளிழுக்க வல்லவனுக்கு ஞானம் நிறை ஞானம் நிலை பெறுகிறது. (அவனே ஸ்திதப் பிரக்ஞன்)

**விளக்கம்:**

மோக்ஷம் அடைவதற்கு, இந்திரியக் கட்டுப்பாடு மிகமிக அவசியம் என்பதை இங்கு தெரிவிக்கிறார். 'யதா' என்ற சொல் பயன்படுத்தியதால் மனிதனுக்கு எப்போது இந்திரியக் கட்டுப்பாடு சித்திக்கின்றதோ, அப்போதே புத்தி ஆன்மாவில் நிலையாக நிலைபெறும் என்று சொல்லப்பட்டது. இவ்வுண்மையையே பதஞ்சலி மகரிஷி, "யோகஸ்சித்தவ்ருத்தி நிரோதஹந்ததா த்ருஷ்டுஹ் ஸ்வரூபே அவஸ்தானம்" என்று இரண்டு சூத்திரங்களின் மூலம் தெரிவித்துள்ளார். அதாவது, எப்போது சித்தம் தன் வெளி உலக விஷயங்களை விடுத்து, அந்தர்முகமாகுமோ, அப்போது இவ்வாத்மாவில் நிலைபெறும் என்பது பொருள்.

இத்தத்துவத்தை இங்கு பகவான் ஒரு நல்ல உவமானம் மூலம் போதிக்கிறார். ஆமை ஏதேனும் சிறிய ஓசையோ, அசைவோ ஏற்பட்டாலும் உடனே தன் அவயவங்களை உள்ளுக்கு இழுத்துக் கொள்ளும். அவ்வாறே யோகியானவன், சப்தஸ்பர்சாதி விஷயங்களினின்றும். மனத்தை திருப்பி, பிரத்தியாகாரம் செய்து, அந்தராத்மாவில் அதனை நிலை நிறுத்துவர். 'ஸர்வஸஹ' என்று சொல்வதால் ஏதேனும் ஒரு இந்திரியத்தைக் கட்டுப்படுத்தினால் மட்டும் போதாது என்றும், எல்லாவற்றையும் கட்டுப்படுத்த வேண்டுமென்பதும் தெளிவாக்கப்பட்டுள்ளது. இரவில் கதவுகள் மூடிவைத்து, ஒன்றைமட்டும் திறந்து வைத்தாலும் திருடன் அதன் வழியாக

உள்நுழைந்து திருடக்கூடும். ஜன்னல் கதவுகளனைத்தையும் மூடி வைத்துவிட்டு ஒன்றைத் திறந்துவைத்தாலும் அதன் வழியே காற்றுபுகுந்து எரியும் தீபத்தை அணைத்து விடக்கூடும். எனவே முமுக்ஷுவானவன் மிகவும் எச்சரிக்கையாக எல்லா இந்திரியங்களையும் விஷயங்களின்றும் மாற்ற வேண்டும். ஆத்மாநுபூதிக்கு, ஸ்திரபிரக்ஞத்துவத்திற்கு இத்தகைய இந்திரியக்கட்டுப்பாடு மிகமிக அவசியம் என கீதாச்சார்யன் இச்சுலோகத்தில் போதித்துள்ளார்.

**வினா:**

மனிதன் எப்போது ஞானியாக முடியும்?

**விடை:**

எப்போது தன் இந்திரியங்கள் அனைத்தையும் சப்தாதி விஷயங்களினின்றும் மாற்றுகிறானோ, (மற்றும் சித்தத்தை அந்தர்முகமாக திருப்பி ஆத்மாவில் நிலைநிறுத்துகிறானோ), அப்போது ஸ்திதப் பிரக்ஞன் ஆவான்.

**முன்னுரை:**

இவ்வாறாக ஸ்திதபிரக்ஞனின் இலட்சணங்களைக் கூறி பின் இப்போது ஆத்ம ஞானத்தாலேயே விஷய வாசனைகள் முழுவதுமாக அற்றுப் போகும் என்பதைச் சொல்கிறார்.

**59. விஷயா வினிவர்தந்தே நிராஹாரஸ்ய தேஹினஹ|**
**ரஸவர்ஜம் ரஸோஅப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்ததே|| (59)**

**சொற்பொருள்:**

நிராஹாரஸ்ய - சப்தாதி விஷயங்களை மேற்கொள்ளாத, தேஹிநஹ- ஜீவனுக்கு, ரஸவர்ஜம் – விஷய வாசனைகள் அல்லாது மற்றவை, விஷயாஹா - விஷயங்களனைத்தும், வினிவர்தந்தே - அற்றுப் போய்விடுகின்றன, பரம் - பரமாத்மாவை, த்ருஷ்ட்வா - தரிசித்த பின், ரஸோஅபி - அவ்விஷயவாசனை கூட, அஸ்ய - இவனுக்கு நிவர்ததே - அற்றுப் போய் விடுகிறது.

**கருத்து:**

இந்திரிய விஷயங்களில் ஈடுபடாத ஜீவனுக்கு, விஷயங்கள் அற்றுப் போகிறதேயன்றி அதன் வாசனைகள் போவதில்லை. பரமாத்மாவை தரிசித்தப்பின் அவ்வாசனையும் விஷயங்களுடன் கூட அற்றுப்போய் விடுகிறது.

**விளக்கம்:**

இச்சுலோகம் சாதகர்களுக்கு மிகமுக்கியமானது. ஏனெனில் சாதனைக்குத் தேவையான ஒரு பரம இரகசியம் இதில் சொல்லப்பட்டுள்ளது. அது எதுவென விசாரித்து அறிவோம்:- வாசனாக்ஷயம், மனோநாசம், தத்வஞானம் என்ற மூன்று சாதனைகள் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ளன. இம்மூன்றையும் ஒரே காலத்தில் செய்து வந்தால்தான் சாக்ஷாத்காரம் சித்திக்கும் என்றும் சொல்லப்பட்டுள்ளது. அதில் வாசனாக்ஷயத்தினால் தத்வஞானம், தத்வஞானத்தால் வாசானாக்ஷயம் சித்திக்கும். பின்வரும் சுலோகத்தில் வாசானாக்ஷயத்தினால் தத்வ தரிசனம் சித்திக்கும் என்று சொல்லப்பட இச்சுலோகத்தில் தத்வதர்சனத்தினால் (ஆத்ம ஞானத்தினால்) வாசானாக்ஷயம் சித்திக்கும் என்று சொல்லப்பட்டது. வாசனைகள் அற்றுபோகாவிடில் ஆத்ம தரிசனம் கிடைப்பதில்லை, ஆத்மாவை தரிசிக்காவிட்டால் வாசனைகள் அற்றுப் போகாது. எனவேதான் இங்கு 'பரம் த்ருஷ்ட்வா ரஸோ அபி நிவர்த்ததே' — பரமாத்மாவை தரிசித்தபின்பே வாசனைகள் நிவர்த்தியாகும் - என்று சொல்லப்பட்டது. வாசனாக்ஷயம், தத்துவ ஞானம் (அல்லது ஆத்ம தர்சனம்) இரண்டையும் ஒரே காலத்திலேயே பயிற்சி செய்தல் வேண்டும் என சாஸ்திரங்கள் போதிக்கின்றன.

வாசனைகள் ஒழித்தல் சாதாரணமான வேலை அல்ல. மோக்ஷத்தின் முக்கியத்துவம் அனைத்தும் அதில் அடங்கியுள்ளது. அது சித்தித்துவிட்டால் எல்லாம் கிடைத்தது போலாகும். அநேக பிறப்புகளாக தொடர்ந்து ஊறிய ஆசைகள் மனதில் வேரூன்றி வாசனைகளாக சித்தத்தில் ஊன்றி இருக்கும். இந்திரியங்களுக்கு சப்தாதி விஷயங்கள்

உணவு போன்றவை. அவ்வாகாரங்களை அதாவது விஷயங்களை ஒதுக்கிவிட்டால் மாத்திரம் உள்ளிருக்கும் விஷய வாசனை சாவதில்லை, புற்றை அழித்துவிட்டால் மாத்திரம் பாம்பு சாவதில்லை. விஷய வாசனைகள் முழுமையாக வேரோடு அறுப்பதற்கு ஆத்மானுபவம் கைகூடுதல் வேண்டும். (பரம்த்ருஷ்ட்வா) ஆன்மாவின் சத்திய நிலையை, இவ்வுலகிலகின் பொய்மையையும் நன்றாக அறிந்து கொள்ளுதல் வேண்டும். ஆன்மாவைக் குறித்த விஷயங்களை நன்றாக கேட்டல்வேண்டும். விஷயங்களின் நிலையாமை யையும், ஆன்மாவின் நிலைத்ததன்மையையும், ஆனந்தத்தைப் பற்றியும் நன்றாகத் தெரிந்து கொள்ளவேண்டும். அதன்பிறகு விஷயங்களில் ஆசை, விருப்பு வெறுப்புகளை கிரமமாகக் குறைத்துக் கொண்டு வந்து வாசனைகளற்று அழிந்து போகும். எனவே சாதகன் தான் இந்திரியங்களை மேற்போக்காக மாத்திரமே கட்டுப்படுத்த வல்லவனா, அல்லது ரஸவர்ஜிதம் (அதாவது) வாசனைகளற்றுப் போகச் செய்ய வல்லவனா என்பதை தனக்குத் தானே நன்றாக பரிசீலித்துக் கொள்ள வேண்டும். பகவானின் அருளால், இங்கு சொல்லப்பட்ட (ஆன்ம) தத்துவ தர்சனங்களின் வழிகளை நன்றாகப் பயின்று நடைமுறைக்குக் கொணர்ந்து, வாசனைகள் அற்று ஜன்ம ஈடேற்றம் பெறுதல் வேண்டும். 'நிராஹாரஸ்ய' என்ற சொல்லிற்கு; 'உபவாசம் செய்தவனுக்கு' என்ற சிலர் பொருள் சொல்கின்றனர். ஆயின் இதைவிட மேற்சொன்ன பொருளே பொருத்தமாகயுள்ளது.

**வினா:**

மோக்ஷத்தை அடைவதற்கு விஷயங்களின்றும் மனதை திருப்பினால் மட்டும் போதுமா?

**விடை:**

போதாது, சித்தத்திலுள்ள விஷய வாசனைகள் கூட அற்றுப் போக வேண்டும்.

**வினா:**

அவ்வாசனைகள் அகல்வதற்கான வழி என்ன?

**விடை:**

பரமாத்மாவை தரிசிப்பதே, அதாவது ஆத்மசிந்தனை முதலானவற்றால் காட்சிப் பொருள்களின் பொய்மையையும், ஆன்மாவின் உண்மை நிலையையும் நேரில் அனுபவித்து அறிதலே.

**முன்னுரை:**

ஆன்ம தரிசனத்திற்காக முயற்சி செய்யினும் சிலருக்கு அது ஏன் சித்திப்பதில்லை என்பதற்கான காரணத்தைச் சொல்கிறார்.

**60. யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஸ்சிதஹ|**
**இந்திரியாணி ப்ரமாதீனி ஹரந்தி ப்ரஸபம் மனஹ|| (60)**

**சொற்பொருள்:**

கௌந்தேய - ஏ அர்ஜுனா!, யததஹ அபி - (ஆன்மலோகத்திற்காக) பிரயத்தனம் செய்கின்ற, விபஸ்சிதஹ - விவேகமுள்ள (சாஸ்திர ஞானம் பொருந்திய), புருஷஸ்ய - புருஷனின், மனஹ - மனதினை, ப்ரமாதீனி - கொந்தளிக்கச் செய்கின்ற, இந்திரியாணி - இந்திரியங்கள், ப்ரஸபம் - பலவந்தமாக, ஹரந்தி - இழுத்துச் செல்கின்றன.

**கருத்துரை:**

ஏ அர்ஜுனா! இந்திரியங்கள் மகா சக்தியுடையவை. ஏனெனில் ஆன்ம உலகிற்காக முயற்சி செய்துவரும் ஞானிகளைக் கூட, அவர்களின் மனதையும், அவை பலவந்தமாக (விஷயங்களின்மீது) இழுத்துச் செல்கின்றன.

**விளக்கம்:**

இந்திரியங்கள் எத்தகைய பலம் பொருந்தியவை என்பது இங்கு நிரூபிக்கப் படுகிறது. 'விபஸ்சிதஹ' என்ற சொல்வதால் பெரிய மகா ஞானிகளின் மனதைக் கூட இந்திரியங்கள் அலைக்கழிக்கையில் சாமான்ய மனிதனை எவ்வாறு பாடு படுத்தும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. அவ்வாறே

இந்திரியங்களைக் கட்டுப்படுத்த முயற்சி செய்பவரைக் கூட அவை படுகுழியில் வீழ்த்துகையில், முயற்சி என்பதையே செய்யாதே அஞ்ஞானிகளை எவ்வாறு துன்புறுத்தும் என்பதை ஊகித்தறிந்து கொள்ளலாம். பலவானிந்திரிய க்ராமோ வித்யாம் ஸமபிகர்ஷதி' - இந்திரிய சமூகங்கள் மிகவும் பலம் பொருந்தியவை. அவை பண்டிதர்களைக் கூட ஆட்டுவிக்கும் என்று வியாச பகவான் தெரிவித்துள்ளார், 'ப்ரஸபம்' பலவந்தமாக இழுத்துச் செல்கின்றன என்று சொல்வதால் இந்திரியங்கள் எத்தனை சக்தியுடையவை என்பதை தெரிந்து கொள்ளலாம்.

ஒவ்வொரு ஜீவியினிடத்தும் ஆத்மா, அநாத்மா யுத்தம், தர்ம, அதர்ம யுத்தம் ஓரளவு நடந்து கொண்டேயிருக்கும். சாதகன் ஒரு பக்கம் தெய்வ சம்பந்தமான விஷயங்களில் ஈடுபட்டிருக்க, மற்றொரு பக்கம் மாயை, அவித்தை இவை தன் சைன்யமான இந்திரியங்களையும், விஷயங்களையும், வாசனைகளையும் அணிவகுத்துக் கொண்டு நம்மைத் தாக்கும். அந்த யுத்தத்தில் நடக்கும் ஒரு நிகழ்ச்சியே இச்சுலோகத்தில் சித்திரிக்கப்பட்டது. முமுக்ஷுவுக்கு தெய்வத்தின் அருள் மிகுதியாக இருந்தால் தான் இந்த யுத்தத்தில் வெல்ல இயலும். இங்கு வித்வான்களின் மனதை இந்திரியங்கள் பலவந்தமாக இழுத்துச் செல்லும் என்றதால் எவரும் அதைரியப்பட வேண்டிய அவசியமில்லை. தன் சாதனைகளை, இன்றும் தீவிரமாக செய்து வந்து எதிரியை எதிர்க்கவேண்டும். அஜாக்கிரதையாக இருந்துவிடக்கூடாது. இதனையே அடுத்துவரும் சுலோகத்தில் பகவான் எடுத்துரைக்கிறார்.

'விபஸ்சிதஹ' - பண்டிதர்களைக்கூட இந்திரியங்கள் ஏமாற்றும் என்றதால் வெறும் சாஸ்திர ஞானம் மட்டும் போதாது, அனுபவ ஞானமும் வேண்டும் என்பது தெரிகிறது.

இதுவரையின் எதிரியின் பலம் எத்தகையது என்று சொன்னதால் இனி முமுக்ஷுக்கள். தெய்வத்தின் அருளை இரண்டு மடங்கு பெற்றுக்கொண்டு, இரட்டிப்பு பலத்துடன்

இந்திரியங்களை எதிர்த்து ஆத்மா, அநாத்மா போரில் வெற்றி காண வேண்டும்

**வினா:**

இந்திரியங்களின் சக்தி எத்தகையது?

**விடை:**

மோக்ஷ மார்க்கத்தில் முயற்சி செய்து கொண்டிருக்கும் பண்டிதர்களின் மனதைக் கூட பலவந்தமாக இழுத்து விஷயங்களின் மீது தள்ளுகிறது.

**முன்னுரை:**

எனவே முமுக்ஷு என்ன செய்யவேண்டும் என்பதைக் கூறுகிறார்.

**61. தானி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸித மத்பரஹ!
வசே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரக்ஞா ப்ரதிஷ்டிதா||(61)**

**சொற்பொருள்:**

தானி - அவ்விந்திரியங்கள், ஸர்வாணி - எல்லாவற்றையும், ஸம்யம்ய - நன்றாக வசப்படுத்திக் கொண்டு, யுக்தஹ - சமாதி ஸ்திதி (மனவுறுதி) யுடையவன், மத்பரஹ - என்மீது விருப்பம் உடைய சித்தத்தைக் கொண்டவனாய், ஆஸீத - இருக்கவேண்டும், ஹி - ஏனெனில், யஸ்ய - எவன் ஒருவனின், இந்திரியாணி - இந்திரியங்கள் - வசே - வசப்பட்டு (வர்தந்தே - இருக்கின்றனவோ), தஸ்ய - அவனின், ப்ரக்ஞா - ஞானம், ப்ரதிஷ்டிதா - நிலையானது. (பவதி - ஆகிறது).

**கருத்துரை:**

(பலம் பொருந்திய) அத்தகைய இந்திரியங்களனைத்தையும் நன்றாக வசப்படுத்திக் கொண்டு சாதகன் மனவுறுதியுடைவனாய் என் மீதே (ஆன்மாவில்) நிலைபெற்ற மனத்துடன் இருக்கவேண்டும். ஏனெனில், எவனின் இந்திரியங்கள் கட்டுப்பாட்டில் உள்ளனவோ அவனது ஞானமே நிலைத்ததாக இருக்கும்.

**விளக்கம்:**

'ஸர்வாணி' என்றதால், ஏதேனும் ஒரேயொரு இந்திரியம் கட்டுப்பாட்டில் இல்லாதிருந்தாலும், அது ஆபத்துக்கு காரணமாகும் எனவும், அதனால் எல்லா இந்திரியங்களையும் நன்றாக வசப்படுத்திக் கொள்ளவேண்டும் என்றும் சொல்லப்பட்டது. பானையில் ஒரு சிறிய ஓட்டை இருந்தாலும் நீர் நிலைக்காது அல்லவா! ஏதேனும் ஒரு ஜன்னல் திறந்திருந்தாலும் தீபம் அணைந்துவிடுமல்லவா! 'ததஸ்ய ஹரதி ப்ரக்ஞாம் வாயுர்நாவ மிவாம்பஸி' (2-67) என்று பின்வரும் சுலோகத்தில் இதனை பகவானே தெளிவு படுத்துகிறார்.

இச்சுலோகத்தில் இரண்டு சாதனைகள் சொல்லப்படு கின்றன. (1) இந்திரியங்களை விஷயங்களின் மீது போகவொட்டாது கட்டுப்படுத்துதல் (2) மனதை பகவானின் மீது (ஆத்மாவில்) நிலை நிறுத்தல். அதாவது, காட்சிப் பொருள்களைத் தவிர்த்தல், திரிக்ஸ்வரூபமான இறைவனைப் பின்பற்றுதல், இரண்டும் தேவையானவையே. இதில் முதலாவதான காட்சிப்பொருளை மட்டும் தவிர்த்துவிட்டு ஏதும் செய்யாது இருந்தால், ஏதும் பலன் இல்லை. ஏனெனில் அத்தகைய காட்சிப் பொருள்களைத் தவிர்த்த நிலை நித்திரையில் (சுஷுப்தி) கூட மனிதனுக்கு ஏற்படுகிறதல்லவா? எனவே அதனுடன் ஆன்மாவில் நிலைத்தல், ஆன்மதியானம் இவைகூட இருத்தல்வேண்டும். கடன்தீர வேண்டும். நாமே சொந்தமாக சம்பாதித்து சிறிது சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டும். அப்போதே ஜீவனுக்கு அமைதி ஏற்படும். அவ்வாறே விஷய விரக்தியுடன் ஆன்ம சிந்தனைகூடத் தவறாது இருத்தல் வேண்டும் என இச்சுலோகம் போதிக்கிறது. வாசானாக்ஷயம், தத்துவ ஞானம் இரண்டும் அவசியமே என்பதை எப்போதும் சாதகன் நினைவில் கொள்ளவேண்டும். ஒருவேளை, இரண்டாவதான ஆத்மதியானம் மட்டுமே செய்துவந்தால், வசப்படாத இந்திரியங்கள் சித்தத்தை வெளிஉலகில் திருப்பி அலைக்கழித்து விடும். எனவே இந்திரியக் கட்டுப்பாடு, ஆன்ம சிந்தனை இரண்டும் அவசியமே என ஸ்ரீ கிருஷ்ணர் தெரிவிக்கிறார்.

"யுக்தஹ" என்றால் மனவுறுதியடையவன். காட்சிப் பொருள்களால்அன்றி ஆன்மாவுடன் சேர்ந்து நிலைத்திருப்பவன். அதாவது யோக நிஷ்டன் என்பது பொருள்.

'மத்பரஹ' - (என்மீது நிலைத்த மனத்தை உடையவன்) - ஸ்ரீ கிருஷ்ணர் சாக்ஷாத் பரமாத்வே ஆகையால் 'என்னிடம்' என்று சொல்கிறார். 'ஆன்மாவில்' என நாம் அதனை எடுத்துக்கொள்ளவேண்டும். தெய்வ நினைப்புடையவன், சகுணோபாசனை செய்பவர் ஸ்ரீ கிருஷ்ணரின் திவ்ய மங்கள மூர்த்தியை மனதில் சங்கல்பம் செய்து கொள்வர். முறையாக ஸ்ரீ கிருஷ்ணர் தன் ஆன்மாவிலேயே இருக்கிறார் என்பதை அறிந்து கொள்வர். அதன்பின், தெய்வத்தன்மையினின்றும், தெய்வத்தன்மையில்லாமைக்கு, சகுணத்தினின்றும் நிர்குணத்திற்கு மாற்றமடைய இயலும். கீதை பக்தி மார்க்கத்தைப் பின்பற்றுவோர்க்கு, ஞானமார்க்கத்தை பின்பற்றுவோர்க்கு இன்னும் அனைவருக்கும் பயன்படக் கூடியது என்பதற்கு இத்தகைய வாக்கியங்களே உதாரணமானது. (ஆத்மபரஹ' என்று சொல்லாமல் 'மத்பரஹ' என்று சொல்லப்பட்டுள்ளது)

இச்சுலோகத்தின் முதல் பாதத்தில் சொல்லப்பட்ட சாதனையையும், இரண்டாம் பாதம் அச்சாதனையால் ஏற்படும் பலனையும் சொல்கிறது. முதல்பாதம் இந்திரியக் கட்டுப்பாட்டையும், மனதை ஆன்மாவில் நிலை நிறுத்துவதையும், இரண்டாம் பாதம், அவ்வாறு செய்தவர்க்கே ஆத்ம ஞானம், ஆத்மஞான அனுமதி நிலைத்து நிற்கும் என்று போதிக்கிறது. இந்திரியக் கட்டுப்பாடு இல்லையெனின் மனம் ஆன்மாவில் நிலைபெறாது. ஒருவேளை அவ்வாறு நிலைத்தாலும் சிறிது காலமே நிற்கும். எத்துணையோ துன்பப்பட்டு, ஆத்ம ஞானம், ஆன்மநிலையை அடைந்து, இந்திரியங்களை அதன் விருப்பப்படி வெளிஉலகில் சஞ்சரிக்க விட்டால், கஷ்டப்பட்டு சம்பாதித்த சக்தி விரயமாகும், ஒருவன் மிக்க கஷ்டப்பட்டு பயிருக்கு தேவையான நீரை பாய்ச்சி கொண்டிருக்க நிலத்தில் ஆங்காங்கு

எலிவளைகள் இருந்தால் நீர் நிற்குமா? அவ்வாறே ஆன்மஜோதி (ஞானம்) அணையாமல் காக்கவேண்டுமாயின் இந்திரியங்களை ஜன்னல்கள், ஓட்டைகள் முதலியவற்றை மூடிவைத்து (கட்டுப்படுத்த வேண்டும்) காப்பாற்ற வேண்டுமென பகவான் இங்கு ஆணையிடுகிறார். அவ்வாறு கட்டுப்படுத்தியவனுக்கே, ப்ரக்ஞை, புத்தி (ஆன்மாவில்) நிலையாக நிற்குமேயன்றி, பிறருக்கு நிற்காது எனத் தெளிவாகக் கூறுகிறார். எனவே மோக்ஷம் அடைய விரும்புவோர், ஆன்மசாக்ஷாத்காரத்திற்கு இந்திரியக் கட்டுப்பாடு எத்தகைய முதன்மையான நிலையை வகிக்கிறதோ, அது முமுக்ஷுக்களுக்கு எவ்வளவு தேவையோ அதனை யோசித்துப் பாருங்கள்!

**வினா:**

மோக்ஷமடைவதற்கான சாதனைகள் எவை?

**விடை:**

(1) இந்திரியக் கட்டுப்பாடு (2) மனதை ஆன்மாவில் நிலைநிறுத்துதல்.

**வினா:**

எவரின் ஞானம் நிலையாக நிற்கும்?

**விடை:**

எல்லா இந்திரியங்களையும் கட்டுப்பாட்டில் வைத்திருப்பவனது ஞானம் நிலையாக நிற்கும்.

**முன்னுரை:**

விஷய சிந்தனைகளால் ஏற்படும் கோரவிபத்தினை இரண்டு சுலோகங்களில் சொல்கிறார்.

**62. த்யாயதோ விஷயான் பும்ஸஹ ஸங்கஸ்தேஷூபஜாயதே|**
**ஸங்காத் ஸஞ்ஜாயதே காமஹ காமாத் க்ரோதோ அபிஜாயதே||**
**(62)**

**63. க்ரோதாத் பவதி ஸம்மோஹஹ் ஸம்மோஹாத் ஸ்ம்ருதி விப்ரமஹ!**
**ஸ்ம்ருதி ப்ரம்சாத் புத்திநாசோ புத்திநாசாத் ப்ரணச்யதி!! (63)**

**சொற்பொருள்:**

'விஷயான்' சப்த ஸ்பர்சாதி விஷயங்களை, த்யாயதஹ - சிந்தித்திருக்கும், பும்ஸஹ - மனிதனுக்கு, தேஷு - அவ்விஷயங்களில், ஸங்கஹ - பற்றுதல், உபஜாயதே - ஏற்படுகின்றது. ஸங்காத் - பற்றுதலினால், காமஹ - ஆசை, ஸஞ்ஜாயதே - உண்டாகிறது. காமாத் - (அத்தகைய) பற்றினால், க்ரோதஹ - கோபம், அபிஜாயதே - உண்டாகிறது, பவதி - உண்டாகிறது, ஸம்மோஹாத் - விவேகமற்ற தன்மயினின்றும், (க்ரோதாத் - கோபத்திலிருந்து, ஸம்மோஹஹ - மனக் குழுப்பம்) ஸ்ம்ருதி விப்ரமஹ - நினைவின்மை, (பவதி - உண்டாகிறது), ஸ்ம்ருதிப்ரம்சாத் - நினைவின்மையால், புத்திநாஸஹ - புத்தி நாசம் (பவதி - உண்டாகிறது) புத்திநாசாத் - புத்திநாசத்தினால், ப்ரணஸ்யதி அழிந்து போகிறார்கள் (முழுமையாக அழிந்து போகிறார்கள்)

**கருத்துரை:**

மனிதன் சப்தாதி விஷயங்களை நினைப்பதால் அதன்மீது பற்று உண்டாகிறது. பற்றினால் அதன்மீது ஆசையுண்டா கிறது. ஆசையால் கோபம், கோபத்தால் விவேகமின்மை, விவேகமின்மையால் மறதி, மறதியால் புத்திநாசம், இவை வரிசையாக உண்டாகும். புத்திநாசத்தினால் மனிதன் கடைசியாக முழுவதும் அழிந்து போகிறான்.

**விளக்கம்:**

(காட்சி) விஷயங்களின் மீதான சிந்தனை எத்தகைய விளைவிற்கு இடமளிக்கிறது என்பதை இவ்விரண்டு சுலோகங்களும் விரிவாகச் சொல்கின்றன. எதிரி, நண்பனாக நடித்து மெல்ல, உள்ளே நுழையும், முதலில் சிறிதளவே இடம் செய்து கொண்டு, சிறிது நாட்களில் சிறிது சிறிதாக வாமன மூர்த்தியைப் போன்று விரிவடைந்து கடைசியில் தனக்கு இடம் அளித்தவரை அழித்து விடும்.

"Give me room to sit down and I can make room to lie down" 'எனக்கு அமர இடம் கொடுத்தால் போதும், படுப்பதற்கு நானே இடம் செய்து கொள்கிறேன்' என்று மனம் சொல்லுமாம் (ஆங்கிலப் பழமொழி), விஷயங்களைப் பற்றிய எண்ணம் சிறிதளவே மனத்தில் நுழைந்தாலும் அதுவே வளர்ந்து மனிதனை அதோகதிக்கு தள்ளிவிடும். கிழக்கிந்திய கம்பெனியர்கள் (ஆங்கிலேயர்கள்) முதன்முதலில் பாரத தேசத்தில் வியாபாரத்திற்காக நுழைந்து சிறிது இடத்தை வாடகைக்கு எடுத்துக் கொண்டு சிறிது நாட்களில் பலமடைந்து தமக்கு நிலம் அளித்த பாரதீயர்களையே அடக்கி ஆண்டனர். அவ்வாறே விஷயங்களின் மீதான எண்ணமும் செய்யும்.

முதலில் மனிதனுக்கு எத்தகைய எண்ணமும் இருக்காது. ஏதோவொரு காட்சிப் பொருள் பற்றி சிந்திக்க ஆரம்பித்தவுடன் மனதிற்கு அதன்மீது ஏதோ ஒரு வித பற்று ஏற்பட்டுவிடும் (Attachment). அதுவே முதிர்ந்து அதனை அனுபவிக்க வேண்டும் என்ற ஆசை ஏற்படும். அதனையே காமம் என்பர். அது மிகவும் கெட்டது. 'மஹாபாபம்' (மிகுந்த பாவி) என்று பகவான் அதனை வர்ணிக்கிறார். வீட்டில் பாம்போ, திருடனோ வந்தால் எத்தகைய இன்னல்கள் ஏற்படுமோ அத்தகைய இன்னல்கள் காமம் மனதில் நுழைந்தால் ஏற்படும். எனவே வீட்டிலிருந்து பாம்பை, திருடனை விரட்டுவதைப் போல காமம் எனும் பிசாசைக்கூட இதயத்தினின்று அது நுழைந்தவுடனேயே விரட்டியடித்து விடவேண்டும். (நுழையாமல் பார்த்துக் கொள்வது இன்னும் மேலானது) சிறிதாக முளைவிடும் போதே அதனைக் கிள்ளி எறிந்து விடவேண்டும். அவ்வாறு செய்யாவிடில் அது தன் நண்பர்களும் சுற்றமும் ஆன (க்ரோதம் முதலானவற்றை) வர்களையும் கூட்டிவந்து. தன்னை பலப்படுத்திக் கொண்டு ஜீவனை அதோகதிக்குத் தள்ளிவிடும். இந்நிலை கீதாச்சார்யனால் வெகு அழகாக சித்திரிக்கப் பட்டிருக்கிறது. இது சாதகர்களுக்கு மிக முக்கியமானது. ஏனெனில் மனிதனுக்கு எதிரிகள் யார். அவர்கள் எங்ஙனம் உள் நுழைவர்,

தம்மை பலப்படுத்திக் கொள்வர், ஜீவன்களை எங்ஙனம் அழிப்பர், அவர்களை வெற்றிகொள்ளுதல் எங்ஙனம், இவையனைத்தும் விவரமாக இங்கு சொல்லப்பட்டது.

காமம் இதயத்தில் நுழைந்தவுடனேயே குரோதமும் உள்நுழைந்து பற்றி இழுக்கும். காமம் குரோதம் இருவரும் ஒருவருக்கொருவர் நெருங்கிய நண்பர்கள். ஆசை ஏற்பட்டு, அதனை அனுபவிக்க ஆரம்பித்தவுடனேயே குரோதம் தலையெடுத்துவிடும். குரோதம் கள்ளைப்போன்றது. அது வந்தால் மனிதன் தன்னையே மறந்துவிடுவான். கண்கள் மூடிக்கொள்ளும். சித்தம் குழப்பமடையும். நன்மை, தீமை என்பது தெரியாது. ஆவேசத்துடன் மனதிற்கு தோன்றிய படியெல்லாம் நடக்க ஆரம்பித்துவிடுவான். எனவேதான் குரோதத்தினால் ஸம்மோஹம் (மெய்மறத்தல்) ஏற்படும் என்று சொல்லப்பட்டது. அத்தகைய ஸம்மோஹத்தால் ஞாபக சக்தி நசித்துவிடும். அதனால் புத்தி கெட்டுப்போகும். புத்திகெட்டால் மனிதன் அழிவடைகிறான். எனவே விவேகமுடையவன் விஷயங்களின் மீது மனதை செலுத்தாது. மிக எச்சரிக்கையாக இருத்தல் வேண்டும் என பகவான் இங்கு எச்சரிக்கிறார்.

"த்யாயதோ விஷயான்" - என்று இங்கு தியானமென்பது ஒரு புதிய விஷயமல்ல. அது இவ்வுலக மக்கள் அனைவர்க்கும் மிகமிகத் தேவை என்கிறார். காட்சிப் பொருளின் மேல் இவ்வுலக மக்கள் தியானம் செய்கிறார்கள் பகவானைத் தியானம் செய்வதில்லை. இது ஒன்றே வேறுபாடு. எனவே இப்போது தெய்வ தியானத்தைக் கற்கும்போது, மன ஒருமைப்பாட்டுடன் இதற்கு முன்பாக விஷயபோகங்களின் மீதிருந்த பற்றை தெய்வத்தின் மீது திருப்பினால் மட்டும் போதுமானது. புதிதாகச் செய்ய வேண்டியது ஒன்றுமில்லை. அதன் மோக்ஷம் உள்ளங்கை நெல்லிக் கனியாகும். பிரஹ்லாதன் இத்தகைய வரத்தையே நாராயணனிடம் வேண்டினான்.

**["யா ப்ரீதிரவிவேகானாம் விஷயேஷ்வனபாயினீ**
**த்வாமனுஸ்மரதஸ்ஸா மே ஹ்ருதயான்மாபஸ்ரவது"**

**(பாகவதம்)**

விவேகமற்றவர்களுக்கு விஷயங்களின் மீது எத்தகைய தீவிர பற்று இருக்குமோ, அத்தகைய பற்று உன்னை நினைக்கும் என் இதயத்தில் எப்போதும் மாறாது இருக்கச் செய்க"! எனவே விஷய தியானத்தை விட்டு தெய்வ தியானத்தை மேற்கொள்ளுதல் வேண்டும். மோஹம் எனாது சம்மோஹம் (சேர்க்கை) என்று சொல்வதால், பிரமை எனாது விப்ரமம் என்று சொல்வதால், நஸ்யதி எனாது பிரணஸ்யதி என்பதால் அவ்வப்பொருள்களின் கிரியைகள் மிகுதியாக ஒளிரும்.

**வினா:**

ஜீவனின் அழிவிற்கு காரணம் எது?

**விடை:**

(காட்சி)ப் பொருள்களின் மேல் சிந்தனை செய்வது.

**வினா:**

அது எவ்வாறு ஜீவனை அழிக்கும்?

**விடை:**

விஷய சிந்தனையால் பற்று, அதனால் காமம், காமத்தால் குரோதம், குரோதத்தால் விவேகமின்மை, அதனால் நினைவின்மை (மறதி) அதனால் புத்திநாசம், புத்திநாசத்தால் அதோகதியை அடைகிறார்கள்.

**முன்னுரை:**

இந்திரியங்களை வசப்படுத்திய ஸ்திதபிரக்ஞன் உலகில் எவ்வாறு பிரகாசிப்பான், எத்தகைய பலனை அடைகிறான் என்பதைக் கூறுகிறார்.

**64. ராகத்வேஷவியுக்தைஸ்து விஷயானிந்த்ரியைஸ்சரன்।**
**ஆத்மவச்யைர் விதேயாத்மா ப்ரஸாதமதி கச்சதி॥ (64)**

**சொற்பொருள்:**

து - ஆனால், விதேயாத்மா - அடங்கிய மனதையுடையவன், ராகத்வேஷ வியுக்தைஹி - ராகதுவேஷங்களிலிருந்து விடுபட்ட, ஆத்மவச்யைஹி - தன் வசப்பட்டுள்ள இந்திரியைஹி - இந்திரியங்களைக் கொண்டு, விஷயான் - (சரீரத்தை காப்பாற்றத் தேவையான உணவு முதலான) விஷயங்களை, சரன் - அனுபவித்துக் கொண்டிருப்பவனாயினும், ப்ரஸாதம் - மனத்தெளிவை (மனச்சாந்தியை) அதிகச்சதி - அடைகிறான்.

**கருத்துரை:**

ஆயின் அடங்கிய மனத்தையுடையவன், விருப்பு வெறுப்பற்ற, தன் வசப்பட்டுள்ள இந்திரியங்களைக் கொண்டு, (தேகத்தைக் காப்பாற்ற உதவும்) உணவு, நீர் முதலான விஷயங்களை அனுபவிப்பவன் ஆயினும் மனத்தெளிவை (மனச்சாந்தியை) அடைகிறான்.

**விளக்கம்:**

மனத்தெளிவையும் அதன் பலனாய் மனச்சாந்தியையும் எவர் அடைகின்றனர் என்பதைக் குறித்து இங்கு நிரூபிக்கப்படுகிறது. விருப்பு வெறுப்பற்றவர்கள், இந்திரியங்களை வசப்படுத்திக் கொண்டுள்ளவர்கள் மனத்தெளிவையும், மனச் சாந்தியையும் தவறாது அடைவார்கள் என்கிறார். அத்தகையோர் தேகத்தைக் காப்பாற்றுவதற்காக அன்னம் பானம் முதலான விஷயங்களை அனுபவித்துக் கொண்டிருப்பினும், அவனின் மனத் தெளிவிற்கு, மனச் சாந்திக்கு எவ்விதமான குறையும் நேராது. விஷப்பற்களை எடுத்துவிட்ட பாம்பினால் எங்ஙனம் தீங்கு நேர்வதில்லையோ விருப்பு வெறுப்பு நீங்கிய இந்திரியங்கள், மனம் இவற்றால் உலகில் சஞ்சரித்துக் கொண்டிருப்பினும் அதனால் எத்தகைய தீங்கும் நேராது. சொல்லியவாறு கேட்கும் குதிரைகள் பூட்டிய ரதம் அது சேரவேண்டிய இடத்திற்கு தடங்கலின்றி போவதைப் போல, அக்குதிரைகளால் ரதத்தை உடையவனுக்கு மனச்சாந்தியிருப்பதைப் போல, வசப்படுத்திய

இந்திரியங்களையுடைய மனிதனுக்கு சரீர யாத்திரை விவகாரங்களில் மனச் சாந்தி எப்போதும் குறைவதில்லை. "ஆத்மவச்யைஹி", விதேயாத்மா" - என்ற இரண்டு பதங்களைப் பயன்படுத்தியமையால், இந்திரியங்கள், மனம் இவை அவனுக்கு அடிமையாக இருக்க வேண்டுமேயன்றி அவன் அவற்றிற்கு அடிமையாகக் கூடாது. என்பது தெளிவாகிறது, இவ்வுலகில் பலரும் தம் இந்திரியமனங்களுக்கு தாசானுதாசனாகி அவற்றிற்கு அடிமையாக நடமாடுகின்றனர். அத்தகையோருக்கு மனச்சாந்தி எப்போதும் கிடைப்பதில்லை. எத்தகைய செல்வந்தனாயினும், பலவானாயினும். கல்விமானாயினும், இந்திரியங்களைத் தனக்கு அடிமையாக்கா விட்டால் சாந்தியடையக் கூடுவதில்லை. எனவேதான் பகவான் இங்கு சாந்திக்கு, மனத் தெளிவிற்கு நல்ல வழியை போதித்து, இந்திரியங்கள் முதலானவற்றை வசப்படுத்தியவனே அவற்றை அனுபவிக்க வல்லவர் என்ற மேற்சொன்ன இரண்டு பதங்களால் சொல்கிறார். எனவே தன் இந்திரியங்கள் முதலானவற்றிற்கு அடிமையாகாமல், அவை ஆட்டியபடியெல்லாம் ஆடாமல், சுயேச்சையின்றி நடப்பதை விடுத்து, விவேகம் வைராக்யம் இவற்றால் பகவத் பக்தியால் அவற்றை தம் வசமாக்கிக் கொண்டு அமைதியை. ஆனந்தத்தை அடைதல் வேண்டும்.

**வினா:**

சாந்தியையும், மனத்தெளிவையும் எவன் அடைவான்?

**விடை:**

(1) விருப்பு வெறுப்பற்றவன் (2) இந்திரியம் மனங்களைக் கட்டுப்படுத்தியவன் அடைவான்.

**65. ப்ரஸாதே ஸர்வதுஹ்கானாம் ஹானிரஸ்யோபஜாயதே|**
**ப்ரஸன்னசேதஸோ ஹ்யாசு புத்திஹ் பர்யவதிஷ்டதே|| (65)**

**சொற்பொருள்:**

ப்ரசாதே - மன அமைதி (சித்த சாந்தி) கிடைக்கவும், அஸ்ய - இவனுக்கு ஸர்வதுஹ்கானாம் - எல்லா

துக்கங்களுக்கும், ஹானி - அழிவு, உபஜாயதே - உண்டாகிறது, ப்ரஸன்ன சேதஸஹ - மனத் தெளிவுடையவனுக்கு, புத்திஹி - புத்தி, ஆசு - விரைவில், பர்யவதிஷ்டதேஹி - (பரமாத்மாவிடம்) நிலையாக நிலைக்கிறான்.

**கருத்துரை:**

மனத்தெளிவு பெற்றதனால் மனிதனின் எல்லாவிதமான துக்கங்களும் ஒழிகின்றது. மன அமைதியுடையவனுக்கு புத்தி விரைவில் (பரமாத்மாவிடம்) நிலைபெறுகிறது.

**விளக்கம்:**

ஒவ்வொரு ஜீவனும் துக்கத்தின்று விடுதலையையும், ஆனந்தத்தையும் விரும்புகிறான். அவை எவ்வாறு கிடைக்கும்? அதற்கான பதில் இச் சுலோகத்தில் பகவான் தெரிவிக்கிறார். மனத்தின் தெளிவினாலேயே ஜீவனுக்கு இவை இரண்டும் கிடைக்கிறது. சித்தம் எப்போது போகவாசனைகள் அற்று, தெளிவை அடைகின்றதோ அப்போது வாழ்க்கையின் இலக்கை அடைந்தது போலாகும். ஏனெனில், தெளிவான கண்ணாடியில் பொருள் நன்றாகப் பிரதி பலிப்பதைப் போல, சித்தத்தின் அந்தக்கரணத்தில், அமைதியான சித்தத்தில் உறையும் ஆத்மாவானது ஒளி மயமாகப் பிரகாசிக்கும்.

**"மோஹோ ஹி சேதோ விமலம் ஸம்யக் ஞான விபோதிதம்"**
**(வசிஷ்ட கீதை)**

உத்தம ஞான விசாரணையால் ஏற்பட்ட தெளிவான சித்தமே மோக்ஷம் என்று வசிஷ்ட மகாமுனி கூறியுள்ளார். பதஞ்சலி மகரிஷியும் அத்தகைய பொருளிலேயே சொல்கின்றார்.

**[ஸத்வபுருஷ யோஹு சுத்திஸாம்யே கைவல்யம்**
**(ப. யோக தந்திரம் III-55]**

சித்தம் ஆத்மாவுடன் சமானமாக நிர்மலத்துவத்தை எப்போது அடைகிறதோ அந்த நிலையே கைவல்யம்) (மோக்ஷம்)

எனவே வீடுபேற்றை விரும்புவோரனைவரும் தம் சித்தத்தில் விஷய வாசனைகள் முதலான புற அழுக்குகளை நீக்கி, அதனைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு செய்வதால் இரண்டு பெரிய நன்மைகள் கிடைக்குமென பகவான் சொல்கிறார். அவை எவையெனின்,

(1) எல்லா துக்கங்களும் அழியும்.

(2) புத்தி விரைவில் ஆன்மாவில் நிலைபெறும்.

முதலாவது துக்கஅழிவு, இரண்டாவது ஆனந்தமடைதல். இவை இரண்டும் மனத் தெளிவால் கிடைக்கின்றது. 'ஸர்வதுக்கானாம்' என்றதால் ஏதோ ஒன்றிரண்டு துன்பங்கள் அழியும் எனாது, ஆன்மீக, பௌதிக, தெய்வீக துக்கங்கள் எல்லாமே அழிந்து போகும் எனத் தெளிவாக்கப்பட்டுள்ளது. ஆஹா! எத்தகைய அமோகமான பலன்! துக்கத்தில் வீழ்ந்து ஒளியிழந்து, தாபத்திரயத்தினால் எரிக்கப்பட்டு, ஒரு கணநேரமாவது மனச் சாந்தி பெறமுடியாது தவிக்கும் ஜனங்களுக்கு இதைவிட மேலான பலன் என்ன வேண்டும்? எனவே அத்தகைய பலனுக்காக சித்த சுத்தியை சம்பாதிக்க வேண்டுமென பகவான் கருணையுடன் போதிக்கின்றார். அவையில்லாவிடின் எத்துணை பிறப்புகள் பிறந்தாலும் இந்த சம்சார யாத்திரை தொடரும்.

இனி சித்தத்தின் தெளிவால் கிடைக்கும் இரண்டாவது பலன் ஆனந்தம் பெறுதல். 'புத்தி, பர்யவதிஷ்டதி" - சித்தம் எப்போது தெளிவடைகின்றதோ அப்போது ஆத்மாவில் நிலைபெறும் எனப்பட்டது. ஆத்மாவென்றால் சச்சிதானந்த சாகரம். பிரம்மானந்த கடல். அதில் சித்தம் எப்போது நிலைபெறுகிறதோ, அப்போது ஜீவனுக்கு ஆனந்தத்திற்குக் குறைவேது? சதுர்முக ஆனந்தம் கூட ஆத்மானந்தத்தின் சிறிய விந்துவே ஆகும். அத்தகைய ஆனந்தத்தில் புத்தி இணைகையில், நிலை பெறுகையில் வாழ்க்கைப் பேற்றினை அடைந்தது போலவே ஆகும். எனவே துக்க அழிவு, ஆனந்த பிராப்திக்கு இம் மகோன்னதமான இரு பலன்களையும் கொடுக்கக் கூடிய மனத் தெளிவிற்காக முயற்சி செய்து ஜீவன்

சாதித்தல் வேண்டுமென்பது இச்சுலோகத்தினால் தெளிவாக்கப்பட்ட கருத்து.

**வினா:**

எல்லா விதமாக துக்கங்களும் அழிவதற்கான உபாயம் எது?

**விடை:**

மனதைத் தெளிவாக வைத்திருத்தல்.

**வினா:**

எவனின் புத்தி ஆன்மாவில் நிலைபெறும் ?

**விடை:**

தெளிவான சித்தம் உடையவனுக்கு.

**வினா:**

மனத் தெளிவினால் கிடைக்கும் பலன்கள் யாவை?

**விடை:**

(1) எல்லா துக்கங்களும் அழிதல் (2) புத்தி விரைவில் ஆத்மாவில் நிலைபெறுதல் (அதன்வழி ஆனந்த பிராப்தியடைதல்)

**முன்னுரை:**

இனி இந்திரியங்களை வசப்படுத்த இயலாதவர்களின் நிலைமை எவ்வாறிருக்கும் என்பதை பின்வரும் இரண்டு சுலோகங்களில் கூறுகிறார்.

**66. நாஸ்தி புத்திரயுக்தஸ்ய ந சாயுக்தஸ்ய பாவனா।**
**ந சாபாவயதஷ் சாந்திரசாந்தஸ்ய குதஷ் ஸுகம்॥ (66)**

**சொற்பொருள்:**

அயுக்தஸ்ய - இந்திரியங்களை கட்டுப்படுத்தாதவனுக்கு, (மனக்கட்டுப்பாடு அற்றவனுக்கு) புத்தி - விவேக புத்தி நாஸ்தி -

இல்லை, அயுக்தஸ்ய - இந்திரியக் கட்டுப்பாடு இல்லாதவனுக்கு, பாவநா ச - ஆன்ம சிந்தனை, ந - இருப்பதில்லை, அபாவயத ஹ - ஆன்மசிந்தனையற்றவனுக்கு, சாந்திஹச - அமைதியும் ந - கிடைப்பதில்லை, அசான்தஸ்ய - சாந்தி இல்லாதவனுக்கு, சுகம் - சுகம், குதஹ - எங்கே?

**கருத்துரை:**

இந்திரியங்கள் கட்டுப்பாடு, மனக் கட்டுப்பாடு இல்லாதவனுக்கு விவேக புத்தி இருப்பதில்லை. ஆத்மசிந்தனை இருப்பதில்லை, ஆத்ம சிந்தனை இல்லாதவனுக்கு அமைதியில்லை. அமைதியில்லாதவனுக்கு சுகம் எங்கே?

**விளக்கம்:**

ஒவ்வொரு ஜீவனும் பூர்ணமான சுகத்தை அனுபவிக்க வேண்டுமெனக் கருதுகிறான். அது எங்கிருக்கிறது? காட்சிப் பொருள்களில், விஷய போகங்களில் கிடைக்கும் சுகம் உண்மையான சுகமல்ல. அது வெறும் பிரதி பிம்பம், கண நேரமே நிலைப்பது. துக்கம் தொடரும் சுகம். நிலையான முழுமையான நிரதிசய சுகம் கிடைக்க வேண்டுமானால் சித்தத்தில் அமைதி ஏற்படுதல் வேண்டும். மனதில் சாந்தியை பெற்று சுகத்தினை வேண்டிப் பெறுதல் வேண்டும் அப்படியாயின் அத்தகைய சாந்தியை பெறுதல் எங்ஙனம்? அழியக்கூடிய உலகப் பொருள்களின் மேல் ஆசை வைத்து அதனையே சிந்தித்திருந்தால் சாந்தி கிடைப்பதில்லை, ஒருவேளை சிறிது கிடைத்தாலும், அது நிலைக்காது, நிலையான ஆத்மாவைப்பற்றி, தெய்வத்தைப் பற்றி சிந்திப்பதால், தியானிப்பதால் சித்தத்தில் சாந்தி நிலைபெறும். ஆயின் அந்த ஆத்மசிந்தனை அசுத்த மனம் உடையவரிடத்து சிறிதுகூட நேர்வதில்லை. புத்தி சுத்தமாக இருக்கும் போதே (மனத் தெளிவாக இருக்கும் போதே) ஆத்ம சிந்தனை, விவேகம் உண்டாகும். அப்படியாயின் புத்தி எதனால் சுத்தமாகும்? சித்தம் விஷயங்களின் மீது செல்லாமல், காட்சிப் பொருள்களின் மீதான வாசனைகள் இல்லாமல் இருக்கும் போது மாத்திரமே புத்தி தெளிவாக இருக்கும். இந்திரியக்

கட்டுப்பாட்டினாலும், மனவடக்கத்தினாலும் புத்தி பரிசுத்தமாகும். இவ்வாறாக பிரம்மானந்தத்திற்கு, நித்திய நிரதிசய சுகத்திற்குக் காரணம் இந்திரியக் கட்டுப்பாடே என்பது தெளிவாகிறது.

சுகத்தை வேண்டினால் - சாந்தியை அடைக!

சாந்தியை வேண்டினால் - ஆத்ம சிந்தனை செய்க!

ஆத்ம சிந்தனை வேண்டினால் - தெளிவான புத்தியுடன் இருக்க!

மனத் தெளிவை வேண்டினால் - இந்திரியங்களை கட்டுப்படுத்துக!

-என்று இச்சுலோகத்தில் பகவான் விவரித்து சுகத்திற்கு அடிப்படையனைத்தும் இந்திரியக் கட்டுப்பாட்டிலேயே உள்ளது என்று வாக்களித்துள்ளார். எனவே வாழ்க்கையின் இலட்சியமான பரமசுகத்தைச் சாதிப்பதற்கு முக்கியநிலையை ஆக்ரமித்துக் கொண்டிருக்கும் இந்திரியக் கட்டுப்பாட்டை அனைவரும் தவறாது பயிற்சி செய்தல் வேண்டும்.

1. **வினா:**

   சுகம் எதனால் கிடைக்கும்?

   **விடை:**

   அமைதியினால்

2. **வினா:**

   சாந்தி எதனால் கிடைக்கும்?

   **விடை:**

   ஆத்ம சிந்தனையால்

3. **வினா:**

   ஆன்ம சிந்தனை எதனால் ஏற்படும்?

   **விடை:**

   தெளிந்த அறிவால்.

4. **வினா:**

நிர்மலமான புத்தி எதனால் கிடைக்கும்?

**விடை:**

இந்திரியக் கட்டுப்பாட்டினால், மனத் தெளிவால், விஷய விரக்தியால்.

**67. இந்த்ரியாணாம் ஹி சரதாம் யன்மனோ அனுவிதீயதே|**
**ததஸ்ய ஹரதி ப்ரக்ஞாம் வாயுர்நாவம் இவாம்பஸி|| (67)**

**சொற்பொருள்:**

சரதாம் இந்திரியாணாம் - விஷயங்களின் மீது சஞ்சரிக்கின்ற இந்திரியங்களை, யத் - எந்த இந்திரியங்களை மனஹ - மனது, அனுவித்யதே - பின்பற்றிப் போகிறதோ, தத் - அவ்விந்திரியங்கள், அஸ்ய - இதன், ப்ரக்ஞாம் - விவேகத்தை, அம்பஸி - நீரில், நாவம் - நாவாயை, வாயு, இவ (பிரதிகூலமான - எதிரான) காற்றுபோல, ஹரதி ஹி - இழுத்துச் சென்று போகிறது அல்லவா?

**கருத்துரை:**

விஷயங்களின் மீது சஞ்சரிக்கின்ற இந்திரியங்களில் எதனை மனம் அனுசரித்துச் செல்கிறதோ, அது மனிதனின் விவேகத்தை - நீர்மேல் கப்பலை எதிர்மாறான காற்று அலைக்கழித்து எதிரான திசையில் இழுத்துப் போவதைப் போல - அலைக்கழிக்கிறது.

(யத்மனஹ, அனுவிதீயதே தத் - எந்த மனம் அனுசரித்துப் போகிறதே அந்த மனதை - என்று பொருள் சொல்லக் கூடும்)

**விளக்கம்:**

சாதகன் இந்திரியார்த்தங்கள் ஆன சப்த ஸ்பர்சாதி விஷயங்களில் விரக்தி ஏற்பட்டு இருத்தல் வேண்டும், அவ்வாறின்றி இந்திரியங்கள் தன்னந்தனியே விஷயமென்ற காட்டில் சஞ்சரித்துகொண்டிருப்பின், அதனால் நேரிடும். கேடு, அபாயம் இங்கு வர்ணிக்கப்பட்டுள்ளது. விஷயங்களில் சஞ்சரிக்கும் இந்திரியங்களில் எந்த இந்திரியத்தை மனம்

அனுசரித்துப் போகிறதோ அல்லது, பின்தொடருமோ அந்த இந்திரியம் அவனை சம்சாரக் குகையில் தள்ளிவிடும்; அவனை எரித்துவிடும். இங்கு இக்கருத்தை வலியுறுத்த ஒரு நல்ல உவமானத்தைக் கையாண்டுள்ளார், பகவான். எவ்வாறு கடலில் எதிர்க்காற்று, அல்லது புயல்காற்று, கப்பலை திசை திருப்பிவிடுமோ, அல்லது சமுத்திரத்தில் அழுத்தி விடுமோ, அவ்வாறே இந்திரியங்களின் வழி சென்ற மனம் மனிதனை தெய்வ மார்க்கத்தினின்றும் திருப்பி திசைமாற்றி, சம்சாரக் கடலில் தள்ளிவிடுகிறது. ஒரே ஒரு இந்திரியமே இத்தகைய கேடு விளைவிக்கக் கூடியதென்றால் இன்னும் எல்லா இந்திரியங்களையும் மனம் அனுசரித்துப் போனால் நேரக் கூடிய விநாசம் எத்தகையது என்பதை நாம் சொல்ல வேண்டியதில்லை.

எனவே மனதை விவேகத்துடன் இந்திரியங்களின் பின் செல்லவொட்டாது தடுத்து இழுத்துப் பிடிக்க வேண்டும். மேலும், இந்திரியங்களை மனம் நம் கட்டுப்பாட்டில் இருந்து விலகி இந்திரியங்களின் பால் சஞ்சரிக்காமல் தடுத்து அவற்றைத் தன் கட்டுக்குள் வைத்துக் கொள்ள வேண்டும். அவ்வாறின்றி, அவற்றுடன் மனதையும் விஷயங்களின் பால் செலுத்தினால், அவ்விந்திரியங்கள் மனிதனின் அறிவை, விவேகத்தை எரித்து சாம்பலாக்கிவிடும், என்று இங்கு சொல்லப்பட்டது. எனவே சாதகன் தான் சம்பாதித்த ஓரளவான விவேகத்தை, ஆன்ம ஞானத்தின் பாதுகாப்பில் வைத்து, இந்திரியமெனும் துவாரங்களை அடைத்துவைக்க வேண்டும். விஷயமெனும் காற்று அதனின்றும் கிளம்பாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். இந்த ரகசியமே இந்த சுலோகத்தில் வெளியிடப்பட்டது. பல சாதகர்களும் ஒருவாறாக முயற்சியினால் ஆத்ம ஞானம், பிரக்ஞை, விவேகம் இவற்றை சம்பாதித்தும் அஜாக்கிரதையாய், இந்திரியங்களை விட்டுவிடுவதால், அல்லது வைராக்கியம் குறைந்துவிடுவதால், முயற்சியனைத்தும் வீணாகிப் போவதை நாம் காண்கிறோம். அத்தகையோர் எச்சரிக்கையாக இருக்க வேண்டுமென்பதற்காக, இத்தகைய போதனைகளை பகவான் எடுத்துச் சொல்கிறார். எனவே இத்தகைய போதனைகளைப் பின்பற்றி சாதகர்கள்

தம் அனுஷ்டான விஷயத்தில் மிகமிக எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

**வினா:**

இந்திரியங்கள், மனம் இவை விஷயங்களின் மீது சஞ்சரிப்பின் அதனால் ஏற்படும் கேடு யாது?

**விடை:**

அவ்வாறு விஷயங்களின் மீது ஆசைப்படும் இந்திரியங்கள், மனம் இவை மனிதனை, (பிரக்ஞை) விவேகம், தெய்வ பக்தி இவற்றை அழித்து விடும்.

**முன்னுரை:**

எனவே இந்திரிய கட்டுப்பாடு உடையவனின் பிரக்ஞையே நிலையாக இருக்கக் கூடியது என விவரிக்கின்றார்.

**68. தஸ்மாத் யஸ்ய மஹாபாஹோ நிக்ருஹீதானி ஸர்வசஹ|**
**இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ் தஸ்ய பிரக்ஞா ப்ரதிஷ்டிதா||**
**(68)**

**சொற்பொருள்:**

மஹாபாஹோ! - மிக்க தோள் வலிமை பொருந்திய அர்ஜுனா!, தஸ்மாத் - ஆகையினால், யஸ்ய - யாருடைய, இந்த்ரியாணி - இந்திரியங்கள், இந்த்ரியார்த்தேப்ஹ - இந்திரியார்த்தங்களிலிருந்து, ஸர்வசஹ் - எல்லாவிதமாகவும் (முற்றும்), நிக்ருஹீதானி - அடக்கப்பட்டிருக்கின்றனவோ, தஸ்ய - அவனுடைய, பிரக்ஞா - ஞானம் (விவேகம்), ப்ரதிஷ்டிதா — மிக்க நிலைபெற்றதாகிறது.

**கருத்து:**

எனவே அர்ஜுனா! எவன் தன் இந்திரியங்களை விஷயங்களின் மீது செல்லவொட்டாது, எல்லாவிதங்களிலும் கட்டுப்படுத்துகிறானோ, அவனது ஞானமே நிலையானது.

**விளக்கம்:**

'ஸர்வசஹ' - என்று சொன்னதால் இந்திரியங்களை ஒருவாறு கட்டுப்படுத்தினால் மட்டும் போதாது, எல்லாவிதங்களிலும் முயற்சி செய்து எவ்வாறேனும் அவற்றை ஒழித்துக்கட்ட வேண்டும் என்பது தெளிவாகிறது.

இந்திரியார்த்தங்களான சப்தஸ்பர்சாதி விஷயங்களின் மீது போகவொட்டாமல் தடுத்து எவன் தன் இந்திரியங்களை முழுமையாக கட்டுப்படுத்துகிறானோ, அத்தகையோ ஆனது விவேகமே நிலையானது அத்தகையோனது புத்தியே ஆத்மாவில் நிலைபெறும் என்று பகவான் இங்கு தெரிவிக்கிறார். இவ்வாறாக, பலமுறை மறுபடியும் மறுபடியும் சொல்வதால் மோக்ஷமார்க்கத்தில் இந்திரியக் கட்டுப்பாட்டிற்கு எத்தகைய ஸ்தானம் உள்ளது என்பது தெள்ளத் தெளிவாகிறது. 'எங்களது துக்கம் தீர வேண்டும், சம்சார துன்பங்கள் நீங்க வேண்டும், மோக்ஷம் அடைதல் வேண்டும்' என்று ஜனங்கள் சொல்கிறாரேயன்றி, அதற்கு அவசியமான சாதனைகளை மட்டும் செய்வதில்லை, எனவே துக்கமின்மையைக் கோருபவர் பகவான் சொல்லிய இந்திரியக்கட்டுப்பாடு முதலானவற்றை பின்பற்றுதல் வேண்டும்.

**வினா:**

எவரின் பிரக்ஞை (விவேகம்) ஸ்திரமானது?

**விடை:**

இந்திரியங்களை முழுமையாக கட்டுப்படுத்தியவனின் ஞானம் ஸ்திரமானது.

**முன்னுரை**

சாமான்ய மக்கள் நடப்பதற்கும் யோகிகளின் நடவடிக்கைக்கும் உள்ள வேறுபாட்டைக் கூறுகிறார்.

**69. யா நிசா ஸர்வபூதானாம் தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ।**
**யஸ்யாம் ஜாக்ரதி பூதானி ஸா நிசா பச்யதோ முனே:॥ (69)**

**சொற்பொருள்:**

ஸர்வபூதானாம் - எல்லாப் பிராணிகளுக்கும், யா - எது, நிசா - இரவோ, தஸ்யாம் - அதில், ஸம்யமீ - இந்திரிய அடக்கம் பயின்ற யோகி, ஜாகர்தி - விழித்திருப்பான், ஸா - அது, பஸ்யதஹ் - பரமார்த்த தத்துவத்தை தரிசித்த, முனேஹே (ஆத்மா) மனச் சீலனுக்கு, நிசா - இரவு, (பவதி - ஆகிறது).

**கருத்துரை:**

எல்லா பிராணிகளுக்கும் (சாமான்ய மக்களுக்கு) எது (பரமார்த்த தத்துவம்) இரவோ (காட்சிக்கு புலப்படாது) இருக்கின்றதோ, அதில் இந்திரியங்களைக் கட்டுப்படுத்திய ஞானி விழித்திருப்பான். (ஆன்ம உலகில் இருப்பான்) எதில் (சப்தாதி விஷயங்களில்) பிராணிகள் விழித்திருக்கிறார்களோ (ஆசையுடன் நடந்து கொள்கிறார்களோ) அது (விஷய ஜாலம்) பரமார்த்த தத்துவத்தை தரிசிக்கும் முனிகளுக்கு இரவாக இருக்கும் (காட்சியில்) புலப்படாதிருக்கும்)

**விளக்கம்:**

இச் சுலோகம் அலங்கார வார்த்தைகளால் சொல்லப் பட்டிருக்கிறது. 'அஞ்ஞானிகளுக்கு எது இரவோ அது ஞானிகளுக்குப் பகல், ஞானிகளுக்கு எது இரவோ அது அஞ்ஞானிகளுக்குப் பகல்" என்று இங்கு சொல்லப்பட்டது, இதனைப் பற்றிய விவரம் வருமாறு:- ஆன்மா, தெய்வம், இந்திரியக் கட்டுப்பாடு முதலான ஆன்மீக விஷயங்கள் அஞ்ஞானிகளுக்கு எதுவும் தெரிவதில்லை, தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வமும் அவர்களுக்கு இருப்பதில்லை. அவை எவையும் அவர்களது கண்களுக்குப் புலப்படுவதில்லை. எனவே அவை அவர்களுக்கு இல்லாததேயாகின்றது. எனவே அவர்களுக்கு அது இரவு போன்றது எனப்பட்டது. ஆன்மீக விஷயங்களில் அவர்கள் அஜாக்கிரதையாக இருப்பர். உறங்கிக் கொண்டிருப்பவர் ஏதும் இலக்கின்றி இருப்பதைப் போல் நடப்பர். ஆயின் சமநிலையில் உள்ள ஞானியரின் நடவடிக்கை இதற்கு எதிர் மாறானது. ஏனெனில் அவர்கள் எப்போதும் தெய்வசிந்தனை, ஆத்மானுபூதி, பெற்றிருப்பர் ஆன்மீக

விஷயங்களில் எப்போதும் விழித்திருப்பர். தெய்வ ஸ்மரணையை ஒருகணமும் விடார். பிரம்மானுபூதியில் விழித்திருப்பர். எனவே அஞ்ஞானிகள் உறங்கியிருக்கும் தெய்வ விஷயங்களில் ஞானிகள் விழித்திருப்பர். அவர்களுக்கு எது இரவோ இவர்களுக்குப் பகல். மேலும், ஞானிகளான மகனீயர்கள், இந்திரியக் கட்டுப்பாட்டுடையவராய், விஷய போகங்களின் மீது விரக்தியுடன் நாமரூபங்கள் உடைய இக் காட்சிப் பொருளான உலகை மாயையாகக் கருதி, உலக விஷயங்களின் பற்றின்றி இருப்பர், இந்திரியார்த்தங்களான சப்தஸ்பர்சாதி விஷயங்களில் முக்கியத்துவம் கொடாதிருப்பர், அவை அவர்கள் கண்களுக்குப் புலப்படுவதேயில்லை. எனவே விஷயங்கள் முதலானவை, போக விஷயங்கள் இவையும் அவர்களுக்கு இரவேயாகும். இவ்விஷயங்களில் மனக்கட்டுப்பாடுடைய சிலர்கள் உறங்கியே யிருப்பர். ஆயின் அதுவே அஞ்ஞானிகளுகக்கு மிகவும் பிரியமானதாக இருக்கும்.

அவற்றின் மீதே பற்று கொண்டு, அவற்றை அனுபவித்த வண்ணம் காலங்கடத்துவர். இவ்விஷயங்களில் அவர்கள் எப்போதும் விழித்திருப்பர். எனவே அஞ்ஞானிகளுக்கு அது பகல் ஆகும். எந்த இந்திரியங்களின் விஷயமாக ஞானிகள் உறங்குகின்றார்களோ, அவற்றில் அஞ்ஞானிகள் விழித்திருப்பர். அவர்களுக்கு எது இரவோ அது இவர்களுக்குப் பகல்.

இரவில் சஞ்சரிக்கும் பிராணிகள் பல உண்டு, பூனை, ஆந்தை, வௌவால், இராக்கதர்கள், கொடூரமான விலங்குகள் முதலானவை, நமக்கு பகல் அவைகளுக்கு இரவு, அவற்றிற்கு இரவு நமக்கு பகலாகும். அஞ்ஞானிகள் இந்த அரக்கர்களின் வகுப்பைச் சேர்ந்தவர்கள். ஞானிகள் பகலில் சஞ்சரிக்கும் வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள்.

"சம்யமீ" - பயன்படுத்தியுள்ளமையால், இந்திரியக் கட்டுப்பாடு முழுமையாகச் செய்தவனே ஆன்மீக விஷயங்களில் விழித்திருக்க இயலும். (ஜாக்ர்தி), அத்தகைய நியமம் இல்லாதவனுக்கு தெய்வம் (ஆன்மா) காணக்

கிடைத்தாது எனத் தெளிவாக போதிக்கப்பட்டுள்ளது. இவ்வாறாக ஆன்மீகக் கோயிலில் இந்திரியக் கட்டுப்பாட்டிற்கு எத்தகைய உன்னதமான ஸ்தானம் உள்ளதென்பது நன்றாக நிரூபிக்கப்பட்டுளது.

"பச்யதோ முனேஹே" - முனிகள் என்றால் மனக் கட்டுப்பாடுடையவர்கள் பலர் இருக்கக் கூடும். ஆயின் ஆத்மதரிசனம் பெற்றவர்கள் மிக மிக அரிதானவரே, 'பஸ்யதஹ' என்றதால் பகவானை (ஆன்மாவை) நேரில் பார்க்கமுடியும் என்றும், அனுபவித்தல் இயலும் என்றும் இங்கு தெளிவாகிறது. அத்தகைய நிலையை ஒவ்வொருவரும் அடைதல் வேண்டும்.

விஷய போகங்களை அழித்தல் வேண்டுமெனின், இந்திரியக்கட்டுப்பட்டுடன் ஆன்மநிலையில் சதா விழிப்புடன் இருத்தல் வேண்டு மென இச்சுலோகம் போதிக்கின்றது.

**வினா:**

அஞ்ஞானிக்கும், ஞானிக்கும் உள்ள பேதமென்ன?

**விடை:**

அஞ்ஞானி - தெய்வ விஷயங்களில் ஈடுபாடில்லாமை விஷய போகங்களில் சதா ஈடுபட்டிருத்தல்.

ஞானி - தெய்வ விஷயங்களில் ஸதா ஈடுபட்டிருத்தல் விஷய போகங்களில் ஈடுபாடு இல்லாமை.

**முன்னுரை:**

சாந்தியை எவர் அடையக் கூடும் என்பதை இரண்டு சுலோகங்களின் மூலமாகக் கூறுகிறார்.

**70. ஆபூர்யமாணமசலப்ப்ரதிஷ்டம் ஸமுத்ரமாபஃ**
**ப்ரவிசந்தி யத்வத்|**
**தத்வத்காமா யம் ப்ரவிசந்தி ஸர்வே ஸ சாந்திமாப்னோதி**
**ந காமகாமீ|| - (70)**

**சொற்பொருள்:**

*ஆபூர்யமாணம் - நதிகள் நீர்நிலைகள் முதலானவற்றில் முழுதும் நிறைந்த அசலப்ரதிஷ்டம் - அசையாது நிலைபெற்ற (கட்டுப்பாட்டை மீறாத), சமுத்திரம் - சமுத்திரத்தை, ஆபஹ - (நதி முதலான) நீர்கள், யத்வத் - எவ்வாறு, ப்ரவிசந்தி - பிரவேசிக்கின்றனவோ, தத்வத் - அப்படியே, ஸர்வே காமாஹா - போக விஷயங்களனைத்தும், யம் - எவனொருவனை (பிரம்மநிட்டனை), ப்ரவிசந்தி - பிரவேசிக்கின்றதோ (பிரவேசித்து அடங்கிப்போகிறதோ), ஸஹ - அத்தகையோன், சாந்திம் - சாந்தியை, ஆப்னோதி - அடைகிறான். காமகாமீ - விஷயங்களின் மீது பற்றுடையவன், ந (ஆப்னோதி) - அடையமாட்டான்.*

**கருத்துரை:**

*நீரினால் முழுமையாக நிறைந்துள்ள அசைவற்ற நிறைகடலில் ஆறுகள் முதலியன சென்றடைவதைப்போல், போக விஷயங்கள் அனைத்தும் பிரம்ம நிஷ்டனிடம் அடங்கி விடுகின்றன, (அவனை விகாரப்படுத்த இயலாது). அத்தகையோனே சாந்தியை அடைகிறானே தவிர விஷயங்களின் மீது பற்றுடையவன் அல்ல.*

**விளக்கம்:**

*"காமாஹா" - என்ற சொல்லிற்கு 'ஆசைகள்' என்று பொருள் சொல்லுதல் சரியானது. ஏனெனில் பிரம்ம ஞானிக்கு, ஸ்தித பிரக்ஞனுக்கு ஆசைகள் எதுவும் இராது. எனவே, 'காம்யன்தே, இதி காமாஹா" என்ற கோரப்பட்ட*

*'போக்ய விஷயங்கள்' எனப்பொருள் கொள்ளுதல் நன்று.*

*சாந்தியை எவர் அடையக் கூடும் என்பது இச்சுலோகத்தில் நிரூபிக்கப்பட்டுள்ளது. காமத்திற்கு அடிமை, விஷயங்களில் பற்றுகொண்டவன், ஆசைகள் அடைய வேண்டுமென்ற விருப்பமுடையவன், சாந்தியை எந்நாளிலும் அடைவதில்லை என்று இங்குத் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளது. 'ந காம காமீ' ஆசைகளுக்கு ஆசைப்படாதவன், விஷயப்பற்றில்லா*

தவன், காமத்தை வென்றவன் மாத்திரமே சாந்தியை அடைய முடியும். இதனை விளக்க ஒரு எடுத்துக்காட்டு சொல்லப் பட்டுள்ளது.

ஞானியை கடலுக்கு உவமையாகக் கூறுகிறார். கடலில் உள்ளநீர் சூரிய வெப்பத்தால் ஆவியாக, மேகமாக உருவெடுத்து, மாறினாலும் நீர் சிறிதளவும் குறைவதில்லை. அவ்வாறே அநேக நதிகளின் நீர், மழைநீர் இவை அவற்றில் ஓடிக் கலந்தாலும் சிறிதும் பெருகுவதுமில்லை. எப்போதும் நீர் ஒரே அளவிலேயே உள்ளது. அவ்வாறே ஞானி யானவன், ஸ்திதபிரக்ஞன். தன் இந்திரியங்களுக்கு சப்தாதி விஷயங்கள் பலவும் தோன்றினும் தோன்றாவிட்டாலும் விகாரமடைவ தில்லை. எவ்விதத்திலும் மாறுவதில்லை. அவன் விஷயங்களின் மீது சிறிதளவும் பற்றில்லாதிருப்பான். "ஸர்வேகாமாஹா" என்று சொல்வதால் ஓரேயொரு விஷயமட்டு மன்று, பலவிதமான போக விஷயங்களினால் தாக்குண்டாலும் அவை அங்கேயே எரிந்து சாம்பலாகிப் போகும். விகாரமடையச் செய்யாது. அதாவது ஞானியானவன் ஒருவேளை தெய்வீகமாக நித்திய வாழ்க்கை விவகாரங்களில் பலவிதமான காட்சிப் பொருள்களின் இடையே இருக்க நேரிட்டாலும், இந்திரியங்களால் அவனுக்கு எவ்விதமான மாறுபாடும் இராது என்பது அதன் பொருள்.

**"ஞானக்ஞே யஸ்ய மனஸௌ நூனமேதத்திலக்ஷணம்**
**ந ஸ்வதந்தே சமக்ராணி போகவ்ருத்தானி யதுப்னஹ"**
**- (வசிஷ்ட கீதை)**

என்று ஸ்ரீ வசிஷ்டமுனி சொன்னபடி, ஆத்மஞானியின் அடையாளம் போகத்தில் பற்று இல்லாமையே யாகும். ஒரு வேளை பற்று இருந்தால் அவன் இன்னும் ஞானநிலையை அடையவில்லை என்றே அர்த்தம். கடல் பெரிய நீர்ப்பரப்புடன் பரிபூர்ணமாக இருப்பதைப் போல் ஞானி பிரம்மானந்தத்தினால் பரிபூர்ணமாக இருப்பான். மற்றும் கடல் சலனமின்றி, நிலைபெற்று இருப்பதைப் போல ஜீவன் முக்தன், விகாரமின்றி, சலனமின்றி, மேருமலையை யொத்த கம்பீரத்துடன் இருப்பான்.

சின்ன சின்ன நீரோடைகள், கால்வாய்கள், குளம், குட்டைகள், நீர்நிலைகள், கிணறுகள், நதிகள் ஆகிய இவையாவற்றில் நீர்அதிகமாக நிறைந்து விட்டால் கட்டுமீறி விடும். நீரில்லாத போது வெய்யில் முழுமையாக உலர்ந்து வறண்டு போகும், அவ்வாறே அஞ்ஞானிகளின் இதயத்தில் போக வஸ்துக்கள், சப்தாதி விஷயங்கள் வந்து விழுந்தால் விகாரமடைந்து, சபலசித்தத்துடன், நடந்து கொள்வான். எத்தகைய விஷயங்களை அனுபவித்தாலும் சோகம் மிகுந்து தீனர்களாக இருப்பர். இதுவே ஞானியர்க்கும் அஞ்ஞானிகளுக்கும் இடையேயான பேதம். இப்பேதமே இந்த சுலோகத்தில் நிரூபிக்கப்பட்டது. மேலும், ஆசைகள் அடைய நினைப்பவனுக்கு சாந்தி எந்நாளும் கிடைப்பதில்லை என்று சொல்லப்பட்டதால் மனிதன் காமத்தை வென்று விஷயங்களின் மீதான பற்றை விட்டு ஆசையற்று 'அகாமகாமீ' ஆகவேண்டுமேயன்றி ஆசைகளுடன் (காமகாமீ) எக்காலத்தும் ஆகக்கூடாது.

இங்கு இன்னுமொரு இரசசியம் உள்ளது. கடல் நதிநீரையோ, மழை நீரையோ தனக்கு தானே வேண்டுமென நினைப்பதில்லை, அதுவே தெய்வாதீனமாக வந்து கடலில் சேர்கின்றது. அவ்வாறே ஞானி எந்த விஷயத்தையும் வேண்டுமென ஆசைப்படான். ஆயின் நித்திய வியவகாரத்தில் ஒருவேளை அதுவே தெய்வாதீனமாக வந்து சேர்ந்தாலும் அதன்மீது அவன் எவ்வித பற்றும் கொள்ளாது விகாரமின்றி இருப்பான், என்பது அதன் பொருள்.

எனவே சாந்தியைக் கோருபவர் அனைவரும், இச்சுலோகத்தை, அதிலும் முக்கியமாக, 'ந சாந்திமாப்னோதி ந காமகாமீ' என்று கடைசி பாதத்தை மனனம் செய்து, தம்மிடம் உள்ள ஒவ்வொரு ஆசைகளையும் வெளிக் கொணர்ந்து அதனை வெளியே எறிந்து, காமரூபமான பைசாசங்களுக்கு தன் இதயத்தில் ஒருசிறு இடத்தையும் கொடாது, அதன் பலனாக பரமசாந்தியை, ஆத்மானந்தத்தை அனுபவித்தல் வேண்டும்.

**வினா:**

*சாந்தியை எவர் அடைதல் கூடும்?*

**விடை:**

*ஆசைகள் அற்றவர், விஷயங்களால் அசைவற்ற விகாரமாற்ற மனத்தையுடையவன், கடலைப் போல் விகாரமற்று இருப்பவன் சாந்தியை அடைவான். ஆசைகள் உள்ளவர் சாந்தியடையார்.*

**71. விஹாய காமான் யஹ் ஸர்வான் புமாம்ஸ்சரதி நிஸ்ப்ருஹஹ|**
**நிர்மமோ நிரஹங்காரஹ ஸ சாந்திமதிகச்சதி|| (71)**

**சொற்பொருள்:**

*யஹ் புமான் - எந்தமனிதன், ஸர்வான் - எல்லாவற்றையும், காமான் - ஆசைகளை, சப்தாதி விஷயங்களை, விஹாய - விடுத்து, நிஸ்ப்ருஹஹ - அதன்மீது ஆசையற்று, நிர்மமஹ - மமகாரமின்றி, நிரஹங்காரஹ - அகங்காரமின்றி, சரதி - நடமாடுகின்றானோ, ஸஹ - அவன், சாந்திம் - சாந்தியை, அதிகச்சதி - அடைகிறான்.*

**விளக்கம்:**

*(ஸ்தித பிரக்ஞனின் இலக்கணங்கள் குறித்து இதுவரை அர்ஜுனன் நான்கு கேள்விகள் கேட்டான். அவை எவையெவையெனின் -*

*(1) கா பாஷா - (அவன் இலட்சணங்கள் என்ன?)*

*(2) கிம் ப்ரபாஷேத - (என்ன பேசுவான்?)*

*(3) கிமாஸீத - (எவ்வாறு இருப்பான்?)*

*(4) ப்ரஜேத கிம் - (எவ்வாறு நடந்து கொள்வான்?)*

*(1) இதில் 55-ஆவது சுலோகத்தினின்றும் அத்தியாயத்தின் இறுதிவரையில் சொல்லப்பட்டவை யனைத்தும், ஸ்திதப் பிரக்ஞனின் சாதாரண இலட்சணங்களே யாதலால் அவை*

முதல் கேள்விக்கான விடை ஆகிறது. (2) 55ஆவது சுலோகத்தினின்றும் 57வரை இரண்டாவது கேள்விக்கான விடை. (3) 58வது சுலோகத்தினின்றும் 61வரை மூன்றாவது கேள்விக்கான விடை. ('கிமாஸீத' என்றதற்கு 61ஆவது சுலோகத்தில் 'யுக்த ஆஸீத' - என்பது பொருள்) (4) 71ஆவது சுலோகம் நான்காவது கேள்விக்கான விடை - 'ப்ரஜேதகிம்' என்பதற்கு 71ஆவது சுலோகத்தில் 'சரதி நிஸ்ப்ருஹஹ" என்பது மையப்பொருள்) சாந்தி எவருக்கு கிடைக்குமென்பதை மறுபடியும் இச்சுலோகத்தில் விவரிக்கின்றார். சாந்தியை, சுகத்தினைபெற வேண்டுமென நினைப்பவர் அனைவரும் மிக முக்கிய நான்கு சாதனைகளைச் செய்தல் வேண்டும். அவை யாவையெனின்,

(1) எல்லாவிதமான ஆசைகளையும், சப்தாதி விஷயங்களையும் ஒதுக்குதல் (2) அவற்றில் எவ்விதத்திலும் பற்றுக் கொள்ளாதிருத்தல் (3) அகங்காரத்தை ஒழித்தல் (4) மமகாரத்தை நீக்குதல், இனி ஒவ்வொன்றையும் பற்றிச்சிறிது விரிவாகக் காண்போம்.,-

(1) ஸ்திதப்ரக்ஞனைப் பற்றிக் கூறுகையில், முதலில், 'ப்ரஜஹாதி யதா காமான் ஸர்வான்' - என்று விஷயங்களை அதாவது எல்லாவிதமான ஆசைகளையும் விடவேண்டும் என்று சொன்னதையே பகவான் இங்கு மறுபடியும் வலியுறுத்துகிறார். 'ஸர்வான்' (எல்லாவிதமான) என்ற சொல்லை நன்றாக கவனித்துப்பார்த்தால் எந்த ஒரு ஆசையையும், விஷயத்தையும் இதயத்தின் உள்ளே வைத்திருக்கலாகாது என்பது பொருள், ஏனெனில் அதுவே சிறிது சிறிதாக வளர்ந்து சாதகனுக்கு உபத்திரவத்தை அளிக்கும். எனவே எல்லாவற்றையும் ஒதுக்கி, இதயத்தில் வாசனையற்றுப்போகச் செய்தல் வேண்டும்.

(2) விஷயங்களை, ஆசைகளை அழித்து விட்டாலும் மறுபடியும் அவற்றைக் குறித்த ஆசையோ, நினைப்போ வராது, அவற்றை ஒதுக்கித் தள்ள வேண்டும்

(3) அகங்காரத்தை இடையில் வராது தடுக்க வேண்டும். உண்மையில் தான் ஆத்மாவே யன்றி தேகம் முதலான உபாதி ரூபங்கள் அல்ல. எனவே ஆத்மபாவம் ஏற்பட்டு தேகத்தின் 'அகம்' பாவத்தை ஒழித்துக் கட்டுதல் வேண்டும்,

(4) தேகமே தனதல்ல என்றபோது தேகத்திற்கு அப்பாற்பட்ட வீடு,வயல், சுற்றத்தார் முதலானவைகள் தனது எப்படி யாகும்? எனவே அவற்றின்மீது மமகாரத்தை ஒழித்தல் வேண்டும். இவ்வாறாக இந்நான்கு சாதனைகளையும் எவர் அனுஷ்டிக்கிறார்களோ அவர்கள் பரமசாந்தியினை அடைவர் என்று பகவான் தெரிவிக்கிறார். அவை இல்லாதவர் சம்சார சக்கரத்தில் சிக்கித் தவித்து சாந்தியின்றி துக்கத்தை அடைகின்றனர்.

இச்சுலோகத்தில் 'யஹ' (எவன்) என்ற பிரயோகத்தினால் மேற்சொன்ன அருகதையுடையவனாயினும் சரி, எந்த ஜாதி, மதம் குலத்தைச் சேர்ந்தவராயினும், ஆண்களாயினும், பெண்களாயினும், சண்டாளனாயினும் சாந்தியை, மோக்ஷத்தைத் தவறாது அடைவர் என்பது தெளிவாகிறது, கீதை எத்தகைய விசால மனப்பான்மை கொண்டது என்பதை எங்கும் காணலாகும்.

**வினா:**

சாந்தியை எவர் அடைதல் கூடும்?

**விடை:**

(1) ஆசைகள், விஷயங்களனைத்தையும் முழுமையாக விடவல்லவர். (2) காட்சிப் பொருள்கள் எவற்றின் மீதும் பற்றில்லாதவன் (3) அகங்காரத்தை அழித்தவன் (4) மமகாரத்தை விட்டவன் ஆன மனிதன் சாந்தியை அடைவான்.

**72. ஏஷா ப்ராஹ்மீ ஸ்திதிஹ் பார்த்த நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி!**
**ஸ்தித்வா அஸ்யாமந்தகாலேஅபி ப்ரஹ்மநிர்வாணம்ருச்சதி!!**

**(72)**

**சொற்பொருள்:**

பார்த்த - ஏ அர்ஜுனா! ஏஷா - இது, ப்ராஹ்மீஸ்திதி - பிரம்மானந்தமான நிலை, ஏனாம் - இதனை, ப்ராப்ய - அடையப்பெற்று, ந விமுஹ்யதி - மோஹமடைவதில்லை, அந்த காலே அபி - மரண காலத்திலும் கூட, அஸ்யாம் - இந்த நிலையில், ஸ்தித்வா - நிலைத்திருந்து, பிரம்ம நிர்வாணம் - பிரம்மத்தில் (மோக்ஷத்தை), ருச்சதி - அடைகிறான்.

**கருத்து:**

அர்ஜுனா! இவையனைத்தும் பிரம்ம சம்பந்தமான நிலை; இத்தகைய பிரம்ம நிலையையடைந்தோன் மறுபடியும் ஒருகாலும் மோகமடைவதில்லை. மரண காலத்தில் கூட இத்தகைய நிலையில் கூட பிரம்மானந்த மோக்ஷத்தையே அடைகிறான்.

**விளக்கம்:**

ஸ்திதப் பிரக்ஞன் சம்பந்தமாக தெரிவித்த சாதனைகள் அதாவது இந்திரியக் கட்டுப்பாடு, விஷயங்களை ஒதுக்குதல், அஹங்காரம், மமகாரம் இவற்றை விடுதல் முதலானவற்றை செய்து வந்தால் ஜீவபிரம்ம ஐக்கியம் சித்திக்கும். புழு வண்டாக, மாறும் சமயத்தில் ஜீவன் பிரம்மஸ்வரூபமாக ஒளிவிடுகின்றான் அதுவே பிராஹ்மிஸ்திதி. அந்நிலையில் மனிதன் பிரம்மானந்தத்தை அனுபவித்து, சம்சார பிரமைகளை, மோகத்தை மறுபடியும் எப்போதும் அடைவதில்லை.

'அன்த்யகாலேஅபி' - சம்ஸ்கிருதத்தில் 'அபி' என்றால் 'கூட' என்று பொருள் அன்த்யகாலே அபி' என்றால் அந்திம காலத்திலும் கூட - இத்தகைய பிரம்ம நிலையில் உள்ளவன் நிர்வாண மோக்ஷம் அடைவான். என்று பொருள் கொள்ள வேண்டுமே தவிர அந்திம காலத்தில் 'மாத்திரமே' என்று இங்கு சொல்லப்படவில்லை. அவ்வாறு சொல்லியிருப்பின்

மக்கள் வாழ்நாள் முழுவதும் வாரா இருந்துவிட்டு, பகவத் தியானத்தை அந்திம காலத்தில் செய்தால் போதும் என்று வாய்தா போட்டுவிடுவர். ஆயின் ஏதோ தெரியாமலோ, அல்லது சரியாக போதனை செய்வார் இல்லாது போனதாலோ, அல்லது வேறு ஏதோவொரு காரணத்தினால் தெய்வத்தைத் தொழாது வாழ்நாள் முழுவதும் வீணாகக் கழித்து விட்டாலும், வயோதிகத்திலோ. அல்லது அந்திம காலத்திலோ தெய்வ சிந்தனையை ஆரம்பித்தாலும் அது நல்லதே. ஆயின் சரீரம் சக்தி இழந்து போவதால் அதன்பிறகு சாதனைகளைச் சரிவரசெய்தல் இயலாது. மற்றும் பரமார்த்த சாதனை, இந்திரியக் கட்டுப்பாடு, காமத்தை வெல்லுதல் இவை ஒரே நாளில் சித்திப்பதில்லை. பல ஜன்மங்களாகத் தொடர்ந்துவரும் வாசனைகள் ஒரு கணத்தில் மறைந்து விடுமா? எத்தனையோ நீண்டகாலம், புத்திபலம், சரீர பலம் இவற்றுடன் தீவிர சாதனை செய்தால்தான் சித்திக்கும், எனவே ஆரோக்கியம், பலம், ஞானம் இவை மூன்றும் இருந்தால்தான் பால்ய, யௌவன காலத்திலேயே ஆன்மீக சாதனைக்குச் சரியான காலம். எனவே பகவான் கீதையின் 8ஆம் அத்தியாயத்தில் -

'தஸ்மாத்ஸர்வேஷு காலேஷு மமனுஸ்மர யுத்யச' எல்லா காலத்திலும் பகவத் சிந்தனை செய்க என்று சொல்கிறாரே தவிர கடைசிகாலத்தில் மட்டும் செய்தால் போதும் என்று சொல்லவில்லை. மற்றும் வாழ்நாள் முழுவதும், எந்த சாதனையைச் செய்து வருகிறார்களே, எந்த நாமத்தை உச்சரிக்கிறார்களே, அந்திம காலத்திலும் அதுவே வரும். அவ்வாறின்றி அந்திம காலத்திலேயே தெய்வ சிந்தனை செய்ய ஆரம்பித்தால் (நல்லதேதாயினும்) பிறகு பகவத் நினைப்பு வருதல் கடினம். எனவே அந்திம காலத்தில் தெய்வ நினைவு, தெய்வத்திடம் நிலைபெற வேண்டுமாயின், வாழ்நாள் முழுவதும் அதனைக் குறித்து முயற்சி மேற்கொண்டு பயிற்சி செய்துவரல் வேண்டும்.

மேலும் இறுதிக்காலம் எப்போது வரும் என்பதை முன்னதாக தெரிந்துகொள்வதென்பது எவருக்கும்

சாத்தியமில்லை. அதனால் ஒவ்வொரு நிமிஷமும், குழந்தைப்பருவம், இளமைப்பருவத்திலும் கூட தெய்வசிந்தனை செய்து வந்தால், பிரம்ம சாதனையில் கடத்தி வந்தால், இறுதிக் காலம் எப்போது வந்தால் நமக்கென்ன? மரணம் எப்போது நேர்ந்தால் என்ன? எனவே சாதகன் இவ்விஷயங்களில் மிகவும் எச்சரிக்கையாக இருந்து முதுமைக்காக, காத்திராமல், அந்திம காலத்தில் செய்து கொள்வோம் எனத் தள்ளிப் போடாமல், இளமைப் பருவத்திலேயே பிரம்ம நிலையின் அனுபவத்தில் நிலைத்திருக்கும் வண்ணம் பார்த்துக் கொள்ள வேண்டும்.

**வினா:**

ப்ராஹ்மீஸ்திதி என்றால் என்ன?

**விடை:**

இந்திரியக் கட்டுப்பாடு, காமத்தை வெல்வதாலும், ஆத்மசிந்தனையாலும் ஏற்படும் பிரம்மானுபவ நிலையே அது.

**வினா:**

அந்நிலையை எப்போது அடைதல் வேண்டும்?

**விடை:**

குழந்தை இளமைப் பருவத்தில், அந்திம காலத்திலும்கூட

**வினா:**

அதனால் ஏற்படும் பலன் என்ன?

**விடை:**

ஜீவன் பிரம்மானந்தரூபமான மோக்ஷத்தையடைவான்.

**இதி ஸ்ரீ மத்பகவத்கீததாஸூபநிஷத்ஸு ப்ரஹ்ம**

**வித்யாயாம் யோகசாஸ்த்ரே**

**ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதே**

**சாங்க்ய யோகோ நாம த்விதீயோ அத்தியாயஹ,**

*இது உபநிஷத்தின் கண், பிரம்ம வித்தையை புகட்டுவதும், யோக சாஸ்திரமானதும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமாக வந்துள்ளதுமாகிய பகவத் கீதையில் சாங்கிய யோகம் என்ற இரண்டாம் அத்தியாயம்.*



அத த்ரிதீயோ அத்யாயஹ

# மூன்றாம் அத்தியாயம்

## கர்ம யோகஹ

## கர்ம யோகம்

**இந்த அத்தியாயத்தின் பெயர் விளக்கம்:**

*'கர்மயோகம்' - உலகில் செயலாற்றாது எவரும் இருக்க இயலாது. அவரவரது நியமங்களைச் சரிவரத் தவறாது நிஷ்காம புத்தியுடன் செய்து வருதல் வேண்டும். தனது கடமைகளை பற்றின்றி ஈசுவரார்ப்பண புத்தியுடன் செய்தல் வேண்டும். அவரவர் தத்தம் காரியங்களை எதற்காக ஆற்றுதல் வேண்டும், அதனை ஆற்றாது போனால் ஏற்படும் துன்பங்கள் யாவை, ஆற்றினால் ஏற்படும் நன்மைகள் எவை, எத்தகைய செயல்கள் பந்தத்தை ஏற்படுத்தக் கூடியவை, எவை முக்திக்கு வழிகாட்டக் கூடியவை - என இவ்வாறாக கர்மாவிற்குத் தொடர்பான விஷயங்கள் பலவற்றையும் விரிவாக இந்த அத்தியாயத்தில் விவாதிப்பதால் இதற்கு கர்ம யோக மென்ற பெயர் ஏற்பட்டது.*

*இவ்வத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள முக்கியமான விஷயங்கள்:-*

*(1) பற்றின்றி நித்ய கடமைகளை செய்துவருதலே நன்மை தருவது என்று நிருபித்தல் (1-8 சுலோகங்கள்)*

*(2) பலனைக் கருதாது செய்யப்படும் செயல்கள் யக்ஞமேயாகும் என்பதை தெரிவித்து அத்தகைய யக்ஞத்தை*

மேற்கொள்ள வேண்டியதன் அவசியத்தை கூறுகிறது. (9-16 வரை)

(3) ஞானிகள், பகவானைப் போன்றே உலகின் நன்மைக்காகவே செயல்புரிவர் என்பதைக் கூறுகிறார் (17-24 வரை)

(4) அஞ்ஞானி, ஞானி இவர்களின் இலட்சணங்களைக் கூறி, விருப்பு வெறுப்பின்றி செய்து வருதல் வேண்டும் என போதித்தல் (25 முதல் 35 வரை)

(5) காமக் குரோதங்கள் இவற்றின் இயல்பு, அவற்றை வெல்லும் முறை இவற்றை தெரிவித்தல் (36 முதல் 43 வரை)

இவ்வத்தியாயத்திற்கும் முன் அத்தியாயத்திற்கும் உள்ள தொடர்பு:-

முன் அத்தியாயமான சாங்கிய யோகத்தின் ஆரம்பத்தில் பகவான் அர்ஜுனனுக்கு விரிவான ஞானோபதேசம் செய்தார்! மறுபடியும் இடையில் நிஷ்காம கர்ம யோகத்தைக் குறித்து ஓரளவு கூறுகிறார். இறுதியில் மறுபடியும் ஸ்திதபிரக்ஞனின் இலட்சணங்கள், இந்திரியக் கட்டுப்பாடு முதலான சாதனைகளைப் பற்றியும், உன்னதமான பிராம்மிஸ்திதியை, ஞானானுபவத்தை வர்ணித்துக் கூறுகிறார், அவையனைத்தையும் கேட்டு அர்ஜுனன் ஞானமே கர்மாவை விடச் சிறந்தது என பகவான் நிர்ணயிக்கிறார் என எண்ணி, ஞானமே சிறந்தது என்பதே பகவானின் மதமாயின் என்னை எதற்காக கர்மாவைச் செய் என யுத்த களத்தில், பெரிதான கர்ம க்ஷேத்திரத்தில் என்னை இறக்குகிறார்? என்ற சந்தேகம் ஏற்பட்டு பகவானை இங்கு கீழ்க் கண்டவாறு வினவுகிறார்.

**அர்ஜுன உவாச:-**

1. **ஜ்யாயஸீ சேத் கர்மணஸ்தே மதா புத்திர் ஜனார்தன!**
   **தத்கிம் கர்மணி கோரே மாம் நியோஜயஸி கேசவ!! (1)**

*அர்ஜுன உவாச: அர்ஜுனன் சொன்னது:-*

**சொற்பொருள்:**

*ஜனார்தன ! - ஏகிருஷ்ணா! புத்திஹி - ஞானம், கர்மணைஹி - கர்மத்தைவிட, ஜ்யாயஸீ - சிரேஷ்டமானது (சிறந்தது என்று), தே - உன்னால், மதா சேத் - (மதிக்கப்படுவதனால்), உன் அபிப்ராயம் ஆனால், தத் - அப்போது, கேசவ - ஏ கிருஷ்ணா! கோரே - பயங்கரமான, கர்மணி - (யுத்தத்தை) கர்மத்தில், மாம்-என்னை, நியோஜயஸி - ஈடுபடுத்துகிறீர், கிம் - எதனால்?*

**கருத்து:**

*அர்ஜுனன் சொன்னான் - ஏ கிருஷ்ணா ஞானம் கர்மத்தை விடச்சிறந்தது என்பதே உம் கருத்தானால், என்னை ஏன் இந்த யுத்த மெனும் கொடுமையான செயலில் ஈடுபடுத்துகிறீர்?*

**விளக்கம்:**

*இங்கு புத்தி என்றால் ஞானம். முன் அத்தியாயத்தில் 49,50, 51 ஆவது சுலோகங்களில் பகவான் - கர்மாவை விட ஞானம் சிறந்தது என்று சொன்னபோதே அர்ஜுனனின் மனத்தில் இந்த சந்தேகம் எழுந்திருக்ககூடும். இது என்ன? பகவான் உனக்கு கர்மாவைச் செய்வதற்கு மட்டுமே உரிமையுண்டு (கர்மண்யே வாதிகாரஸ்தே! - 2-47) கர்மாக்காளைச் செய் (குரு கர்மாணி - 2-48), எனவே எழுக! யுத்தம் செய்! (தஸ்மாத்யுத்யஸ்வ 2-18) என்று ஒருபக்கம் சொல்லிவிட்டு, புத்தியோகத்தைவிட கர்மா ஓரளவு குறைவானதே என்ற முறையில், (தூரேணவ்யா நரம்கர்ம புத்தி யோக தனஞ்ஜய!) 2-49) என்று மற்றொரு பக்கம் சொல்கிறாரே! இவ் வாக்கியங்கள் ஒன்றுக்கொன்று எதிரானதாக மாறுபட்டல்லவா இருக்கிறது என்று சந்தேகப்பட்டு இரண்டாம் அத்தியாயத்தில் 49, 50, 51 சுலோகங்களை பகவான் சொன்ன போதே தன் சந்தேகத்தை பகவானிடம் கேட்க எண்ணியிருக்கக் கூடும். ஆயின் உடனேயே பகவான், உன் புத்தி சமாதியில் எப்போது நிலைக்கிறதோ, அப்போது (ஜீவப் பிரம்ம ஐக்கியரூபமான*

யோகத்தை அடைவாய் என போதிக்கவும், உடனேயே அர்ஜுனனுக்கு அத்தகைய தெய்வநிலை கூடிய ஸ்திதப் பிரக்ஞனின் இலட்சணங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற உற்சாகம் பெருகி அதனையே முதலில் கேட்டுத் தெரிந்து கொண்டான். அதன் பிறகு பகவான் அதற்கான பதிலை, ஸ்திதப் பிரக்ஞனின் இலட்சணங்களைக் கூறி முடித்தவுடன், அர்ஜுனன் தன் பழைய சந்தேகத்தை அவர் முன் வைத்தான். இம் மூன்றாம் அத்தியாயத்தின் முதலில் உள்ள இரண்டு சுலோகங்கள் அவனது சந்தேகத்தைப் பற்றினதேயாகும்.

**அர்ஜுன உவாச:-**

2. வ்யாமிச்ரேணேவ வாக்யேன புத்திம் மோஹயவ மே।
தததேகம் வத நிஸ்சித்ய யேன ச்ரேயோ அஹமாப்னுயாம்॥ (2)

*அர்ஜுனன் சொன்னது:*

**சொற்பொருள்:**

*வ்யாமிச்ரேணேவ - முரண்படுவதைப் போல இருக்கின்ற, வாக்யேன - வாக்கியத்தினால், மே - எனது, புத்திம் - புத்தியை, மோஹயஸி இவ - குழப்பமடையச் செய்கிறாய் அஹம் - நான், யேன - எதனால், ச்ரேயஸ மேன்மையை, ஆப்னுயாம் - அடைதல்கூடும்இ ததேகம் - அத்தகையதைக் (கர்மாவோ அல்லது ஞானமோ) நிஸ்சித்ய - நிச்சயமாக, வத - சொல்லும்.*

**கருத்துரை:**

*(கிருஷ்ணா!) முரண்படுபவை போன்ற நின் வாக்கியங்களால் என் புத்தியை குழப்புகின்றீர், எனவே நான் எதனால் மேன்மையடைதல் இயலும் என்பதை (கர்மாவினால், யோகத்தினால்) என்று நிச்சயமாகக் கூறும்!*

**விளக்கம் :-**

*'இவ' (போன்று) என்ற சொல்லை அர்ஜுனன் இரண்டு இடங்களில் இச்சுலோகத்தில் பயன்படுத்தியுள்ளமையால், ஸ்ரீ கிருஷ்ணர் உண்மையில் குழப்பமடையக் கூடிய*

வாக்கியங்களை, சந்தேகம் எழக் கூடிய வாக்கியங்களை, சொல்லவில்லை யாயினும், அர்ஜுனனுக்குத் தன் அஞ்ஞானத்தால் அவ்வாறு தோன்றியது என்னும் பொருள் குறிப்பாகச் சொல்லப்பட்டதெனலாம்.

முன்னுரை :

*அர்ஜுனனின் இவ்வினாக்களுக்கு பகவான் பதிலுரைத்து முக்தியடைவதற்கான இரண்டு மார்க்கங்களைப் பற்றியும் கூறுகிறார்,*

ஸ்ரீ பகவானுவாச:-

3. லோகே அஸ்மின் த்விவிதா நிஷ்டா புரா ப்ரோக்தா மயானக!
ஞான யோகேன ஸாங்க்யானாம் கர்மயோகேன யோகினாம்!! (3)

*ஸ்ரீ பகவான் சொன்னது :-*

சொற்பொருள்:

*அனக ! - பாவமற்ற அர்ஜுனா? புரா - முன்பே, லோகே அஸ்மின் - இவ்வுலகில், மயா - என்னால், சாங்க்யானாம் - தத்துவ விசாரணை செய்பவர்களுக்கு (ஞானமார்க்கத்தில் உள்ளவர்களுக்கு), ஞான யோகேன - ஞான யோகத்தினாலும், யோகினாம் யோகியர்க்கு, நிஷ்டா - அனுஷ்டான முறைகள், ப்ரோக்தா - சொல்லப்பட்டிருக்கின்றன,*

கருத்துரை:

*பாவமற்ற அர்ஜுனா! தத்வ விசாரம் செய்பவர்களுக்கு ஞானயோகம் என்றும், அதை அனுஷ்டிக்கிறவர்களுக்கு கர்மயோகம் என்றும் இரண்டு நெறிகள் இதற்கு முன்பே என்னால் இயம்பப்பட்டிருக்கின்றன.*

விளக்கம்:

*அனக - பாபமற்றவனே! என்று அர்ஜுனனை கிருஷ்ணர் இங்கு அழைக்கிறார், சித்தம் பாவமின்றி இருக்கும் போதே*

பிரம்ம வித்தை நன்கு ஏற்கும். துணியில் அழுக்கற்றிருக்கும் போதே சாயம் ஏறுவதைப்போல, வேதாந்த போதனைக்கு, ஆன்ம விசாரணைக்கு அர்ஜுனன் தன் பாவமற்ற தன்மையால் அருகதை யுடையவனாகிறான், அவன் பாவ மற்றவன் ஆதலால்தான் ஸ்ரீ கிருஷ்ணர் அவனது தகுதியைக் கருதி கீதா ஞானம் என்ற ஆன்மீக உபதேசத்தைச் செய்தார்.

ஜீவர்களின் மன நிலையை யனுசரித்து, ஒவ்வொரு வருக்கும் ஏற்றவகையில் ஒவ்வொரு வழியில் ஈடுபாடு ஏற்படும் சிலருக்கு தத்துவ விசாரணையில் ஈடுபாடிருக்கும். இவர்கள் சாங்கியர்கள், ஞான யோகியர்கள், இத்தகையோர்க்கு ஞான யோகமே சிறந்தது. இத்தகையவர்க்காக பகவான் முன்பே ஞானயோகம் என்ற சாதனைகளைக் கூறியுள்ளார். மற்றும் சிலருக்கு கர்மமார்கத்தில் ஈடுபாடு இருக்கும். அவர்கள் யோகிகள். அத்தகையவர்க்கு அவரது மனநிலையையனுசரித்து கர்ம யோகமே போதிக்கப்பட வேண்டும். அவர்களுக்கு ஸர்வேசுவரன் முன்பே கர்ம யோகத்தைப் போதித்தார். அவரவர் வழியைப் பின்பற்ற இங்கு முழுமையான சுதந்திரம் உண்டு. பலாத்காரம் ஏதுமில்லை. ஏனெனில் ஏதெனும் ஓர்வழி அவனது இயல்பிற்கு மாறாக இருக்குமேயானால், அதனை அவன் மீது திணிக்க முயன்றால் அது எதிர்மாறான பலனைத்தான் கொடுக்கும். ஓரிடத்தைச் சேர்வதற்கு பலவழிகள் இருக்கக்கூடும். ஒரு சிகரத்தை அடைவதற்கு பலவழிகள் இருக்கக்கூடும். எந்த வழியில் பயணம் செய்தாலும் முடிவில் சேர வேண்டிய இடத்தைச் சேருவர். எனவே எவர்க்கு எவ்வழியில் நாட்டம் ஏற்படுகிறதோ, அதனையே பின்பற்றி மிகுந்த பக்தியுடனும், ஈடுபாட்டுடனும் செய்துவந்தால், தம் இலக்கான பரமாத்மாவை அடைதல் கூடும் என்று பகவான் இங்கு சொல்கிறார். கீதையில் பலவித யோகங்களைப் பற்றிக் கூறப்பட்டிருப்பினும் அவையனைத்தும் 'ஞான கர்ம யோகம்' என்ற இரண்டிலேயே பாகுபடுத்திக் கூறவியலும்.

பூர்வம் (சிருஷ்டி ஆரம்பித்தல்) ஸ்ரீ கிருஷ்ணர் இவ்விரண்டு யோகங்களையும் போதித்ததாகச் சொல்வதால், ஸ்ரீ கிருஷ்ணர் திரிகால ஞானியென்றும், தேச காலங்களினால்

பிரிக்கப்படாதவர் என்றும், சாக்ஷாத் பரமாத்மாவே யென்பதும் தெளிவாகிறது.

வினா :

முன்பே பகவான் மக்களைக் கரையேற்ற எத்துணை வழிகளில் போதித்தார் ? அவையாவன ?

விடை :

இரண்டு வழிகளைப் போதித்தார்.

1. ஞானயோகம் (சாங்கியர்களுக்குப் பயன்படும் யோக வழி)

2. கர்மயோகம் (கர்ம யோகிகளுக்குப் பயன்படுவது)

முன்னுரை:

இவ்விரண்டு வழிகளிலும் செயல்களை ஆற்றாது இருப்பதனால் மட்டும் மோக்ஷம் கிடைத்து விடாது என்பதை உறுதியாகக் கூறுகிறார்.

4. ந கர்மணாமனாரம்பாந்நைஷ்கர்ம்யம் புருஷோ அச்னுதே।
ந ச ஸந்யஸனாதேவ ஸித்திம் ஸமதிகச்சதி॥ (4)

சொற்பொருள்:

புருஷஹ - மனிதன், கர்மாணாம் - செயல்களை, அனாரம்பாத் - அனுசரிக்காமல் விடுவதால், நைஷ் கர்ம்யம் - நிஷ்காமமான ஆத்ம சொரூப நிலையை, ந அச்னுதே - அடைகிறானில்லை, ஸன்யஸனாத் ஏவ - செயலற்று இருப்பதனால் மட்டுமே, சித்திம் - மோக்ஷத்தை, ந ஸ ஸமதிகச்சதி - பெறுவதேயில்லை.

கருத்துரை:

மனிதன் செயல்களாற்றியிருப்பதனால் மட்டும் கர்மமற்ற நிலையை (ஆத்ம ஸ்வரூப ஸ்திதியை) அடைந்து விடுவதில்லை. கர்ம தியாகம் செய்வதால் (ஸந்நியாசத்தால்) மோக்ஷ சித்தியைப் பெறுவதுமில்லை.

**விளக்கம்:**

இந்த சுலோகத்தில் முதல் பாதம் கர்ம மார்கத்தைக் குறித்தும், இரண்டாம் பாதம் ஞான மார்கத்தைக் குறித்தும் சொல்கிறது. கர்ம மார்க்கத்தை அனுசரிப்பவர், தாம் செய்ய வேண்டியவற்றை தம் கடமைகளை, தன் நித்ய கர்மங்களை (நிஷ்காமமாக) செய்து வராவிடில் அவனுக்கு சித்தம் சுத்தமடைவதில்லை. அந்நிலையில் நைஷ்கர்ம்ய ஆத்மஸ்திதியை சேர்வதில்லை. அவ்வாறே ஞானமார்க்கத்தில் இருப்பவர் புற சந்நியாசத்தால், கர்மத்தியாகத்தால் மோக்ஷத்தை என்றும் அடைய முடியாது. ஏனெனில் மோக்ஷத்திற்கு உள் முகமான சந்நியாசம், வாசனைகளற்ற நிலை ஆகியவை முக்கியமாக தேவைப்படுகிறது. இவ்வாறு எந்த முறையில் பார்த்தாலும் வெறும் கர்மத்தியாகம் மோக்ஷத்திற்குக் காரணமாவதில்லை என்று பகவான் கூறுகிறார்.

கர்மங்களை நிஷ்காமமாக செய்யாவிடின் சித்தசுத்தி ஏற்வடுவதில்லை. சித்த சுத்தி ஏற்படாவிட்டால் ஞானம் தோன்றுவதில்லை. ஞானம் தோன்றாவிடின் மோக்ஷம் (நைஷ்கர்ம்ய ஆத்ம ஸ்திதி) கூடுவதில்லை. எனவேதான் பகவான் இங்கு கர்மாக்களை செய்யாவிடில் மோக்ஷபதவி கிடைப்பதில்லை என்று வாக்களித்துள்ளார். முதன் முதலில் ஒவ்வொருவரும் தத்தம் கடமைகளை செய்துவந்தால்தான் கடைசியில் ஞான நிஷ்டையில் ஆத்மானுபவத்தை அடைகிறார்கள். செயல்களைச் செய்யாது விட்டு விடுவதால் மாத்திரம் மோக்ஷஸ்திதியை எவரும் அடைவதில்லை. மேலும் அத்தகையோர் சோம்பேறிகளாய் வாழ்க்கையை வீணாகச் தவம் செய்து கடத்துவர். எனவே கர்மங்களற்ற பரபிரம்மத்தை அடையவேண்டுமென்று கருதி முதலிலேயே செயலாற்றாது மக்கள், ஆன்மீக நிலைக்கோ இவ்வுலகிற்கோ பயன்படாது இரண்டிற்கும் உதவாத நிலைமை எய்திவிடாது பார்த்துகொள்ள வேண்டும்.

தாமத குணத்திலிருந்து ரஜோ குணத்திற்கு, ரஜோ குணத்தினின்றும் ஸத்வ குணத்திற்கு, சத்வத்தினின்றும் விசுத்த

தத்வத்திற்கு அல்லது குணாதீதத்திற்கு ஜீவன் முறையாகப் பயணம் செய்தல் வேண்டும். அத்தகைய நிலை முதலில் தத்தம் கடமைகளைச் செய்வதாலேயே சாத்தியமாகுமே தவிர கர்மாக்களை செய்யாமல் இருப்பதால் அல்ல. எனவேதான் இங்கு பகவான் நிஷ்கர்மய நிலையான மோக்ஷம் சாமான்யமானது அல்ல என்றும், அது திடீரென வந்து நேர்வதில்லை என்றும், கர்மாக்களை செய்யாது, சித்த சுத்தியைக் கொடுக்கக் கூடிய நிஷ்காம கர்மாவைச் செய்யாது விட்டால் அந்நிலை எக்காலத்தும் அடைவதில்லை எனப் பறை அறைந்து சொல்வதைப் போல் தீர்மானமாகச் சொல்கிறார். மேலும் மனத்தில் வாசனைகளுடன் புறத்தில் மாத்திரம் அனைத்தையும் விட்டுவிட்டால் மாத்திரம் விடுத்து மனிதன் சாதிக்கக் கூடியது எதுவுமில்லை. புறச் சந்நியாசத்தால் மட்டும் இலட்சியத்தை அடையமுடியாதென்றும் கீதாச்சார்யன் இங்கு தெளிவுறுத்துகிறார். கர்மாவைச் செய்வதோ செய்யாது ஒதுங்குவதோ பெரிதல்ல. உள்ளிருக்கும் வாசனைகளை அறவே அகற்ற வேண்டும். சித்தம் தெளிவாக இருத்தல் வேண்டும். அதுவே முக்கியமானது. அதுவோ முதலில் கர்மாக்களைச் சரிவர செய்து வந்தால் தான் சாத்தியமாகும். எனவே பகவான் கர்மாவைச் செய்தலை (நிஷ்காம கர்ம யோகத்தை) இங்கு சரிவரச் செய்யக் கோருகிறார். இவ்வாறாக சோம்பேறிகளுக்கு சர்வேசுவரன் சரியான அறிவுரை கூறுகின்றார். இதனை ஏற்று முதலில் ஒவ்வொருவரும் அவரவர் கடமைகளைச் சித்திக்காகவும், ஏதோ தம்மால் இயன்ற நற்காரியத்தை தெய்வத்தை திருப்திபடுத்தவும் (பலனை எதிர்பாராது) செய்து வந்தேயாக வேண்டும் என்பது தெளிவாகின்றது.

**வினா:**

மோக்ஷம் எதனால் கிடைக்கிறது ?

**விடை:**

(சித்த சுத்திக்காக) கர்மாக்களை செய்யாது இருந்தாலும், வெளியில் மாத்திரம் சந்நியாசம் ஏற்பதால் மட்டும் மோக்ஷம் கிடைக்காது.

**வினா:**

*அப்படியானால் மோக்ஷம் கிடைக்காது என்பது எதனால் தெரியும்?*

**விடை:**

*நிஷ்காம கர்மாவை முறையாகச் செய்து வந்தால் மோக்ஷம் கிடைக்கும். மேலும் உள் சந்நியாசம், அதாவது, வாசனைகளைத் தியாகம் செய்வதால் மோக்ஷம் கிடைக்கக்கூடும்.*

**முன்னுரை:**

*கர்மயோகத்தின் அவசியத்தை பகவான் இன்னும் தெளிவாகக் கூறி முதலில் கர்மத்தியாகம் செய்தல் மிகவும் கடினம் என்கிறார்.*

**5 ந ஹி கஸ்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத்।**
**கார்யதே ஹ்யவசஹ கர்ம ஸர்வஹ ப்ரக்ருதி**
**ஜைர்குணைஹி॥ (5)**

**சொற்பொருள்:**

*கஸ்சித் - எவரும், ஜாது - எப்பொழுதாவது, க்ஷணமபி - கணப் பொழுதாவது, அகர்மக்ருத் - செயலாற்றாது, ந ஹி திஷ்டதி - இருக்க இயலாதல்லவா ? ஹி - ஏனெனில், ப்ரக்ருதிஜைஹி - பிரகிருதியினின்று (மாயையால்) ஜனித்து, குணைஹி - குணங்களினால், ஸர்வஹ - (அஞ்ஞானியான) ஒவ்வொருவரும், அவசஹ - தன்வயம் இழந்து, கர்ம - கர்மாவை, கார்யதே - செய்விக்கப்படுகிறான்.*

**கருத்துரை:**

*(உலகில்) எவனொருவனும் ஒரு கணமாயினும் செயலாற்றாது இருத்தல் இயலாது. இயற்கையினால், பிறந்து நிமிடத்திலிருந்தே ஒவ்வொருவனும் தன்வயமின்றியே கர்மாக்களை செய்து கொண்டேயிருக்கிறான்.*

**விளக்கம்:**

செயலாற்றது எவரும் ஒருகணமேனும் இருத்தல் இயலாது. மூச்சு வாங்குதல், உண்டல், நடத்தல், பேசுதல் இவையனைத்தும் செயல்களே இவையின்றி உலகில் இருத்தல் இயலுமா ? எனவே அனைவருக்கும் செயல் என்பது தவிர்க்க முடியாதது. மற்றும் ஞானியைத் தவிர மற்றைய ஜீவன்கள் அனைவரும் மாயைக்கு, பிரகிருதிக்கு உட்பட்டவர்களே. இயற்கையில் உதித்த குணங்களான முக்குணங்களுக்குட்பட்டு அவர்கள் நடக்கின்றனர். எனவே அவ்வக்குணங்களை அனுசரித்து செயல்களை தவறாது அனுசரித்துக் கொண்டிருப்பர். ஆயின் இங்கு ஸர்வஹ என்னும் சொல்லுக்கு ஜீவன் முக்தர்களான மகனீயர்களைத் தவிர மற்றையோர் என்ற பொருள் கொள்ளவேண்டும். ஏனெனில் அவர்களை குணாதீதமான ஆத்ம நிலையை அடைந்தவர்கள். குணங்களுக்குக் கட்டுப் பட்டவர்கள் அல்லர். அவர்களை மாயையால் ஒன்றும் செய்ய இயலாது. ஆயினும் அவர்களது தேக இந்திரியங்கள் இயற்கைக்கு உட்பட்டவையேயாதலால் அவை தன்னிச்சையாக செயலாற்றிக் கொண்டேயிருப்பினும், அவர்கள் செயலின்றித் தனியேயிருப்பர்.

இனி அஞ்ஞானிகள் இயற்கைக்கு, அதன் குணங்களுக்கு உட்பட்டு இருப்பினும், அதனால் உற்சாகமிழக்க வேண்டிய அவசியமில்லை. ஆண் மகனைப் போன்று தைரியத்துடனும் உற்சாகத்துடனும் சுத்தமான செயலால் அசுத்த செயல்களையும் புண்ணியத்தினால் பாவத்தினையும், உருவிழக்கச் செய்து ஈசுவரார்ப்பண புத்தியும் சத்கர்மங்களைச் செய்து வந்து, நிஷ்காமமாக இருப்பின் முறையாக மனத்தெளிவற்றவரும் மோக்ஷ ஸ்திதியை அடைய முடியும்.

**முன்னுரை:**

இந்திரியங்களை செயலாற்றாது வைத்திருப்பது கர்மத்தியாகம் (செயலற்ற தன்மை) எந்நாளும் இயலாது என்கிறார்.

6. கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மனஸா ஸ்மரன்।
இந்திரியார்த்தான் விமூடாத்மா மித்யாசாரஹ ஸ
உச்யதே॥ (6)

சொற்பொருள்:

யஹ - எவன், கர்மேந்த்ரியாணி - கர்மேந்திரிய ஞானேந்திரியங்களை ஸம்யம்ய - அடக்கி, மனஸா - மனத்தினால், இந்திரியார்த்தான் - இந்திரியங்களின் (சப்தாதி) விஷயங்களை, ஸ்மரன் - சிந்தித்து, ஆஸ்தே - இருக்கிறானோ, விமூடாத்மா - விவேக மற்றவன் ஆகிய ஸஹ - அவன், மித்யாசாரஹ - பொய்யொழுக்கம் உடையவன் என்று, உச்யதே - சொல்லப்படுகிறான்.

கருத்துரை :

எவன் கர்மேந்திரிய ஞானேந்திரியங்களை அடக்கி மனதினால் இந்திரியங்களின் சப்தாதி விஷயங்களை சிந்தித்து இருக்கிறானோ, மூட சித்தனான அவன் கபட வேடதாரி பொய்யொழுக்கமுடையவன் என்று சொல்லப்படுகிறான்.

விளக்கம்:

இங்கு கர்மேந்த்திரியாணி என்ற சொல்லிற்கு கர்மேந்திரிய, ஞானேந்திரியங்கள் இரண்டையும் என்று பொருள் கொள்ள வேண்டும். ஏனெனில் சில இந்திரியங்களை மட்டுமே குறிப்பிட்டால் ஆடம்பரமான சித்திரம் போன்று குறையுள்ளதாகவே இருக்கும்.

ஸம்யம்ய - இது சாதகன் பயிற்சி செய்யும் அடக்கம் அல்ல. ஏனெனில் அத்தகைய மன அடக்கம் உடையவனாகான். வெறும் ஆடம்பரத்திற்காக இந்திரியங்களை அடக்கி, அமர்ந்து, மனதால் மூன்று உலகமும் திரிபவனைப் பற்றியே இங்கு சொல்லப்பட்டது. ஆயின் ஆரம்பத்தில் சில சாதகர்களும் தியானத்தில் மனம் தெய்வத்தின் மீது நிலை பெறாது (இலக்கின் மீது) பல திக்கிலும் அலைந்து கொண்டிருக்கும். அதற்கும் இந்த ஆடம்பர வேடதாரியின்

நடவடிக்கைக்கும் பெரிய வித்தியாசம் உண்டு. ஏனெனில் முமுக்ஷு தன் மனம் விஷயங்களின் மீது திரும்பினாலும் அதனின்றும் மறுபடியும் திசை திருப்பி ஆன்மாவில் (தெய்வத்தின் மீது) நிலைநிறுத்த முயற்சி செய்வான். ஆடம்பர வேடதாரி அவ்வாறு செய்யான்.

சாதகனுக்கு உண்மையான எண்ணம், வேடதாரிக்கோ கபட எண்ணம். இவன் செய்வது துர் எண்ணத்துடன் செய்வது செயற்கையான, கொக்கு மீனுக்காகத் தியானம் செய்வதைப் போன்றது.

ஆன்மீக சாதனையை ஆரம்பிக்கையில் முமுக்ஷு அதன் வழிமுறைகளை நன்றாக அறிந்து கொள்ள வேண்டும் என்பது இச்சுலோகத்தால் தெளிவாகிறது. இல்லையெனில் இடையிலேயே நின்றுபோகும். பெரிய மகான்களிடமும், அனுபவம் நிறைந்த குரு மூலமாகவும் தெரிந்து கொள்ளவேண்டும். இந்திரியக் கட்டுப்பாடு மிகவும் அவசியமானது என்ற சூத்திரத்தை மட்டும் தெரிந்து கொண்டு, அதன் ஆழ அகலங்களை உணராதிருப்பின் இந்திரியங்களை அடக்கி, மனதை உலக வியவகாரங்களில், விஷய போகங்களிலும் அலைய விடுதலே நேரும். எனவே இத்தகைய ஆபத்தான நிலையைக் கருதியே பரமகுருவான ஸ்ரீ கிருஷ்ணர் அத்தகையோரை சரிசெய்வதற்காக கீதா சாஸ்திரத்தில் இவ்விதமாக எச்சரிக்கைகள் பலவற்றை அவ்வப்போது சொல்லிக் கொண்டே போவார்.

உலகில் யோகிகளைப் போன்று நடிக்கும் அஞ்ஞானிகள் சிலர் இருக்கக் கூடும். உலகைத் துறப்பதற்காக இந்திரியங்களைக் கட்டுப்படுத்தி ஓரிடத்தில் அமர்ந்திருப்பினும், மனம் வாசனை மயமாய் இருப்பதால் அது மூன்று உலகங்களிலும் சஞ்சரிக்கும். ஒரு பக்கம் உலக சுகத்திற்கும் மறுபக்கம் தெய்வ சுகத்திற்கும் அவர்கள் தீமை செய்தவரேயாவர். எனவே தான் பகவான் இத்தகையோர்க்கு மூடர்கள் என்ற சொல் மாத்திரம் போதாது என்று விமூடர்கள் என்கிறார்.

இந்திரியங்களுக்கு சுயமாக விஷயங்களை அனுபவிக்கும் சக்தியோ, தெரிந்து கொள்ளும் சக்தியோ இல்லை. மனம் அவற்றோடு சேர்ந்தால் தான் அவ்வச்சக்திகள் அவற்றுக்கு ஏற்படும். எனவே மனதுடன் இந்திரியங்களையும் கட்டுப்படுத்துவதால் பயனுண்டே தவிர, வெறும் இந்திரியங்களை மட்டும் கட்டுப்படுத்தினால் பலன் இல்லை. அவ்வாறு மனதைக் கட்டுப்படுத்தி வைத்திருந்தால் அதன் பிறகு ஒருவேளை இந்திரியங்கள் தேகத்திற்கு மிக அவசியமான அன்னபானாதி விஷயங்களில் ஈடுபட்டாலும் ஆபத்து ஏதுமில்லை, இவ்விஷயத்தையே இனிவரும் சுலோகத்தில் கீதாச்சார்யன் தெரிவிக்கிறார்.

**வினா:**

பொய்யொழுக்கம் என்றால் என்ன ?

**விடை:**

இந்திரியங்களை மாத்திரமே அடக்கி, மனத்தினால் மூன்று உலகங்களிலும் சஞ்சரித்தல், விஷயங்களைப் பற்றி நினைத்தல் பொய்யொழுக்கம் (ஆடம்பரம்) ஆகும்.

**முன்னுரை:**

மனதில் ஆசைகளை விடுத்து, இந்திரியங்களால் நிஷ்காமமாக கர்மங்களைச் செய்து வருபவன் உத்தமன் என்கிறார்.

**7. யஸ்த்விந்திரியாணி மனஸா நியம்யாரபதே அர்ஜுன!**
**கர்மேந்திரியைஹ் கர்மயோகமஸக்தஹ் ஸ**
**விசிஷ்யதே|| (7)**

**சொற்பொருள்:**

அர்ஜுன - ஓ அர்ஜுனா! யஸ்து - எவனொருவன், இந்த்ரியாணி - இந்திரியங்களை, மனஸா - மனதால், நியம்ய அடக்கி, கர்மேந்திரியைஹி - கர்மேந்திரிய ஞானேந்திரியங் களால், கர்மயோகம் - கர்மயோகத்தை, அஸக்தஹ - பற்றற்று,

ஆரபதே - செய்கிறானோ, ஸஹ - அவன் விசிஷ்யதே - சிறந்தவனாவான்.

**கருத்து:**

*அர்ஜுனா! எவன் இந்திரியங்கள் அனைத்தையும் மனத்துடன் அடக்கி அவற்றால் கர்மயோகத்தைப் பற்றற்று செய்து வருகிறானோ, அவன் உத்தமன்,*

**விளக்கம்:**

முன் சுலோகத்தைப் போலவே இங்கும் 'இந்த்ரியாணி' 'கர்மேந்திரியைஹி' என்ற சொற்களால் இந்திரியங்கள் அனைத்தும் என்று பொருள்படும். ஏனெனில் கர்மேந்திரியங்களாலேயே செய்யப்படும் கர்மயோகம் முழுமையாகாது.

மனதினைச் சரியாகக் கட்டுப்படுத்தி (அதில் வாசனைகளை அகற்றி), இந்திரியங்களை பற்றற்றதன்மையுடையதாக்கி விஷயங்கள் அதனைத் தாக்காது (சக்தியற்றதாய் செய்து) பலன் கருதாது கர்மாக்களைச் செய்துவந்தால் மனிதன் முக்தியடைவான். இந்திரியங்கள் மனதிற்குக் கட்டுப்பட்டு இருத்தல் வேண்டும். மனது நம் கட்டுக்குள் இருத்தல் வேண்டும். இந்திரியங்கள் தத்தம் காரியங்களை செய்யினும், செய்யாதிருப்பினும் மனதின் சக்தியே பந்தத்திற்குக் காரணமாகிறது. மனது சக்தியற்றுப் போனால் மோஹத்திற்குக் காரணமாகிறது. எனவே அத்தகைய சக்தி, விஷயவாசனை மனதில் இல்லாமல் செய்து கொண்டு, இந்திரியங்களை காரியங்களில் ஈடுபடுத்தினாலும் குற்றம் ஏற்படாது என்று பகவான் தெரிவிக்கிறார். எனவேதான் மகனீயர்கள் முதன்முதலில் மனதைக் கட்டுப்படுத்துவதை பயிற்சி செய்து, இந்திரியங்களை தம் கட்டுக்குள் கொணர்ந்து. அத்தகைய, சுத்தமான இந்திரியங்களால் உலக நன்மைக்காகச் செயலாற்றுவர்.

**வினா :**

*கர்மயோகத்தை எவ்வாறு செய்தல் வேண்டும் ?*

விடை:

இந்திரியங்களைக் கட்டுப்படுத்தி அத்தகைய நியமேந்திரியங்களால் வாசனைகளற்ற புத்தியுடன் கர்மயோகத்தைச் செய்தல் வேண்டும்.

முன்னுரை:

'எனவே சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட நியமங்களான செயல்களை (நிஷ்காம புத்தியுடன் தவறாது) செய்ய வேண்டும் என்று பகவான் அர்ஜுனனை வேண்டுகிறார்.

8. நியதம் குரு கர்ம த்வம் கர்மஜ்யாயோ ஹ்யகர்மணஹ|
சரீரயாத்ராபி ச தே ந பிரஸித்யேதகர்மணஹ|| (8)

சொற்பொருள்:

'த்வம் - நீ, நியதம் - (சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ள) நியமங்களை, கர்ம - கர்மாக்களை, குரு -செய், அகர்மணஹ - கர்மம் செய்யாதிருப்பதை விட, கர்ம - கர்மம் (செய்வது), ஜ்யாயோஹி - சிறந்ததல்லவா?, அகர்மணஹ கர்மம் செய்யாதிருப்பதனால், தே - உனக்கு, சரீரயாத்ராபிச - சரீரத்தைப் பேணுவதும், ந ப்ரஸித்த்யேத் - சாத்தியமாகாது'

கருத்து :

(ஏ அர்ஜுனா!) நீ (சாஸ்திரங்களில்) நியமிக்கப்பட்ட கர்மங்களைச் செய். கர்மாவைச் செய்யாதிருப்பதை விட செய்வதே மேல். மேலும் கர்மம் செய்யாதிருப்பதால் உனக்கு தேகத்தைப் பேணுவது கூட இயலாது.

விளக்கம் :

'நான் என்ன செய்ய வேண்டுமென்பதை விளக்கமாக சொல் கிருஷ்ணா!' என்று இவ்வத்தியாயத்தின் ஆரம்பத்தில் அர்ஜுனன் கேட்ட வினாவிற்கு ஸ்ரீ கிருஷ்ணம் 'நியதம் குருகர்மா' (நீங்கள் கர்மத்தை விடாது சாஸ்திரத்தில் நியமிக்கப்பட்ட கர்மங்களைச் செய்) என்று இங்கு மிகத் தெளிவாக ஆணையிடுகிறார். நியமிக்கப்பட்ட கர்மங்களைச்

செய்வதால் சித்தம் சுத்தமடைந்து, ஆன்ம ஞானோதயம் ஏற்படும். கர்மாவைச் செய்யாது விடுத்து வாளாவிருப்பதால் ஏதும் சித்திக்காது அதனை விட கர்மாவைச் செய்வதே சிறந்தது, அதுவும் நற்காரியங்களை, தெய்வ காரியங்களாயின் இன்னும் மேலானது என்று பகவான் சொல்கிறார், இன்னும் ஒருவிதமாகப் பார்த்தால், கர்மாவைச் செய்யாதிருப்பின் சரீரம் நிலைப்பதே கடினம் என்றும், தேகத்தைப் பேணுவது கூடச் சரியாகச் செய்ய இயலாது போய்விடும் என்றும் கூறி கர்மாவைச் செய்யுமாறு அனைவரையும் தூண்டுகிறார்.

**வினா :**

*கர்மாவைச் செய்தல் சிறந்ததா ? செய்யாமல் இருப்பது சிறந்ததா?*

**விடை:**

செய்வதே மேல்.

**வினா:**

*எத்தகைய கர்மாவைச் செய்தல் வேண்டும்?*

**விடை**

*சாஸ்திரங்களில் நியமிக்கப்பட்டவற்றைச் செய்தல் வேண்டும்.*

**வினா:**

*கர்மாவைச் செய்யாதிருப்பதால் ஏற்படும் கேடு என்ன?*

**விடை:**

*1. சித்தம் சுத்தியடைவதில்லை, சித்த சுத்தி இல்லாமையால் ஞானம் உதயமாவதில்லை, ஞானம் இல்லாவிடில் மோக்ஷம் சித்திப்பதில்லை, 2. கர்மாவைச் செய்யாவிடில் தேகத்தைப் பேணுவது கூட கடினமாய்விடும்.*

**முன்னுரை :**

*கர்ம பந்தத்தினின்றும் விடுபடுவதற்கான வழிகளைக் கூறுகிறார்.*

**9. யக்ஞார்த்தாத் கர்மணோ அன்யத்ர லோகோ அயம்
கர்மபந்தனஹ|
ததர்த்தம் கர்ம கௌந்தேய முக்தஸங்கஹ ஸமாசர|| (9)**

**சொற்பொருள் :**

*கௌந்தேய! - அர்ஜுனா! யக்ஞார்த்தாத் - யக்ஞத்துக்கான (பகவத் விஷயமான) கர்மணஹ - கர்மாவைவிட, அன்யத்ர - பிற கர்மங்கள்) அயம் லோகஹ - இவ்வுலகம் (மக்கள்) கர்ம பந்தனஹ - கர்மத்தால் கட்டுண்டவர் ஆகின்றனர். (எனவே), ததர்த்தம் - யக்ஞத்திற்காகவாவது, கர்ம - கர்மாவை, முக்தஸங்கஹ - பற்றினை விடுத்து, சமாசர - நன்கு செய்க!*

**கருத்துரை :**

*அர்ஜுனா! யக்ஞத்திற்காகவாவது, (தெய்வ திருப்தியாக) அல்லது உலக நன்மைக்காக காரியங்களைத் தவிர ஏனைய கர்மங்களால் மக்கள் கர்மபந்தத்தை அடைகின்றனர். எனவே யக்ஞத்திற்காகவாவது பற்றற்று (பலனை எதிர் பாராது) செய்க.*

**விளக்கம் :**

*கீதையில் ஸ்ரீ கிருஷ்ணர் யக்ஞம், சந்நியாசம், தியாகம் முதலான சொற்களுக்குப் புதிய விளக்கங்களைக் கூறியுள்ளார். யக்ஞத்தை சாதாரணமாக அக்னிஹோத்ரம், மந்திரம், தந்திரம், ருத்விக் இவைகளுடன் கூடிய ஒவ்வொரு கிரியைகளையும் வர்ணித்துச் சொல்லாமல், பகவத் விஷயமான அல்லது பிறருக்கு நன்மை விளைவிக்கக் கூடிய கிரியைகளாக வர்ணித்துச் சொல்கிறார் இத்தகைய யக்ஞம் ஒவ்வொருவருக்கும் ஆற்றுதல் இயலாதென்பதால் இதனைப் பின்பற்றினால் ஒவ்வொருவரும் கடைத் தேறுதல் திண்ணம், சாதாரணமாக கர்மா ஸம்சார பந்தத்தினை ஏற்படுத்தும் என்பது உலக வழக்கு, புண்ய காரியங்களைச் செய்தாலும், அப்புண்யத்தின் பலனை அனுபவிப்பதற்காகவேனும் மறுபடியும் பிறத்தல் வேண்டுமென்றும், எனவே அத்தகைய கர்மாக்களைச் செய்தல் கூடாது என்றும் சிலர் பயம் ஏற்படுத்துவர், ஆனால் கீதாச்சார்யன் அவ்வாறான*

பயங்களைப் போக்குகிறார், சமமாகப் பலனை எதிர்பார்த்துச் செய்யப்படும் கர்மமே பிறப்புடன் கூடிய சம்சாரத்திற்குக் காரணமாகி பந்தத்தை ஏற்படுத்துகிறது. நிஷ்காமபுத்தியுடன் ஆற்றப்படும் எல்லா கர்மாக்களும் பந்தத்தை ஏற்படுத்தாது என்கிறார். பகவத் விஷயமான கர்மாக்களையோ, உலக நன்மைக்காக செய்யப்படுபவையோ பலனை எதிர்பாராது செய்யப்படுவதால், பந்தம் ஒருபோதும் ஏற்படுத்துவதில்லை, மேலும், அத்தகைய நிஷ்காம கர்ம சித்த சுத்தியால் மோக்ஷத்திற்கு வழியாகிறது.

கர்மாவின் மீது பற்றற்று செய்துவந்தால், சித்த சுத்தியால் மோக்ஷம் சித்திக்கும். எனவே கர்மாவின் மீது எவ்வித தோஷமும் இல்லை. அதனைச் செய்யும் முறையிலேயே உள்ளது.

சகாமமாகச் செய்வதே குறையானது,

ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனிடம், 'கர்மாக்களை நன்றாக ஆற்று' ('ஸமாசர') என்று சொல்லி கர்மயோகத்தை வலியுறுத்துகிறார். அப்படியாயின் கர்மாக்களை எவ்வாறு செய்ய வேண்டும் என்னும் முறையைத் தெரிந்து கொள்க என எச்சரிக்கிறார். கர்ம இரகசியம், கர்மாவின் முக்கியத்துவம் தெரிந்து கொண்டே கர்மாவைச் செய்தல் வேண்டும். இல்லாவிடில் அதில் சிக்கிக் கொள்ளவேண்டி வரும். அக் கர்ம இரகசியத்தைப் பகவான் இங்கு இரண்டு சுலோகங்களின் மூலமாகத் தெரிவிக்கிறார். அவையெவை எனில், -

1. யக்ஞத்திற்காகவேனும் ( பகவானை திருப்தி செய்யும் வகையிலான, அல்லது உலக நன்மைக்காக) கர்மாக்களையே செய்தல் வேண்டும். 2. கர்மாக்களை பற்றற்று, பலனைக் கருதாது செய்தல் வேண்டும். இவ்வாறாக செய்யப்படும் கர்மா சாதாரணமானது ஆயினும் மஹாயக்ஞமாக மாறிப்போய், ஜீவனுக்கு மிக்க நன்மையை அளிக்கும். அப்போது கர்மா கர்மாகவே இராது, தியானமாக மாறி விடும். பந்தத்தை ஏற்படுத்தாது (Work will be transformed into worship) மோக்ஷத்தை அளிக்கும்.

**வினா:**

*எத்தகைய கர்மா பந்தத்தை ஏற்படுத்தாது ?*

**விடை:**

*யக்ஞத்திற்காக (பகவானை திருப்தி செய்யும் காரியங்கள், உலக நன்மைக்காகச் செய்யப்படுபவை) கர்மபந்தத்தை ஏற்படுத்தாது, அவற்றை பற்றற்று, பலனைக்கருதாது (நிஷ்காமமாகச்) செய்தல் வேண்டும்.*

**முன்னுரை:**

*அடுத்து யக்ஞத்தின் சிறப்பினைக் கூறுகிறார்*

**10. ஸஹயக்ஞாஹ் ப்ரஜாஹ் ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதிஹி।**
**அனேன ப்ரஸவிஷ்யத்வமேஷவோ அஸ்த்விஷ்ட காமதுக்॥ (10)**

**சொற்பொருள்:**

*ப்ரஜாபதிஹி - பிரம்மதேவன், புரா - ஆதியில் (சிருஷ்டியின் ஆரம்பத்தில்) ஸஹயக்ஞாஹா - யக்ஞத்தோடு கூடிய ப்ரஜாஹா - மக்களை, ஸ்ருஷ்ட்வா - ஸ்ருஷ்டித்து, அனேன - இதனால் (யக்ஞங்களால்) ப்ரவிஷ்யத்வம் - விருத்தி யடையுங்கள், ஏஷஹ இது, வஹ உமக்கு, இஷ்டகாமதுக் - நீங்கள் விரும்பியதைக் கொடுப்பதாக, அஸ்து - இருக்கட்டும், (என்று) உவாச - சொன்னார்.*

**விளக்கம்:**

*மனிதன் எப்போது சிருஷ்டிக்கப்பட்டானோ, அவனுடன் அவன் பந்தத்தின்றும் முக்தி யடைவதற்கான சாதனோபாயங்கள் கூட சிருஷ்டிக்கப்பட்டன என்று இச்சுலோகத்தில் சொல்லப்பட்டுள்ளது. பகவான் எத்தகைய கருணையுள்ளம் கொண்டவனோ, மக்கள் கடைத்தேற வேண்டுமென்பதில் எத்துணை ஆவலுடையவனோ பாருங்கள் அப்போ சிருஷ்டிக்கப்பட்ட இம்மக்கள் சம்சார பந்தத்தில் விழுந்து பிறப்பு இறப்பெனும் பிரவாகத்தில்*

அடித்துச் செல்லப்பட்டு அமைதியின்றி அல்லலுறுவர். அத்தகையோர் சம்சார துன்பத்தினின்றும் தப்பித்துக் கொள்வது எங்ஙனம்? என்று சர்வேசுவரன் ஆலோசித்து முதலிலேயே மோக்ஷ சாதனை வழிகளான பலவிதமான யக்ஞங்களைக் கூட சிருஷ்டித்தார் என்று இங்கு சொல்லப்படுகிறது.

யக்ஞம் என்றால் பகவத் விஷயமானவை அல்லது, பரோபகார சம்பந்தமானவையோ, அல்லது ஆத்ம தியான சம்பந்தமானவையோ கிரியைகள் என்பது பொருள். இவ்யக்ஞங்களைக் குறித்து விவரமாக பின்வரும் அத்தியாயத்தில் கூறியுள்ளார்.

இஷ்டகாமதுக் - இவ்யக்ஞங்கள் காமதேனுவைப் போன்று ஜீவர்களின் விருப்பங்களை நிறைவேற்றி, அவர்களை உன்னத நிலையில் வைத்திருக்கும் என்று சொல்லப்பட்டது. ஜீவர்கள் மிகவும் விரும்பிக் கேட்கும் துன்ப நிவர்த்தி, பரமானந்த நிலை என்ற இரண்டையும் இந்த யக்ஞங்களைப் பின்பற்றுவதால் ஜீவன் தவறாது அடைவான். எனவே அவை இஷ்ட காமதுக் எனப்பட்டது. ப்ரஸவிஷ்யத்வம் என்றதால் ஜீவனின் உலக ஆன்மீக அபிவிருத்தியை யக்ஞங்கள் கொடுக்கும் என்பது தெளிவாகிறது.

**வினா:**

பிரம்மன் ஜீவர்களை சிருஷ்டி செய்த போது அவர்களுடன் இன்னும் எவற்றை கிருஷ்டித்தான்?

**விடை:**

யக்ஞங்களை (நற்காரியங்கள், தெய்வ காரியங்கள்)

**வினா:**

அவற்றால் பலன் என்ன?

**விடை**

அவை ஜீவனின் ஆன்மீக அபிவிருத்தியை உண்டாக்கும். காமதேனுவைப் போன்று அவனின் ஆசைகளை (சாந்தி, சுகம், மோக்ஷம்) இவற்றை நிறைவேற்றும்.

11. தேவான்பாவயதானேன தே தேவா பாவயந்து வஹ|
பரஸ்பரம் பாவயந்தஹ ச்ரேயஹ் பரமவாப்
ஸ்யத|| (11)

**சொற்பொருள்:**

அனேன - இந்த யக்ஞத்தால், தேவான் - தேவர்களை, பாவயத - மகிழ்ச்சியடையச் செய்யுங்கள், தே தேவாஹா - அத்தேவர்கள், வஹ - உங்களை, பாவயந்து - (மழை இவற்றால்) மகிழ்ச்சியடையச் செய்வர். இவ்வாறாக, பரஸ்பரம் - ஒருவருக்கொருவர், பாவயன்தஹ - மகிழ்ச்சியடையச் செய்து, பரம் - மேலான, ச்ரேயஹ - நன்மையை, அவாப்ஸ்யத - அடைவீர்கள்.

**கருத்து:**

இந்த யக்ஞங்களினால் தேவர்களை திருப்தியடையச் செய்யுங்கள். அத்தேவர்களும் உங்களை (மழை இவற்றால்) திருப்தியடையச் செய்வாராக இவ்வாறாக ஒருவருக்கொருவர் திருப்தியடைவதால் மேலான நன்மையை பெறுவீர்.

**விளக்கம் :**

எல்லாத் தேவர்களின் உருவமாக இருப்பது பரமேஸ்வரனே ஆகையினால் எந்த தேவர்களை தேவதைகளைப் பூசித்தாலும், அர்ச்சித்தாலும், தியானித்தாலும் பகவானை ஆராதிப்பதே யாகும், எனவே இந்த யக்ஞங்களின் மூலம் ஜீவர்கள் பகவானை ஆராதித்தால், பகவான் மூலம் அவற்றுக்கான பலனைத் தருவார், இவ்வாறு ஜீவன் யக்ஞங்களின் மூலம் (பலனைக் கருதாத நற்காரியங்கள் செய்து) பகவானை எப்போது ஆராதிக்கிறானோ அப்போது அவன் அனுகிரகித்து ஞானம் அளித்து மேன்மையான மோக்ஷத்தைக் கொடுப்பான்.

'ச்ரேயஹ் பரம ' உலகில் அநேக மேன்மைகளை, அனைத்திற்கும் மேலான மோக்ஷத்தை பகவானை ஆராதிப்பவன் அடைகிறான். எனவே தான் எல்லாவற்றிலும் மேன்மையானதாகவே இங்கு கருதப்படுகின்றது. ஆன்ம நிலை

(மோக்ஷம்) ஒன்றே உலகில் மிகவும் மேன்மையானது. அதனை பகவத் கருணையால் ஜீவன் அடைய முடியும். ஏனெனில் சர்வேசுவரனின் அனுகிரஹம் இல்லாவிடில் இம் மாயையை எவரும் தாண்ட இயலாது, இறைவனின் கருணையோ, ஜீவனின் இடைவிடாத சுய முயற்சியினாலேயே கிடைக்கிறது.

ஜீவனுக்கும் தேவனுக்கும் தொடர்பு (Link) (இல்லையெனில்) எவரும் உலகில் மேன்மையுற முடியாது எனவே இவ்வுலகில் உள்ள மனிதர்களை விட நமக்கும் தெய்வத்திற்கும் அதிகமான தொடர்பை நாம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். உலக மனிதர்கள் சிலசமயம் நமக்கு உதவிபுரிதல் கூடும்; சில சமயம் செய்யாதிருக்கக் கூடும் எவ்வாறிருப்பினும் அவர்களுடன் ஆன தொடர்பு இப்பிறவியிலேயே அற்றுப்போகும். ஆயின் தெய்வத்தின் தொடர்பு அவ்வாறில்லை, அது பிறப்பு தோறும் தொடர்வது. ஜீவர்களின் அருகிலிருந்து அவர்களுக்கு மேன்மையளிப்பது. அல்லது அவர்களது சாதனையின் தீவிரத்தைப் பொறுத்து இந்தப் பிறப்பிலேயே மோக்ஷத்தைக் கொடுக்கக் கூடியது. எனவே அத்தகைய உயர்ந்த தெய்வத் தொடர்பினை எவரும் விட்டுவிடுதல் கூடாது என்ற இச்சுலோகத்தில் நினைவுறுத்தப்படுகிறது.

**வினா :**

மிகவும் மேன்மை பொருந்திய மோக்ஷம் எவ்வாறு கிடைக்கும்?

**விடை :**

யக்ஞங்களின் (பலனைக் கருதாத நற்காரியங்கள்) மூலம் பகவானின் அல்லது தேவர்களின் ஆராதானை செய்வதால் (சித்தம் சுத்தியடைந்து, அதனால் ஞானம் ஏற்பட்டு, ஞானத்தினால்) மோக்ஷம் கிடைக்கும்.

**முன்னுரை:**

பகவானது பொருள்களை பகவானுக்கு நிவேதனம் செய்யாது அனுபவிப்பவன் திருடன் என்கிறார்.

**12. இஷ்டான் போகான்ஹி வோ தேவா தாஸ்யந்தே யஞ்ஞபாவிதாஹா।**
**தைர்தத்தானப்ரதாயைப்யோ புங்க்தே ஸ்தேன ஏவஸஹ॥ (12)**

**சொற்பொருள்:**

*யக்ஞபாவிதாஹா - யக்ஞத்தால் மகிழ்ச்சியடைகிற, தேவாஹா - தேவர்கள், வஹ - உங்களுக்காக, இஷ்டமான - விருப்பமான போகான் - போகங்களை, தாஸ்யந்தே ஹி - கொடுப்பர் அல்லவா ? தைஹி - அவர்களின் மூலம் தத்தான் - கொடுக்கப்பட்ட (பஞ்சபக்ஷ பரமான்னாதி போகங்களை) ஏப்யஹ அவர்களுக்கு (அத்தேவதைகளுக்கு) அப்ரதாய - அளிக்காது, புங்க்தே - நுகர்கிறானோ ஸஹ - அவன், ஸ்தேனஹஏவ - அவன் திருடனேயாவான்.*

**கருத்து :**

*மனிதன் ஆற்றும் யக்ஞங்களால் மகிழ்ந்து தேவர்கள் அவர்களுக்கு பிடித்தமான போகங்களைத் தருவார்கள். அவ்வாறு அவர்களால் தரப்பட்ட போக வஸ்துக்களை அவர்களுக்கு சமர்ப்பிக்காது எவன் அவற்றை அனுபவிக் கிறானோ அவன் திருடனேயாவான்.*

**விளக்கவுரை :**

*யக்ஞங்களால் ஆராதிக்கப்படும் போது பகவான், அல்லது ஆராதிக்கப்படும் அவ்வத்தேவர்கள் அன்னம் முதலான போக வஸ்துக்களை கிடைக்குமாறு செய்கிறான். பகவானால் அளிக்கப்பட்ட அவற்றை அவருக்கு சமர்ப்பிக்காது, அல்லது இறைவடிவமான பிராணி கோடிகளுக்கு ஈயாது தானே நுகர்கிறானோ, அனுபவிக்கிறானோ. அவன் திருடனேயா வான் என்று இங்கு சொல்லப்பட்டது.*

*'திருடன்' என்ற சொல்லுக்குப் பொருள் என்ன? தனதில்லாத வஸ்துக்களை அதன் விலையைக் கொடுக்காது எடுத்துக் கொள்பவனே திருடன். அன்னம் முதலான போக வஸ்துக்கள் பகவானின் சொத்து, நமதல்ல, ஏனெனில்*

அவற்றை நாம் தயார் செய்வதில்லை, இறைவனே மழை பெய்யச் செய்து, இயற்கையில் நிறைந்துள்ள ஜீவசக்தியை உள்ளடக்கி சிருஷ்டி செய்தார். எனவே நாம் இறைவனுக்கு அர்ப்பணித்தல் வேண்டும். பக்தியே அதற்கு மூலம். நன்றிக்கடனே அதற்கு மூலம் எனவே அன்னம் முதலானவற்றை நன்றியுடன், நிவேதித்தல் வேண்டும். அல்லது அதில் சிறிய பங்கை பிராணிகோடிகளுக்குக் கொடுத்தல் வேண்டும். அவ்வாறு செய்யாதிருப்பின் அவற்றைத் திருடியதற்கு ஒப்பேயாகும். இவ்வாறாக இறைவன் கொடுத்த அன்னம் முதலான போக வஸ்துக்களை மறுபடியும் இறைவனுக்கு அளிக்காது அனுபவிப்பவன் திருடனேயென்று ஸ்ரீ கிருஷ்ணர் தெளிவாகக் கூறுகிறார்.

ஆனால் இப்போது எவரும் அவ்வாறு இறைவனுக்கு நிவேதனம் செய்வதில்லை. உலக மக்களின் பார்வையில், மனிதன் எத்துணை தான் சிறந்தவனாயினும், கல்விமான் ஆயினும், செல்வந்தனாயினும், அரசனாயினும், இறைவனின் பார்வையில் திருடனாக இருந்து என்ன பலன்? அவ்வாறு நேராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். மற்றும் உலகம் திருடனுக்குத் தண்டனை விதிக்கிறது, அவ்வாறிருக்கையில் தெய்வத்தின் பொருள்களை சுயநலத்திற்காக உபயோகித்துக் கொள்ளும் திருடர்களுக்குத் தண்டனை இருக்கிறதா ? அவர்களுக்கு இறைவன் சரியான தண்டனை கொடுத்தே தீருவான். எனவே முமுக்ஷுக்கள் தமக்குள்ளவற்றில் ஏதோ ஒரு அளவை, ஒரு அளவாவது - பிராணிகோடிகளுக்குக் கொடுத்து, தானும் அனுபவித்து 'பிரம்மார்ப்பணமோ' கிருஷ்ணார்ப் பணமோ அல்லது ராமார்ப்பணமோ செய்து அனுபவித்தல் வேண்டும். இவ்வாறாக ஈசுவரார்ப்பண புத்தி, பக்தி பாவனை, பரோபகாரம் இவற்றை பயின்று தன்யமடைதல் வேண்டும்.

**வினா :**

*யக்ஞங்களால் (பலனைக் கருதாது செய்தல்) ஆராதிக்கப்படும் இறைவன் மக்களுக்கு என்ன பலன் அளிப்பான்?*

**விடை :** அவர்களுக்குப் பிரத்யக்ஷமான அன்னம் முதலான போக வஸ்துக்களை அளிக்கிறான்.

**வினா :** அவற்றை இவ்வாறு தந்தவனுக்கு ஜீவன் என்ன செய்ய வேண்டும்?

**விடை :** அப்பொருள்களை அவ்வத் தேவதைகளுக்கு, அல்லது இறைவனுக்கு நிவேதனம் செய்ய வேண்டும்.

**வினா :**

அவ்வாறு செய்யாது அவற்றை அனுபவித்தால் ஏற்படும் நஷ்டமென்ன?

**விடை :**

அதன் பின் அவன் திருடனாகக் கருதப்பட்டு அதற்கு தகுந்த தண்டனையை அனுபவிப்பான்

**முன்னுரை**

இறைவனளித்த பொருள்களை அவனுக்கே அர்ப்பணித்து அனுபவிப்பவனுக்கு ஏற்படும் நற்பலன், சுயநலமாகப் பயன்படுத்துபவனுக்கு ஏற்படும் தீய பலன் யாது எனக் கூறுகிறார்.

**13. யக்ஞசிஷ்டாசினஹ ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பிஷைஹி**

**புஞ்ஜதே தே த்வகம் பாபா யே பசந்த்யாத்மகாரணாத்||**

(13)

**சொற்பொருள் :**

யக்ஞசிஷ்டாசினஹ - யக்ஞத்தில் எஞ்சியிருப்பதை உண்கிற, ஸந்தஹ சான்றோர், ஸர்வகில்பிஷைஹி - சகல

பாவங்களினின்றும், முச்யந்தே - விடுபடுகிறார்கள், யே து - எவன் ஒருவன், ஆத்மகாரணாத் - தம் பொருட்டே, பசந்தி - சமைக்கிறார்களோ, (சமைக்கிறார்களோ) பாபா: - பாவிகளான, தே - அவர்கள், அகம் - பாவத்தை புஞ்சதே - புசிக்கிறார்கள்

**கருத்து:**

யாகத்தில் மிஞ்சியதை உண்ணும் நல்லோர் (யாகத்தை அர்ப்பணம் செய்து) எல்லாப் பாவங்களினின்றும் விடுபடுகிறார்கள். அவ்வாறின்றி எவர் தம் பொருட்டே சமைக்கிறார்களோ, அவர்கள் பாவத்தையே புசிக்கிறார்கள்

**விளக்கம்:**

இறைவனது ஆராதனையான யக்ஞங்களைச் செய்து அன்னம் முதலானவற்றை இறைவனுக்கு அர்ப்பித்து (அல்லது இறை சொரூபமான பிராணி கோடிகளுக்கு சிறிது பாகத்தை சமர்ப்பித்து) மிகுதியானதை உண்பவன் எல்லா பாவங்களினின்றும் விடுபடுவார் எனப்பட்டது. ஸர்வ கில்பிஷைஹி எனப்பட்டதால், ஒன்றிரண்டு பாவங்களேயன்றி எல்லா பாவங்களினின்றும் விடுபடுவான் எனப்பட்டது இதனை வைத்துப் பார்க்கையில் இறை நிவேதனத்திற்கு தியாகத்திற்கு, பரோபகாரத்திற்கு எத்துணை பலன் உள்ளது என்பது இதனால் தெரிகின்றது எனவே தான் ஈசாவாஸ்யோபநிஷத்தின் ஆரம்பத்தில் தேனத்யக்தேன புஞ்ஜீதாஹா உனக்கிருப்பவற்றில் சிறிதளவேனும் தியாகம் செய்து (பிறருக்கு ஈந்து) உண்க என்று சொல்லப்பட்டுள்ளது அவ்வாறின்றி தானே அனைத்தையும் தின்பவர், இறைவனுக்கு அர்ப்பணிக்காமல் தின்பவர், பிறருக்கு சிறிதளவும் ஈயாது தின்பவர், பாவத்தையே உண்கிறார்கள் என்று அவர்களைத் தீவிரமாக எதிர்க்கிறார். பாவங்களையே அவர்கள் புசிப்பதால் அது அவர்களது இரத்த நாளங்களில் பிரவேசிக்கும். மேலும் அவர்களும் பாவத்தில் உருவாகின்றனர் என்பது பொருள், என் சுய நலமே பாவத்திற்குக் காரணம், சுயநலத் தியாகமே மோக்ஷத்திற்குக் காரணம் என்று இச்ச்லோக

தென்ளத் தெளிவாகிறது. பகவானுக்கு நிவேதனம் செய்யாது மற்றைய பிராணிகளுக்கு சிறிதளவேனும் ஈயாது பஞ்ச பக்ஷ பரமான்னத்தையே தின்றாலும் விஷத்தை தின்பதற்கு ஈடேயாகும். ஈசுவரார்ப்பணம் செய்து, பிராணி கோடிகளுக்கு ஈந்து கஞ்சியைக் குடித்தாலும் அது அமிர்தமேயாகும், என்று இங்கு தெரிவிக்கப்பட்டது.

மேலும் மனிதனுக்குத் தன் நித்ய வாழ்க்கையில் ஏதேனும் பறிக்கையில், அரைக்கையில், சமைக்கையில் சுத்தம் செய்கையில் தெரியாது பிராணிகளுக்கு இம்சை செய்யக் கூடும். அதனையே பஞ்ச 1. தேவயக்ஞும் (ஹோமம்) 2. பித்ரயக்ஞும் (தர்ப்பணம்) 3. ந்ருயக்ஞும் (சுதிதி பூசை) 4. பிரம்ம யக்ஞும் (வேதஅத்யயனம்) 5. பூதயக்ஞும் (பிராணிகளுக்கு அன்னமிடுதல்) எனவே இவையும் இன்னும் பிறவும் இறை வழிபாடே பரோபகார சம்பந்தமான ஏனைய யக்ஞுங்களையும் செய்வது வந்து, யக்ஞுத்தில் மிகுந்தவற்றை மாத்திரம் புசித்து இருப்பவர் பாவங்களின்றும் விடுபட்டு, சிறந்த மேன்மை பெறுபவர் என்று கூறுகிறார்.

**வினா:**

யக்ஞு மிகுதியை (இறையர்ப்பணம் செய்து, மிகுந்தவற்றை, உண்பவர்க்கு கிடைக்கும் பலன் யாது?

**விடை:**

அவர்களை எல்லா பாவங்களினின்றும் முக்தியடையச் செய்யும்.

**வினா:**

அவ்வாறின்றி சுயநலமாக உண்பவர்க்கு கிடைக்கும் பலன் யாது?

**விடை :**

அவர்கள் பாவத்தையே அடைவார்கள், பாவத்தின் உருவமாகவே ஆகிறார்கள்.

முன்னுரை :

*யக்ஞம் மிகவும் புனிதமானது என்றும், ஆன்மீக உலகில் பேறு பெற்று, கீர்த்தி, பெற்று விளங்கும் என்றும் சொல்லப்படுகிறது.*

**14. அன்னாத் பவந்தி பூதானி பர்ஜன்யாதன்னஸம்பவஹ!**
**யக்ஞாத்பவதி பர்ஜன்யோ யக்ஞஹ் கர்ம ஸமுத்பவஹ!!**
**(14)**

**15. கர்ம ப்ரஹ்மோத்பவம் வித்தி ப்ரஹ்மாக்ஷர ஸமுத்பவம்!**
**தஸ்மாத் ஸர்வகதம் ப்ரஹ்ம நித்யம் யக்ஞே**
**ப்ரதிஷ்டிதம்!! (15)**

சொற்பொருள்:

*அன்னாத் - அன்னத்திலிருந்து, பூதானி - உயிர் வகைகள் பவந்தி - உண்டாகின்றன. பர்ஜன்யாத் - மேகத்தினால், அன்ன ஸம்பவஹ - அன்னம் உண்டாகிறது, யக்ஞாத் - யக்ஞத்தில் இருந்து, பர்ஜன்ய - மேகம், பவதி - உண்டாகிறது, யக்ஞஹ யக்ஞம் கர்மஸமுத்பவம் கர்மங்களிலிருந்து உண்டாகிறது. கர்ம - கர்மம், ப்ரஹ்மோத்பவம் - வேதத்திலிருந்து உண்டானது, ப்ரஹ்ம - வேதம், அக்ஷரஸமுத்பவம் - அழிவில்லாத பரமாத்மாவிடத்திலிருந்து உண்டானது, அஸ்மாத் - அதனால், ஸர்வகதம் - எங்கும் நிறைந்துள்ள, ப்ரஹ்ம - பிரம்மம், நித்யம் எப்போதும் யக்ஞே - யக்ஞத்தில், ப்ரதிஷ்டதம் - நிலை பெற்றது, வித்தி - அறிக.*

கருத்துரை:

*உயிர்கள் உணவிலிருந்து உண்டாகின்றன. உணவு மேகத்தினால் (மழையினால்) உருவாகிறது. மழை யக்ஞத்தால் உருவாகிறது. யக்ஞம் நற்காரியங்களால் உண்டாகிறது. நற்காரியங்கள் வேதங்களால் உண்டாகிறது. வேதம் எங்கும் நிறைந்துள்ள பரப்பிரம்மத்தினின்றும் உருவாகிறது. எனவே அப் பரப்பிரம்மத்தை எப்போதும் யக்ஞத்தில் நிலை பெற்றுள்ளதாக உணர்க.*

ஆராதிக்காதவன். தியாக புத்தி இல்லாதவன், பரோபகாரம் செய்யாதவன் சம்சாரக் குகையில் விழுந்து வாழ்க்கையை வீணாக்கிக் கொள்கிறான் என்று இங்கு கூறப்பட்டது. அவ்வாறின்றி, தர்மசக்கரத்தினைப் பின்பற்றி யக்ஞ ரூபமான நற்காரியங்களை செய்யின் பகவத் அனுகிரகத்திற்கு பாத்திரராகி, சித்தசுத்தியை அடைந்து. முறையாக மோக்ஷத்தின் வாயிலை அடைவர். ஒருவனது பாவ வாழ்க்கை இன்னொருவனது புண்ணிய வாழ்க்கை ஒருவன் இந்திரிய இராமன், மற்றொருவன் ஆத்மா இராமன் ஒருவனது பயனற்ற வாழ்வு மற்றொருவனது பயனுள்ள வாழ்வு.

இறைவனை மறப்பதே பாவம் (To forget God is sin) என்று ராமதீர்த்தர் அறுதியிட்டுக் கூறுகிறார். மேலே கூறிய தர்ம சக்கரத்தைப் பின்பற்றாதவன் இறைவனை மறந்து காட்சிப் பொருளின் பின் செல்வார். எனவே அவர்கள் பாவத்தை மூட்டைக் கட்டிக் கொண்டு போகிறார்கள். எனவே தான் அவர்களை அகாயர்கள் (பாவ வாழ்க்கை வாழ்பவர்கள்) என்கிறார். மேலும் இவர்கள் காட்சிப் பொருளையே உண்மையென்று கருதி அதன் பின் செல்பவர், இந்திரியங்களுக்கு அடிமைபட்டு விஷயங்களின் மீது கவனம் செலுத்துவர் ஆதலால் அத்தகையோரை இந்திரியராமர்கள் என்று வர்ணித்தார். அத்தகையோரது வாழ்க்கையால் அவர்களுக்கும் பலனில்லை, பிறருக்கும் பலனில்லை. எனவே அவரது வாழ்க்கை மோஹ வாழ்க்கை என்று சொல்லப்பட்டது. மனிதனாகப் பிறந்து, இறைவனை நினைந்து, இந்திரிய சுகங்களில் முழுகிடுதலை விட சிறிய புழு பூச்சிகளாகப் பிறப்பது மேல். எனவே பகவான் சொல்லிய தர்மசக்கரத்தை அனுசரித்து மனித வாழ்க்கையைப் பயனுள்ளதாகச் செய்து கொள்ள வேண்டும்.

**வினா :**

யக்ஞாதிரூபமான தர்மசக்கரத்தைப் பின்பற்றாதவன் வாழ்க்கை எவ்வாறிருக்கும்?

விடை :

(1) அவன் பாவ வாழ்க்கையை வாழ்கிறான். (2) இந்திரியங்களுக்கு உட்பட்டவனாக வாழ்கிறான். (3) வாழ்க்கையை வீணாக வாழ்கிறான்.

முன்னுரை :

ஆன்மாவை உணர்ந்த மகனியர்கள் தெய்வத்தின் மீதே எப்போதும் நிலைத்திருப்பர். எனவே அவர்களுக்கு மாத்திரம் யக்ஞம் முதலானவற்றைச் செய்தல் வேண்டும் என்ற நியதி இல்லை என்கிறார்.

17. யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாதாத்மத்ருப்தஸ்ச மானவஹ।
ஆத்மன்யேவ ச ஸந்துஷ்டஸ்தஸ்ய கார்யம் ந வித்யதே॥
(17)

சொற்பொருள் :

யஹ மானவஹ - எந்த மனிதன் ஆத்மரதிஹி ஏவ - ஆன்மாவிலேயே அன்பு கொள்கிறானோ, ஆத்ம த்ருப்தஹ ஏவ ச - ஆத்மாவில் மட்டும் திருப்தியடைகிறானோ, ஆத்மநி ஏவ - ஆத்மாவிலேயே சந்துஷ்டஹ ச - மகிழ்ச்சியடைகிறானோ, ஸ்யாத் - இருக்கிறானோ, தஸ்ய - அத்தகையவனுக்கு கார்யம் - செய்யவேண்டியது, ந வித்யதே - எதுவுமில்லை.

கருத்து:

எவன் ஆத்மாவிலேயே நிலைபெற்று ஆத்மாவிலேயே திருப்தியடைந்து, ஆத்மாவிலேயே மகிழ்ச்சியடைந்து, இருக்கிறானோ, அத்தகைய ஆத்மஞானிக்கு செய்யக்கூடிய (நியமங்கள்) எதுவுமில்லை.

விளக்கம்:

கர்மயோகத்தைச் செய்ய வேண்டிய நியமம் உலகில் சிலருக்கே தவிர ஏனையோர் அனைவருக்கும் உண்டு. அச்சிலர் எவர் என்று இச்சுலோகத்தில் கூறப்பட்டது. ஆத்மாவில் நிலைத்திருப்பவர், ஆத்மதிருப்தியடைபவர், ஆத்மாவில்

மகிழ்ச்சியடைவோர் - ஆகிய இம் மகனீயர்களுக்கு கர்மங்கள் செய்தல் வேண்டும் என்ற நியதி இல்லை. ஏனெனில் எல்லா கர்மங்களின், சாதனைகளின் முடிவு (இலக்கு) ஆன்மாவை தரிசிப்பதே. அதனை அடைந்தவர், அவர் கர்மாக்களின் பலனை அடைந்தவர். எனவே இவர்களுக்கு என்று சாஸ்திரங்கள் நியமங்களைச் சொல்லவில்லை. இருப்பினும் இவர்கள் உலகின் நன்மைக்காக செயல்களைச் செய்து கொண்டே இருப்பர். அவர்கள் கர்மங்களைச் செய்தாலும் செய்யாதிருப்பினும் குற்றமில்லை.

ஆயினும் இத்தகைய நிலை சாதாரண மனிதர்களுக்கு பொருந்தாது. உலகில் ஆன்மாவை தரிசித்த மகனீயர்கள் மிகவும் அரிதாகவேயுள்ளனர். இருந்தவர் பணி செய்ய வேண்டியதோ பேறு பெற்றவர் ஆதல் வேண்டுமெனின் செயலாற்றுதலைப் பேறாகக் கருதுதல் வேண்டும். ஆயினும் நாம் முழுமையான நிலையை அடையாதிருப்பினும், அடைந்ததைப் போல் நடித்து செயலாற்றாதவர்களாயிருத்தல் கூடாது. அது கபடம், வேடம், பொய்யான ஒழுக்கம்.

உலகில் இப்போது பெரும்பாலோர் வெளி நடப்புகளிலேயே மனத்தைச் செலுத்தி, அதிலேயே திருப்தியடைந்து அதிலேயே மகிழ்ச்சியடைந்து வீணாகக் காலம் கழிக்கின்றனர். எனவே அவ்வழியை மாற்றிக்கொண்டு ஆன்மாவால் ஈடுபாடு, ஆன்மாவால் திருப்தி, ஆன்மாவில் ஆனந்தம் - இவற்றையடையும் முயற்சி செய்தல் வேண்டும். வாழ்க்கையின் இலக்கு இதுவே. உண்மையில் ஆனந்தம் என்பது மனிதர்கள் நினைப்பதைப் போல் வெளியில் இல்லை இதயத்திலேயே இருக்கிறது. வெளியில் இருக்கும் ஆனந்தம் வெறும் மாயை கணத்தில் அழியக் கூடியது. உள்ளிருப்பது எப்போதும் நிலைத்திருக்கும் நிரதிசய ஆனந்தம். எனவே ஞானிகள் காட்சிப் பொருள்களின் மீது விரக்தி கொண்டு, உள்முகமாக மனத்தைத் திருப்பி ஆத்மானந்தம் அடைந்து மகிழ்வர். அத்தகையோரைக் குறித்தே இச்சுலோகத்தில் குறிப்பிடப்பட்டது.

**விளக்கம்:**

ஜீவன் முக்தனான ஆத்ம ஞானிக்கு கர்மம் செய்வதாலோ, செய்யாதிருப்பதாலோ அவன் எப்போதும் ஆன்மாவிலேயே திருப்தியடைந்திருப்பான் ஆதலின் கர்மாவினாலோ அல்லது கர்மா செய்யாதிருப்பதாலோ. புதிதாகப் பெறப் போவது இவ்வுலகில் ஏதுமில்லை. அவன் நினைத்தால் கர்மாவைச் செய்தல் கூடும். செய்யாதிருத்தலும் கூடும். அவனுக்கென்று விதியென்றும் இல்லை. ஆயின் உலக நன்மைக்காக இத்தகைய ஞானிகள் ஏதோவொரு நற்காரியங்களில் ஈடுபட்ட வண்ணமே இருப்பர்.

மேலும் இத்தகைய ஞானிகள் எதற்காகவும் இன்னொருவரைச் சார்ந்திருக்க வேண்டிய அவசியமில்லை, ஏனெனில், எதனால் நன்மைகள், உபயோகங்கள் சித்திக்கின்றனவோ, பலன் அனைத்தும் கூடியுள்ள மூலஸ்தானம் (Head quarters) எதுவோ, அத்தகைய ஆன்மாவை அவர்கள் தன்கையில் வசப்படுத்தியுள்ளனர். சதே பஞ்சாத் (நூறில் ஐம்பது அடங்கியுள்ளது) என்ற நியாயத்தை அனுசரித்து, உலகின் பலன்கள் அனைத்தும் ஆன்மாவிலே அடங்கியுள்ளது. எனவே அவர்கள் எவரிடமும் எதற்காகவும் கையேந்த வேண்டிய அவசியம், பிறரைச் சார்ந்திருக்க வேண்டிய அவசியமில்லை.

ஆயின் இத்தகைய கர்மாவைப் பொறுத்து கட்டுப்பாடுகள் எதுவுமில்லாதிருத்தல் ஆத்ம நிஷ்டன் ஒருவனுக்கேயன்றி பிறருக்கில்லை. ஏனையோர் அனைவரும் நிஷ்காம புத்தியுடன் கர்மாவைச் செய்ய வேண்டியதே, உத்தியோகம் செய்து வயதான பின்னர், வேலையிலிருந்து ஓய்வு பெற்று ஓய்வு ஊதியம் (Pension) பெற்றுக் கொண்டு நிம்மதியாகக் காலம் கழிப்பவனைப் பார்த்து, படிக்கும் மாணவனோ, உத்தியோகம் செய்பவனோ, தான் ஆற்ற வேண்டியதை செய்யாமல் விட்டால், எவ்வாறு பின்னடைவானோ, அவ்வவாறே ஜீவன் முக்தியடைவதற்கு முன்னரே, கர்ம விதியை மறந்தவர் அழிவடைவர், எனவே சாதகர்கள் இவ்விஷயத்தில் மிகவும் எச்சரிக்கையுடன் தத்தம் சாதனையில் குறைகள் நேரா வண்ணம் பார்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

**முன்னுரை:**

*பலன் கருதாது செயலாற்றுதல் வேண்டும் என பகவான் பார்த்தனுக்குச் சொல்கிறார்.*

**19. தஸ்மாதஸக்தஹ ஸததம் கார்யம் கர்ம ஸமாசர|**
**அஸக்தோ ஹ்யாசரன் கர்ம பரமாப்னோதி பூருஷஹ||**
**(19)**

**சொற்பொருள் :**

*தஸ்மாத் - ஆகையினால், (த்வம் - நீ), அஸக்தஹ - பற்றற்றவனாய் (பலனைக் கருதாதவனாய்) (இருந்து) ஸததம் - எப்போதும், கார்யம் - செய்யத்தகுந்த, கர்ம கர்மாவை, சமாசர - நன்கு செய்கின்ற, பூருஷஹ - புருஷன் பரம் - மோக்ஷத்தை, ஆப்னோதி ஹி - அடைகிறான் அல்லவா?*

**கருத்துரை:**

*எனவே நீ பற்றற்று (பலனைக் கருதாது) செய்யத் தகுந்த காரியங்களை எப்போதும் நன்கு இயற்றுவாயாக, பற்றற்று கர்மாவைச் செய்து வரும் மனிதன் (முறையாக) மோக்ஷத்தை அடைவான்.*

**விளக்கம்:**

*'தஸ்மாத்' - ஆத்மஞானிக்கு கர்மாவைச் செய்தே ஆக வேண்டும் என்ற நியதி உண்டு, எனவே (சாதனை நிலையில் உள்ள) நீ கர்மாவைத் தவறாது செய்தல் வேண்டும். ஆயின் 1. அதில் பற்றற்று* (Non-Attachment) *செய்யவும் 2. மேலும் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட காரியங்களையே செய்க. இரண்டாவது கூறப்பட்ட விதியும் சேர்ந்திருந்தால்தான் கர்மா எவ்வித தோஷமுமின்றி மோக்ஷத்திற்கு காரணமாகும். எனவே அத்தகைய நிஷ்காமகர்மாவை எப்போதும் செய்து வருக என பகவான் அர்ஜுனனுக்கு போதிக்கிறார். கர்மம் பந்தத்தை ஏற்படுத்துவதனால் இறைவன் அதனைப் பற்றி போதிப்பாரா? கர்மாவில் பற்றற்று, பலனைக் கருதாது செய்யின் அந்த கர்மா நிஷ்காமமாக, மோக்ஷத்திற்கு (பரம்) வழி காட்டும். இல்லாவிடில் அது பந்தத்திற்குக் காரணமாகி, சம்சாரத்திற்கு காரணமாகிவிடும். இதுவே கர்மாவின் இரகசியம்.*

ஏனைய யோகங்களுடன் கர்மயோகமும் மோக்ஷத்தைத் தரவல்லது என்பது இச்சுலோகத்தில் தெளிவாக்கப்பட்டது. பற்றற்ற கர்மயோகத்தினால் சித்தம் சுத்தம் அடைவதுடன் மோக்ஷப்பிராப்திக்கு சரியான சூழ்நிலையை ஏற்படுத்தும். மோக்ஷ ஹி சேதோ விமலம் என்றபடி சித்த நிர்மலமே மோக்ஷம். அதுவே நிஷ்காம கர்மாவைச் செய்வதால் தவறாது சித்திக்கும். மேலும் உலகில் சாதாரணமாக ஞானம் தியானம் இவற்றை அனுசரிப்பவன் அரிதாகவேயுள்ளான். கர்மா, பக்தி மார்க்கத்தில் நுழைபவரே அதிகம். எனவே மக்கள் சுலபமாக எட்டக்கூடிய இவ்விரண்டு மார்க்கங்களையும் ஏனைய ஞான தியான மார்க்கங்களோடு கூட கீதையில் பகவான் போதித்துள்ளார்.

**வினா:**

கர்மாவை எவ்வாறு செய்தல் வேண்டும் ?

**விடை:**

1. பற்றற்று பலனைக் கருதாது, நிஷ்காமமாக செய்ய வேண்டும். 2. செய்யத்தகுந்த சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட நற்காரியங்களையே செய்தல் வேண்டும்.

**வினா:**

அவ்வாறு செய்யின் மனிதன் பரமபதமான மோக்ஷத்தையே அடைவான்.

**முன்னுரை:**

ஜனகர் முதலானோரின் வாழ்க்கையை எடுத்துக் காட்டி நிஷ்காம கர்ம யோகத்தினை வலியுறுத்துகிறார்.

**20. கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜனகாதய: |**
**லோகஸங்க்ரஹமேவாபி ஸம்பஶ்யன் கர்துமர்ஹஸி ||**

**(20)**

**சொற்பொருள்:**

ஜனகாதய: - ஜனகர் முதலானோர், கர்மணைவ - (நிஷ்காம) கர்மாவினால், ஸம்ஸித்திம் - (சித்தசுத்தியினால்

மோக்ஷத்தினை ஆஸ்திதாஹ - அடைந்தனர் அல்லவா? தவமும் நீயும், லோக ஸங்க்ரஹம் - மக்களை நன்னெறியில் நடத்துதலை என்று தன்னையுடையவனாக ஸம்பச்யன் - நன்கு மனத்தில் வைத்துக் கொண்டு கர்துமர்ஹஸி - கர்மங்களைச் செய்ய அர்ஹஸி - தகுந்தவனாகிறாய்.

**கருத்துரை :**

ஜனகர் முதலானோர் நிஷ்காம கர்மத்தாலேயே மோக்ஷம் அடைந்தனர். மக்களை நன்னெறியில் நடத்தும் எண்ணத்தினை உடையவனாக நீ கர்மாக்களைச் செய்யத் தகுதியுடையவனாகிறாய்.

**விளக்கம் :**

கீழ் சுலோகத்தில் நிஷ்காம கர்மாவைச் செய்வதால் மனிதன் பரமாத்மாவை (மோக்ஷத்தை) அடைவான் என்ற சித்தாந்தத்தையே இங்கு ஜனகரை எடுத்துக் காட்டி வலியுறுத்திச் சொல்கிறார்.

'ஜனகாதயஹ - 'என்று சொல்வதால் ஜனகன், அஸ்வபதி, இக்ஷ்வாகு, பிரஹ்லாதன், அம்பரீஷன், பகீரதன் முதலான சக்ரவர்த்திகள் என்று பொருள்படும். இந்த நிஷ்காம கர்மா ஒன்றும் புதிதானதல்ல, பல அரசர்களும் இதற்கு முன்பே அதனைப் பின்பற்றி முக்தியடைந்துள்ளனர் என்றும், எனவே அர்ஜுனனும் அதனையே பின்பற்ற வேண்டுமென பகவான் கூறுகிறார். அரசைப் பரிபாலித்த வண்ணம் மோக்ஷத்தை அடையமுடியுமா ? கர்மாவைச் செய்ததால் இதற்கு முன்பாக எவரேனும் மோக்ஷம் அடைந்துள்ளனரா என்று அர்ஜுனன் கேட்டு முன்பாகவே ஸ்ரீ கிருஷ்ணர் அதற்கு பதில் கூறிவிட்டார். கர்மாவை நிஷ்காமமாகச் செய்தால் சித்தம் சுத்தமடையும் நிர்மலசித்தத்தில் ஞானம் பிறக்கும். ஞான விசாரணையால் மோக்ஷம் கிடைக்கும். இவ்வாறு நிஷ்காம கர்ம யோகம் மோக்ஷத்திற்கு ஏதுவாகிறது. ஜனகன் முதன்முதலில் பல நற்காரியங்களைப் பலன் கருதாது செய்து, சித்தம் சுத்தியடைந்து இதன் விசாரணை செய்து ஆன்மசொரூபத்தைத் தரிசித்தார் என்று யோகவாசிஷ்டத்தில்

கூறப்பட்டுள்ளது. எனவே பயன் கருதாத கர்மாவினால் முக்தியடைதல் கூடும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

இனி உலக நன்மைக்காக, அதாவது மக்கள் தீயவழியில் செல்லாது நன்மரார்க்கத்தில் நடத்துவதற்காகவாவது, கர்மயோகத்தைச் செய் என்று பகவான் வாக்களித்துள்ளார். பரோபகாரத்திற்கு எத்தகைய மேன்மையளிக்கப்பட்டுள்ளது பாருங்கள் ! ஒரு பிராணிக்கேனும் உதவிசெய்வது மிகவும் புண்ணியமானது. அதுவும் தானும் கர்மயோகத்தைப் பின்பற்றிப் பிறரையும் அதனை மேற்கொள்ளச் செய்தல் அதன் வழி மக்கள், பாவ பந்தத்தினின்றும் விடுபடச் செய்தலை விட மேலான உதவி வேறெதுவுமில்லை, எனவே நீ நிஷ்காம கர்மயோகத்தை நன்றாகச் செய்து மக்களையும் நன்னெறியில் திருப்பி அவர்களை மோக்ஷமடையச் செய் என்று பகவான் அர்ஜுனனுக்குச் சொல்கிறார்.

**வினா :**

கர்ம யோகத்தால் இதுவரை எவராவது மோக்ஷத்தை அடைந்துள்ளனரா ? அவர் எவர் ?

**விடை :**

அடைந்துள்ளனர். அவர்கள் ஜனகர் முதலானோர்.

**வினா :**

கர்மயோகத்தைப் பின்பற்றுவதால் உலகிற்கு என்ன நன்மையேற்படும்.

**விடை:**

பலர் தீய நெறியில் இருந்து நன்னெறிக்கு திசை திருப்ப அவகாசம் அளிக்கும்.

**முன்னுரை :**

பெரியோர்கள் செய்வதை பின்வருவோரும் அனுசரிப்பர் என்ற உலக நியதியைக் கூறுகிறார்.

21. யத்யதாசரதி ச்ரேஷ்டஸ்தத்ததேவேதரோ ஜனஹ|
ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்ததனுவர்ததே| (21)

**சொற்பொருள் :**

*ச்ரேஷ்டஹ - மேலோன், யத்யத் - எதனைச் செய்கிறானோ, இதரஹ - பிறரும், ஜனஹ - மக்களும் தத்தத் ஏவ அக்காரியங்களையே (ஆசரதி - செய்கிறார்கள்) ஸய - அவன், யத் - எதனை ப்ரமாணம் - பிரமாணமாகக், குருதே கொள்கிறானோ, லோகஹ - உலகம் (மக்கள்) தத் - அதனையே அனுவர்த்ததே - அனுசரிக்கிறது.*

**கருத்துரை :**

மேலோன் எதனைச் செய்கிறானோ, அதனையே மற்ற மனிதர்களும் பின்பற்றுகின்றனர். அவன் எதனைப் பிரமாணமாகக் கொள்கிறானோ அதனையே உலகம் அனுசரிக்கிறது.

**விளக்கம்:**

சாதாரணமாக உலகில் ஒரு நியதி உண்டு, பெரியோர்கள் செய்வதை மற்றையோரும் பின்பற்றுவர். எனவே மேலோர் தம் நடவடிக்கைகளில் மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்து கொள்ள வேண்டும். அவர்கள் முன்வைத்த அடியிலேயே பிறரும் தொடர்வர் ஆதலால் தமது அனுஷ்டானங்களில் மிகவும் எச்சரிக்கையாக நடந்து கொள்ள வேண்டும். சாஸ்திரத்திற்கு எதிரான நடவடிக்கையில் ஈடுபடலாகாது. அர்ஜுனன் தன் வீரம், தைரியம் இவற்றாலும் நல்ல நெறியை யுடையவன் ஆதலாலும் உலகில் நல்ல கீர்த்தியடைந்தான். அத்தகைய மேலோன், செயலாற்றி, தனக்கு விதிக்கப்பட்ட கர்மங்களை, பலனைக் கருதாது, பற்றற்று செய்து வந்தால் அதனைப் பார்த்துப் பிறரும் ஆஹா, அர்ஜுனனைப் போன்றோரே இவ்வாறு கர்மாவைச் செய்யும்போது நாம் ஏன் செய்தல் கூடாது ? என்று கருதி தாமும் நிஷ்காம கர்மாவைச் செய்து சித்த சுத்தியடைந்து பரமபதத்தை அடைவார். யதாராஜாததா ப்ரஜா - மன்னன் எவ்வழி மக்கள்

அவ்வழி என்ற பழமொழியை அனுசரித்து மன்னன் செயலாற்றாதிருப்பின் மக்களும் அவ்வாறே நடந்து கொள்வர். எனவே உலக நன்மையைக் கருதியாவது பெரியோர் நற்காரியங்களில் ஈடுபடுதல் வேண்டும்.

மேலும் பெரியோர் எதனைப் பிரமாணமாகக் கொள்கின்றனரோ, ஏனையவரும் அதனையே பிரமாணமாகக் கொள்வார். எந்த வாக்கியத்தை, எந்த கொள்கையை, எந்த வழியை, எந்த சாஸ்திரத்தை அவர்கள் பின்பற்றுகிறார்களோ, மற்றைய மக்களும் அதனையே எடுத்துக் கொண்டு ஆதரிப்பர். எனவே இவ்வாறு சத்ய நெறி, சாஸ்திர நெறிகள் நன்கு பிரசாரம் ஆவதுடன் பலரும் அதனைப் பின்பற்றுவதால் மோக்ஷம் அடைவர். எனவே பெரியோர்கள் மிக உன்னதமான தர்மங்களை முன்னதாக தாம் அனுசரித்து உலகிற்கு வழிகாட்டியாதல் வேண்டுமென பகவான் இங்கு போதிக்கிறார்.

ஆசரதி - இச்சுலோகத்தில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா வழக்கத்திற்கு அதிகமான முக்கியத்துவம் கொடுக்கிறாரே யன்றி வாயால் பேசப்படும் ஞானத்திற்கல்ல. இவ் விஷயத்தினை சாதகர்கள் நன்றாக கவனித்தல் வேண்டும் செயலில் அனுஷ்டானத்தில் பின்பற்றப்படாத வெறும் வாய் வார்த்தைகள் பிரயோஜனம் இல்லை. எனவே முதலில் தான் செய்து காட்ட வேண்டும் என்பது பகவானின் உத்தேசம் அப்போதே மக்கள் அவன் மீது, சாஸ்திரங்களின் மீது நம்பிக்கை வைப்பர்.

முன்னுரை :

இனி மூன்று சுலோகங்களில் கர்மயோகத்தின் அவசியத்தை இதைப் போன்ற எடுத்துக்காட்டுகளின் மூலம் மேலும் வலியுறுத்திக் கூறுகிறார்.

**22. ந மே பார்த்தாஸ்தி கர்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சன।**
**நானவாப்தமவாப்தவ்யம் வர்த ஏவ ச கர்மணி॥ (22)**

**சொற்பொருள் :**

*பார்த்த - ஓ அர்ஜுனா ! மே எனக்கு, த்ரிஷுலோகேஷு - மூன்று உலகங்களிலும், கர்த்தவ்யம் - செய்யவேண்டியது, கிஞ்சன - எதுவும், ந அஸ்தி - இல்லை, அனவாப்தம் - அடைய வேண்டியது. அவாப் தவ்யம் - இனி அடையப்போவது, (ஆனவஸ்து எதுவும்) ந - இல்லை, (ததாபி) ச - ஆயினும், கர்மணி ஏவ - கர்மத்திலேயே, வர்த்த - பிரவர்த்திக்கிறேன்.*

**கருத்து:**

*அர்ஜுனா ! இம் மூவுலகிலும் எனக்குச் செய்ய வேண்டிய கடமையேதுமில்லை. மேலும் அடைய வேண்டியதோ, அடையத் தகுதியானதோ எதுவுமில்லை. ஆயினும் நான் கர்மம் செய்து கொண்டேயிருக்கிறேன்.*

**விளக்கம் :**

*ஸ்ரீ கிருஷ்ணர் சாக்ஷாத் இறைவனே ஆகையால் அவரது வயிற்றிலேயே உலகமனைத்தும் அடக்கம். அதனால் இவ்வுலகங்களில் அவன் செய்ய வேண்டிய காரியமோ, அடைய வேண்டிய வஸ்துவோ எங்கிருக்கும் ? ஆயினும் அவன் கருணாமயன் ஆகையினால் பக்தர்களின் நலனுக்காக அவதாரம் எடுத்து மக்களுக்காக கர்மாக்களை செய்து கொண்டேயிருக்கிறார். உண்மையில் அவன் உருவமில்லாதவன் ஆயினும் உருவமெடுத்து, மக்களுடன் கலந்து, அவர்களுக்குத் தர்மத்தை, தத்வ இரகசியங்களைப் போதித்து முக்தி மார்க்கத்தை அவர்களது உள்ளங்கை நெல்லிக் கனியாக்குகிறார். சாக்ஷாத் இறைவனே இவ்வாறு கடமையாற்றும் போது, சாதாரண மனிதன் அனுசரித்தல் வேண்டுமல்லவா? ஜீவன் முக்தர்களாயினும், தத்வானுபூதியை தாம் அடைந்திருப்பினும், பலரும் பகவானின் இந்த நிலையினையே எடுத்துக் காட்டாகக் கொண்டு, உலக நன்மைக்காக பல காரியங்களையும் செய்து கொண்டேயிருக்கின்றனர். எனவே சாதாரண மனிதர்கள், சாதகர்கள், முமுக்ஷுக்கள் செயலற்ற தன்மையை விடுத்து ஜீவனைக் கடைத்தேற்ற நிஷ்காமமாக, பற்றற்று கர்மாக்களைத்*

தவறாது செய்தல் வேண்டும். அதனால் அவர்கள் மேன்மையடைவர்.

**23. யதி ஹ்யஹம் ந வர்தேயம் ஜாது கர்மண்யதந்த்ரிதஹ|**
**மம வர்த்மானுவர்தந்தே மனுஷ்யாஹ் பார்த்த ஸர்வசஹ|| (23)**

**சொற்பொருள் :**

*பார்த்த - அர்ஜுனா ! ஹி ஏனெனில், அஹம் - நான், ஜாது - எப்போதும், அதந்த்ரிதஹ - சோர்வின்றி, கர்மணி - கர்மத்தில், ந வர்தேயம் யதி - ஈடுபடாவிடில் மனுஷ்யாஹா - மனிதர்கள், ஸர்வசஸ - எல்லா விதங்களிலும், மம - என்னுடைய, வர்தம் - வழியையே, அனுவர்தந்தே - பின்பற்றுவார்கள்.*

**கருத்து:**

*அர்ஜுனா ! ஏனெனில் நான் அயர்வின்றி கர்மத்தில் ஈடுபடாவிடில், மனிதர்கள் என் வழியையே எப்போதும் பின்பற்றுவர்.*

**விளக்கம்:**

'அதந்த்ரிதஹ' - தந்த்ரத என்றால் சோம்பேறித்தனம், முயற்சியின்மை, அவ்வாறின்றி இருத்தலே 'அதந்தரித' சோம்பலன்றி இருத்தல், அயர்வின்றி இருத்தல் என்பது பொருள். ஸ்ரீ கிருஷ்ணர் தனக்கு கர்மா செய்ய வேண்டிய தேவையில்லாவிடினும் தான் கர்மாவைச் செய்யாது விட்டால் பிறரும் அவ்வாறே செய்யாதிருந்து இறுதியில் அழிவர் என்கிறார். அதனையே இச்சுலோகத்தில் கூறுகிறார். எனவே மகனீயர்கள் ஆதர்சவாதிகள், பெரியோர் தத்தம் கர்மாவைச் செய்வதில், தர்மத்தைக் கடைபிடிப்பதில் ஒருபோதும் அயராது உழைப்பர், உலக சரித்திரமே இதற்கு நல்ல எடுத்துக்காட்டு. மேலும் 'அதந்த்தஹ' என்ற பதப்பிரயோகத் தால் முமுக்ஷுக்கள் தம் சாதனையில் மிகவும் நிதானமாக இருத்தல் வேண்டும் என எச்சரிக்கிறார். எந்தவிதக் கடமையும்

இல்லாத பகவானே தன் கர்மாக்களைச் செய்வதில் மிகவும் எச்சரிக்கையாய் இருக்கையில் ஏனையோர் எத்தனை உற்சாகத்துடனும் சோர்வின்றியும் செய்தல் வேண்டும் என்பதை ஊகித்துக் கொள்ளக் கூடும். ஏனெனில் சிறிது கவனம் குறைந்தாலும் எத்தகைய மேதாவியாயினும் அவனைக்கூட மாயை அடித்து விடும். இந்திரியங்கள் மிக்க பலம் பொருந்தியவை, எத்துணையோ விவேகம், எச்சரிக்கை, இறைவனின் கருணை ஆகியவை மிகவும் தேவை, இரவில் இரயிலை ஓட்டுபவன் எத்துணை எச்சரிக்கையுடன் இருப்பானோ, சிறிது சோர்ந்தாலும் மக்கள் அனைவரும் கோர விபத்திற்குள்ளாக வேண்டுமோ, அவ்வாறே முமுக்ஷுக்களும் தம் ஆன்மீக சாதனையில் சோம்பேறித்தனத்திற்கு இடம் கொடுத்தால் அழிவிற்கு இடம் கொடுத்தவராவர்.

'ஜாது' என்ற பிரயோகத்தினால் பகவான் தான் செய்ய வேண்டிய காரியங்களில் எக்காலத்தும் அஜாக்கிரதையாக இருப்பதில்லை என்பது தெளிவாகிறது. எல்லாம் தெரிந்த, சாதித்தவரே இவ்வாறிருக்கையில், எதுவும் சாதிக்காத சாமானியர்கள் எவ்வாறிருக்க வேண்டும் ? எனவே சாஸ்திரங்கள் 'ப்ரமாதோ வை ம்ருத்யுஹு' (அஜாக்கிரதை இறப்பிற்குச் சமானமாகும்) என்று கோஷிக்கிறது. ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் இவ்விஷயத்தில் எச்சரிக்கை செய்துள்ளார்.

> 'ப்ரமாதோ ப்ரம்மநிஷ்டாயாம் ந கர்த்தவ்யஹ் கதாசன
> ப்ரமாதோ ம்ருத்யுரித்யாஹ பகவான் ப்ரம்மண சுதஹ
> (விவேக சூடாமணி 322)

பிரம்ம நிஷ்டையில் சோம்பேறித்தனம் (அஜாக்கிரதை) எப்போதும் இருத்தல் கூடாது. அத்தகைய சோம்பல் சாவிற்குச் சமமானது என்று பகவான் ஆன சனத்குமாரன் சொன்னார். எனவே சாதகர்கள் பகவான் தெரிவித்த இந்த அதந்தரிதஹ என்னும் சொல்லை பலமுறை நினைவிற்குக் கொணர்ந்து சோம்பலின்றி தம் சாதனைகளைச் செய்து வரல் வேண்டும்.

**24. உத்ஸீதேயுரிமே லோகா ந குர்யாம் கர்ம சேதஹம்।
ஸங்கரஸ்ய ச கர்தா ஸ்யாமுபஹன்யாமிமாஹ் ப்ரஜாஹா॥ (24)**

**சொற்பொருள்:**

அஹம் - நான், கர்ம - கர்மாவை, ந குர்யாம் சேத் - செய்யாவிடில், இமே லோகாஹா இவ்வுலகத்தின் பிரஜைகள், உத்ஸீதேயுஹு அழிந்து போவர், ஸங்கரஸ்யச - ஜாதி கலப்பிற்கும் கர்தா - கர்த்தாவாய், ஸ்யாம் - ஆவேன், இமாஹ்ப்ரஜாஹா - இந்தப் பிரஜைகளை, உபஹன்யாம் - கெடுத்தவன் ஆவேன்.

**கருத்துரை:**

நான் கர்மம் செய்யாவிட்டால் இவ்வுலகங்கள் அழிந்து போகும். ஜாதிக்கலப்புக்கும் நானே கர்த்தாவாய் மக்களைக் கெடுத்தவன் ஆவேன்.

**விளக்கம்:**

நான் கர்மம் செய்யாவிட்டால், ஏனைய மக்களும் செய்யாதிருப்பர், அதனால் சமூகத்தில் எல்லா வர்ணத்தினரும் தத்தம் கடமைகளைச் செய்யாதிருப்பின் வர்ணக் கலப்பு ஏற்பட்டு அமைதியின்மை ஏற்படும். மக்கள் அநியாயம், அதர்மம் இவற்றைக் கடைப்பிடிப்பர். அதனால் உற்பாதங்கள், உபத்திரங்கள் ஏற்படும். இதனால் பிரஜைகளின் அழிவிற்கு நானே காரணமாகிவிடுவேன். எல்லா விதங்களிலும் அவர்களைக் கெடுத்தவனாய் விடுவேன். எனவே பிரஜைகளின் க்ஷேமத்திற்காக நான் கர்மாவைச் செய்தவண்ணமேயிருப் பேன் என்று கூறி பகவான் கர்மயோகத்தின் அவசியத்தை நிரூபிக்கிறார். பகவான் பிராணி கோடிகளிடம் எத்தகைய கருணையுள்ளம் கொண்டவர் என்பதும் அவர் தன் தயையை எங்ஙனம் காட்டுகிறார். என்பதும் இச்சுலோகத்தில் தெளிவாகிறது. எனவே அனைவரும் பகவானைப் பின்பற்றி தத்தம் கர்மாக்களை ஒதுக்கித் தள்ளாது உலக க்ஷேமத்திற்கு காரணமாதல் வேண்டும்.

**முன்னுரை:**

உலக நன்மைக்காக ஞானிகள் பற்றற்று கர்மாக்களைச் செய்து வரல் வேண்டும் என போதிக்கிறார்.

**25. ஸக்தாஹ் கர்மண்யவித்வாம்ஸோ யதா குர்வந்தி பாரத।
குர்யாத் வித்வாம்ஸ்ததாஸக்தஸ் சிகீர்ஷுர்லோக
ஸங்க்ரஹம்। (25)**

**சொற்பொருள் :**

பாரத - அர்ஜுனா, அவித்வாம்ஸஹ - அஞ்ஞானிகள், கர்மணி - கர்மத்தில், ஸக்தாஹா பற்றுள்ளவர்களாய் (பலன் கருதி) யதா - எவ்வாறு, குர்வந்தி - செய்கிறார்களோ, ததா - அவ்வாறே, வித்வான் - ஞானி, அஸக்தஹ - பற்று இல்லாதவனாய் பலனைக் கருதாது லோக ஸங்க்ரஹம் - உலக நன்மைக்காக, சிகிர்ஷுஹு - விருப்பம் உள்ளவனாய், குர்யாத் - கர்மம் செய்ய வேண்டும்.

**கருத்து :**

அர்ஜுனா, அஞ்ஞானிகள் பற்றுடையவராய் பலனைக் கருதி எவ்வாறு கர்மாக்களைச் செய்கின்றனரோ அவ்வாறே ஞானிகள் பலனைக் கருதாது பற்றற்றவராய்ச் செய்தல் வேண்டும்.

**விளக்கம்:**

அஞ்ஞானிகள், ஞானிகள் இருவரும் கர்மாக்களை செய்கின்றனார். ஆயின் அஞ்ஞானிகள் பலனைக் கருதிச் செய்கின்றனர். ஞானிகள் பலனைக் கருதாது செய்பவர். ஒருவர் கர்மாவில் சிக்கி, நானே கர்த்தா என்ற எண்ணத்துடன் செய்வர் மற்றொருவர் அவற்றில் சிக்கிவிடாது, தானே கர்த்தா என்ற எண்ணம் இல்லாது செயலாற்றுவர் - அஞ்ஞானிகள் தம் சுய நலத்திற்காகச் செய்வர். ஞானிகள் உலக நலத்திற்காகச் செய்வர். இருவரும் கர்மாக்களைச் செய்தாலும் இருவர் நெறியும் வேறு, பற்றுடன் செய்வதால் அஞ்ஞானிகள் கர்மாவினால்

பந்தப்படுகின்றனர். ஞானிகள் பற்றற்று செய்வதால் பந்தப்படுவதில்லை. கர்ம விமுக்தியடைகின்றனர். ஒரே கத்தியை முறை தெரியாது பயன்படுத்தினால் கேடு செய்யும் தெரிந்து பயன்படுத்தினால் பலன் ஏற்படும், அக்னியை தெரிந்து பயன்படுத்தினால் சமைக்க முடியும். தெரியாது பயன்படுத்தினால் எரிந்து போவோம். அவ்வாறே கர்மா ஒரு நல்ல ஆயுதம். அதனைப் பயன்படுத்தும் முறையை, பிடிக்கும் வகையைப் பெரியோர்களிடம் தெரிந்து கொள்ள வேண்டும். கர்மா என்ற ஆயுதத்தை மூலையில் வைக்கக்கூடாது. (மா தே ஸங்கோ அஸன்த்வ கர்மணி) அதனைப் பயன்படுத்துதல் வேண்டும். ஆயின் அதனைத் தெரிந்து பயன்படுத்துக என்று எச்சரிக்கிறார். இச்சுலோகத்தில் அதனை எவ்வாறு பயன்படுத்த வேண்டுமென்பதை நன்றாக விவரித்துள்ளார். பற்றற்று கர்மாக்களைச் செய்வதே அதனைப் பயன்படுத்தும் முறை.

சிகீர்ஷு-லோக ஸங்க்ரஹம் என்ற சொல்லால் உலக நன்மையில் பகவான் எத்தகைய ஆசையுடையவர் என்பது விளங்குகிறது. பகவானுக்கு திருப்தியளிக்கக் கூடிய உலக நன்மையைச் செய்தல் விவேகமுள்ளவன் செய்ய வேண்டிய கடமையாகும். தாபத்திரயாக்னியால் அவதியுறும் மக்களுக்கு ஏதோ ஒரு விதத்தில் அவர்களின் மேன்மைக்கு உதவுதல் மிகவும் நன்று. எனவே ஞானியானவன், பற்றற்ற கர்மாவைச் செய்வதால் உலக நன்மையை சாதிக்க வல்லவன் என்று பகவான் இச்சுலோகத்தில் கூறுகிறார். அவர்களைப் பார்த்து ஏனையவரும் நிஷ்காம நெறியைப் பின்பற்றி மேன்மையுறுவர்.

பாரத - என்ற சொல்லில் அர்ஜுனனை அவ்வப்போது மகிழ்ச்சியடையச் செய்து பகவான் உற்சாகப்படுத்துவது தெரிகிறது. அச்சொல்லிற்கு பரதவம்சத்தில் பிறந்தவன் என்பதைத் தவிர வேறொரு பொருளும் உண்டு (பா-ஒளி, ரதஹ -ஆசையுடையவன் ஒளியில் விருப்பமுடையவன் பாரதன் ஏ அர்ஜுனா எழுக அஞ்ஞான இருளை போக்கி ஞான ஒளியில் நிரந்தரமாக எழுக என்று போதிப்பதற்காக பாரத என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார் பகவான்

வினா :

*விவேகி கர்மாவை எவ்வாறு செய்வான் ?*

விடை :

*பற்றற்று (பலனைக் கருதாது) செய்வான்*

வினா :

*எதற்காக ?*

விடை :

*உலக நன்மைக்காக*

**26 ந புத்திபேதம் ஜனயேதக்ஞானாம் கர்மஸங்கினாம்।
ஜோஷயேத்ஸர்வகர்மாணி வித்வான்யுக்தய்
ஸமாசரன்॥ (26)**

**சொற்பொருள்:**

*வித்வான் - ஞானி, கர்ம ஸங்கினாம் - கர்மத்தில் பற்றுடைய அக்ஞானாம் - அஞ்ஞானிகளுக்கு, புத்திபேதம் - புத்தியில் சலனத்தை, ந ஜன யேத் உண்டு பண்ணலாகாது, ஸர்வகர்மாணி - எல்லா கர்மங்களை (நானே) யுக்தஹ்ஸமாசரன்தான் யோக முக்தனாய் (ஆத்மாவில் நிலைபெற்று) நன்கு ஆற்றிக் கொண்டு, ஜோஷயேத் - (அவர்களையும்) அவற்றில் ஈடுபடுத்துதல் வேண்டும்.*

**கருத்துரை:**

*ஞானியானவன் கர்மப்பற்றுள்ள அக்ஞானிகளிடத்து மனக்கலக்கத்தை உண்டு பண்ணலாகாது. எல்லாக் கர்மங்களையும் தானே நன்கு ஆற்றிக் கொண்டு மற்றவர்களும் அவனைப் பார்த்து அதில் ஈடுபடு மாறுச் செய்தல் வேண்டும்.*

**விளக்கம்:**

*கர்மாவில் சிக்கிக் கொண்டு பற்றுடன் செயலாற்றுபவரின் புத்தியை ஞானி தன் ஞான போதனையால் சபலப்படுத்தாது, சலனத்தையுண்டு பண்ணாது, தன் தெளிவான செயலாற்றலால்*

அவர்களைத் தன் வழிக்குத் திருப்ப வேண்டும் என்று சொல்லப்பட்டது. உலகில் சிலர் நிஷ்காமகர்ம தத்துவத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் ஏதோவொரு நம்பிக்கையில், பற்றுடன் சிரத்தையாகச் செய்து வருவர். அத்தகையோருக்கு நீர் செய்வது தவறு, இவ்வாறு செய்தல் தகாது, இவ்வாறு செய்ய வேண்டும் என்று போதித்தால் உண்மையைத் தெரிந்து கொள்பவர் மிகச்சிலரே. எனவே அத்தகைய போதனையால் சிலர் செயல் ஆற்றுவதை விட்டுவிடுவர். அவர்கள் சமூகத்திற்கு பயன்படாது போய்விடக்கூடும் வாய்ப்பு உள்ளது. எனவே அத்தகையோரை எதுவும் செய்யாது தான் மாத்திரம் ஆன்மாவில் நிலைபெற்று, இந்திரியங்களைக் கட்டுப்படுத்தி பற்றற்று கர்மாக்களைச் செய்து வந்தால், அதன் தூய்மையை அவரேயுணர்ந்து, ஆத்ம சாந்தியெனும் அதன் பலனை அவர்களே நேரிலேயே பார்த்து கிரகித்து, தம் சித்தத்தை மாற்றிக் கொண்டு, காலக் கிரமத்தில் நிஷ்காம கர்மாவை செய்யத் தொடங்குவர். இதுவே இச்சுலோகத்தில் தெரிவிக்கப்பட்ட கருத்து.

வாயால் செய்யப்படும் போதனைகளைவிட, அனுஷ்டானத்தின் வழி செய்யப்படும் போதனை நன்கு பலனளிக்கும் என்பது இச்சுலோகத்தினால் தெளிவாகிறது. மேடையில் ஆற்றப்படும் உபன்யாசங்களை (Platform Speeches) விட, ஆடம்பரமேதுமின்றி தனிமையில் செய்யக்கூடிய நிஷ்காமமாகச் செய்யப்படும் புனிதமான செயல் (Silent unselfish work) மிகவும் உயர்ந்தது என்பது இதனால் தெரிகிறது. மேலும் ஹேரது வாதத்தைப் பின்பற்றும் இவ்விஞ்ஞான யுகத்தில் 'வாசா' போதனையால் ஒருவரை நம்பச் செய்வதோ, மாற்றுவதோ இயலாத காரியம், தான் சுயநலமற்று தம் செயல்களைச் செய்து வருவதால் மக்கள் பலரையும் மாற்ற முடியும். அப்போது மக்களுக்கு அவர்கள் மீது நம்பிக்கையேற் படும்.

யுக்தஹ் சமாசரன் - என்பதால் தான் யோகயுக்தனாய், ஆன்மாவில் நிலைத்து, நிஷ்காம புத்தியுடன், கர்மாக்களைச் செய்து வரவேண்டும் என கிரகித்தல் வேண்டும். ஆசரன்

எனாது ஸமாசரன் என்றதால் புனிதமான நடவடிக்கைகள் மேற்கொள்ள வேண்டும் என போதிக்கப்பட்டது.

**வினா:**

*அஞ்ஞானிகளுக்கு எவ்வாறு போதனை செய்தல் வேண்டும் ?*

**விடை:**

*தன் தூய்மையான நடவடிக்கைகளினால், பற்றற்று, கர்மாக்களைச் செய்து வந்து, தன்னைப் பார்த்து பிறரும் கற்றுக் கொள்ளும் வகையில் நடந்து கொள்வதே நல்ல சிறந்த போதனை.*

**முன்னுரை:**

*ஞானிக்கும், கர்மத்தின் மீது பற்றுடைய அஞ்ஞானிக்கும் இடையே உள்ள பேதங்களை அடுத்து வரும் இரண்டு சுலோகங்களில் கூறுகிறார்.*

**27. ப்ரக்ருதேஹ க்ரியமாணானி குணைஹ கர்மாணி ஸர்வசஹ।**
**அஹங்காரவிமூடாத்மா கர்தாஹமிதி மன்யதே॥ (27)**

**சொற்பொருள்:**

*பிரக்ருதேஹே - பிரகிருதியின், குணைஹி - குணங்களால், ஸர்வசஹ - பலவிதங்களிலும், க்ரியமாணானி - செய்யப்படுகின்ற, கர்மாணி - கர்மாக்களை, அகங்கார விமூடாத்மா - அகங்காரத்தால் மோகமடைந்த மனதுடையவன், அஹம் - நான், கர்த்தா - கர்த்தா என்று, மன்யதே - நினைக்கிறான்.*

**கருத்துரை:**

*பிரகிருதியின் குணங்களால் எல்லாவித கர்மங்களும் நடந்து கொண்டு இருக்கையில், அகங்காரத்தால் மோக மடைந்தவன் நானே கர்த்தா என்று நினைக்கிறான்.*

**விளக்கம்:**

இயற்கையினால் ஏற்பட்ட ஸத்வ, ரஜோ, தமோ குணங்கள், மனோபுத்தி, சித்தம், அகங்காரம் முதலானவை, சூக்ஷ்ம பஞ்ச பூதங்கள், கர்மேந்திரிய ஞானேந்திரியங்கள், சப்தாதி விஷயங்கள், எனும் இருபத்து நான்கு தத்துவங்களாக மாற்றப்படுகின்றன. எனவே இக்காட்சிப் பொருள் ஆன உலகம், தேகம், மனோபுத்தி முதலானவை, அனைத்தும் இயற்கையில் தோன்றுவதே. இயற்கையால் கிடைத்த இத்தேக இந்திரியங்களினாலேயே எல்லா கர்மங்களும் செய்யப்படு கின்றன. ஆயின் அவற்றிற்கு சாட்சியான ஆன்மாவினால் அல்ல. தான் உண்மையில் ஆத்மஸ்வரூபமே. அவ் உபாதிக்கு, தேக இந்திரியங்கள் சாட்சி எனவே உண்மையில் எந்த கர்மாவையும் செய்வதில்லை. இயற்கையே அனைத்தையும் நடத்துகின்றன. தேக இந்திரியங்கள், மனம் ஆகியவற்றின் சேர்க்கையான உபாதியே அவ்வக்காரியங்களைச் செய்கிறது. ஆயின் தேகத்தின் மீது பற்று கொண்ட விவேகமற்றவன் நான் செய்கிறேன், நானே கர்த்தா என்று எண்ணுகின்றார்கள். தேகம், அகம்பாவத்தினால் அவனது மனம் விவேகத்தை இழந்து ஆத்மா, அநாத்மா தத்வ சூன்யமாக இருப்பதால் கடமையை, செயலைத் தன்மீது ஏற்றிக் கொண்டு அதன் பலனாக பல ஜன்மங்களையும், துக்கங்களையும் அனுபவிக்கிறார்கள்.

ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் பேதம் இங்கே தான் உள்ளது. அஞ்ஞானி உபாதியுடன் பொருந்தி கர்த்தா என்ற எண்ணத்தை கொண்டு துன்பம் அனுபவிக்கிறான். ஞானி உபாதியை வேறாகச் செய்து கொண்டு, தான் ஆத்மாவே உபாதியல்ல என்று எண்ணி, அதனை சாக்ஷிபூதமாகக் கருதி கர்த்தா என்ற எண்ணமில்லாமல், பரமானந்தம் அனுபவிக்கிறான். துக்கமோ, துக்கமின்மையோ கர்த்தா, கர்த்தாவல்ல என்ற எண்ணத்திலேயே ஆதாரமாகயுள்ளது. அஞ்ஞானிக்கு மிக்க துன்பத்தையும், ஞானிக்கு மிக்க இன்பத்தையும் அளிக்க வல்லது அதுவே எனவே ஞானியானவன் இயற்கை செய்வதை தான் செய்வதாகக் கருதாது கர்த்தா என்ற எண்ணத்தை விட்டு தன் உண்மை ஸ்வரூபமான ஆத்மாவிலேயே நிலைத்திருத்தல் வேண்டும்.

'ஹங்கார மூடாத்மா' என்ற சொல்லால் அகங்காரம் ஜீவனுக்கு எத்தகைய கேடு விளைவிக்கும் என்பதை தெரிவிக்கிறது. அகங்காரம் விவேகத்தை உருமாற்றி மூடத்தனத்தை அளிக்கும். எனவே தேகத்தில் ஒருபோதும் அகம் என்ற எண்ணம் உதித்தல் ஆகாது. ஆத்மாவில் மட்டுமே நான் என்ற பாவம் இருத்தல் வேண்டும். (அகம் பிரம்மாஸ்மி)

**வினா:**

*உலகில் உள்ள எல்லா கர்மங்களும் எதனால் செய்யப்படுகின்றன ?*

**விடை:**

*இயற்கையினால் (இயற்கைக்குண்டான குணங்களால்)*

**வினா:**

*அகங்காரமுடையவன் என்ன நினைத்துக் கொள்கிறான்?*

**விடை:**

*தானே கர்த்தா என்று எண்ணுகிறான்.*

**வினா:**

*பலன் என்ன ?*

**விடை:**

*அதன் பயனால், பிறப்புக்களையும், துக்கங்களையும் அனுபவிக்கிறான். எனவே தான் ஆத்மஸ்வரூபன் என்றும், கர்த்தாவல்ல என்றும் எண்ணி துக்கம் இன்றி பிரம்மானந்தத்தை அடைதல் வேண்டும்.*

**28. தத்துவவித்து மஹாபாஹோ குணகர்மவிபாகயோஹோ।**
**குணா குணேஷு வர்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே॥**
**(28)**

**சொற்பொருள்:**

மஹாபாஹோ - பெருந்தோளுடைய அர்ஜுனா குணகர்மவிபாகயோஹோ குணம், கர்மம் இவற்றின் பிரிவுகளைப்பற்றிய, தத்வவித்து - உண்மையை யறிந்தவன், குணாயா (இந்திரியங்களின்) குணங்கள், குணேஷு (சப்தாதி விஷயங்களான குணங்களில், வர்தந்தே - பிரவர்த்திக்கின்றன, இதி மத்வா - என்று எண்ணி, ந ஸஜ்ஜதே - பற்று வைப்பதில்லை.

**கருத்துரை:**

பெருந்தோளுடைய அர்ஜுனா, குணங்களின் கர்மத்தின் பிரிவுகளைப்பற்றிய உண்மையினை அறிந்த ஞானி, குணங்கள் (இந்திரியங்கள் முதலானவை) குணங்களில் (சப்தாதி விஷயங்களில்) பிரவர்த்திக்கின்றன என்று (ஆத்மஸ்வரூபனான தனக்கு உண்மையில் அவற்றுடன் ஒருவித தொடர்பு மில்லையென்று) கருதி கர்மங்களின் மீதான பற்றினை விடுத்து இருப்பான்.

**விளக்கம்:**

உலகில் தேகத்துடன் ஆத்மா, அநாத்மா, திரிக், திரிஸ்யம் இவை கலந்துள்ளன. அவை இரண்டையும் பிரித்தறிதல் வேண்டும். தத்வஞானி அவற்றை பிரித்தனுப்புகிறான். அவ்வாறு அறியக் கூடியவனையே தத்துவஞானி என்பர், "தம்" ஸ்வாச்சரீராத்ப்ரவருஹேன்முக்ஞாதி வேஷீகாம் தைர்யேண என்ற கடோபநிஷத் வாக்கியத்தின்படி முன்ஜீ என்ற புல்லினின்றும் தர்ப்பையை வேறுபடுத்தி அறிவதைப்போல் அநாத்மாவை வேறுபடுத்துதல் வேண்டும். அங்ஙனம் பிரித்தறியும் ஞானியானவன் உலகில், தன் தேகத்தின் எல்லாக் காரியங்களையும் அந்த அநாத்மாவினால் இயற்கையினால் செய்யப்படுவதாகக் கருதுவான், அவ்வக்குணங்கள் அவ்வக் குணங்களின் தொடர்பான காரியங்களில் பிரவர்த்திக்கின்றன வேயன்றி ஆத்மாவான தனக்கு அவற்றுடன் எவ்வித தொடர்பும் இல்லையென்று அறிவான் அங்ஙனம் அறிந்தவன் இயற்கையுடன் (காட்சிப் பொருள்களிடத்து) பற்று,

அபிமானம் இல்லாதிருப்பான். உலகில் சஞ்சரித்த வண்ணமிருப்பான். தாமரை இலைத் தண்ணீரைப் போன்று பற்றற்று இருப்பான். 'ந ஸஜ்ஜதே' ஒட்டுதல் இல்லாதிருப்பான்.

ஜடமாக, கனவிற்கு ஒப்பான காட்சியுடன், ஊக்கு விக்கப்பட்ட ஞானி எவ்வாறு பற்று இல்லாமல் இருப்பான்.

கடைந்தெடுத்த வெண்ணை உருண்டை மோரில் எவ்வாறு முழுகிவிடாமல் மோருடன் எவ்வித தொடர்புமின்றி வேறாக இருக்கின்றதோ. தத்துவ ஞானியும் காட்சிப் பொருள்களில் ஒட்டாது வேறாக இருக்கின்றான். எனவே காட்சிப் பொருள்களின் பந்தமான சுகதுக்கங்களிலும் பற்றற்று இருப்பான். துக்கத்திற்குக் காரணம் (இயற்கை) பற்றே. பற்றற்ற தன்மையே மோக்ஷம். "த்ரிக்த்ரிஸ்ய சம்யோகோ ஹேய ஹேதுஹு" (நோக்கு காட்சி இவற்றின் மீதான பற்றை விடுதல் வேண்டும்) என்று பதஞ்சலிமகரிஷி கூறியுள்ளார். இவ்வாறான ஆத்மா, அநாத்மா பற்றிய விசாரணையற்றவன் சம்சாரத்தில் முழுகிவிடுவான். ஏனெனில் அவன் தேகமே தானென்றும், இந்திரியங்களே தானென்றும் மனமே தானென்றும் எண்ணி அவற்றின் மீது பற்றுக்கொண்டு அவற்றின் காரியங்களைத் தானே செய்வதாகக் கருதி மோஹமடைகிறான். எனவே அநாத்மா (த்ரிஸ்ய) வஸ்துக்களான தேக இந்திரியங்களின் மீது ஆசையினை விட்டு நிலைபெற்று இருத்தல் வேண்டும். துக்கத்தினின்றும் விடுதலை பெற இதுவொன்றே வழி, சம்சார சுழற்சியினின்றும் தப்பித்தற்கு இதுவே முக்கியமானது.

**வினா:**

தத்தஞானி கர்மாவில் எவ்வாறு நடந்து கொள்வான்?

**விடை:**

ஆத்மா, அநாத்மா இவற்றை பற்றிய விவேகத்துடன் இருப்பதால் அவன் அவ்வக்குணங்கள் அவற்றின் கர்மாவிலேயே பிரவர்த்திக்கின்றனவே யன்றி ஆத்மாவான தான் எதுவும் செய்வதில்லை என்று நிச்சயத்துடன் தன் காரியங்களில் பற்றற்று இருப்பான்.

**முன்னுரை:**

பற்றுடன் இருப்பவரது மனதை கலக்குதல் தகாது என்றும், தான் நன்கு செய்து வரும் கர்மாக்களினால் அவனே நம் வழிக்கு வருமாறு செய்தல் வேண்டுமென இதுவரை கூறிய செய்தியையே இன்னும் சிறிது வலியுறுத்திக் கூறுகிறார்.

**29. ப்ரக்ருதேர்குணஸம்மூடாஹ ஸஜ்ஜந்தே குணகர்மஸு।**
**தானக்ருத்ஸ்னவிதோ மந்தான்க்ருத்ஸ்னவின்ன**
**விசாலயேத்॥ (29)**

**சொற்பொருள்:**

*(யே - எவன்) ப்ரக்ருதே இயற்கையின், குணஸம்மூடாஹா - ரஜஸ் முதலான குணங்களினால் மோஹமடைந்தவர்களாக, குணகர்மஸு - குணங்களின், (தேக, இந்திரிய, மனங்களின்) கர்மாவில், ஸஜ்ஜன்தே - பற்றுள்ளவர்களாக, அக்ருத்ஸ்னவித - நல்லறிவில்லாதவர்களாக, மந்தான்-மந்த புத்தியுடையவராய், (உள்ள) தான் - அத்தகையோரை, க்ருத்ஸ்னவித் - ஆத்மஞானியான அறிவுடையோன், ந விசாலயேத் - கலங்கும்படி செய்தல் ஆகாது.*

**கருத்துரை:**

*இயற்கையின் ரஜோ முதலான குணங்களினால் மோஹமடைந்தவராய், தேக, இந்திரியங்கள் முதலானவற்றின் தொழில்களின் மீது பற்று வைக்கின்ற அல்பஅறிவுடைய மந்த புத்தியினரைத் தெளிந்த அறிவுடையோர் குழப்பலாகாது.*

**விளக்கம்:**

*இவ்வத்தியாயத்தின் 26 ஆவது சுலோகத்தில் சொல்லப் பட்ட பொருளையே இங்கு கூறுகின்றனர். ஆத்மஞானிகளான மகனீயர்கள் கர்மாவில் பற்றுடையவராய், பலன்களைக் கருதுபவர்களாய், தானே கர்த்தா என்ற எண்ணமுடையவராய் இருக்கின்ற அஞ்ஞானிகளின் மனதைக் கெடுக்காமல், தன் உன்னத நெறிமுறைகளுடன் கூடிய நடவடிக்கைகளால் தன் வழிக்கு மெல்லக் கொணர்தல் வேண்டும். தம்*

நடவடிக்கைகளின் மீது அவர்களுக்கு உற்சாகம் ஏற்படுமாறு செய்தல் வேண்டும். தம் எதிரில் தூய்மையான, பற்றற்ற செயலுடைய பெரியவர்களைப் பார்த்து அவர்களும் படிப்படியே நன் நெறிக்குத் திரும்புவர்.

அக்ருத்ஸ்னவித் குண தர்மங்களில், காட்சிப் பொருள்களின் மீது, பற்று ஆசை உடையவர், அல்பஞானிகள் என்கிறார் பகவான். அவர்கள் எத்தகைய உலக அறிவு உடையவர் ஆயினும், சிறந்த பண்டிதர்களாயினும், இயற்கைக்கும் இந்திரியங்களுக்கும் அடிமையாக இருப்பவர்கள். எனவே அவர்கள் சிறிய புத்தியுடையவர்களே. மேலும், மந்தான் என்பதால் அவர்கள் பெரியவர்களின் பார்வையில் பகவானின் பார்வையில் மந்த புத்தியுடையவர்களே. எனவே குணங்களின் மீதான பற்று, இயற்கையின் மீதான பற்று இவற்றை விடுத்து அறிவுடையோராய்த் (க்ருத்ஸ்ன வித்) ஆதல் வேண்டும் தவிர, அவற்றைப் பற்றிக் கொண்டு மந்த புத்தியுடையோராய் இருத்தல் கூடாது.

க்ருத்ஸ்னவித் - எதனைப்பற்றி அறிந்தால் அனைத்தும் தெரிந்ததாக ஆகுமோ (யஸ்மிந பிக்ஞாதே ஸர்வமிதம் விக்ஞாதம் பவதி) அத்தகைய ஆத்மாவையறிதலே ஸர்வ ஸஜ்ஜிதம் அதனை அறிபவனே க்ருத்ஸ்னவித் பிரம்மாண்டமனைத்திற்கும் மூலமான கயிற்றைப் போன்ற பிரம்ம (ஆத்மா) வஸ்துவை அறிந்தால் அனைத்தும் அறிந்தவன் ஆவான். எனவேதான் மகனீயர்களான ரிஷிகள், முனிகள் முதன் முதலில் தம் இதயத்தைப் பரிசோதித்துக் கொண்டு, இந்திரியங்களை வென்று, இயற்கையினைத் தம் வசப்படுத்திக் கொண்டு, ஆத்மானுபவம் அடைவதன் மூலம் அனைத்துமறிந்த ஞானியாகின்றனர். அதுவே ஜன்ம ஈடேற்றம் அடைவதற்கான ஒரே வழி, அமைதிக்கும், சுகத்திற்கும் வழி.

**வினா:**

இயற்கை குணங்களுக்கு அடிமைப்பட்ட கர்மாவின் மீது பற்றுடையவர் எத்தகையவர் ?

**விடை:**

*அல்பஞானிகள், மந்தபுத்தியினர்*

**வினா:**

*அத்தகையோரை ஞானிகள் என்ன செய்தல் வேண்டும் ?*

**விடை:**

*அவர்களின் புத்தியைக் கலங்கும்படி செய்யாது தாம் நன்னெறியில் நின்று அவர்களை படிப்படியே தம் வழிக்குக் கொணர்தல் வேண்டும்.*

**முன்னுரை:**

*இவ்வத்தியாயத்தின் முதலில் அர்ஜுனன் கேட்ட கேள்விக்கு பதிலாக மிக்க மேன்மையைத் தரும் மார்க்கம் எது என்பதைக் கூறுகிறார்.*

30. மயிஸர்வாணி கர்மாணி ஸம்ன்யஸ்யாத்யாத்மசேதஸா।
நிராசீர்நிர்மமோ பூத்வா யுத்யஸ்வ விகதஜ்வரஹ॥ (30)

**சொற்பொருள்:**

*ஸர்வாணி கர்மாணி - எல்லா கர்மங்களையும் மயி - என்னிடத்தே, அத்யாத்மசேதஸா - ஆன்மீக சித்தத்துடன் (ஆன்மாவில் நிலைபெற்ற மனத்துடன்) ஸன்யஸ்ய - அர்ப்பித்து, நிராசி - ஆசையற்று, நிர்மமஹ - மமகாரம் அற்றவனாய் பூத்வா - இருந்து, விகதஜ்வரஹ - மனக் கொதிப்பு அற்றவனாய், யுத்யஸ்வ - யுத்தம் செய்*

**கருத்துரை:**

*எல்லா கர்மங்களையும் என்னிடத்து அர்ப்பித்து சித்தத்தில் ஆத்மாவில் வைத்து ஆசை, மமகாரம் இவையன்றி மனக் கொதிப்பின்றி யுத்தம் செய்.*

**விளக்கம்:**

*அத்யாத்மசேதஸா - மக்களில் பெரும்பாலோரின் மனம் உலகப்பொருள்களில், காட்சிப் பொருள்களின் மீதே ஈடுபாடு*

கொண்டதாக இருக்கும். தெய்வத்திற்கோ, பரமாத்மாவிற்கோ அங்கு இடம் கிடைத்தல் அரிது. அது ஆன்மீக மனமல்ல அது உலகில் ஈடுபடும் சித்தம், ஒவ்வொருவரும் ஆன்மீக சித்தம் கொண்டிருத்தல் வேண்டுமென்று பகவான் ஆசைப்படுகிறார். ஆத்மஞானத்தாலும், தெய்வசிந்தனையாலும், சித்தம் நிறைவடைந்து, நிரதிசய பக்தி பாவனையில் ஒன்றியிருத்தல் வேண்டும். அதுவே ஆன்மீக சிந்தனையென்பது. அத்தகைய புனிதமான மனத்துடன் எல்லா கர்மங்களையும் பகவத் அர்ப்பணம் செய்தல் வேண்டுமென இங்கு போதிக்கப்பட்டது ஸர்வாணி கர்மாணி என்று சொல்வதால், ஒன்றிரண்டு செயல்கள் மட்டுமேயன்றி, தான் செய்யும் அனைத்துச் செயல்களையும் ஈசுவரார்ப்பண புத்தியுடன் செய்தல் வேண்டுமென்பது விளக்கப்படுகிறது.

நிராசி நிர்மமஹ - ஆசை, மமகாரம் இவற்றை விடுத்து இருத்தல் வேண்டுமென எச்சரிக்கப்பட்டுள்ளது. இவ்வுலகில் இறைவன் (ஆத்மா) எனும் ஒன்றைத் தவிர அறிவில் கொள்ள வேண்டியது வேறெதுவுமில்லை, உலகமனைத்தும் இறைவனின் பிரதிபிம்பமேயென்றும், கற்பனையென்றும், நிலைபெற்றது யென்றும் அத்தகைய உலகில் விவேகமுடையவன் எப்பொருளின் மீதும் ஆசையோ, மமகாரமோ இன்றி மனிதன் இறையர்ப்பண உணர்வுடன் தன் கடமைகளை ஆற்றுதல் வேண்டும் என்று அர்ஜுனனுக்குச் சொல்வது போல் உலகிலுள்ள மக்களனைவருக்கும் போதிக்கப்பட்டது. அர்ஜுனன் க்ஷத்திரியன் ஆதலால் யுத்யஸ்வ - யுத்தம் செய் எனப்பட்டது. ஏனையோர் அவரவர் வழிவந்த காரியங்களை ஈசுவரார்ப்பண புத்தியுடன், மேற்சொன்ன ஆன்மீக குணத்துடன் இருந்து செயலாற்றுதல் வேண்டும். இதனைவைத்து, கிருஹஸ்தாஸ்ரமத்தில் இருப்பவர் கூட கடைத்தேறுவதற்கு அவகாசம் ஏற்படுத்தப் பட்டுள்ளமையைக் காணலாம். விகதஜ்வரஹ - மனக் கொதிப்பின்றி யுத்தம் செய் என்று பகவான் சொல்கிறார். ஜுரம் இரண்டு வகைப்படும். 1.) வெளிக்கொதிப்பு 2.) மனக்கொதிப்பு இரண்டும் மனிதனை பாதிப்பவை. அதில் முதலாவதான வெளி உடல் கொதிப்பு மருந்துகளினால் சரி

செய்தல் கூடும். மனக் கொதிப்பு (பவரோகம், சம்சாரத்தாபம்) அடங்குவதற்கு, பகவான் இச்சுலோகத்தில் நல்ல மருந்து நான்கினைக் கூறியுள்ளார். அவையெவை எனின்,

1. ஆன்மீக சித்தத்துடன் இருத்தல் (ஆன்மாவில், இறையில் ஈடுபட்ட மனமுடையவனாய் இருத்தல் வேண்டுமென்பது பொருள்.
2. அத்தகைய நிர்மலமான மனத்துடன் எல்லா காரியங்களையும், அதன் பலனை பகவானுக்கு அர்ப்பித்தல் வேண்டும்.
3. ஆசைகளை விடுதல் வேண்டும்.
4. மமகாரம் அற்று இருத்தல் வேண்டும்.

இந்நான்கையும் 'ராமாயண ஔஷதம்' எனலாம். பவரோகத்தைத் தீர்ப்பவை இவை. இவற்றை நன்றாக உண்டால் மனிதன் விகதஜ்வரன் ஆகக்கூடும். கத எனாது விகத என்றதால் கொதிப்பு முழுவதுமாக அடங்கவல்லது என்பது பொருள்.

எத்தகைய தேக ஆரோக்கியம் இருப்பினும் பிறப்பு இறப்பெனும் சம்சார பிரவாகத்தில் அலைப்புற்று, பல கர்ப்பங்களில் குடியிருந்து ஜீவனை படுத்தும் உள்கொதிப்பு மிக்க கேடு விளைவிக்கக் கூடியது. எனவே பகவான் தெரிவித்த இந்த நான்கு திவ்ய ஔஷதங்களை நன்றாக உண்டு சம்சாரமெனும் கொதிப்பை நீக்கி, தெய்வ சிந்தனையும் எல்லா காரியங்களையும் ஆனந்தமாக செய்தல் வேண்டுமென ஸ்ரீ கிருஷ்ண பகவான் கருணையுடன் இங்கு போதிக்கிறார்.

**வினா:**

மிக்க மேன்மையை யடைதற்கு வழி என்ன?

**விடை:**

ஆன்மீக சிந்தனையுடன் எல்லா காரியங்களையும் பகவத் அர்ப்பணம் செய்து ஆசை, மமகாரம் இவையன்றி மனக்

கொதிப்பின்றி கடமைகளைச் செய்து வருதலே மேன்மையளிக்கக் கூடியது.

**முன்னுரை :**

இத்தகைய வழிகளைப் பின்பற்றியவர்க்குண்டாகும் நன்மையை விவரிக்கிறார்.

**31. யே மே மதமிதம் நித்யமனுதிஷ்டந்தி மானவாஹா|**
**ச்ரத்தாவந்தோ அனஸூயந்தோ முச்யந்தே தே அபி**
**கர்மபிஹி|| (31)**

**சொற்பொருள்:**

யே மானவாஹா - எம்மனிதர்கள் மே - என்னுடைய இதம் மதம் - இந்த அபிப்ராயத்தை ச்ரத்தாவந்தஹ - சிரத்தை யுடையவர்களாய், அனஸூயந்தஹ - பொறாமையின்றி நித்யம் - தினமும், அனுதிஷ்டன்தி - அனுசரிக்கிறார்களோ, தே அபி - அவர்கள் கூட கர்மபிஹி கர்மங்களினின்றும், முச்யந்தே - விடுபடுகிறார்கள்.

**கருத்து:**

எனது இந்த கோட்பாட்டை எம் மனிதர், சிரத்தையுடனும், பொறாமையின்றியும் எப்போதும் பின்பற்றுகிறார்களோ அவர்களும் வினையினின்றும் விடுபடுகிறார்கள்.

**விளக்கம்:**

மேற்சொன்ன நிஷ்காம கர்மாவை பின்பற்றுவதால் மனிதன் கர்மபந்தத்தை அறுத்தெறிதல் கூடும் எனப்பட்டது. இதனைச் சரியாக புரிந்து கொண்டு பின்பற்றினால் கர்மமே கர்மத்தை அறுத்து எறிதல் கூடும். என்பது தெளிவாகிறது. கர்ம யோகத்தினால் கர்மமுக்தன் ஆகிறான். அதாவது, பற்றற்ற கர்மத்தைச் செய்வதால் கர்மயோகிகள் ஞான யோகிகளைப் போன்றே கர்மபந்த விமுக்தி அடைகின்றனர் என்பது பொருள்.

(நிஷ்காம கர்மானுஷ்டத்தினால் சித்த சுத்தி ஏற்பட்டு அதனால் ஞானம் பிறந்து விமுக்தி யடைகிறார்கள்)

நித்யம் என்றதால் ஏதோவொரு சமயத்தில் மட்டும் அவ்வாறிருத்தல் போதாது என்பதும், தினமும் அவரவர் செய்யும் காரியங்களில் பற்றற்றிருத்தல் வேண்டுமென்பது தெரிகிறது. அப்படியாயின் அவற்றைப் பின்பற்றும் போது இரண்டு நற்குணங்களைக் கண்டிப்பாக மேற்கொள்ளுதல் வேண்டும். அதுவே சிரத்தை, அல்லது அக்கறை, பொறாமையின்றியிருத்தல் ஆகியவை. எப்பொருள்களின் மீதும் எவ்வாக்கியத்திலும், எவர் மீதும் எந்த அளவுக்கு அக்கறை யிருக்கிறதோ அந்த அளவு அவை அதிக பலன் கொடுக்கும். பொறாமையென்பது வேர்ப்புழுவைப் போன்றது. அது ஜீவனின் சக்தியைத் தின்றுவிடும். ஆன்மீக விஷயத்தில் அது வன்மையான எதிரி. சாதகன் கஷ்டப்பட்டு சம்பாதித்த நற்குணங்கள் அனைத்தையும் ஒரு கணத்தில் சாம்பலாக்கி விடும். (பாலில் விழுந்த ஒரு துளி விஷத்தைப் போல). இவ் ஆபத்தை யுணர்ந்து பகவான் சாதக உலகிற்கு எக்காலத்திற்கும் உதவும் எச்சரிக்கையளித்துள்ளார். சிரத்தை, பொறாமை யின்மை என்ற அணிகளைப் பூண்டு கர்மக்ஷேத்திரத்தில் நுழைந்து பற்றற்று நிரந்தரம் கர்மாவைச் செய்து வந்தால் மனிதன் கர்மபந்தத்தை எக்காலத்தும் அடைவதில்லை என்று இங்கு சொல்லப்பட்டது. இவ்வாறு கர்மாவே கர்மபந்தத்தை விடுவிக்க வல்லது என்பது இங்கு நன்றாக நிரூபிக்கப் பட்டுள்ளது. பகவானிடம் அர்ப்பித்த செயல்களினால் விஷம் போய் கர்மா நிஷ்காமகர்ம யோகமாக மாறிவிடும்.

மானவாஹா - என்றதால் இவ்வான்மீக சாதனையில் சாதி, மத குல பேதமின்றி அனைவரும் பின்பற்றி கடைத்தேறுதல் வேண்டுமென்பது பொருள்.

அபி - என்ற முதற்பிரயோகத்தினால் சாதாரண மனிதர்களிடம் இத்தகைய முறைகளை அனுசரித்துக் கடைத் தேறுகையில், அர்ஜுனனுக்கு இது இன்னும் சுலபம் என்று போதிக்கப்பட்டது.

**வினா:**

*கர்மாவினின்றும் எவர் விமுக்தியடைகின்றனர் ?*

**விடை:**

பகவான் போதித்த இப்பற்றற்ற கர்மா யோக முறையை சிரத்தையுடனும், பொறாமை இன்றியும், தினமும் செய்து வருபவர் கர்மங்களின்றும் விமுக்தி அடைகின்றனர்.

**முன்னுரை:**

நிஷ்காம யோக முறையைப் பின்பற்றாதவர்க்கு நேரும் கெடுதலை விவரிக்கிறார்.

**32. யே த்வேமததப்யஸூயந்தோ நானுதிகஷ்டந்தி மே மதம்|**
**ஸர்வக்ஞானவிமூடான்ஸ்தான்வித்தி நஷ்டான சேதஸஹ|| (32)**

**சொற்பொருள்:**

யே து - எவரொருவர், மே - என்னுடைய, ஏதத் மதம் இக்கொள்கையை, அப்யஸூயந்தஹ - இகழ்பவர்களாய், ந அனுதிஷ்டந்தி - அனுசரித்து நடப்பதில்லையோ, தான் - அவர்களை, அசேதஸஹ - புத்தியற்றவர்களாவர், ஸர்வக்ஞான விமூடான் - எல்லாவிதமான ஞானத்திலும் மூடர்களாய், நஷ்டான் - கெட்டுப் போனவர்கள் என்று, வித்தி - அறிக.

**கருத்து:**

எவர் எனது இக் கொள்கையை (ஆன்மீக வழியை, நிஷ்காம கர்மயோக முறையை) இகழ்ந்து பின்பற்றுவதில்லையோ. அத்தகையோர் புத்தியில்லாதவர்களென்றும், சிறிதளவும் ஞானமற்றவர்களென்றும், கேடு கெட்டவர்கள் என்றும் அறிக.

**விளக்கம்:**

பகவானுக்கர்ப்பணிக்கப்பட்ட, பற்றற்ற கர்மயோகத்தை, தெய்வத்தின் வழியை தூற்றுபவர்கள், பற்றுடன் கர்மாக்களைச் செய்து காட்சியிலேயே ஒன்றிப் போய் விடுவர். அத்தகையோர் கர்மபந்தத்தில் தவறாது சிக்கிக் கொண்டு பிறப்பு இறப்பின் ரூபமான சம்சார பிரவாகத்தில் சிக்கி அழிவர் அவர்கள் பிரம்மத்தையோ, கர்மாவைப்பற்றியோ

அறியாதவர்களாய் அறிவற்றவர்களாய் அழிகின்றனர். உலக ஞானம் எத்துணை பெற்றிருந்தாலும், பெரிய பண்டிதனாயினும், பகவானிடம் பக்திசிரத்தை, நிஷ்காம பாவம், ஆத்மஞானம் முதலானவை இல்லாவிடில் அவன் இறைவனின் பார்வையில் ஸர்வ ஞான விமூடன் ஆகிறான். புத்தியிருப்பினும் இல்லாதவனேயாகிறான். (அப்புத்தி அழியக்கூடிய பொருள்களின் மீதே மூழ்கியிருப்பதால் அத்தகையோனுக்கு அழிவு நிச்சயம் என்று இச்சுலோகம் தெளிவாகக் காட்டுகிறது (நஷ்டான்). எனவே பகவான் சொல்லிய வழியை பக்தி, சிரத்தையுடன் நிஷ்காம கர்மயோகாதி பரமார்த்த தத்துவங்களை அனுசரித்து அனுஷ்டித்தல் மேன்மையானது. இல்லாவிடில் மூன்றுவிதமான கேடுகள் அவனைச் சூழும், அவையாவன (1) ஸர்வ ஞான விமூடத்துவம் (2) புத்தியின்மை (3) அழிவு

**வினா:**

பகவான் போதித்த இவ்வான்மீக வழியைப் பின்பற்றாதவர்களுக்கு, தூற்றுபவர்களுக்கு ஏற்படும் கேடு எவையோ அவற்றை விவரிக்க

**விடை:**

(1) சிறிதளவும் ஞானமின்றிப் போதல் (2) புத்திக்கெட்டுப் போதல் (3) சம்சாரமெனும் இருட்குகையில் சிக்கி அழிவு ஏற்படுதல்.

**முன்னுரை**

இவ்வாறாக மனிதன் தன் கடமைகளை நிஷ்காமமாக செய்து வராமல், கர்மாக்கள் செய்வதை விடுத்து செயலின்றி இருந்தால் உண்டாகும் நஷ்டம் யாது என்பதை விளக்குகிறார்.

**33. ஸத்ருசம் சேஷ்டதே ஸ்வஸ்யாஹ் ப்ரக்ருதேர்ஞான வானபி|**
**ப்ரக்ருதிம் யாந்தி பூதானி நிக்ரஹஹ் கிம் கரிஷ்யதி|| (33)**

**சொற்பொருள்:**

ஞானவான் அபி - ஞானியாயினும், ஸ்வஸ்யாஹ்றா - தன்னுடைய ப்ரக்ருதேஹே இயற்கையான (இயல் பிற்கு) ஸ்த்ருசம் - தக்கபடி, சேஷ்டதே - நடக்கிறான், பூதானி - உயிர்கள், ப்ரக்ருதிம்-தம் இயல்பை (இயற்கையை) யாந்தி - பின்பற்றுகின்றன (எனவே) நிக்ரஹஹ - தடையானது கிம் கரிஷ்யதி - என்ன செய்யும்?

**கருத்து:**

ஞானியாயினும் (சாஸ்திரபண்டிதன் ஆயினும் அல்லது உலக ஞானம் உடையவனாயினும்) தன் இயற்கைக்குத் தக்கபடி நடந்து கொள்கிறார்கள் (ஜன்ம ஜன்மாந்தரமாகத் தொடர்ந்து வரும் பண்பாட்டினால் ஏற்பட்ட இயற்கைக்கு உயிர்கள் தம் இயற்கையையொட்டியே நடக்கின்றன. எனவே இனி தடைசெய்வதால் ஆவதென்ன?

**விளக்கம்:**

இங்கு ஞானவான் அபி என்ற சொல்லிற்கு சாஸ்திர பாண்டித்தியம், அல்லது உலக ஞானம் மாத்திரம் உடையவன் என்பது பொருள், எத்தகைய மகாபண்டிதன் ஆயினும், சாஸ்திர ஞானம் உடையவனாயினும் சாஸ்திர ஞானமுடையவனாயினும் தன் இயல்புக்கு, பூர்வஜன்ம பண்பாட்டிற்கு ஏற்பவே நடந்து கொள்கிறான். இனி சாமான்ய மனிதர்கள் வேறாக எவ்வாறு நடப்பர்? என்பது அதன் பொருள். இங்கு பூர்வஜன்ம பண்பாட்டின் முக்கியத்துவத்தைக் கூறுவதே அவரது உத்தேசம். அதுவேயன்றி இல்லையெனில் அடுத்த சுலோகத்திலேயே, தயோர் ந வசமாகச்சேத் இந்திரியங்களுக்கு உட்படாது அவற்றை எதிர்த்தல் வேண்டும் என்று எதனால் கூறுகிறார். கீதை சாஸ்திரத்தின் ஆரம்பத்திலிருந்தே குரோதத்தினை ஒழித்தல், இந்திரியக் கட்டுபாடு, கெட்ட நடவடிக்கைகளை ஒதுக்குதல், காமத்தை அண்டவிடாதிருத்தல், - என்ற போதனைகளையே செய்து வந்துள்ளது. அவ்வாறிருக்கையில் இங்கு மாத்திரம்

கட்டுப்பாட்டினால் ஏதும் உபயோகமில்லை என்று கூறுமா? அல்ல. ஜன்மாந்தர வாசனையின் பண்பாட்டின் திடமான சக்தியைக் குறித்து வர்ணித்து இவ்வாறு சொல்லப்பட்டது. அவ்வளவே.

**34. இந்திரியஸ்யேந்த்ரியஸ்யார்த்தே ராகத்வேஷௌ வ்யவஸ்திதௌ।**
**தயோர் ந வசமாகச்சேத்தௌ ஹ்யஸ்ய பரிபந்திநௌ॥ (34)**

**சொற்பொருள்:**

*இந்திரியஸ்ய இந்திரியங்களுக்கு இந்திரியஸ்ய இந்திரியங்களின், அர்த்தே விஷயத்திலும், ராகத்வேஷௌ - விருப்பு வெறுப்புக்கள், வ்யவஸ்திதௌ - அமைந்திருக்கின்றன. தயோர்ஹோ - அவ்விருப்பு வெறுப்புகளுக்கு, வசம் - வசத்தை, ந ஆகச்சேத் - அடையக் கூடாது, தௌ - அவ் விரண்டும், அஸ்ய - அவனுடைய பரிபந்திநௌ ஹி - எதிரிகள் அல்லவா ?*

**கருத்துரை:**

*ஒவ்வொரு இந்திரியத்திற்கும் அவற்றின் விஷயங்களில் (சப்தாதி) விருப்பு வெறுப்புகள் ஏற்படுகின்றன, அவ்விருப்பு வெறுப்புகளுக்கு எவரும் அடிமை ஆதல் கூடாது. அவை மனிதனின் பலமான எதிரிகள் அல்லவா?*

**விளக்கம்:**

*மேற்சுலோகத்தில் சொன்னதைப் போல் மனிதன் தன் இயல்பிற்கேற்ப நடந்து கொள்வது சரியேயாயினும், இறைவனின் பலத்தால் இயற்கையை வெல்லுதல் இயலும் என்று வாக்களிக்கிறார். இந்திரியங்கள் சப்தாதி விஷயங்களில் விருப்பு வெறுப்பு கொண்டவை. அவை முமுக்ஷுக்களுக்கு பரம எதிரிகள், அவை அநேக ஜன்மங்களாக பிறவிதோறும் தொடர்ந்து ஜீவனின் இதயத்தையே ஆக்ரமித்துக் கொண்டுள்ளன. அதிகாரம் செய்கின்றன. சத்குருவின் உபதேசத்தினால் அவ்வெதிரிகளை ஓட்டி ஆன்ம சாம்ராஜ்யத்தை மறுபடியும் சம்பாதித்துக் கொள்கிறான்.*

ஆன்ம விசாரணை, பக்தி, வைராக்யம், நிஷ்காம கர்மாவைச் செய்தல் - முதலியவற்றின் வழி அதனைச் சாதித்தல் இயலும். அவ்வாறு சாதிக்கும் வரை ஜீவனுக்கு அமைதியில்லை. ஏனெனில் எதிரி ஊரில் இருந்தால் அபாயம், வீட்டிலேயே இருந்தால் இன்னும் அபாயம்இ இதயத்திலேயே இருப்பின் எத்தகைய அபாயமோ, அத்தகைய அமைதியின்மையேற்படும் என்பதைச் சொல்லவா வேண்டும்? எனவே அவ்விருப்பு வெறுப்புகள் என்ற அவ்வெதிரிகளுக்கு அடிமைப்பட்டு விடாது, தெய்வீக புருஷ யத்தனத்தினால் அவற்றை எவ்வாறேனும் வெற்றி கொள்ளுதல் வேண்டும்.

பூர்வ ஜன்மத்தின் தீய குணங்கள், இப்பிறப்பில் செய்யும் ஆன்மீக முயற்சிகள் என்ற இரண்டும், ஒன்றுக்கொன்று போட்டியிடுகின்றன. அதில் எதில் பலமாக உள்ளதோ அதுவே வெல்லும். எனவே ஆன்மீக முயற்சியில் இரட்டிப்பாக இறங்கினால் தயோர் ந வசமாகச்சேத் என்று பகவான் சொல்லியபடி, அவ்விருப்பு வெறுப்புகளுக்கு தலைவணங்காத இதயக் குகையிலிருந்து அவற்றைத் தூர விலக்கித் தள்ளும் பூர்வ ஜன்மத் தொடர்பால் நாம் நல்ல முறையில் இல்லையே என்று வருந்துவதால் லாபமில்லை. அது எப்பொழுதும் நம்முடனேயே இருக்கும். 'ஆதலால் பௌருஷேண ப்ரயத்னேன யோஜநீயோ சுபேதி' என்று ஸ்ரீ வசிஷ்ட மகரிஷி சொல்லியபடி புருஷத்தன்மையுடன் தைரியமாக அத்தீயச் சக்திகளைக் கொன்று மனதை தூய வழியில் செலுத்த வேண்டும். ஸ்ரீ கிருஷ்ண பகவான் கீதையில் அவ்வாறே எச்சரிக்கை செய்கிறார். ஓ ஜீவர்களே உங்கள் தீய எண்ணங்களுக்கு அடிமைப்பட்டு விடலாகாது. முயற்சியினால் அவற்றை எதிர்த்து ஆன்ம சாம்ராஜ்யத்தில் நுழையுங்கள் என்ற பகவானின் இவ்வாணையை ஏற்று முமுக்ஷுக்களனைவரும் தமது எதிரிகளான விருப்பு வெறுப்புகளை வென்று சாந்தியினை அடைவார்களாக.

**வினா:**

இந்திரியங்களின் இயல்பு எத்தகையது ?

**விடை:**

விஷயங்களின் மீது விருப்பு, வெறுப்பு உள்ளது.

**வினா:**

மோக்ஷத்தை அடைய விரும்புவோர் பின்பற்ற வேண்டி முறைகள் என்ன ?

**விடை:**

விருப்பு வெறுப்புகளுக்கு அடிமைப்படாது, தைரியத்துடன் அவற்றை வெல்லுதல் வேண்டும். அவை மனிதனின் பிரபல எதிரிகள்.

**முன்னுரை:**

நம் சுய முயற்சியால் பயிற்சியால், அத்தகைய விருப்பு வெறுப்பற்ற நிலையையடைய முயற்சி செய்தல் வேண்டும்.

**35. ச்ரேயான் ஸ்வதர்மோ விகுணஹ் பரதர்மாத்ஸ்**
**வனுஷ்டிதாத்।**
**ஸ்வதர்மே நிதனம் ச்ரேயஹ் பரதர்மோ பயாவஹஹ॥**
**(35)**

**சொற்பொருள்:**

ஸ்வனுஷ்டிதாத் நன்கு அனுஷ்டிக்கப்பட்ட, பரதர்மாத் - பிறருடைய தர்மத்தைக் காட்டிலும், விகுணஹ - குண மற்றதாயினும், ஸ்வதர்மஹ - தன் தர்மமே, ச்ரேயான் - சிறந்தது. ஸ்வதர்மே - தன் தர்மத்தில், நிதனம் - மரணமாயினும், ச்ரேயஹ - சிறந்தது, பரதர்மஹ - பிறருடைய தர்மமானது, பயாவஹஹ - பயத்தை ஏற்படுத்தக் கூடியது.

**கருத்துரை:**

நன்கு இயற்றப்படும் பிறருடைய கர்மங்களை விட குணமற்றதாயினும் தன் தர்மமே சிறந்தது. தன் தர்மத்தில் மரணமாயினும் சிறந்ததே. ஏனைய தர்மங்கள் பயம் தருவதாம்.

**விளக்கம்:**

அர்ஜுனன் க்ஷத்திரியன். எனவே யுத்தம் செய்வது அவனது தர்மம். அதனை விடுத்து வேறொருவரின் தர்மத்தை பின்பற்றுதல் உத்தமமானதல்ல. அவனது தர்மமான மரணமடைந்தாலும் அவனுக்கு மேன்மையை (உத்தமலோகம்) கிடைக்கும். பிறரது தர்மத்தை பின்பற்றுதல் பயத்தை ஏற்படுத்த வல்லது.

இச்சுலோகத்திற்கு வேறொரு பொருளைக் கூறுதல் இயலும். ஸ்வதர்மஹ - ஆத்மா தொடர்பான தர்மம் பரதர்மம் சப்தாதி விஷய சுகங்கள், உலக சுகபோகங்கள் முதலானவை. ஆன்மாவை அடைவதற்காக மேற்கொள்ளப்படும். சாதனைகள், விரதங்கள் முதலில் மிகவும் பிரயாசையுடனேயே செய்வதாகத் தோன்றினும் அவற்றை விடுதல் கூடாது. அவ்வாறே விஷய சுக சாதனைகள் சுலபமாகக் கிடைப்பினும் அவற்றை பற்றக் கூடாது. அவை ஜீவனை தெய்வத்தினின்றும் வேறுபடுத்தி நரகத்தில் தள்ளிவிடும். எனவே அவை பயங்கரமானவை. அதனால் முமுக்ஷு அவற்றின் பக்கம் செல்லாது, ஆத்ம தர்மத்தில், தனது ஆசாரத்தில் விரத நிஷ்டைகளில் ஆர்வம் கொண்டு அவற்றையே பின்பற்றுதல் வேண்டும்.

மாயை புலவிதங்களிலும் ஜீவனை ஏமாற்றும். ஆன்மீக சாதனைகளின் ஆரம்பத்தில் விகுணமாக மிகுந்த பிரயாசையாகத் தோன்றச் செய்யும். ஸம்சாரசுகங்களை சுகுணமாக சுலபமானவையாகத் தோன்றச் செய்யும். சாதகன் இவ்விஷயத்தில் மிகவும் எச்சரிக்கையாக இருந்து கடினமாகத் தோன்றினாலும் தன் ஆன்மீக சாதனையை, விரத நிஷ்டைகளை எந்தவிதத்திலும் தடங்கல் ஏற்படா வண்ணம் பார்த்துக் கொள்ளல் வேண்டும். ஒருவேளை நமது சுவதர்ம ஆசரணையில். விரதங்கள் மேற்கொள்ளுகையில் இடையில் தடங்கல்கள் நேரிடினும் அது மேண்மையேயாகும். துன்பங்கள் நேரிடினும் அவையும் நன்மையே தரும். மனச் சஞ்சலமடையாது. தைரியத்துடன். கொள்கைப் பிடிப்புடனும் ஆன்ம சாதனையைச் செய்து வந்தால் அதன் கடைசி

நாட்களில் பரமானந்தம் எனும் இலக்கினை அடைய முடியும் எனவே எத்துணை குணமற்றதாகத் தோன்றினும் சுயதர்மத்தை விடுதல் கூடாது என்றும், எத்துணை குணமுடையதாகத் தோன்றினும் பிறதர்மங்களை மேற்கொள்ளுதல் தகாது என்றும் பகவான் போதிக்கின்றார். சாதனைகாலத்தில் இத்தகைய தைரியம் உண்டாகக் கூடிய வசனங்களை முமுக்ஷுக்கள் பலமுறை படித்து உணர்ந்து தம் சாதனையில் முன்னேறுதல் வேண்டும்.

**வினா:**

ஸ்வதர்மம், பரதர்மம் இவற்றில் எது சிறந்தது ? ஏன் ?

**விடை:**

கடினமாகத் தோன்றினாலும் ஸ்வதர்மமே மேலானது. சுகமாகத் தோன்றினாலும் பரதர்மம் பயத்தை ஏற்படுத்தக் கூடியது. ஸ்வதர்மம் மேன்மையைத் தரும். சுவதர்மத்தைக் கடைப்பிடிக்கையில் ஒருவேளை இடையில் மரணம் நேரிடினும் ஜீவனுக்கு மேன்மையையே தரும்.

**முன்னுரை :**

இவ்விதமாக பரதர்மத்தை பின்பற்றுவது பாவ காரியங்களைச் செய்வது இவை துன்பம் தரக் கூடியவை என்று தெரிந்தும் மனிதன் ஏன் பலவந்தமாக அவற்றில் ஈடுபடுகிறான் என்ற கேள்வி அர்ஜுனனுக்கு இச்சந்தர்ப்பத்தில் ஏற்பட பகவானை அவன் இவ்வாறு கேட்டான் ?

**அர்ஜுன உவாச :**

**36. அத கேன ப்ரயுக்தோ அயம் பாபம் சரதி பூருஷஹ!**
**அனிச்சன்னபி வார்ஷ்ணேய பலாதிவ நியோஜிதஹ!!**
**(36)**

*அர்ஜுன உவாச - அர்ஜுனன் சொன்னது.*

**சொற்பொருள்:**

வார்ஷ்ணேய - விருஷ்ணி வம்சத்துதித்த ஸ்ரீ கிருஷ்ணா, அத - அப்படியானால், அயம் பூருஷஹ - இந்தப் புருஷன், கேன - எதனால், ப்ரயுக்தஹ - தூண்டப்பட்டவனாக, அனிச்சன் அபி - இச்சையில்லாதிருப்பினும், பலாத் - பலாத்காரமாக, நியோஜித இவ - ஏவப்பட்டவனைப் போல, பாபம் - பாவத்தை, சரதி - செய்கிறான் ?

**கருத்துரை:**

அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ணரை இவ்வாறு கேட்கிறான்: ஓ கிருஷ்ணா அப்படியானால் மனிதன் பாவம் செய்ய வேண்டும் என்ற இச்சையில்லாதிருப்பினும் பலவந்தமாக ஏவப்பட்டவனாய் எதனால் பாவம் செய்கிறான் ?

**விளக்கம்:**

ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா, இந்திரியக் கட்டுப்பாடு, விருப்பு வெறுப்பற்ற தன்மை, ஸ்வதர்மம் முதலியவற்றைக் குறித்து போதித்துக் கொண்டிருக்கையில் அர்ஜுனனுக்கு ஒரு ஐயம் எழுந்தது. உடனேயே பகவானை வினவினான். இந்த சந்தேகம் அர்ஜுனனுக்கே மட்டுமன்றி ஒவ்வொரு முமுக்ஷுவுக்கும் ஏற்படும். எனவே அக்கேள்வியையும் அதற்கு பகவான் அளித்த விளக்கத்தையும் அறிதல் சாதகர்களுக்கு மிகவும் தேவையானது.

விஷய அனுபவங்கள் கெடுதலைத் தருபவை என்று அறியாதவன் எவன்? பொய்சொல்லுதல் பாவமென்று அறியாதவன் யார்? கோபித்தல் கெட்டது என்பது அனைவருக்கும் தெரிந்ததே யல்லவா ? அவ்வாறு அறிந்திருந்தும் பலாத்காரமாக அப்பாவங்களை செய்து கொண்டேயிருக்கின்றனர். ஒரு பொருளை உண்ணுதல் கூடாது என்பது மனதிற்கு தெரிந்தாலும், ஏதோவொரு சக்தி அதனை உண்ணவைக்கிறது. அச்சக்தி எது என்பது அர்ஜுனனின் கேள்வி. செய்யக்கூடாது என்று நிச்சயித்துக்

கொண்ட மனிதனின் கையாலேயே அப்பணியைச் செய்ய வைப்பது எது வென்பது அர்ஜுனனின் ஐயம். பாவம் செய்ய வேண்டுமென்ற எண்ணமில்லாவிடினும், பாவம் செய்யத் தூண்டும் எதிர்மறையான சக்தி ஜீவனை எத்துணை பலவந்தமாக இழுக்கிறதோ யோசித்துப் பாருங்கள். பலாதிவ நியோஜிதஹ - என்று சொல்வதினால் அரசனால் ஏவப்பட்ட சேவகன் போல் ஏதோவொரு சக்தியினால் மனிதன் பலாத்காரமாக கெட்ட காரியங்களில் ஈடுபடுகிறான். அவ்வெதிர்மறை சக்தி யெதுவோ, அதனை அழிக்கும் உபாயம் எது என்று பகவான் கருணையுடன் உபதேசிக்கப்போகிறார். எனவே சாதகர்கள் மிகுந்த எச்சரிக்கையுடன் இதனைப் பரிசீலித்து தம் வாழ்க்கையில் கடைபிடித்து நல்ல மாற்றத்தை அடைதல் வேண்டும்.

உலகில் மூன்றுவிதமான ஜீவர்கள் உள்ளனர். (1) எப்போதும் பாவத்தையே செய்யாதவர்கள் (2) பாவம் செய்யும் எண்ணமில்லாதவராயினும் ஏதோவொரு தூண்டுதலால் பலாத்காரமாக பாவம் செய்பவர் (3) வேண்டுமென்றே பாவம் செய்பவர். இவர்களில் முதல் தரத்தினர் உத்தமர்கள், ஜீவன் முக்தர்கள். மாயையைக் கடந்தவர்கள். இவர்களின் முன் இயற்கையின் குற்றங்கள் சீற்றங்கள் இவை செல்லாது. இரண்டாம் வர்க்கத்தினர் முமுக்ஷுக்கள், சாதகர்கள். இவர்களைக் குறித்தே அர்ஜுனன் இங்கு கேள்வி கேட்டான், இனி மூன்றாமவர் கீழ்த்தரமானவர், தீயவர், அரக்கத்தன முடையவர், மகா அஞ்ஞானிகள் மூன்றாம், இரண்டாம் நிலையைக் கடந்து முதல் வர்க்கத்திற்கு பிரவேசித்தல் வேண்டும். அதற்கே பகவான் இப்போது சொல்லப்போகும் பதிலைக்கேட்டு மக்கள் அவரவர் இதயத்தைப் பரிசோதித்துக் கொண்டு பாவத்தை தொலைத்ததற்கு தீவிர முயற்சி செய்தல் வேண்டும்.

**முன்னுரை :**

அர்ஜுனனின் கேள்விக்கு பகவான் பதிலுரைக்கிறார்.

**ஸ்ரீ பகவானுவாச :**

**37. காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுணஸமுத்பவஹ|**
**மஹாசனோ மஹாபாப்மா வித்யேனமிஹ வைரிணம்|| (37)**

**சொற்பொருள்:**

*ஏஷஹ - (நீ கேட்ட) இக்காரணம், ரஜோகுணஸ முத்பவஹ ரஜோ குணத்தில் பிறந்த, காமஹ - காமம், ஏஷஹ - இதுவே (இக்காமமே) க்ரோதஹ - குரோதமாக (உருவெடுக்கிறது) மஹாசனஹ இது எதிலும் திருப்தியடையாதது என்றும், மஹாபாப்மா - மஹா பாவத்திற்கு காரணமாகின்றது என்றும் (ஆகியுள்ளது எனவே) ஏவம் - இக்காமத்தினை, இஹ - மோக்ஷ மார்க்கத்தில், வைரிணம் - எதிரியாக வித்தி - அறிக.*

**கருத்துரை:**

*ஸ்ரீ பகவான் சொன்னார் - ஏ அர்ஜுனா நீ கேட்ட இக்காரணம் ரஜோ குணத்திலிருந்து பிறந்த காமம். இதுவே குரோதமாக மாறுகின்றது. காமம் எவ்வளவு அனுபவித்தாலும் திருப்தியடைவதில்லை, மஹா பாவங்களுக்கு காரணமாகிறது. எனவே இதனை மோக்ஷ மார்க்கத்திற்கு எதிரியாகக் கொள்ள வேண்டும்.*

**விளக்கம்:**

*பாவம் செய்யக் கூடாதென்று நினைத்தாலும் ஜீவனை பலாத்காரமாக பாவம் செய்யத்தூண்டும் சக்தி எதுவென்பது இங்கு காட்டப்பட்டது. அதுவே காமம். அது ரஜோ குணத்தினின்றும் பிறக்கிறது. அதன் சகோதரன் குரோதம் இக்காமக் குரோதங்கள் இரண்டும் எப்போதும் சேர்ந்தேயிருக்கும். கீதையில் பலவிடங்களில் இவர்கள் இருவரும் சேர்ந்தே வருவர். இதுவரை சொல்லப்பட்ட விருப்பு வெறுப்புகளின் பிரதிபிம்பமே காமகுரோதங்கள் என்றறிதல் வேண்டும். குரோதம் காமத்தினின்றே ஏற்படுவதால் இவை இரண்டிலும் காமமே முதன்மையானது. எதிரிகளில் மிகவும் பலம் பொருந்தியது காமமேயாதலால், காமம் முதலான*

அறுவகை எதிரிகளில் அதற்கு முதன்மை ஸ்தானம் கொடுக்கப்பட்டது. அசுர குணத்தில் காமம் நாயகன் (Captain) குரோதம் உபதலைவன். மோக்ஷ மார்க்கத்தில் மக்கள் எதிர்கொள்ளும் எதிர்மறைச் சக்திகளில் முக்கியமான தானதாலும், ஜீவனுக்கு தெய்வ சாக்ஷாத்காரத்திற்குத் தடையாக இருப்பதாலும், இக்காமத்தினை ஒருவாறு நன்கு விவரித்துச் சொல்வதற்கு பகவான் எண்ணினார்.

அதன் சரித்திரத்தை வர்ணித்து சொல்லி முதன் முதலில் (1) இது பெரிய சாப்பாட்டுராமன் (மஹாசனஹ) என்கிறார். எத்தனை ஆகுதிகள் அளித்தாலும் அக்கினி திருப்தியடை வதில்லையோ அவ்வாறே இக் காமமும் எவ்வளவு அனுபவித்தாலும் திருப்தியடைவதில்லை. மேலும் பெருகிய வண்ணமே இருக்கும். வயிறு நிறைந்து என்று காமம் சொன்னதாக சரித்திரமேயில்லை. ஆசைகளை அனுபவித்துக் கொண்டு காமத்தை எவரும் அழித்தல் இயலாது. சமித்துகள் அளிக்காவிட்டால் அக்னி அணைந்து விடுவதைப்போல், தத்வவிசாரணையினால், ஆசைகளை அனுபவிக்காது இருத்தலே காமத்தை ஒழித்ததற்கு வழி. மேலும் இக்காமம் (2) மஹாபாவத்தை செய்யக் கூடியது (மஹா பாப்மா) என்று இங்கு சொல்லப்பட்டது. பாப்மா எனாது மஹாபாப்மா என்றதால் கோரமான பாவத்திற்குக் காரணமாய் உள்ளது என்பது தெளிவாகிறது. ஜீவனுக்கு அநேக ஜன்மங்களாக செய்த புண்ணியத்தின் பலன் குறைந்து, பாவத்தின் பலன் பெருகுவதற்குக் காரணம் இக்காமமேயாகின்றது.

இனி (3) அது எதிரி (வைரி) என்று சொல்லப்படுகிறது. ஜீவனுக்கு மிகவும் நெருங்கியுள்ள எதிரி இக்காமமேயாகும். ஏனெனில் அது வெளியில் மட்டுமின்றி இதயத்திலேயே ஊடுருவி இருக்கின்றது. இது இப்போதைய எதிரி அல்ல. மிகவும் பழைய காலத்து எதிரி. பல ஜன்மங்களாக ஜீவனைத் தொடர்ந்து அவனது ஆன்ம சுதந்திரத்தை பறித்துக் கொண்டு அவர்களை அடிமையாக்ச் செய்து தன் கையில் வைத்துக் கொண்டு அவன் இதய சாம்ராஜ்யம் அனைத்தையும் தானே ஆக்கிரமித்துக் கொண்டு தான் மட்டுமேயின்றி, தன் (குரோதம்

முதலான) உறவினர்களையும் கூட அழைத்து வந்து ஆக்கிரமித்துக் கொள்ளும், எதிரிகள் உள்ள இடத்தில் அனுமதி இருப்பதில்லை, எனவே விவேக வைராக்கியத்தினால் இக்காமத்தினை பிரபலமான எதிரியை இதயத்தினின்று ஒழித்தல் ஜீவன் கங்கணம் கட்டிக்கொள்ளுதல் வேண்டும்.

*வியாதியினை மேலாகப் போக்கிக் கொள்வதைவிட அதன் மூலத்தையறிந்து வேரோடு அழித்தல் வேண்டும். அதுவே சிறந்தது (Prevention is better than cure) பகவான் இங்கு அப்பணியையே செய்கிறார். சம்சார துக்கங்களை மேலாகப் போக்குவதைவிட அதன் மூலத்தையறிந்து, சம்சார விருக்ஷத்திற்கு விதையெதுவோ அக்காமத்தை அழித்தற்கு முயலுகிறார்.*

**வினா:**

*எதனின் தூண்டுதலால் ஜீவன் தான் செய்யக்கூடாது என எண்ணும் பாவத்தினை செய்கிறான்?*

**விடை:**

*காமத்தின் தூண்டுதலால்.*

**வினா:**

*அக்காமம் எத்தகையது?*

**விடை:**

*அது (1) எவ்வளவு அனுபவித்தாலும் திருப்தியளிக்காதது (2) மஹாபாபங்களுக்கு பிறப்பிடமானது (3) ஜீவனுக்கு முக்கியமான எதிரி.*

**முன்னுரை:**

*காமத்தின் தோற்றம், இயற்கை, பாபத்தை பிறப்பித்தல் ஆகியவற்றை இனி வரும் மூன்று சுலோகங்களில் கூறுகிறார்.*

**38. தூர்மேனாவ்ரியதே வஹ்னிர்யதாதர்சோ மலேன ச।
யதோல்பேனாவ்ருதோ கர்பஸ்ததா தேனேதமாவ்ருதம்॥ (38)**

**சொற்பொருள்:**

*யதா- எப்படி, தூமேன - புகையினால், அக்னி - அக்னி ஆவ்ரியதே - மூடப்பட்டிருக்கிறதோ, (யதா - எவ்வாறு ஆதர்சஹ்ச - கண்ணாடி, மலேன - அழுக்கினாலும், (ஆவ்ரியதே - மூடப்பட்டிருக்கிறதோ) யதா எப்படி உல்பேன - கர்ப்பப்பையினால் கர்ப்பஹ - கர்ப்பத்தில் இருக்கும் சிசுவானது ஆவ்ருதஹ - மூடப்பட்டிருக்கிறதோ ததா - அவ்வாறே, தேன - அக் காமத்தினால் இதம் - இந்த ஞானமும், ஆவ்ருதம் - மூடப்பட்டிருக்கிறது.*

**கருத்து:**

நெருப்பானது புகையினாலும் கண்ணாடி அழுக்கினாலும், சிசு கருப்பையினாலும் மூடப்பட்டிருப்பதைப் போன்று ஞானம் ஆசையினால் மூடப்பட்டிருக்கிறது.

**விளக்கம்:**

ஒவ்வொரு ஜீவியின் இதயத்திலும் ஆத்மா மிகவும் பிரகாசமாக ஒளிவிட்டுக்கொண்டிருக்கிறது. ஆயின் அது காமம் முதலானவற்றால் மூடப்பட்டிருப்பதனால் நமக்கு புலப்படுவதில்லை. இவ்விஷயத்தைத் தெளிவாக்குவதற்காக பகவான் இங்கு மூன்று உவமைகளை தருகிறார். (1) அக்னி புகையால் மூடப்பட்டிருப்பதைப்போல் (2) கண்ணாடி அழுக்கினால் மூடப்பட்டிருப்பதைப்போல் (3) கர்ப்பத்தில் உள்ள சிசு கருப்பையால் மூடப்பட்டிருப்பதைப்போல் இவ்வாத்மா காமத்தால் மூடப்பட்டிருக்கிறது. என்கிறார். புகையால் மூடப்பட்டிருக்கும்போது அக்னி இருப்பதைப் போலவே தெரிவதில்லை. புகையின் கருமையானது அக்னியின் ஒளியினை மூடி மறைத்து அதுவே வெற்றிக் கொண்டதைப்போல புலப்படும். அவ்வாறே தர்ப்பை முதலானவையும். ஆயின் விசிறியால் வீசுவது முதலான முயற்சியால் அப்புகை விலகி அக்னி தானே நன்கு ஒளிவிடுகின்றதோ கண்ணாடியின் மீதுள்ள அழுக்கினைத் துடைத்தால் எவ்வாறு பிம்பம் தெரிகின்றதோ கர்ப்பப்பை வெளியில் வந்தவுடன் எவ்வாறு சிசு வெளிவருகிறதோ, அவ்வாறே பக்தி, ஞான, வைராக்கிய சாதனைகளினால் காமம்

முதலானவற்றை இதயத்தினின்றும் வெளிக் கொணர்ந்து விட்டால் ஆன்மா வெளிப்படையாக தெரியும். அதுவே மோக்ஷ நிலை. பந்தங்களற்ற நிலை.

மேலும் அக்னி புகையினால் மூடப்பட்டிருக்கும்போதோ, கண்ணாடி தூசியினால் மூடப்பட்டிருக்கும்போதோ, சிசு கர்ப்பப்பையினால் மூடப்பட்டிருக்கும்போதோ, அவ்வக்னி கண்ணாடி, சிசு இவற்றின் உருவிற்கு எவ்விதமான தீங்கும் நேரிடுவதில்லை, அவை ஸ்வதஹ தெளிவாகவேயுள்ளன அவ்வாறே அஞ்ஞான காலத்திலாவது, காமம் முதலான வற்றால் மூடப்பட்டிருக்கும் காலத்திலாவது ஆத்மாவின் நிர்மலத்வத்திற்கு எவ்வித மாற்றமும் இராது. அதனைச் சுற்றி வலயமிருப்பதால் அது தெளிவாய் புலப்படுவதில்லை வலயம் விலகினால் தெளிவாக புலப்படுகிறது. இதுவே மாற்றம். பொருள்களினால் எவ்வித மாற்றமும் ஏற்படவில்லை. வலயம் மட்டுமே விலகியது. எனவே சாதகர்கள் தம் இதயத்தில் உள்ள கர்மம் முதலான வலயங்களை தைரியத்துடனும் விடாமுயற்சியுடனும், சாதனைகளின் மூலமாகவும் அழித்து விட்டால் தமது உண்மை நிலையான ஆத்மஸ்வரூபத்தை உணர்ந்து ஜன்ம ஈடேற்றம் அடைய வேண்டும். இவ் வுண்மையையே பகவான் இச்சுலோகத்தில் தெளிவாக்குகிறார்.

மேற்சொன்ன உதாரணங்களில் அசாத்தியமானது எதுவுமில்லை. புகையை மிகவும் தெளிவாக விசிறி விலக்கிவிட முடியும். அழுக்கினை எளிதாக துடைத்துவிட முடியும். கர்ப்பப்பை அதற்குண்டான கால முடிவில் அதுவே விலகி சிசு வெளிவரும். அவ்வாறே ஆத்மாவை அடைவதற்கு அசாத்தியமானது எதுவுமில்லை சோம்பலை விடுத்து ஒருவாறு பிரயத்தனம் செய்தால் காமம் முதலானவற்றை தவறாது வெற்றி கொள்ள முடியும்.

முன் சுலோகத்தில் காமத்தை குறித்து விவரிப்பதால் இச்சுலோகத்தில் தேன என்ற சொல்லிற்கு அக்காமத்தினால் என்றும் (பின்வரும்) சுலோகத்தில் இக்காமத்தினால் ஞானம் மூடப்பட்டிருக்கிறது என்று சொல்லப்பட்டதால்) இதம் என்ற சொல்லுக்கு ஞானமென்ற பொருளை கொள்ள வேண்டியுள்ளது.

**வினா:**

ஆத்மஞானம் எதனால் மூடப்பட்டிருக்கிறது?

**விடை:**

காமம் முதலானவற்றால்.

**வினா:**

எவ்வாறு ?

**விடை:**

(1) புகையினால் அக்னி (2) தூசியினால் கண்ணாடி (3) கர்ப்பப்பையினால் சிசு இவற்றைப்போல.

**39. ஆவ்ருதம் ஞானமேதேன ஞானினோ நித்யவைரிணா।**
**காமரூபேண கௌந்தேய துஷ்பூரேணானலேன ச॥ (39)**

**சொற்பொருள்:**

கௌந்தேயஜு அர்ஜுனா துஷ்பூரேண - நிரப்ப முடியாததும், அனலேன ச - அக்னியைப்போன்று திருப்தியடையாததும், காமரூபேண - ஆசை ரூபமானதும், ஞானினஹ - ஞானிக்கு நித்யவைரிணா - எப்போதும் எதிரியானதும் (ஆகும்) ஏதேன - இக்காமத்தினால் ஞானம் - (ஆத்மா) ஞானம், ஆவ்ருதம் - மூடப்பட்டிருக்கிறது.

**கருத்துரை:**

அர்ஜுனா! நிரப்பமுடியாததும் அக்னியைப் போன்று திருப்தியடையாததும், ஞானிக்கு நிரந்தர எதிரியானதும் ஆகிய இக் காமத்தினால் (ஆத்ம) ஞானம் மூடப்பட்டிருக்கிறது.

**விளக்கம்:**

முன் சுலோகத்தில் காமத்தைக் குறித்த அறிமுகம் செய்யப்பட்டது. இங்கு அதனைக் குறித்து மேலும் சிறிது சொல்லப்படுகிறது. சாதகர்கள் அதன் ஸ்வரூபத்தை நன்றாக அறிதல் வேண்டுமென்பது பகவானின் அபிப்ராயம். ஏனெனில் எதிரியின் பலம், குறை இரண்டையும் நன்றாக அறிந்தவனே

அவனை வெற்றி கொள்ள முடியும். அவையெவையெனின் - (1) நித்ய வைரி (2) நிரப்ப முடியாத அக்னி இவற்றைக் குறித்து ஒருவாறு விசாரித்தறிவோம்.

நித்ய வைரிணா - மோக்ஷத்தை அடையும் வரை இக்காமம் எத்துணை பிறவிகள் எடுத்தாலும் மனிதனை தாக்கிக் கொண்டேயிருக்கும். எனவே இதனை நித்ய எதிரி என்றார் உலகில் எதிரிகள் இல்லாதிருக்கக் கூடும். எதிரியாயிருந்தவன் காலக்கிரமத்தில் நண்பனாகக் கூடும். எனவே அவர்கள் நிலையான எதிரிகள் அல்லர். ஜீவனுக்கு உலகில் நிலையான ஒரே ஒரு எதிரி காமமே. ஒவ்வொரு கணமும் முமுக்ஷுவை கெடுப்பதற்கு காத்துக் கொண்டிருக்கும். மஹாபண்டிதர் களையும் பலமுடையோர்களையும், அரசர்களையும், இந்திரன், சந்திரன் எவராயினும் அனைவரையும் ஒரே கணநேரத்தில் ஏமாற்றிவிடுவார். ஆயிரம் வருட ஆன்மீக சாதனையில் முன்னேறிய ஞானிகளைக் கூட சிறிது அஜாக்கிரதையாக இருக்கும் நேரத்தில், இவ்வெதிரி தன் வலையில் சிக்க வைத்து விடுவான். பரமபதசோபான படத்தில் உள்ள பெரிய பாம்புடன் இக்காமமெனும் எதிரியை ஒப்பிடலாம். மேலேறிய சாதகன் இப்பாம்பின் வாயில் சிக்கி மறுபடியும் ஆரம்பநிலைக்கு வந்துவிடுவான். இந்த நித்ய வைரியிடம் இருந்து தப்பிப்பதற்கு சாதகர்கள் எத்தனையோ முயற்சிகள் செய்ய வேண்டும். ஒருவேளை இக்காமம் லேசாக விலகியது போலத் தோன்றினாலும் வாசனை ரூபமாக இதயத்தில் சிறிதுகாலம் ஒட்டிக் கொண்டேயிருக்கும். எனவே விவேகம், வைராக்கியம் இவற்றால் ஆத்ம விசாரணையால் அதனை முழுவதுமாக ஒதுக்கினவர்கள் மிகச் சிறந்தவர்கள். துஷ்பூரேண அனலேன - அக்னியைப் போன்றும், சமுத்திரத்தைப் போன்றும் காமம் நிரப்ப முடியாதது. எத்துணை சமித்துகள் இட்டாலும் அக்னி போது மென்பதில்லை. அவ்வாறே எத்துணை நதிகளின் நீர் வந்து சேர்ந்தாலும் சமுத்திரம் போதுமென்பதில்லை. அவ்வாறே காமமும். காமத்தை அனுபவித்தபின் எவரும் திருப்தியடைவ தில்லை. அது பெரிய அசனி என்று இதற்குமுன்பே கூறினோம் அல்லவா ? மஞ்சள், வெந்தயம், காகிதம் இவற்றால் ஆகிய

கலவையைப் பூசாத கூடையில் நீர் தெளித்ததைப் போன்றதே இக்காமத்தினை திருப்திப்படுத்தச் செய்யும் முயற்சிகளும். பூசாத கூடை எப்போதும் நீரால் நிரைவதில்லை அவ்வாறே திருப்தோஸ்மி என்று காமம் சொல்லாது அதனை அவ்வாறு சொல்வதற்கு எவராலும் செய்ய இயலாது அக்னியில் நெய்யைவிட்டால் அது அணைவதில்லை. மேலும் அக்னி விருத்தியடையவேயடையும். அவ்வாறே காமமும் அனுபவிக்க அனுபவிக்க ஆசை பெருகுமே தவிர குறையாது. இச்சந்தர்ப்பத்தில் பாகவதத்தில் யயாதி அனுபவபூர்வமாக சொன்ன சொற்களை இங்கு முமுக்ஷுகளுக்கு எடுத்து கூறுதல் நன்று.

**ந ஜாது காமஹ காமாநமுபபோகேன சாம்யதி**
**ஹவிஷா க்ருஷ்ணவர்த்தேமிவ பூய ஏவாபிவர்ததே**
**(பாகவதம் 9-14-14)**

அனுபவித்துக் கொண்டிருந்தாலும் காமம் ஒருகாலும் குறையாது. அக்னியில் நெய்யை விட்டால் அது பெருகிக் கொண்டே இருக்கும் (யயாதி) எனவே சமித்துகளை எடுத்து விட்டால் அக்னி அணைவதைப் போல் ஆசைகளையும், போகங்களையும் இதயத்தினின்றும் எடுத்து வீசியெறிந்து விட்டால் காமம் அணையும். காம நிவாரணத்திற்கு இதுவே உபாயமே தவிர அனுபவித்தல் அல்ல. சம்ஸ்கிருதத்தில், அலம் என்றால் போதும் என்று பொருள் அனலம் என்றால் போதாது என்று பொருள் எத்துணை ஆகுதிகள் செலுத்தினாலும் அக்னி போதாது எனும். எனவே அதனை அநலம் என்றார். காமமும் அத்தகையதே என்று பகவான் கூறுகிறார். மேலும் தன்னைத் தீண்டியவரை எரிக்கும் தன்மையதான அக்னியைப் போன்று காமமும் எரிக்கும் தன்மையதாதலால் அதனை அக்னியுடன் உவமித்தார்.

ஞானினோ நித்யவைரிணா - காமம் எல்லா ஜீவர்களுக்கும் கேட்டினைச் செய்தாலும் அதனைத் தெரிந்து கொண்டவர் அதனை ஒழிப்பதற்கு முயல்பவர் ஞானிமாத்திரமேயாதலால் அது அவனுக்கு எதிரியாக இருக்கும். அஞ்ஞானிக்குக் கூட உண்மையில் அது எதிரியாயினும், அவ்விஷயத்தை அவன்

*தெரிந்து கொள்ளாது, அதனைத் தன் நண்பனாகக் கருதி கேட்டினை அடைகிறான். இதனால் தான் ஞானிக்கு மாத்திரம் காமம் நித்ய சத்ருவாக வர்ணிக்கப்பட்டது.*

*இந் நித்ய சத்ருவை இதயத்தில் வைத்திருக்கும் வரை ஜீவனுக்கு மோக்ஷத்தைக் குறித்து எண்ணமே தோன்றாது ஆகையினால், பலவித சாதனைகள் மூலம் அக்காமப்பிசாசை அவன் ஒழித்து தன் வாழ்க்கையின் குறிக்கோளான ஆத்மானந்தத்தை அனுபவிக்க வேண்டுமென இக்கீதா சாஸ்திரத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் ஆணையிடுகிறார்.*

**வினா:**

*ஆத்ம ஞானம் எதனால் மூடப்பட்டிருக்கிறது ?*

**விடை:**

*காமத்தினால்.*

**வினா:**

*அது எத்தகையது ?*

**விடை:**

*(1) ஞானிக்கு நித்ய எதிரி (2) அக்கினியைப் போன்று திருப்தியடையாதது. (3) அக்கினியைப் போன்று தகிப்பது.*

**முன்னுரை:**

*அத்தகைய காமத்தினை நசித்துப் போகச் செய்யும் உபாயத்தை கூறும் முன்பாக அது இருக்கும் நிலையை எடுத்துக் கூறுகிறார்.*

**40 இந்த்ரியாணி மனோபுத்திரஸ்யாதிஷ்டானமுச்சயதே|**
**ஏதைர்விமோஹயத்யேஷ ஞானமாவ்ருத்ய தேஹினம்||**
**(40)**

**சொற்பொருள்:**

*இந்த்ரியாணி - இந்திரியங்கள், மனஹ - மனம், புத்தி - புத்தி, அஸ்ய - அதனுடைய (இக்காமத்திற்கு), அதிஷ்டானம் -*

இருப்பிடமென்று, உச்யதே - சொல்லப்படுகிறது, ஏஷஹ- இக்காமம், ஏதைஹி - இவைகளால் (இந்திரியங்கள் முதலானவற்றால்), ஞானம் - (ஆத்ம) ஞானத்தை, ஆவ்ருத்ய - மறைத்து, தேஹினம் - தேஹியை (மனிதனை), விமோஹயதி - மயக்குகின்றது.

**கருத்துரை:**

இக்காமத்திற்கு, இந்திரியங்கள், மனம், புத்தி ஆகியவை இருப்பிடம் என்று சொல்லப்படுகிறது. இவைகளால் காமம் ஆத்ம ஞானத்தை மறைத்து மனிதனை மயக்குகின்றது.

**விளக்கம்:**

இதுவரை காமத்தின் ஸ்வரூபம், இயல்பு இவற்றை விவரித்துக் கூறி இனி அதனை ஒழிப்பதற்கான வழியைக் கூறும் முகமாக முதலில் அதன் இருப்பிடத்தைக் கூறுகிறார். ஏனெனில் எதிரியை வெல்லவேண்டுமாயின் அவனது இருப்பிடம் நன்கு தெரிந்திருத்தல் வேண்டும். இக்காமத்தின் இருப்பிடம் இந்திரியங்கள், மனம், புத்தி. இவற்றின் மூலமாக ஆத்ம ஞானத்தை அது மூடி மறைத்து ஜீவனை மோகத்தில் ஆழ்த்துகிறது. மோஹயதி எனாது விமோஹயதி என்றதால் காமம் ஜீவனை அத்துணை பாதிப்புக்குள்ளாக்குகிறது என்பது தெளிவாகிறது. ஜீவனிடமிருந்து இந்திரியம். மனம், புத்தி இவற்றில் சிறிதளவே இடம் பெற்று, முதலில் காலூன்றிக் கொண்டு கடைசியில் வேரூன்றி ஜீவனை முழுவதுமாக கேடு அடையச் செய்கிறது. காமத்தை வெல்ல வேண்டுமாயின் அதன் இருப்பிடங்களான இந்திரியங்கள் முதலானவற்றை முதலில் வெல்ல வேண்டும். இவ்விஷயத்தை பின்வரும் சுலோகத்தில் பகவான் தெளிவாகச் சொல்கிறார். இந்திரியங்களை விஷயங்களின் மீது செல்லவொட்டாது தடுத்த பின் இனி காமத்தை நிற்க இடம் இன்றி முறையாக நசித்துப் போகும். இதுவே காமத்தை வெல்லுவதற்கான நல்ல உபாயம்.

**வினா:**

காமத்தின் இருப்பிடம் எது ?

**விடை:**

*இந்திரியங்கள், மனம், புத்தி. இதனால் ஞானத்தை மறைத்து ஜீவனை அஞ்ஞானத்திற்கு விரட்டியடிக்கிறது.*

**41. தஸ்மாத்த்வமிந்திரியாண்யாதெள நியம்ய பரதர்ஷப|**
**பாப்மானம் ப்ரஜஹி ஹ்யேனம் ஞானவிக்ஞான**
**நாசனம்|| (41)**

**சொற்பொருள்:**

*பரதர்ஷப - பரத வம்சத்துச் சிறந்தோனான ஓ அர்ஜுனா தஸ்மாத் - ஆகையால், த்வம் - நீ ஆதென - முதலில், இந்த்ரியாணி - இந்திரியங்களை, நியம்ய - கட்டுப்படுத்தி (வசப்படுத்திக் கொண்டு), ஞான விஞ்ஞான நாசனம் - ஞான விஞ்ஞானத்தை (சாஸ்திர ஞானம், அனுபவ ஞானம்) இரண்டையும் அழிக்கின்ற, பாப்மானம் - பாவமே உருவான, ஏனம் - இதனை (இக்காமத்தினை), ஹி - தவறாது ப்ரஜஹி - ஒழித்து விடு (முழுவதுமாக விட்டு விடு)*

**கருத்து:**

*பரதவம்சத்து ச்ரேஷ்டனான ஓ அர்ஜுனா! எனவே முதலில் இந்திரியங்களை (சாஸ்திர, அனுபவ ஞானங்களை) இரண்டையும் நாசம் செய்வதும், பாவமே உருவானதும் ஆன இக் காமத்தினை அறவே ஒழித்துவிடு*

**விளக்கம்:**

*காமத்தை வெல்ல வேண்டுமாயின், முதலில் அதன் இருப்பிடத்தை கண்டுபிடித்தல் வேண்டும். அதன் இருப்பிடங்கள் இந்திரியங்கள், மனம், புத்தி என்று மேல் சொல்லப்பட்டது. இதில் முதலாவதான இந்திரியங்களை முதலில் காமம் ஆக்ரமித்து கொண்டு பின்னரே மனதையும், புத்தியையும் ஆக்ரமிக்கும். எனவே சாதகன் முதலில் காமத்தின் முதல் இருப்பிடமான இந்திரியங்களை வசப்படுத்திக் கொண்டால் காமம் முன்னேற முடியாமல் அங்கேயே*

நின்றுவிடும். எனவேதான் பகவான் முதலில் காமத்தை வெல்வதற்கு இந்திரியங்களை வசப்படுத்திக் கொள்ளுமாறு ஆணையிடுகிறார். ஆதௌ என்றதால், மிகுந்த சாதனைகளைச் செய்வதற்கு முன்பாக இந்திரியக் கட்டுபாட்டினை சாதனை செய்யவேண்டுமென்பது தெளிவாகிறது. சாதகன் ஆன்மீக உலகில் பிரவேசித்து, மோக்ஷப்ரப்திக்காக முயற்சி செய்யும் போது முதலில் செய்யவேண்டுவது இதுவே. ஓ அர்ஜுனா உனக்கு ஏனைய பணிகள் எத்துணை இருப்பினும், முதலில் இப்பணியைச் செய் என்று கிருஷ்ண பரமாத்மா எச்சரிக்கிறார் ஸர்வக்ஞன் - அனைத்துமறிந்து பரமாத்மா சொன்ன இவ்வாக்கியத்திற்காக முமுக்ஷுக்கள் எவ்வளவு கடமைப் பட்டிருக்கின்றனர்.

பாப்மானம் - காமத்தின் இழிவைத் தெரிவிப்பதற்காக பகவான் பலமுறை அதன் இழிந்த நிலையை எடுத்துக் காட்டுகிறார். இதற்கு முன் (37ஆவது சுலோகம்) மஹா பாப்மா என்று வர்ணித்தார். இப்போது பாப்மானம் - பாவமே உருவானது என்கிறார் ஏனெனில், அதனின்றே பலவிதமான பாவங்களும் தோன்றுகின்றன. காமத்தினால் மனிதர்கள் எத்தகைய கோரமான பாவங்களைச் செய்கின்றனர் என்பது யாவரும் அறிந்ததே. அதுமட்டுமன்று இக்காமம் மனிதனின் ஞானவிக்ஞானங்கள் இரண்டையும் நசித்துப் போகச் செய்கின்றது. ஞானம் என்றால் சாஸ்திர ஞானம். விக்ஞானம் என்றால் அனுபவ ஞானம். சாதனை நிலையில் எத்துணையோ துன்பங்களுக்கிடையில் கடின உழைப்பினால் பெற்ற இவையிரண்டும் காமத்தினால் சாம்பலாகிவிடுகின்றன. எத்துணையோ பண்டிதர்களும், சாஸ்திர அறிஞர்களும், அனுபவமுடையவர்கள் கூட காமத்தினால் ஆக்கிரமிக்கப் பட்டபோது, தம் அறிவை யிழந்து பாமரர்களைப் போல நடந்துகொள்வதை நாம் பார்க்கிறோம். அல்லவா ? அப்படியாயின் இந்திரியக்கட்டுப்பாடுடையவர்களையும் பூர்ணமான ஞானமுடையவர்களையும் கூடக் காமமானது எதுவும் செய்யவல்லது என்பதை நினைவில் கொள்ள வேண்டும். காமத்திற்கு அத்தகைய மஹா சக்தியுடையதாயினும் அதனைக் கண்டு எவரும் அஞ்சத் தேவையில்லை. பயிற்சியால்.

விவேக, வைராக்கியத்தினால் அதனைக் கிள்ளி எறிதல் வேண்டும். பகவான் சொல்கிறார். எனவேதான் ப்ரஜஹி என்று சொல்லி காமத்தை அறவே ஒழித்துவிடுதல் வேண்டும் என்கிறார். (இங்கு காமம் என்பது காட்சிப் பொருள்களின் மீதான அனைத்து ஆசைகளும் என்பது பொருள்)

பரதர்ஷப - ஓ அர்ஜுனா நீ பரத குலத்திற் சிறந்தவன், பலபராக்கிரம் நிறைந்தவன், என்று சொல்கிறாய். அவ்வாறே இந்திரியங்களையும் வென்று ஆன்மீக பலத்தினைக் கூட உன்னிடத்தே சேர்த்துக் கொண்டு உன் சிறப்பை ஒளிரச் செய்வாய் என்ற பொருள் இச்சொல்லில் தொனிக்கிறது.

**வினா:**

பரமார்த்த நிலையில் சாதகன் முதன் முதலில் என்ன செய்யவேண்டும் ?

**விடை:**

இந்திரியங்களைக் கட்டுப்படுத்த வேண்டும்.

**வினா:**

அதனால் ஏற்படும் நன்மை என்ன ?

**விடை:**

காமம் தொலையும்.

**வினா:**

இக்காமம் எத்தகையது ?

**விடை:**

(1) பாவத்திற்குக் காரணமாவது (2) ஞான விக்ஞானங்களை நாசம் அடையச் செய்வது.

**முன்னுரை:**

காமம் இந்திரியங்களை, மனதை, புத்தியை வசப்படுத்திக் கொண்டு ஜீவனை. (ஆத்மாவின்) மோஹத்தில் சிக்கவைப்பதால் அதனை வெல்வதெங்கனம் ? இந்திரியங்களை வசப்படுத்திக் கொள்வதெவ்வாறு ? என்ற வினாவிற்கு

விடையாக, ஜீவனின் உண்மை நிலையை, அவனது சக்தியை வர்ணிக்கிறார்.

**42. இந்த்ரியாணி பராண்யாஹுரிந்த்ரியேப்யஹ பரம் மனஹ|**
**மனஸஸ்து பரா புத்திர்யோ புத்தேஹ் பரதஸ்து ஸஹ|| (42)**

**சொற்பொருள்:**

*இந்த்ரியாணி - இந்திரியங்கள், பராணி - (தேகம் இவற்றை விட) மேலானது, இந்திரியேப்யஹ - இந்திரியங்களை விட மனஹ - மனமானது பரம் - மேலானது, மனஸஸ்து - மனதைவிட, புத்திஹி - புத்தி, பரா - சிறந்தது, புத்தேஹே - புத்தியை விட, பரதஹ - மேலானவன், யஹ்து - எவனோ, ஸஹ - அவனே ஆத்மா, (இதி - என்று), அஹுஹு - பெரியோர்கள் சொல்வார்கள்.*

**கருத்துரை:**

*இந்திரியங்கள் (உடலினும்) பெரிது. அவற்றினும் மேலானது மனம், மனதைவிட புத்தி மேலானது. புத்தியைவிட உயர்ந்தது. ஆத்மா யென்று பெரியோர்கள் சொல்வார்கள்.*

**விளக்கம்:**

*இந்திரியங்களை முதலில் கட்டுப்படுத்தல் வேண்டு மென்றால், அவற்றை எங்ஙனம் கட்டுப்படுத்துவது என்பதை இவ்விரண்டு சுலோகங்களில் கூறுகிறார். ஒன்றை ஒதுக்குதல் வேண்டுமெனில் அதனைவிடச் சிறந்ததை நாம் பெற வேண்டும். அல்லது அதனை விட சக்தி வாய்ந்ததைப் பெற வேண்டும். அப்போதே அது சாத்தியமாகும். எனவே இந்திரியங்களை வெல்லுதல் வேண்டுமெனின் அவற்றை விடச் சிறந்த நிலையை ஜீவன் அடைதல் வேண்டும். தேகம் ரதம் போன்றது. இந்திரியங்கள் குதிரைகளைப் போன்றவை. அவை ஒருவாறு சைதன்யமானவை. எனவே தேகத்தைவிட இந்திரியங்கள் சிறந்தவை. அவ்வாறே இந்திரியங்களைவிட மனம், மனத்தைவிட புத்தி புத்தியை விட ஆத்மா மேலானவை.*

*ஒன்றைவிட ஒன்று பலமாகவும் அழகாகவும் இருக்கின்றன. மேலும் ஒருவாறு பார்த்தால், ஆத்மாவைத்*

தவிர மற்ற புத்தி முதலானவை ஜடமேயாகும். ஆத்மாவொன்றே சைதன்ய ஸ்வரூபம். ஆத்மாவின் ஒளியின் முன் (அக்கினியின் எதிரில் இரும்பு குண்டைப் போன்று) அப்புத்தி முதலானவை ஒளி பொருந்தியதாகத் தோன்றுகின்றன. ஆத்மாவைத் தவிர ஏனைய அனைத்தும் இயற்கைக்கு (மாயைக்கு) உட்பட்டு செயலாற்றுகின்றன. அவை காட்சிப் பொருள்கள். ஆத்மாவொன்றே த்ரிக் சொரூபம்.

எனவே அத்தகைய ஆன்ம நிலை இருக்கையில் ஏனைய இந்திரியங்கள் முதலானவற்றை சுலபமாக ஒதுக்கித்தள்ள முடியும். அப்போதே முழுமையாக இந்திரியங்களை கட்டுப்படுத்துதல் இயலும்.

1. ரஸோஅப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே (2-59) என்று பகவான் இதற்கு முன்பே இக்கருத்தை தெளிவுப்படுத்தி யுள்ளார். இது வேதாந்தத்தில் மிக முக்கியமானதாகையால் முமுக்ஷுக்களனைவரும் இதனை நன்றாகக் கிரகித்துக் கொள்ள வேண்டும். எனவே ஒவ்வொருவரும், தேகத்திலோ, இந்திரியங்களிலோ, மனதிலோ, புத்தியிலேயோ நிலைத்து விடுதல் தகாது. என்றும், அவையனைத்துக்கும், சாட்சியாய் நிற்கும், பரமான ஆத்மாவை சேர்ந்து அங்கேயே நிலைத்து இருத்தல் வேண்டுமென்றும், அப்போதே முழுமையான இந்திரியக்கட்டுப்பாடு, அதன் மூலம் காமம் முதலானவற்றை வெல்லுதல், அதன் பலனாக சம்சார பந்தங்களினின்றும் விடுதலையும் கிட்டும் என்பது இங்கு தெளிவாகிறது. ஜீவன் தன் உயர்ந்த நிலையை தான் எண்ணிப் பார்த்தல் வேண்டும், தான் மிகவும் உன்னதமான ஆத்மாவேயென்ற திடமான எண்ணத்துடன் இருத்தல் வேண்டும். அத்தகைய திடமான எண்ணத்தினால் இந்திரியங்கள் முதலானவற்றை வெற்றி கொள்ளுதல் மிகவும் சுலபமாக நிகழும். ஆன்மாவில் நன்றாக நிலைகொண்டு இந்திரியங்கள் முதலான துஷ்டமிருகங்களை குறிவைத்து சுட்டுவிடுதல் வேண்டும். ஆன்மாவைத்தவிர வேறு எங்கிருந்தும் அவற்றை முழுமையாக வசப்படுத்துதல் சாத்தியமில்லை என்பதை தெரிவித்து புத்திக்கு வெளிப்யான ஆத்மாவிலேயே எப்போதும் நிலைத்திருத்தல் வேண்டுமென இனிவரும் சுலோகத்தில் பகவான் எச்சரிக்கின்றார்.

**வினா:**

ஆத்மாவின் நிலையை, சக்தியை நிரூபிக்க.

**விடை:**

தேகத்தின் மேலாக இந்திரியங்கள், இந்திரியங்களுக்கு மேலான மனம், மனத்திற்கும் மேலாக புத்தி, புத்திக்கும் மேலாக ஆத்மாயுள்ளது. இவை ஒன்றின் ஒன்று சிறந்ததாக விளங்குகிறது.

**முன்னுரை:**

இவ்வாறாக ஆத்மா எல்லாவற்றையும் விட மேலாக உள்ளது என்று தெரிந்து, அத்தகைய அனுபவத்தால் காமபிசாசத்தை விரட்டியடித்தல் வேண்டும் என்று ஆணையிடுகின்றார்.

43. ஏவம் புத்தேஹ் பரம் புத்த்வா ஸம்ஸ்தப்யாத்
மானமாத்மனா।
ஜஹி சத்ரும் மஹாபாஹோ காமரூபம் துராஸதம்॥ (43)

**சொற்பொருள்:**

மஹாபாஹோ - மிகுந்த பலம் பொருந்திய தோள்களை புடைய அர்ஜுனா ஏவம் - இவ்வாறாக, புத்தேஹ - புத்தியைவிட, பரம் - அதீதமான ஆத்மாவை, (ஆத்மானம் - ஆத்மாவை), புத்த்வா - அறிந்து, ஆத்மானம் - (விவேகத்துடன் கூடிய) புத்தியினால், ஆத்மானம் - மனதை, சம்ஸ்தப்ய - நன்றாக அடர்த்தி, துராஸதம் - வெல்வதற்கு மிகவும் கடினமானதாகிய, காமரூபம் - காமமென்ற, சத்ரும் - எதிரியை, ஜஹி - அழித்துவிடு.

**கருத்துரை:**

பெருந்தோளுடைய அர்ஜுனா! இவ்வாறாக புத்தியை விட மேலானதாக ஆத்மாவை அறிந்து, (விவேகத்துடன் கூடிய) புத்தியினால் மனதினை நன்றாக அடக்கி வெல்வதற்குக் கடினமான காமமெனும் எதிரியை நசிக்கச் செய்.

**விளக்கம்:**

உலகிலுள்ள துன்பமனைத்திற்கும் காரணம் ஜீவன் தன் உண்மை ஸ்வரூபத்தை அறியாதிருப்பதே. தான் தேகமென்றும், இந்திரியங்களென்றும், புத்தி, மனம் என்றும் எண்ணி அவற்றின் விகாரங்களை தன்மீது ஏற்றிக் கொண்டு துக்கப்படுகிறான். இப்பார்வையே சாந்தியின்மைக்கு, துக்கத்திற்கு மூல காரணம் ஆயின் பகவான் இங்கு நடைமுறை வழியை போதித்து, ஜீவனே நீ புத்தியைவிட மேலான ஆத்மாயன்றி தேகமல்ல அத்தகைய ஆன்ம நிலையில் நிலைத்து, வெற்றி கொள்ளுவதற்கு இயலாத இக் காமத்தினை, எதிரியை வெற்றி கொண்டு பரமானந்தத்தை அடைவாயாக என்று கருணையுடன் போதிக்கிறார்.

தேகத்திற்கு, இந்திரியங்களுக்கு, மனதிற்கு உண்மையில் ஊக்கத்தை ஏற்படுத்துவது. ஆத்மாவினின்றே ஆத்மா. அவை சக்தியை கிரகித்துக் கொள்கின்றன. ஆயின் அவையே காலக் கிரமத்தில் ஆத்மாவை ஒதுக்கித் தள்ளி தாமே மேல் வந்து அமர்ந்து விடுகின்றன. ஜீவனின் அஞ்ஞானமே இதற்குக் காரணம் ஆன்மாவை மறப்பதே இதற்குக் காரணம். எனவே ஆன்ம விசாரணையினாலும், மகனீயர்களின் போதனை யாலும் தன் உண்மை நிலையை (ஆன்மாவை) மறுபடியும் வெளிக்கொணர்ந்தால் மற்றவை அடங்கிப்போகும். எனவே பகவான் இச்கலோகத்தில் காமத்தை வெற்றி கொள்வதற்கு, பந்தங்களின்றும் விலகுவதற்கு, ஆத்மஞானம் ஒன்றே அடைக்கலம் என்று தெரிவித்து, அத்தகைய ஆத்மாவின் உயர்ந்த நிலையையும் அதன் திறமையையும் தெரிவிக்கிறார்.

தேக இந்திரியங்களின் தொடர்புக்கு காரண காரியங்களை கற்பித்துக் கொள்ளும் எவ்வித பயிற்சியும், ஆத்மாவினால் காட்சிப் பொருள்களின் மீது பற்றையும், விவேகத்தை, சாஸ்திரத்துடன், பிரித்துவைப்பின் அவ்விந்திரியங்கள் பலமின்றி வீர்யம் குன்றிப் போகும். இதனையே கிரந்திவிச்சேதனம் என்பர், அஞ்ஞானி இத் தேகஇந்திரியங்கள் ஆகிய காட்சிப் பொருள்களுடன் தன்னைக் கட்டி இணைத்துக் கொள்கிறான். ஞானி அக்கட்டினை அவிழ்த்து

தன்னிடமிருந்து வேறாக்கிக் கொள்கிறான். அப்போது இந்திரியங்கள் முதலானவை இருப்பினும் ஜீவனை எவ்விதத்திலும் பாதிக்காது அவை அவனுக்கு அடிமையாகிவிடும். இதுவே வேதாந்தத்தின் பரமார்த்த இரகசியம். ஒவ்வொரு இந்திரியத்தையும் அதன் காட்சிப்பொருள்களினின்றும் விலக்குவதை விட, அதற்கு மூலமான ஆன்மாவின் சந்நிதியை அடைந்துவிட்டால், அனைத்தும் நசித்துப்போகும். சம்சார துக்கம் அனைத்தும் விலகுவதற்கு இதுவே வழி. ஓடிக்கொண்டிருக்கு இரயில் வண்டியை நிறுத்த வேண்டுமென்று ஆயிரம் பேர் இழுத்து நிறுத்தினாலும் நிறுத்த முடியாது. இன்ஜினில் உள்ள பிரேக்கை அழுத்தினால் உடனடியாக நின்று போகும். ஒரு பாக்டரியில் உள்ள சக்கரங்களை நிறுத்த வேண்டுமானால் இன்ஜினில் சேர்க்கப்பட்ட பெல்ட் ஒன்றை கழற்றி விட்டால் போதும். ஆத்ம ஸ்வரூபத்தை அறிவதாலேயே அதன் பயன் கிடைக்கும். இவ்விரகசியத்தையே பகவான் இச்சுலோகத்தில் தெரிவிக்கிறார். தத்வ ஞானத்தில் வாசனைகளற்ற நிலையேற்படும் என்று இங்கு வலியுறுத்திக் கூறுகின்றார். துராஸதம் - காமமெனும் எதிரி மிகவும் சக்திவாய்ந்ததென்றும், வெல்வதற்குக் கடினமானதென்றும் சொல்லப்பட்டது. ஆலமரம் தன் கிளைகளை கீழ்பரப்பி திடமாக வேரூன்றி இருப்பதைப்போல், பல ஜன்மங்களாக ஊறிப்போன காமத்துடன் கூடிய இதயத்தில் வேரூன்றிப் போய் உள்ளது. அதனை ஆத்ம ஞானம், பற்றற்ற தன்மை என்ற கோடரியால்தான் வெட்டி எடுக்க முடியும் (அஸங்க சஸ்த்ரேணை த்ருடேன சித்வா)

காமத்தை வெல்வதற்கு இச்சிறிய தோள்கள் போதாது, மிகுந்த பலம் பொருந்திய தோள்கள் தேவை என்பதை எடுத்துக்காட்ட அர்ஜுனனை மஹா பாஹு என்று பகவான் அழைக்கிறார்.

எனவே சோகமெனும் கடலைத் தாண்ட விரும்புவோர், காமம் முதலான எதிரிகளை வெல்ல நினைப்போர், மோக்ஷத்தை விரும்புவோர், தாம் இந்திரியங்கள்

முதலானவையென்று நினையாது ஆத்மாவேதான் என்று திடமாக நிச்சயித்துக் கொள்ள வேண்டும். அத்தகைய திடமான எண்ணத்துடன் இருப்பின், மிகுந்த இளவயதாக இருப்பினும், உலகில் திரிந்து கொண்டிருப்பினும், இந்திரியங்கள் கட்டுப்பாட்டுடன் இருக்கும். இவ்வாறு காமத்தை வெல்வதற்கு ஆத்ம ஞானமென்ற அற்புத சாதனையை பகவான் இங்கு போதிக்கின்றார்.

கர்மயோகத்தைக் குறித்து போதித்து கடைசியில் முக்கியமான ஞானபோதனையை பகவான் அளித்ததால், ஒவ்வொருவரும், முதலில் நிஷ்காம கர்மாவை செய்து வந்து சித்த சுத்தியடைந்து, அதன் மூலம் விவேகத்துடன் கூடிய ஆத்மஞானத்தை தவறாது அடைதல் வேண்டும் என்பது தெளிவாகிறது.

வினா:

காமத்தை வெல்வதற்கான உபாயம் எது ?

விடை:

புத்தியைவிட மேலான அனைத்திற்கும் காட்சியாய் நிற்கும் ஆத்மாவை அறிந்து அங்கு நிலைத்திருப்பதே காமத்தை வெல்வதற்கான வழியாகும்.

**இது ஸ்ரீமத் பகவத் கீதை**

**உபநிஷத்பிரம்ம வித்தையும் யோக சாஸ்திரமும் ஆன**

**ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமாக உள்ள கர்மயோகமென்ற**

**மூன்றாம் அத்தியாயம்**

**ஓம் தத்ஸத்**



# ஸ்ரீ பகவத் கீதை

# நான்காம் அத்தியாயம்

# ஞானயோகம்

**அத்தியாயத்தின் பெயர் விளக்கம்:**

"ஞானயோகம்" - இவ்வத்தியாயத்தில் ஞானத்திற்குத் தொடர்பான விசாரணை இருப்பதினாலும், ஞானத்தவம், ஞானயக்ஞம், ஞானக்கப்பல், ஞானாக்னி, ஞானவாள் - முதலானவற்றைக் குறித்து விவரிப்பதாலும், ஆன்மீக ஞானத்தின் மகிமையை விசேஷமாகக் கூறுவதாலும், அத்தகைய ஞானம் எவருக்கு, எவ்விதம் கைகூடும் என்பதை நன்றாக விளக்குவதாலும் - இவ்வாறாக ஞானத்திற்குத் தொடர்பான விஷயங்களே அதிகம் வர்ணிக்கப் பட்டிருப்பதாலும் இதற்கு 'ஞான யோகம்' என்ற பெயர் சூட்டப்பட்டுள்ளது.

இவ்வத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள முக்கிய விஷயங்கள்:

1) பகவானின் மகிமை, நிஷ்காம கர்ம யோகத்தைப் பற்றிய குறிப்பு *(1 - 18 சுலோகம்)*

2) ஞானியின் புனிதமான நடவடிக்கைகள் *(19 - 23 வரை)*

3) பலவித யக்ஞங்களின் வர்ணனை - ஞான யக்ஞத்தின் மேன்மை *(24-32 வரை)*

4) ஞானத்தின் மகிமை *(33-42 வரை)*

*முதல் அத்தியாயத்திற்கும் இவ்வத்தியாயத்திற்கும் உள்ள தொடர்பு:-*

*நிஷ்காம கர்மாவைச் செய்து வருவதால் சித்தம் தூய்மையாகி, அத்தகைய தூய சித்தத்தில் ஞானம் தோன்றுவது பரம உண்மை. முன் அத்தியாயமான 'கர்ம யோகத்தில்' அத்தகைய சித்த சுத்தி பெறுவதற்கான கர்மாவைச் செய்யும் முறைகளைப் பற்றி தெரிவிக்கப்பட்டது. எனவே இனி ஞானம் தோன்றுவதற்கான இருப்பிடம் தயாராக இருக்கின்றது. இக்காரணத்தினால் உடனேயே அர்ஜுனனுக்கு, ஞான யோகத்தினை பகவான் இவ்வத்தியாயத்தில் அருளுகின்றார். அத்தகைய ஞானமே இவ்வத்தியாயத்தின் பொருள். இதில் ஞானம் தொடர்பான வார்த்தைகளே அதிகம் இடம் பெற்றிருப்பினும், இடையில் கர்மயோகத்தைப் பற்றிய குறிப்பும் உள்ளது. முன் அத்தியாயத்தில் விவரிக்கப்பட்ட நிஷ்காம கர்மயோகம் முதலான ஆன்மீக வித்தை மிகவும் புராதனமானது என்றும், முதன் முதலில் பகவானே அதனை சூரியனுக்கு உபதேசிக்க, சூர்யனின் வழி மனு முதலான மஹரிஷிகள் பின்பற்றினர் என்றும் இவ்வத்தியாயத்தின் முதலில் குறிப்பிடப்படுகிறது. இவ்வாறே நிஷ்காம கர்மயோகத்தின் குறிப்புடன் இவ்வத்தியாயம் தொடங்குகிறது. மூன்று சுலோகங்களில் ஸ்ரீ கிருஷ்ணர் அச் சந்தர்ப்பத்தை விவரிக்கின்றார்—*

**ஸ்ரீ பகவான் உவாச:-**

**1. இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவானஹமவ்யயம்|**
**விவஸ்வான்மனவே ப்ராஹ மனுரிக்ஷ்வாகவே அப்ரவீத்|| (1)**

*ஸ்ரீ பகவான் சொன்னது:-*

**சொற்பொருள்:**

*அவ்யயம் - அழிவில்லாத, இமம்யோகம் - இந்நிஷ்காம கர்மயோகத்தினை, (அதனால் பெறப்படும் ஞான நிட்டையை), அஹம் - நான், (புரா - ச்ருஷ்டியின் ஆரம்பத்தில்), விவஸ்வதே - விவஸ்வானுக்கு, (சூரியனுக்கு)*

ப்ரோக்தவான் - பகர்ந்தேன், விவஸ்வான் - சூரியன், மனவே - (தன் புத்திரனான வைவஸ்வத) மனுவிற்கு, ப்ராஹ - மொழிந்தான், மனுஹ - மனு, இக்ஷ்வாகவே - (தன் புத்திரனான) இக்ஷ்வாகுவிற்கு, அப்ரவீத் - உரைத்தான்.

**கருத்து:**

அழிவற்ற இந்த நிஷ்காம கர்மயோகத்தினை (அதன் மூலம் பெறப்படும் ஞான நிஷ்டையை) முதலில் நான் சூரியனுக்குப் பகர்ந்தேன். சூர்யன் வைவஸ்வத மனுவிற்கு உபதேசித்தான், மனு இக்ஷ்வாகுவிற்கு உரைத்தான்.

**விளக்கம்:**

இந் நிஷ்காம கர்மயோகத்தை (அதன்மூலம் பெறப்படும் ஞான நிட்டையை) முதலில் பகவான் சூரியனுக்குப் பகர, அவன் மூலம் ஏனைய இராஜ ரிஷிகள் அறிந்தனர். இவ்வுன்னதமான யோகம் ஜீவனின் சித்தத்தைத் தூய்மைப்படுத்தி தன் சுயரூப அனுபவத்தினால் சம்சார பந்த விமுக்தியை, மோக்ஷத்தை அடையச் செய்வதால், இதனைச் சாதித்தவர் அனைவரும், ரிஷிகளைப் போன்று முக்தியடைந்தனர், அவர்களின் முன் எந்நிலையில் இருப்பினும், பிராம்மணர்களாயினும், அரசர்களாயினும், அனைவரும் மேன்மையடைந்தனர்.

"அவ்யயம்" - சித்த தூய்மையால் அழிவற்ற மோக்ஷத்தை எனும் பயனை அளிப்பதால், நிஷ்காம கர்ம யோக ஆன்மீக வித்தை அழிவற்றது எனக் கூறப்பட்டது, மேலும் உண்மை எக்காலத்தும் அழிவதில்லையாதலால், அவ்வுண்மையை அடையச் செய்யும் வழிகளுக்கும் எந்நாளும் அழிவு நேர்வதில்லை. எனவே அது அழிவற்றது. ஒருவேளை சிலசமயங்களில் கால நிலையை வைத்து அது வழக்கில் சிறிது அதிகமாகவோ குறைவாகவோ உலகில் காணப்படினும், அது மாத்திரம் முழுமையாக அழிவதில்லை, அவ்வாறு அழிவு நேரும் காலத்திலும் பகவானே அவதரித்து அதனை போற்றிக் காப்பாற்றுவார்.

**வினா:**

நிஷ்காம கர்மயோகம் எத்தகையது?

**விடை:**

அழிவற்றது, நிலையான மோக்ஷத்தை அளிக்க வல்லது.

**வினா:**

அது உலகில் எவ்வாறு வியாபித்தது?

**விடை:**

முதன் முதலில் பகவான் சூரியனுக்கு உபதேசிக்க, சூர்யன் மனுவிற்கும், மனு இக்ஷ்வாகுவிற்கும் அதனை போதித்து உலகில் பரவச் செய்தனர்.

**2. ஏவம் பரம்பராப்ராப்தமிமம் ராஜர்ஷயோ விதுஹு।**
**ஸ காலேனஹ மஹதா யோகோ நஷ்டஹ் பரந்தப॥ (2)**

**சொற்பொருள்:**

பரந்தப - அர்ஜுனா! ஏவம் - இவ்வாறு, பரம்பராப்ராப்தம் - பரம்பரையாக வந்த, இமம் - இவ்யோகத்தினை, ராஜர்ஷயஹ - ராஜரிஷிகள், விதுஹு - அறிந்திருந்தார்கள், மஹதாகாலேன - நெடுங்காலம் கடந்து விட்டதால், ஸ யோகஹ - அவ்யோகம், இஹ - இவ்வுலகில் நஷ்டஹ - நஷ்டமடைந்து.

**கருத்துரை:**

ஏ அர்ஜுனா! இவ்வாறு பரம்பரையாக வந்த நிஷ்காம கர்மயோகத்தினை ராஜ ரிஷிகள் அறிந்திருந்தார்கள். நெடுங்காலம் கடந்துவிட்டதால் அந்த யோகம் இப்போது இவ்வுலகில் காணப்படவில்லை (வழக்கில் இல்லை).

**விளக்கம்:**

"ராஜர்ஷயஹ" அரசர் ஆன்மீக நெறியில் அனுபூதி யடைந்தவனாயின் ராஜரிஷி ஆவான். அதாவது அரசனின் தன்மை, ரிஷியின் தன்மை இரண்டும் கொண்டவன் ராஜரிஷி எனப்படுவான். முன் காலத்தே அரசர்கள் பலரும் இவ்வான்மீக

நெறியை மேற்கொண்டு ராஜரிஷிகளாக மாறினர். 'ரிஷி' என்பது ஒரு விருதாகும். அதனை எவராயினும் அடையக் கூடும். ஆன்மீக ஞானத்தினை அடையின் சாமான்ய மனிதனும் மஹரிஷியாக மாற முடியும். நிஷ்காம கர்மயோகத்தினைப் பின்பற்றி, இந்திரியங்களை வென்று, மனதை வசப்படுத்தி, காமம் முதலானவற்றை ஒழித்து, ஆத்மானுபவம் அடையக்கூடியவனே ரிஷித்துவத்தை அடையமுடியும். முன் காலத்தே பல அரசர்களும் அவ்வாறு அனுசரித்து ராஜரிஷிகள் ஆயினர் என்று இங்கு தெரிவிக்கப்பட்டது. எத்துணையோ, காரியங்களும், விவகாரங்களும், இடைவிடாத தொல்லைகளும் நிறைந்த அரசர்களே இத்தகைய வித்தையை சாதிக்கமுடிந்தபோது, இனி ஏனையோரைப் பற்றி சொல்ல வேண்டுமா? சில கிருஹஸ்தர்கள் தமக்கு பலவிதமான குடும்பத் தொல்லைகள், உத்தியோக வேலைகள், விவசாயப் பணிகள் உள்ளனவென்றும், ஆன்மீக சாதனைகள் செய்வதற்கு சிறிதளவும் நேரம் கிடைப்பதில்லை என்றும், எல்லாவற்றையும் துறந்த சந்நியாசிகளுக்கே அது சாத்தியமென்றும் கூறுவர். அவ் வாக்கியம் பொய்யானது என்பதை இச் சுலோகம் நிரூபிக்கிறது. அரசனுக்கு இல்லாத விவகாரங்களா கிருஹஸ்தனுக்கு? எனவே முந்தைய அரசர்களைப் போன்று அனைவரும் நிஷ்காம கர்மயோகம் முதலான ஆன்மீக சாதனைகளை அனுஷ்டித்து, மேன்மையடையக் கூடும். ராஜரிஷிகள் அறிந்திருந்தனர் என்றதால் ஏனையோர் அறியவில்லை என்பதல்ல, அக்காலத்தே அதனைப் பின்பற்றியவரில் அரசர்களே அதிகமிருந்தனர். மேலும் அர்ஜுனன் அரசனாதலால், பூர்வகால அரசர்கள் பின்பற்றியதால் அவனுக்கும் அதைச் செய்வதில் ஏதும் கடினமானதாக இராது என்பதைத் தெரிவிப்பதற்காக இவ்வாறு சொல்லியிருக்கக் கூடும்.

'நஷ்டஹ' - என்ற சொல்லிற்கு முழுமையாக அழிவுற்றது என்பது பொருளல்ல, காலப் போக்கில் (பரசுராமர் அரசவம்சத்தினரை அழித்தல் முதலான அவதார நிலைமையினால்), ராஜரிஷிகள் அறிந்திருந்த ப்ரம்ம வித்தையின், நிஷ்காம கர்மயோகத்தின் வழக்கு உலகில்

குறைந்தது என்பதே அதன் பொருள், இல்லையெனில் முன் சுலோகத்திலேயே இந்த யோகம் 'அவ்யயம்' (அழிவற்றது) என்றதால் ஐயம் எழும். பரமாத்மா எவ்வாறு நிலையானவனோ, அவ்வாறே அவனால் போதிக்கப்பட்ட தர்மங்களும் நிலையானவை.

**3. ஸ ஏவாயம் மயா தே அத்ய யோகஹ் ப்ரோக்தஹ் புராதனஹ!**
**பக்தோ அஸி மே ஸகா சேதி ரஹஸ்யம் ஹ்யேதது்த்தமம்||(3)**

**சொற்பொருள்:**

மே - என்னுடைய, பக்தஹ - பக்தனாகவும், ஸகாஹச - தோழனாகவும், அஸி இதி - இருக்கிறாய் என, புராதனஹ - பழமையான, ஸஹ ஏவ அயம்யோகஹ - அதே நிஷ்காம கர்மயோகமானது, அத்ய - இப்போது, தே - உனக்காக, மயா - என்னால், ப்ரோக்தஹ - சொல்லப்பட்டது, உத்தமம் - சிறந்ததான, ஏதத் - இந்த யோகம், ரஹஸ்யம் ஹி - மிகவும் ரகசியமானது.

**கருத்துரை:**

நீ என் பக்தனாகவும், தோழனாகவும் இருக்கிறாய் ஆதலால், மிகவும் பழமையானதான நிஷ்காம கர்மயோகம் இப்போது மறுபடியும் உனக்கு இயம்பப்பட்டது. இது மேலானது என்றும் மிகவும் இரகசியமானது என்றும் அறிவாய்.

**விளக்கம்:**

பகவான் அர்ஜுனனுக்கு போதித்த இந்த நிஷ்காம கர்மயோக முதலான ஆன்மீக வித்தை புதிதாகத் தோன்றியதல்ல. அநாதி காலத்தினின்றே இருப்பது. எனவே அது மிகப் பழமையானது எனப்பட்டது. ஆயின் தேசகால நிலையை வைத்து காலப்போக்கில் அது ஒருவாறு ஒதுக்கப்பட்டபோது சாக்ஷாத் தெய்வமோ அல்லது தெய்வாம்சமுடைய மகனீயர்களோ அவதரித்து அதனைக் காப்பாற்றி வெளிக் கொணர்வர். இத்தகைய பழமையான

உன்னதமான வித்தையையே ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனுக்குப் போதித்தார்.

இந்த யோகத்தினை ஏன் அர்ஜுனனுக்கே போதிக்க வேண்டும்? இதற்குக் காரணமுண்டு. அக்காரணம் இதில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. அர்ஜுனன் சிறந்த பக்தன், சிறந்த நண்பன், எனவேதான் பகவான் மிகவும் இரகசியமானதாயினும் அதனை அவனுக்கு உபதேசிக்கக் கருதினார். அர்ஜுனனைப் போன்று எவராயினும் சரி, தூய்மையான பக்தி, அன்பு இவற்றைப் பெற முடிந்தால் பகவான் தவறாது அவனுக்கும் ஆத்ம ஞானத்தை அருளுவார். (ததாமி புத்தியோகம் - 10-10) எனவே அர்ஜுனனைப் போன்று அருகதையை தகுதியை முதலில் சம்பாதித்துக் கொள்ளுதல் வேண்டும். முடிவில் ஞானம் அதுவே இறைவனருளால் கிட்டும்.

"ரஹஸ்யம் ஹ்யேதது‌த்தமம்" - பகவான் போதித்த இந்த ரகசிய வித்தை, இந்த நிஷ்காம கர்ம தத்துவம் மிகவும் இரகசியமானது, மிகவும் உத்தமமானது என்றும் சொல்லப்பட்டது. சாதாரணமாக இரகசியத்தை எவரும் இன்னொருவர்க்கு வெளிப்படுத்தமாட்டார். ஆயின் அர்ஜுனனிடம் அதற்குத் தகுந்த யோக்யதை (பக்தி, அன்பு) உள்ளதால் ஸ்ரீ கிருஷ்ணர் அவனுக்கு இரகசியத்தை வெளிப்படுத்தினார். மேலும் 'உத்தமம்' என்று சொல்லப் பட்டதால் உலகில் உள்ள எல்லா வஸ்துக்களையும் விட மிகச் சிறந்தது இந்த ஆன்மீக வித்தையே என்று பகவான் தெளிவுபடுத்தியதைப் போல் உள்ளது.

**வினா:**

பகவான் அர்ஜுனனுக்கு போதித்த ஆன்மீக வித்தை, நிஷ்காம கர்ம தத்துவம் எத்தகையது?

**விடை:**

(1) புராதனமானது (2) உத்தமமானது, (3) ரஹஸ்யமானது.

**வினா:**

இத்தகைய வித்தையை ஏன் அர்ஜுனனுக்கே உபதேசித்தல் வேண்டும் ?

**விடை:**

பகவானுக்கு அவன் (1) சிறந்த பக்தன் (2) உற்ற நண்பன் ஆதலால்.

**முன்னுரை:**

ஸ்ரீ கிருஷ்ணர் முன்பு சூரிய பகவானுக்கு இவ்வித்தையை போதித்தேன் என்று சொன்னதைக் கேட்டவுடனேயே, (துவாபர யுகத்தின் இறுதியில்) தேவகியின் கர்ப்பத்தில் பிறந்த ஸ்ரீ கிருஷ்ணர் சிருஷ்டியின் ஆரம்பத்தில் சூரியனுக்கு எவ்வாறு போதிக்க முடிந்தது என்ற ஐயம் அர்ஜுனனுக்கு எழவும், உடனே தான் தெளிவாக அறிந்து கொள்வதற்காக பகவானை இவ்வாறு வினவினான்.

**அர்ஜுன உவாச:**

**4. அபரம் பவதோ ஜன்ம பரம் ஜன்ம விவஸ்வதஹ!**
**கதமேதத் விஜானீயாம் த்வமாதௌ ப்ரோக்தவானிதி!! (4)**

*அர்ஜுனன் சொன்னது:-*

**சொற்பொருள்:**

பவதஹ - உம்முடைய, ஜன்ம - ஜன்மம், அபரம் - பிந்தியது, விவஸ்வதஹ - சூரியனுடைய, ஜன்ம - பிறப்பு, பரம் - முந்தியது, ஆதௌ - சிருஷ்டியின் ஆரம்பத்தில், த்வம் - நீர் ப்ரோக்தவான் இதி (யத்) - சொன்னீர் என்பது எப்படி. ஏதத் - இதனை, கதம் - எவ்வாறு விஜானீயாம் - தெரிந்து கொள்வேன்.

**கருத்துரை:**

(ஓ கிருஷ்ணா!) உம்முடைய ஜன்மம் இப்போதையது. சூரியனின் ஜன்மம் மிகவும் புராதனமானது. அவ்வாறிருக்

*கையில் நீர் சூரியனுக்கு உபதேசித்தேன் என்ற விஷயத்தை நான் எவ்வாறு கிரகித்துக் கொள்ளுதல் இயலும்?*

**விளக்கம்:**

*சிலகாலம் முன்பு ராஜசூய யாகம் நடந்த சந்தர்ப்பத்தில் அர்ஜுனன் பீஷ்மர் முதலான மகனீயர்களின் வாயிலாக ஸ்ரீ கிருஷ்ணரின் உண்மை சொரூபத்தை அவர் சாக்ஷாத் பரமாத்மாவேயென்ற உண்மையை கேட்டிருக்கிறான். ஆயினும் இப்போது ஸ்ரீ கிருஷ்ணரை தேவகியின் மகனாகவே பாவித்து, 'நீ இப்போது தானே பிறந்தாய்' என்று கேட்பதன் காரணம் என்ன? இதற்கு கீழ்க்கண்ட காரணங்களைச் சொல்ல இயலும். (1) சாக்ஷாத் கிருஷ்ணரின் வாயிலாக அவரின் அவ்யய சொரூப வர்ணனையை அர்ஜுனன் கேட்க விரும்பியிருக்கக் கூடும். (2) இக்கேள்வியினால் சாதாரணமாக மக்களுக்கு மனதில் ஏற்படக் கூடிய ஐயத்தை போக்குவதற்காக கேட்டிருக்கக்கூடும்.*

*ஸ்ரீ கிருஷ்ணர் வெறும் பஞ்சபூதங்களினால் ஆன பௌதீக சரீரம் படைத்தவர் மட்டுமன்று, அவர் முக்காலத்திற்குக் காரணமான உலகமனைத்தும் பரந்துள்ள பரமாத்மா, இவ்வுண்மையை பகவானே இனிவரும் சுலோகமொன்றில் சொல்கிறார். தேகதிருஷ்டி, மனோதிருஷ்டி, ஆத்ம திருஷ்டியென்று மூன்று பார்வைகள் உண்டு. ஒரு மனிதனைப் பார்த்தவுடனேயே, அவனது சரீரம், தோல், அதன் அழகு தோற்றம், அதன் பிறப்பு, ஜாதி, தோற்றம் இவையே நினைவிற்கு வருதல் தேகதிருஷ்டி, அவனது அறிவு, கல்வி, குணநலன், சீலம் இவைகளை நினைத்தல் மனோதிருஷ்டி, அவனது நிர்மலமான ஆத்ம ஸ்வரூபத்தையே பார்த்தல் ஆத்ம திருஷ்டி. இதில் மூன்றாவதான ஆத்ம திருஷ்டியைக் கொண்டவராகவே மகனீயர்கள் இருப்பர். சாமான்ய மனிதர்கள் முதல் இரண்டு திருஷ்டியை உடையவராய் இருப்பர். தேகம், மனம், இயற்கையில் ஏற்பட்டவை, அழியக் கூடியவை. எனவே அப்பார்வைகள் சரியானவையல்ல. எனவே ஆத்ம திருஷ்டியையே ஒவ்வொருவரும். பயிற்சித்தல்*

வேண்டும். அதனையே பகவான் இங்கு எடுத்துச் சொல்லப்போகிறார்.

**ஸ்ரீ பகவானுவாச:**

**5. பஹூனிமே வ்யதீதானி ஜன்மானி தவ சார்ஜுன!**
**தான்யஹம் வேத ஸர்வாணி ந த்வம் வேத்த பரந்தப|| (5)**

*ஸ்ரீ பகவான் சொன்னது:*

**சொற்பொருள்:**

அர்ஜுன! - அர்ஜுனா!, மே - எனக்கும், தவ ச - உனக்கும், பஹூனி - பல ஜன்மானி - ஜன்மங்கள், வ்யதீதானி - கடந்து போயின, தானி ஸர்வாணி - அவை எல்லாவற்றையும், அஹம் - நான், வேத - அறிகிறேன், பரந்தப - அர்ஜுனா, த்வாம் - நீ, ந வேத்த - அறியமாட்டாய்.

**கருத்து:**

எதிரிகளை வாட்டுகின்ற ஏஅர்ஜுனா! உனக்கும் எனக்கும் இதுவரை எத்துணை ஜன்மங்கள் கடந்து போயின. அவையனைத்தையும் நான் அறிகிறேன். நீ அறிய மாட்டாய்.

**வியாக்கியானம்:**

ஈசுவரன், ஜீவன் - இருவரும் உண்மையில் ஒரே சொரூபமுடையவர்களே, ஆயின் ஈசுவரன் மாயையை வென்றவன்; ஜீவன் மாயைக்குட்பட்டவன். இதுவே அவர்கள் இருவருக்கும் இடையேயுள்ள பேதம். ஈசுவரன் மாயையைத் தன் வசப்படுத்தி கொண்டு உலகைக் காப்பாற்றுவதற்காக பல ஜன்மங்கள் (அவதாரம்) எடுக்கின்றனர். ஜீவன் மாயையில் சிக்கி, கர்மபந்தத்தினால் பல ஜன்மங்கள் எடுக்கிறான். ஈசுவரன் அனைத்தும் அறிந்தவன் ஆதலால் தான் எடுத்த ஜன்மங்கள் அனைத்தையும் அவன் அறிவான். ஜீவன் சிறிதளவே அறிந்தவன் ஆதலால் அத்தகைய அறிவு அவனுக்கு இல்லை. இவ்வுண்மையையே பகவான் இச் சுலோகத்தில் விவரிக்கிறார்.

அஞ்ஞானத்தில் வசப்பட்டுள்ள மனிதனின் பார்வை நிகழும் ஜன்மத்தையே அறியும். உண்மையில் ஒவ்வொரு ஜீவனுக்கும் பலகோடி ஜன்மங்கள் முடிந்திருக்கும். எத்துணையோ· தாய்மார்கள், தந்தைமார்களை அடைந்திருப்பான். ஆத்ம ஞானத்தினால் கர்மபந்தம் நசித்துப் போகாவிடில் அவன் இன்னும் எத்துணையோ ஜன்மங்கள் எடுக்கவேண்டி வரும். நாம் செய்த புண்ணியங்களின் பலனால் மிகவும் உத்தமமான மனித பிறப்பை இப்பிறவியில் அடைந்துள்ளோம். மோக்ஷத்தை அடைவதற்கு ஏணி போன்ற இம்மனிதப் பிறவியை எடுத்தும் தன் ஆத்மாவையறிந்து, கடைத்தேறுவதற்கு முயலாமல், பிறவிகளின் எண்ணிக்கையைப் பற்றி கவலையுறாமல், மேற்போக்கான விஷய போகங்களில் முழுகி அதன் பலனாக, இன்னும் அநேக ஜன்மங்களை எடுத்து துன்பங்களை அனுபவிப்பவன் துர்பாக்கியம் பொருந்தியவன் ஆவான். எனவே பகவான் இச்சுலோகத்தில் தெரிவித்தபடி ஒவ்வொருவரும் தன் பூர்வ ஜன்மங்களனைத்தையும் ஒரேயடியாக தன் அறிவில் உணர்ந்து. அவ்வப் பிறவிகளின் யமவேதனைகள், கருப்பை எனும் நரகம், மனக்கிலேசங்கள் இவற்றை சிந்தித்திருந்தால் இனியும் அத்தகையப் பிறவி வேண்டாம் என்றே திடமாக எண்ணுவான். தாயின் கருப்பையில் இருக்கையில் ஜீவனுக்கு சுமார் 7ஆவது மாதத்தில் ஒரு கண நேரம் திவ்ய திருஷ்டி அடைந்து அப்போது பூர்வ ஜன்மங்கள் அனைத்தையும் எண்ணிப் பார்ப்பதாகவும், அப்போது பீதியடைந்து பகவானை சரணடைந்து பிறப்பில்லா பெருவாழ்விற்கு இந்த ஜன்மத்தில் அனைத்து முயற்சிகளும் செய்வதாக வாக்களிக்குமாம், ஆயின் கர்ப்பத்தினின்றும் வெளிவருகையிலேயே எல்லாம் மறந்து போகுமாம். அவ்வாறு செய்யாது, ஜீவன் பகவானைச் சரணடைந்து இப்பிறவியிலேயே, கடைத்தேறுவதற்கு முயலவேண்டும். முன்னேறவேண்டும் என்ற எண்ணம் உள்ளவர் இதற்கு முன் நடந்தவற்றை மறந்துவிடக்கூடாது பகவான் அர்ஜுனனுக்கு பூர்வ ஜன்மங்களைக் குறித்து ஞாபகப்படுத்துகிறார். எனவே ஒவ்வொரு மனிதனும் இப்பிறவியிலேயே பக்தி, ஞான

வைராக்கியம் முதலான சாதனைகளால் ஆத்மாவை அறிந்து அனுபவம் அடைவதால் சம்சார பந்தத்தினின்றும் விடுபடுதல் ஜீவனின் கடமை.

**முன்னுரை:**

தன் பிறவிக்கும், ஏனைய ஜீவராசிகளின் பிறவிக்கும் இடையேயுள்ள பேதத்தைத் தெரிவிப்பதற்காக தன் ஜன்ம இரகசியத்தை இங்கு எண்ணிப் பார்க்கிறார்.

**6. அஜோஅபி ஸன்னவ்யயாத்மா பூதானாமீச்வரோஅபி ஸன்|**
**ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா|| (6)**

**சொற்பொருள்:**

(அஹம் - நான்), அஜஹ அபிஸன் - பிறப்பில்லாதவனாயினும், அவ்யயாத்மா (அபிஸன்) - அழிவற்றனாயினும், பூதானாம் - உயிர்களுக்கு, ஈசுவரஹஅபி ஸன் - ஈசுவரனாய் இருப்பினும், ஸ்வாம் - எனது, ப்ரக்ருதிம் - இயற்கையை, அதிஷ்டா - வசப்படுத்திக் கொண்டு, ஆத்மமாயயா - என் மாயையினால், ஸம்பவாமி - அவதரிக்கிறேன்.

**கருத்துரை:**

நான் பிறப்பற்றவன், அழிவற்றவன், எல்லா உயிர்களுக்கும் ஈசன் எனினும் என் பிரகிருதியினை வசப்படுத்திக் கொண்டு ஆத்ம மாயையினால் அவதரிக்கிறேன்.

**விளக்கம்:**

'எனக்கும் பல பிறவிகள் கடந்தன' என்று ஸ்ரீ கிருஷ்ணர் முன்னைய சுலோகத்தில் சொன்னார். எனவே பகவான் எல்லா உயிர்களைப் போன்றே பிறப்பெனும் கர்மாவிற்கு உட்பட்டவரா என்ற ஐயம் இங்கு எழக்கூடும் ஆதலால் அதற்கு விடையாக உடனேயே இச் சுலோகத்தில் சொல்லப்படுகிறது. பகவானின் பிறப்பு வேறு, ஏனைய உயிர்களின் பிறப்பு வேறு. ஜீவர்கள் இயற்கைக்குட்பட்டு (மாயைக்குட்பட்டு)

கர்மபலனால் பிறப்பெடுக்கின்றனர். ஈசுவரன் அவ்வாறில்லை, அவர் இயற்கைக்குட்படாது. மாயையைத் தன் வசப்படுத்திக் கொண்டு உலகினைக் காப்பாற்ற, தர்மத்தை நிலைநாட்ட தனது இச்சையாலேயே ஜன்மம் எடுக்கின்றார். இங்கு பகவானுக்கு மூன்று இலட்சணங்கள் சொல்லப்பட்டுள்ளன. (1) பிறப்பில்லாதவன் (2) அழிவற்றவன் (3) பிராணி கோடிகளின் ஈசுவரன், என்று இவ்விதமாக உண்மையில் பிறப்பில்லாதவன் ஆயினும் தனது சக்தியினால் உலகைக் காப்பாற்றுவதற்காக அவதாரமெடுக்கிறார். தனது உயிர்களிடத்து பகவானுக்கு எத்தகைய கருணையுள்ளதோ, தர்மத்தை போற்றிக் காப்பதில் எத்தகைய அக்கறையே உள்ளதோ அது, இந்த அவதார தத்துவத்தால் விளங்குகின்றது. இவ்வாக்கியத்தினால் ஸ்ரீ கிருஷ்ணர் வசுதேவனின் மகன் மட்டுமேயன்று, கண்ணுக்குப் புலப்படாத பரமாத்மவே என்பதும், இவ்வுலகை நியமித்து நடத்தும் ஈசுவரனேயென்பதும் தெளிவாகிறது.

**வினா:**

இறைவன் எத்தகையோன்?

**விடை:**

(1) பிறப்பற்றவன் (2) அழிவற்றவன் (3) ஈசுவரன்.

**வினா:**

அத்தகைய பிறப்பற்றவன் எதற்கு மறுபடியும் பிறக்கிறார்?

**விடை:**

இயற்கையை வசப்படுத்திக் கொண்டு, உலகினைக் காப்பாற்ற மட்டுமே பிறப்பவன் அன்றி அஞ்ஞானிகளைப் போன்று கர்மாவின் வசப்பட்டவன் அல்லன்.

**முன்னுரை:**

தான் அவதரித்ததற்கான காரணங்களை இரண்டு சுலோகங்களில் பகவான் சொல்கிறார்:-

**7. யதா யதா ஹி தர்மஸ்ய க்லானிர் பவதி பாரத|**
**அப்யுத்தானமதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம்|| (7)**

**சொற்பொருள்:**

*பாரத! - அர்ஜுனா!, யதாயதா - எவ்வப்போது, தர்மஸ்ய - தர்மத்திற்கு, க்லானி - ஹானி, அதர்மஸ்ய - அதர்மத்திற்கு, அப்யுத்தானம் - அபிவிருத்தியும், பவதி - ஏற்படுகிறதோ, ததா - அப்போது, ஆத்மானம் - என்னை, அஹம் - நான், ஸ்ருஜாம்யஹம் - பிறப்பித்துக் கொள்கிறேன்.*

**கருத்துரை:**

*அர்ஜுனா ! எவ்வப்போது தர்மம் நிலைகுலைந்து, அதர்மம் தலைதூக்குகின்றதோ அப்போது என்னை, நானே பிறப்பித்துக் கொள்கிறேன் (அவதரிக்கிறேன்).*

**விளக்கம்:**

*தர்மம் எவ்வளவு சிறந்தது என்பது பகவானின் இவ்வாக்கியத்தினால் தெளிவாகிறது. - 'தர்மோ ரக்ஷதி ரக்ஷித:' என்பதைப் போல் தர்மத்தைப் பின்பற்றினால் அத்தர்மமே மனிதனைக் காப்பாற்றும். ஜீவனுக்கு நிம்மதியையும், நிலையான சுகத்தையும் கொடுக்க வல்லது அதுவே. எனவேதான் பகவான் அதனை காப்பாற்றுவதற்காக பரமாத்மாவே கருதி அதனைக் காப்பாற்றுக என்று சொல்கையில் அதன் சிறப்பினை குறைத்து கூறுதல் இயலுமா? அவ்வாறே அதர்மத்தின் அபிவிருத்தியை தன்னால் சகித்துக் கொள்ள முடியாது என்று பகவான் தெரிவிப்பதால் அதன் தீங்கை தெளிவாக விளக்குகிறது. எனவே மேன்மையை விரும்புவோர் தர்மத்தை அபிவிருத்தியடையச் செய்து, அதர்மத்தை அடியோடு அழித்திடல் வேண்டும். அப்போது அவர்கள் ஈசுவரனின் நியமத்திற்கேற்ப நடந்தவர் ஆகி ஜன்ம ஈடேற்றம் அடைவர்.*

**வினா:**

*இறைவன் எப்போது அவதரிப்பான்?*

**விடை:**

தர்மம் அழிந்து அதர்மம் பெருகும் போது.

**8. பரித்ராணாய ஸாதூனாம் விநாசாய ச துஷ்க்ருதாம்|**
**தர்மஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே|| (8)**

**சொற்பொருள்:**

ஸாதூனாம் - சாது ஜனங்களுடைய (சன்மார்க்க நெறியில் உள்ள வரை) பரித்ராணாய - காப்பதற்கு; துஷ்க்ருதாம் - துன்மார்க்கத்தில் உள்ள துஷ்டர்களை; விநாசாய ச - அழிப்பதற்கும், தர்மஸம்ஸ்தாபனார்த்தாய - தர்மத்தை நன்கு நிலை நாட்டுவதற்கும், யுகே யுகே - ஒவ்வொரு யுகத்திலும் (அவ்வப்போது) ஸம்பவாமி - அவதரிக்கிறேன்.

**கருத்துரை:**

சாதுக்கள், சன்மார்க்க நெறியில் உள்ளோர் இவர்களைக் காப்பதற்கும், துன்மார்க்க நெறியில் உள்ள துஷ்டர்களை அழிப்பதற்கும், தர்மத்தை நன்கு நிலை நாட்டுவதற்கும் நான் யுகந்தோறும் அவதரிக்கிறேன்.

**விளக்கம்:**

நன்னெறியில் நடப்போர்க்கும், சாதுக்களுக்கும், சீலமுடையோர்க்கும் மாத்திரமே பகவானின் பாதுகாப்பு கிடைக்கும். ஸர்வேசுவரனின் பாதுகாப்பு கிடைப்பதற்குத் தகுந்த அருகதையை நாம் பெறவேண்டும். அத்தகுதி ஜாதி, மத, குல, இன அடிப்படை அல்லாது, சாதுத்வம். அதாவது நன்னெறியில் செல்லும் தன்மை; தர்மத்தை மேற்கொள்ளுதல். அவ்வாறு சன்மார்க்கத்தில், சத்தியநெறியில் நடப்பவரனைருவம் பகவானால் காப்பாற்றப்படுவார்கள். அவர்கள் இறைவனின் அபயக் கரத்தின் அடியிலேயே இருப்பதால் அவர்களுக்கு எவ்விதக் குறையும் நேர்வதில்லை. அவர்கள் சிறிது காலத்திலேயே பவசாகரத்தினை தாண்ட வல்லவராகிவிடுவர். அத்தகையோரைக் காப்பாற்றுவதற்காக தான் அவ்வப்போது அவதரிப்பதாக பகவான் இங்கு வாக்களித்துள்ளார்.

அவ்வாறே துஷ்டர்களை, தண்டிப்பதற்கும் தான் பிறப்பெடுப்பதுண்டு என்கிறார். எனவே தீய நடவடிக்கைகளால் நேரக்கூடிய கோரமான விபத்தை முன்பாகவே ஊகித்தறிந்து, அவற்றினை விடுத்து. பாவத்தைப் பற்றிய பயத்துடன் தெய்வ நெறியை பின்பற்றுதல் வேண்டும். இனி அவதாரத்தின் மூன்றாவது காரணம், தர்மத்தை நிலை நாட்டுதல், தர்மத்தை நிலைநாட்டுவதற்கு பகவானே ஈடுபட்டுள்ளார். எனின் அவருக்கு பிரியமான தர்மத்தை நாமும் காப்பாற்றி அவ்வழியில் நடந்தால், சர்வேசுவரனின் அன்பிற்கும் கருணைக்கும் பாத்திரர்களாவோம்.

இச்சுலோகத்தில் தெரிவிக்கப்பட்ட (1) சாதுக்களைக் காப்பாற்றுதல் (2) துஷ்டர்களை தண்டித்தல் (3) தர்மத்தை நிலைநாட்டுதல் - என்ற மூன்று காரணங்களில் ஏதேனும் ஒன்றிற்காகவோ அல்லது இரண்டிற்காகவோ அல்லது மூன்றிற்குமோ பகவான் அவதரித்துக் கொண்டிருப்பார்.

இங்கு சாதுக்கள் என்றால் சந்நியாசிகள் என்றோ வைராகிகள் என்றோ பொருள் அல்ல. 'சாது' என்றால் 'நல்ல' என்ற பொருள். நன்மை தரக் கூடிய செயலில் ஈடுபட்டவர்கள் அனைவரும் சாதுக்களே அவர்கள் கிருஹஸ்தர்கள் ஆயினும், பிரம்மச்சாரிகள் ஆயினும் சரியே.

'யுகே யுகே' - என்றால் யுகத்திற்கு ஒருமுறை அவதரிப்பேன் என்பதல்ல. 'அவ்வப்போது' என்பது பொருள். முன் சொன்ன காரணங்களால் எப்போது தேவை ஏற்படுகிறதோ.

இச்சுலோகத்தில் 'த்ராணாய' எனாது 'பரித்ராணாய' என்பதும், 'நாசாய' எனாது 'விநாசாய' என்பதும், 'ஸ்தாபனார்த்தாய' எனாது 'ஸம்ஸ்தாபனார்த்தாய' என்பதும் கவனிக்கத்தக்கது. அவ்வக் கிரியைகளின் முக்கியத்துவத்தை இவை தெரிவிக்கின்றன.

இறைவன் கருணையுள்ளம் கொண்டவன் அல்லவா? அப்படியாயின் துஷ்டர்களை ஏன் தண்டிக்க வேண்டுமென என வினவக்கூடும். உண்மையில் இறைவன் தண்டித்தலும்

அனுக்கிரகித்தலேயாகும். அவரின் அத்தண்டனையால் அவர்களது பாவங்கள் எரிந்துபோகும். இல்லையெனில் உலகில் அதர்மம், துன்மார்க்கம் பரவி சமூகத்திற்கே பெரிய துன்பம் நேரிடக் கூடும். சரீரத்தின் மேலாக புண் ஏற்பட்டால் அதனை 'அறுவை சிகிச்சை செய்து நீக்கியோ அல்லது சிறிது பாகத்தை நீக்கியோ சரீரத்தின் ஆரோக்கியம் காப்பாற்றப்படுவதைப் போல துஷ்டசிக்ஷணம் என கிரகித்துக் கொள்ளுதல் வேண்டும்.

**முன்னுரை:-**

இவ்வாறு இறைவனின் பிறப்பின் காரணங்களைத் தெரிந்து கொண்டவர்க்கு ஏற்படும் பலன்களை விவரிக்கின்றார்:-

**9. ஜன்ம கர்ம ச மே திவ்ய மேவம் யோ வேத்தி தத்வதஹ।**
**த்யக்த்வா தேஹம் புனர்ஜன்ம நைதி மாமேதி ஸோஅர்ஜுன॥**
**(9)**

**சொற்பொருள்:**

அர்ஜுன - அர்ஜுனா! யஹ - யார், ஏவம் - இங்ஙனம், மே - என்னுடைய, திவ்யம் - திவ்யமான, ஜன்ம - ஜன்மத்தின், கர்ம ச - கர்மத்தை, தத்வதஹ - உள்ளபடி, வேத்தி - அறிகிறானோ, ஸஹ - அவன், தேஹம் - சரீரத்தை, த்யக்த்வா - விடுத்து, புனஹ - மறுபடியும், ஜன்ம - பிறவியை ந ஏதி - அடையமாட்டான், மாம் - என்னை ஏதி - வந்து அடைவான்.

**கருத்துரை:**

அர்ஜுனா! எவன் இவ்வாறு என் திவ்யமான பிறப்பை, கர்மத்தைப் பற்றி உண்மையாக தெரிந்து கொள்கிறானோ, அத்தகையோன் மரணத்திற்குப் பின் மீண்டும், பிறவாது என்னை வந்தடைகிறான், (மோக்ஷத்தை அடைகிறான்)

**விளக்கம்:**

“பிரம்மவித் ப்ரம்மோ பவதி”- பிரம்மத்தை அறிந்து கொண்டவர் பிரம்மமே யாகின்றனர்' என்ற உபநிஷத் வாக்கியத்தின் சாரமே இச்சுலோகத்தில் சொல்லப்பட்டது. இறைவனின் திவ்யமான ஜன்மா, கர்மா (லீலைகள்) உண்மையாக அறிந்தவன், பக்திப் பரவசத்தால் அவர் முன்பாக ஸத், சித், ஆனந்தம் அடைந்து இறை தியானத்தில் ஈடுபடுவான் ஆகையால் அவன் இறைவனையேயடைவான். இறைசொரூபத்தை நன்றாக அறிந்து கொள்வது ‘சாதனை’ - இறைவனைச் சேர்தல் ‘சாத்தியம்’ - இவ்வாறு சாதனை, ‘சாத்தியம்’ இரண்டும் இச்சுலோகத்தில் கூறப்பட்டது. அப்படியாயின் ‘தத்வதஹ’ என்றதால். பகவத் விஷயத்தை சுயமாக அனுபவிப்பதால் உண்மையாக அறிதல் வேண்டுமே தவிர. 'வாசா' ஞானத்தினாலோ, சாஸ்தீரிய ஞானத்தினாலோ, திருப்தியடைந்துவிடக் கூடாது.

‘திவ்யம்' என்றதால் பகவானின் லீலைகள், ஜன்மா, கர்மங்கள் அபாரமானவை யென்று தெரிகிறது. இறைவன் இயற்கையை தன் வசப்படுத்திக் கொண்டவன் ஆதலால் அவனின் சரியைகள் ஏனையோரைப் போன்று இராது. இறை தத்துவத்தை அறிந்தவன் ‘புனர்ஜன்மம்’ எடுப்பதில்லை என்று சொல்லி உடனேயே ‘என்னையே அடைவான்’ என்று தெரிவிப்பதால் பிறப்பில்லாத வெறும் சூன்ய வாழ்வு அன்று என்றும், சச்சிதானந்த ஆத்மசொரூப நிலையே அதுவென்றும் தெளிவாகிறது.

‘தேகத்தை விடுத்து என்னையே அடைகிறான்’ - என்ற வாக்கியம், தேகத்தை விடுத்த உடனேயே மோக்ஷத்தை யடைவான் என்பதல்ல. உண்மையில் எந்தக் கணத்தில் மனிதன் இறை தத்துவத்தை நன்றாக அறிகிறானோ, அக்கணத்திலேயே (தேகம் இருக்கும்போதே) அவன் மோக்ஷத்தை அடைகிறான். தேகத்தை விடுத்தபின் மறுபடியும் தேகத்தை அடையமாட்டான் என்று தெரிவிப்பதற்கே ‘தேகத்தை விடுத்தபின்’ எனச் சொல்லப்பட்டது.

**வினா:**

இறைவனின் 'சாயுஜ்யபதவியை' எவர் அடையவல்லவர்?

**விடை:**

இறைவனின் இயற்கையை வென்ற பிறப்பு, கர்மாவின் தத்துவத்தை உண்மையில் அறிந்தவர்.

**முன்னுரை:**

இதற்கு முன்பு பல மகனீயர்கள் அவ்வாறு இறை தத்துவத்தை அறிந்து கடைத் தேறினர் என்கிறார்.

**10. வீதராகபயக்ரோதா மன்மயா மாமுபாச்ரிதாஹா|**
**பஹவோ ஞானதபஸா பூதா மத்பாவமா கதாஹா|| (10)**

**சொற்பொருள்:**

வீதராகபயக்ரோதாஹா - ஆசை, பயம், கோபம் இவற்றை விடுத்தவன், மன்மயாஹா - என்னிடத்தேயே லயித்த சித்தத்தை உடையவர்களும், (என்னிடத்தேயே தன் வயப்பட்டவர்கள்), மாம் - என்னை, உபாச்ரிதாஹா - அடைக்கலம் புகுந்தவர்களாய், பஹவஹ - பலரும், ஞானதபஸா - (இத்தகைய) ஞானத்தவத்தினால், பூதாஹா - புனிதர்களாய், மத்பாவம் - என் இயல்பை (மோக்ஷத்தை), ஆகதாஹா - அடைந்தனர்.

**கருத்து:**

ஆசை, அச்சம், சினம் நீங்கியவர்களாய், என் வசமாய், என்னை அடைக்கலம் புகுந்து, ஞானத்தவத்தால் புனிதர்களாய் என் இயல்பை (மோக்ஷத்தை) எய்தினர்.

**விளக்கம்:**

'ஞானயோகம்' என்ற இவ்வத்தியாயத்தில் கீதாச்சார்யன் ஞானத்தின் தவம், யக்ஞம், அக்னி, கப்பல், கத்தி போன்ற பல வித உருவங்களை வர்ணித்துக் கூறியுள்ளார். இங்கு ஞானத்தைத் தவமாக வர்ணிக்கிறார். உலகில் பலவிதமான தவங்கள் இருப்பினும், ஞானத்தவம் மிகவும் மேன்மையானது.

ஏனெனில் சரீரத்தின் மேலுள்ள புற அழுக்கை நீர் போக்குவதைப் போல பலபிறவிகளாகத் தொடரும் பாவத்தை, வாசனை அழுக்குகளை ஞானத்தவமே கழுவிச் சித்தத்தை தூய்மைப்படுத்துகிறது. (எனவே தான், 'பூதாஹா' (புனிதர்களான,) என்ற பதம் பயன்படுத்துப்பட்டுள்ளது) மோக்ஷத்திற்கு அத்தகைய சித்த சுத்தி மிகவும் தேவைப்படுகிறது. அப்படியானால் ஞானத்தவம் என்பது என்ன? (1) விருப்பு, பயம், குரோதம் இவை இல்லாதிருத்தல் (2) பகவானை அண்டியிருத்தல், (3) இறைமயமாகவே இருத்தல். இத்தகைய ஞானத் தவத்தின் பலன் என்ன? (1) சித்த சுத்தி (2) பரமாத்ம சொரூபத்தைக் காணுதல் - என இச்சுலோகத்தில் சொல்லப்படுகிறது.

"வீத ராக பயக்ரோதஹா" - ஞானத் தவத்தின் முதல் சாதனை காமம், குரோதம், பயம் இவற்றை விலக்குதல். இம்மூன்று துஷ்டர்களும் சாதகர்களுக்கு பேராபத்தை விளைவிக்கக் கூடியவர்கள். ஆயின் அவற்றை எவ்வாறு அழித்தல் வேண்டும், என்பது பின்னர் சொல்லப்பட்டது. 'மன்மயாஹா' - 'மாமுபாச்ரிதாஹா' - அதாவது எப்போதும் பகவத் சிந்தனையோடிருத்தல், பகவானை அடைக்கலம் அடைதல் இவையே அதற்கான உபாயங்கள்.

"பஹவஹா" இதுவரை எத்துணையோ பேர் இத்தகைய ஞானத்தவத்தினால் புனிதமடைந்து பிரம்ம ஞானத் தவத்தினால் புனிதமடைந்து பிரம்ம ஸாயுஜ்ய பதவியடைந் துள்ளனர் என்றதால் அதன் மகிமையை தெரிவிப்பதற்கு வெளிப்படையான சாட்சியங்கள் அமைத்தது போலாயிற்று, இதற்கு முன்பே பலரும் சாதித்து முக்தியடைந்துள்ளதால், இப்போதும் அவ்வாறே அடைதல்கூடும் என்பதில் ஐயமில்லை. எனவே முமுக்ஷுக்கள் அச்சாதனைகளை தவறாது செய்து மேன்மையுறுதல் வேண்டும்.

இச்சுலோகத்தில் சொல்லப்பட்ட முக்கிய அம்சங்கள்—

(1) இறைசொருபத்தை அடைவதற்கு இதயத் தூய்மை தேவை. (2) இத் தூய்மைக்கு ஞானத்தவம் செய்தல் வேண்டும்.

*(3) ஞானத்தவம் என்றால் - (1) காமக்குரோதம் பயம், இவற்றை நீக்குதல், (2) இறையில் தன்வயமாதல் (3) இறைவனிடம் அடைக்கலமடைதல்.*

**வினா:**

*இதயத்தூய்மை எதனால் அடைய முடியும்?*

**விடை:**

*ஞானத்தவத்தால்.*

**முன்னுரை:**

*தன்னை மக்கள் எவ்வாறு வணங்குகின்றனரோ, அவ்வாறே அவர்களுக்கு அருளுவதாக இறைவன் கூறுகிறார்.*

**11. யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம்யஹம்।**
**மம வர்த்மானுவர்தந்தே மனுஷ்யாஹ் பார்த்த ஸர்வஹ॥ (11)**

**சொற்பொருள்:**

*பார்த்த - அர்ஜுனா!, யே - எவர், யதா - எவ்வாறு, மாம் - என்னை, ப்ரபத்யந்தே - வழிபடுகிறார்களோ, தான் - அவர்களை, ததா ஏவ - அவ்வாறே, அஹம் - நான், பஜாமி - அனுக்கிரகிக்கிறேன், மனுஷ்யாஹா - மனிதர்கள், மம - என்னுடைய, வர்த்தம் - மார்க்கத்தை அனுவர்தந்தே - அனுசரிக்கின்றனர்.*

**கருத்துரை:**

*ஏ அர்ஜுனா! எவர் என்னை எப்படி வழிபடுகிறாரோ அவர்க்கு நான் அப்படியே அருள் புரிகிறேன். மனிதர்கள் எல்லா விதத்திலும் யாண்டும் என் வழியையே பின்பற்றுகிறார்கள்.*

**விளக்கம்:**

*"செய்து கொள்பவர்க்கு, செய்த அளவு மஹாதேவ"! என்றபடி எவரெவர், எத்தனை விதமாக, எந்த அளவு*

பக்தியுடன், எந்த உருவில் என்னைப் பூசிக்கிறார்களோ அவர்களை அவ்வாறே அருளுகிறேன் என்று பகவான் சொல்கிறார். பரமாத்மா கல்பவிருக்ஷத்தைப் போன்றவர். அவரை அடைந்து எதனை நாம் விரும்பிக் கேட்கிறோமோ அதனை அவர் அளிப்பார். எவ்வாறு கேட்டாலும் அவ்வாறேயளிப்பார். நற்பலனையோ, வீடுபேற்றையோ எவரேனும் அடையவில்லை என்றால் அது அவரது குற்றமேயன்றி இறைவனது குற்றம் அல்ல, பாய்மரத்தை மேல் இழுக்காவிட்டால் படகு நகராது. இறையருள் எனும் காற்று எங்கும் வீசினாலும் மக்கள் தம் இதயம் எனும் பாய்மரத்தை கட்டி, தெய்வத்திடம் திரும்பினால் அன்றி வாழ்க்கைப் படகு நகராது. இரும்பில் துருபிடித்திருந்தால், காந்தம் அதனை இழுப்பதில்லை. அவ்வாறே மனதிலும் விஷயங்களைப் பற்றி அழுக்கு மூடியிருந்தால் இறைவன் தன்னிடம் ஈர்த்துக் கொள்ள மாட்டான். எனவே அவரவர் முயற்சியின் தீவிரத்தைப் பொறுத்து நற்பலனை இறைவன் அவர்களுக்கு அருளுவார்.

"மம வர்த்மாமனுவர்த்தந்தே" - இவ்வாறு இறைவன் பக்தர்களின் அன்பு, தயை இவை காட்டுவதால், மக்களும் அத்தகைய அன்பை, நற்பண்பை நன்கு பிரதிபலிக்கின்றனர். மக்கள் இறை நெறியையே பலவிதங்களிலும் அனுசரிக்கின்றனர். (அல்லது இறைமார்க்கமான கர்ம, பக்தி, தியான, ஞான மார்க்கத்தையே மக்கள் பின்பற்றுகின்றனர் என்று பொருள் கொள்ளலாம்)

**முன்னுரை:**

*சிலர் இதர தேவதைகளை ஏன் உபாசிக்கிறார்கள் என்பதற்கான காரணத்தைச் சொல்கிறார்.—*

**12. காங்க்ஷந்தஹ் கர்மணாம் ஸித்திம் யஜந்த இஹ தேவதாஹா|**
**க்ஷிப்ரம் ஹி மானுஷே லோகே ஸித்திர் பவதி கர்மஜா|| (12)**

**சொற்பொருள்:**

கர்மணாம் - கர்மங்களின், சித்திம் - பலனை, காங்க்ஷந்தஹ - விரும்புகிறவர்கள், இஹ - இவ்வுலகில், தேவதாஹா -

தேவதைகளை, யஜந்தே - போற்றுகிறார்கள், ஹி - ஏனெனில், கர்மஜா - கர்மாவினால் ஏற்படும், சித்திஹி - பலன் மானுஷேலோகே - மனித உலகில், க்ஷிப்ரம் - விரைவில், பவதி - உண்டாகிறது.

**கருத்துரை:**

கர்மங்களின் பலனை விரும்புபவர்கள் இம்மையில் தேவதைகளை ஆராதிக்கிறார்கள். ஏனெனில் வையகத்தில் வினைப்பயன் விரைவில் வாய்க்கிறது.

**விளக்கம்:**

ஏனைய உலகங்களைவிட இம்மனித உலகில் வினைப் பயன் விரைவில் கிட்டும் எனப்பட்டது. எனவே மக்கள் நன்னெறியில் ஈடுபட்டு இருக்க விரைவில் முயற்சி செய்தல்வேண்டும். இது கர்ம அனுஷ்டான உலகம். ஏனைய உலகங்கள் கர்மபலனை அனுபவிக்கும் உலகங்களே. எனவே அங்கு மோக்ஷ சித்திக்கு முயற்சி செய்தல் இயலாது. நரகம் எனும் வியாதிக்கு (பவரோகத்திற்கு) இம்மானிட உலகிலேயே நன்னெறியில் நடப்பதால் சிகிச்சை செய்து கொண்டு, கர்மானுஷ்டானத்திற்கு இடமில்லாத ஏனைய உலகத்தினை (மரணத்திற்குப்பின்) அடைந்து, இப்பவரோகம் பீடித்துள்ள இவனுக்கு எதுவும் செய்தல் இயலாது என்று வருந்த வேண்டும்.

விஷ்ணு பகவான் ஒருமுறை கருத்மந்தனை இவ்வாறு கேட்டார்.

**இஹைவ நரக வ்யாதீ சிகித்சகித்ஸாம் ந கரோதியஹ!**
**கத்வா நிரெளஷதம் தேசம் வ்யாதிஸ்தஹ் கிம் கரிஷ்யதி!!**

**(கருடபுராணம்)**

எனவே தீவிரமாக நற்காரியங்களைச் செய்து சித்த சுத்தியடைந்து, இப்பிறவி எடுத்ததன் பயனை இவ்வுலகிலேயே மோக்ஷத்தை அடைந்து மேன்மையடைவீராக!

**வினா:**

கர்மத்தின் பலனை எவ்வுலகில் விரைவில் அடைய முடியும்?

**விடை:**

மனித உலகில் (இவ்வுலகில்).

**முன்னுரை:**

இறைவன் தான் செய்யும் உலக சிருஷ்டி முதலான செயல்களனைத்தும், கர்த்தா என்ற எண்ணமின்றி செய்யப்படுபவை என்று இரண்டு சுலோகங்களில் தெரிவிக்கிறார்.

**13. சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் குணகர்மவிபாகசஹ|**
**தஸ்ய கர்தாரமபி மாம் வித்த்யகர்தாரமவ்யயம்|| (13)**

**சொற்பொருள்:**

சாதுர்வர்ண்யம் - நான்கு வருணங்களிலுமுள்ள, குண கர்ம விபாகசஹ- சத்வாதி குணங்களினுடைய, அக்குணங்களினால் செய்யப்படும் கர்மங்களினுடைய, வேறுபாட்டைக் கருதி, மயா - என்னால் ஸ்ருஷ்டம் - சிருஷ்டிக்கப்பட்டவை, தஸ்ய - அதற்கு, கர்த்தாரம் அபி - கர்த்தா எனினும், மாம் - என்னை, அகர்த்தாரம் - கர்த்தா அல்ல, அவ்யயம் - அழிவற்றவனாவேன் (அல்லது விகாரமற்றவன் ஆவேன்) வித்தி - என்று அறிக!

**கருத்துரை:**

பிரம்ம, க்ஷத்திரியர்கள் முதலான நான்கு வர்ணத்தினரை, சத்வம் முதலான குணங்களின் அக்குணங்களினால் செய்யப்படும் கர்மாக்களினாலும், வேறுபாட்டைக் கருதி என்னால் படைக்கப்பட்டது. அவற்றிற்கு நானே கர்த்தாவாயினும் (இயற்கைக்கப்பாற்பட்டவன் ஆதலால்) உண்மையில் நான் கர்த்தாவன்று (விகாரமற்றவன்) என்று அறிக.

**விளக்கம்:**

குணங்களை வைத்து, அக்குணங்களுக்குத் தொடர்பான செயல்களை வைத்தும் மக்கள் நான்கு வர்ணங்களாக (பிராம்மன, க்ஷத்திரிய, வைஸ்ய, சூத்திரர்கள்) என்று பகவான் பிரித்தார்.

| குணம் | வர்ணம் | செயல் |
|---|---|---|
| சத்வகுணம் மட்டுமே உள்ளவர் | பிராம்மணர் கள் | யக்ஞங்கள், தவங்கள் |
| சத்வகுணம் சிறிதும், ரஜோகுணம் அதிக மாகவும் இருப்பவர் | க்ஷத்திரியர்கள் | தைர்யம், வீரம், கம்பீரம், இவற்றுடன் கூடிய, யுத்தம் செய்தல், ராஜ்ய பரிபாவனம் இவை |
| மிகவும் சிறிதளவு சத்வகுணமும் தமோ குணம் ரஜோ குணம் நிறைந்தவர். | வைசியர்கள் | விவசாயம், மாடுகளை மேய்த்தல், வானிபம் செய்தல். |
| தமோகுணம் அதிக மாகவும் ரஜோகுணம் மிகவும் குறைந்தும் காணப்படுபவர். | சூத்திரர்கள் | பலவிதமான வேலைகள். |

இவ்வாறு மக்களைப்பிரித்து. இறைவன் சிருஷ்டி செயலினும், நான் கர்த்தாவல்ல, நான் விகார மற்றவன் ஆதலின் என்கிறார். மகனீயர்கள் விருப்பு வெறுப்பற்று கிரியைகளைச் செய்வர் ஆதலால் கர்த்தா என்ற எண்ணமற்று, கர்ம பந்தமின்றி இருப்பர்.

**14. ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மபலே ஸ்ப்ருஹா।**
**இதி மாம் யோ அபிஜானாதி கர்மபிர் ந ஸ பத்யதே॥ (14)**

**சொற்பொருள்:**

மாம் - என்னை, கர்மாணி - கர்மங்கள், நயலிம்பந்தி - தொடுவதில்லை, எனக்கு, கர்மபலே - கர்மபலனில், ஸ்ப்ருஹா ஆசை, ந - இல்லை, இதி - இவ்வாறாக, மாம் - என்னை, யஹ - எவன், அபிஜானாதி - அறிகிறானோ, ஸஹ - அவன், கர்மபிஹி - கர்மங்களினால், ந பத்யதே - பந்திக்கப் படுவதில்லை.

**கருத்துரை:**

என்னைக் கர்மங்கள் தொடுவதில்லை. எனக்கு கர்மபலத்தின் மீது ஆசையில்லை. இவ்வாறு என்னை அறிபவன் கர்மங்களால் பந்திக்கப் படுவதில்லை.

**விளக்கம்:**

பகவான் கர்ம பலனில் ஆசையின்றி கர்மங்களைச் செய்து வருகிறாரென்று அறிந்தபோது ஜீவன் தானும் பலனைக் கருதாது, அதன்மீது ஆசையின்றி கர்மாக்களைச் செய்யத் தொடங்குவான். அதன் பலனாக அவன் கர்மாவினால் கட்டுப்படாது கர்மபந்த விமுக்தி அடைவான்.

**முன்னுரை:**

முன்னர் எத்துணையோ முமுக்ஷுக்கள் நிஷ்காமமாக கர்மாக்களைச் செய்து மேன்மையடைந்தனர் என்கிறார்.

**15. ஏவம் ஞாத்வா க்ருதம் கர்ம பூர்வைரபி முமுக்ஷுபிஹி|**
**குரு கர்மைவ தஸ்மாத்த்வம் பூர்வைஹ பூர்வதரம் க்ருதம்||**
**(15)**

**சொற்பொருள்:**

ஏவம் - இங்ஙனம், ஞாத்வா - அறிந்து கொண்டு, பூர்வைஹி - முன்னாளில் முமுக்ஷுபிஹி அபி - முமுக்ஷுகளாலும், கர்ம - கர்மம், க்ருதம் - செய்யப்பட்டது,

தஸ்மாத் - ஆகையினால், த்வம் - நீ, பூர்வைஹி - முன்னோர்களால், க்ருதம் - செய்யப்பட்ட, பூர்வதரம் - மிகவும் புராதனமான. கர்மாவ - கர்த்தா என்ற எண்ணமின்றி (நிஷ்காம) கர்மத்தையே, குரு - செய்வாயாக.

**கருத்து:**

(தான் உண்மையில் கர்த்தா அல்ல, தனக்கு கர்மபலத்தில் ஆசையில்லை - என்று) இவ்வாறு (இறைவனின் கர்ம ஆசரணையினால்) அறிந்து கொண்டு முன்பே எத்துணையோ முமுக்ஷுக்கள் நிஷ்காமமாக கர்மங்களைச் செய்து வந்துள்ளனர். எனவே (ஏ அர்ஜுனா!) நீயும் முன்னோரைப் போல் புராதன நிஷ்காம கர்மத்தையே செய்வாயாக!

**விளக்கம்:**

நிஷ்காம கர்மாவைப் பின்பற்றுதல், மோக்ஷத்திற்கு அடிப்படை எனலாம். மோக்ஷம் எனும் மாளிகை அங்கிருந்தே எழுகின்றது. எனவேதான் (எத்துணையோ முமுக்ஷுக்கள் கர்மாவின் நிஷ்காமமாகச் செய்து மேன்மையடைந்தனர். எனவே நீயும் பலனைக் கருதாது கர்மாக்களைச் செய்' என அர்ஜுனனுக்குச் சொல்கிறார். குரு கர்த்தைவ! - கர்மத்தையே செய்! என்று ஸ்ரீ கிருஷ்ணர் வலியுறுத்தி சொன்னதால் ஆசையற்ற கர்மாவின் முக்கியத்துவம் நன்கு விளங்குகின்றது. முன்னோர்களுக்கு நன்மை செய்த பவரோக திவ்ய ஔஷதம் இப்போதும் நன்மை செய்தல் திண்ணம். எனவே அதன் மீது நம்பிக்கை வைத்து பின்பற்றவேண்டும் என பகவான் போதிக்கிறார்.

**முன்னுரை:**

ஞானத்திற்கு மிகவும் தேவையானது சித்த சுத்தி, சித்த சுத்தி நிஷ்காம கர்மாவைச் செய்வதால் கிட்டும். எனவே அத்தகைய நிஷ்காம கர்மாசரணை முறையை பகவான் 15 சுலோகங்களில் (18 முதல் 32 வரை) இங்கு விவரிக்கிறார்.

**16. கிம் கர்ம கிமகர்மேதி கவயோ அப்யத்ர மோஹிதாஹா।**
**தத்தே கர்ம ப்ரவக்ஷ்யாமி யஜ்ஞாத்வா மோக்ஷ்யஸே அசுபாத்॥**
**(16)**

**சொற்பொருள்:**

கர்ம - கர்மம், கிம் - எது அகர்ம - அகர்மம், கிம் - எது, இதிஅத்ர - என்ற இவ்விஷயத்தில், கவயஹஅபி - ஞானிகள் கூட, மோஹிதாஹா - மோகத்தை அடைகிறார்கள், யத் - அதனை, ஞாத்வா - அறிந்து, அசுபாத் - அசுபத்திலிருந்து, (சம்சார சம்பந்தமான அனர்த்தத்தினின்று), மோக்ஷ்யஸே - விடுபடுகிறாயோ, தத்கர்ம - அக்கர்மத்தை, தே - உனக்கு, ப்ரவக்ஷ்யாமி - பகர்வேன்.

**கருத்து:**

கர்மா எத்தகையது, அதர்மம் எத்தகையது என்ற இவ்விஷயத்தில் ஞானிகளே சரியாக அறியமுடியாமல் இருக்கின்றனர். எதனை அறியின் நீ சம்சார பந்தத்தினின்றும் விடுபடுவாயோ அத்தகைய கர்ம இரகசியத்தை உனக்கு இப்போது தெரிவிக்கிறேன்.

**விளக்கம்:**

கர்ம இரகசியம் மிகவும் இரகசியமானது. எனவே மிகப் பெரிய பண்டிதர்கள், சாஸ்திர அறிஞர்கள் கூட அதன் முடிவு எதுவென அறியக் கூடவில்லை. எனவே பகவானே கருணையுடன் இங்கு அதனை போதிக்கக் கருதினார். அக்கர்ம தத்துவத்தை அறிவதால் கிடைக்கும் பலன் யாது? மனிதன் அசுபமான இச் சம்சார துக்கத்தினின்றும் விடுதலையடைய முடியும். எனவே சம்சாரக் கிலேசத்தினின்றும் விடுபட நினைப்போர் அனைவரும் பகவான் தெரிவிக்கப்போகும் இக் கர்ம தத்துவத்தை நன்கு கற்றிடல் வேண்டும்.

**வினா:**

அசுபமான சம்சார பந்தத்தினின்றும் விடுதலை பெறுவதற்கான உபாயம் எது?

**விடை:**

*கர்மம் எது, அகர்மம் எது என்று நன்கு அறிந்து அதனைக் கடைப்பிடித்தலே.*

**முன்னுரை:**

*கர்மா, அகர்மா, விகர்மா என்ற மூன்றையும் அறிய வேண்டுமென்கிறார்.*

**17. கர்மணோ ஹ்யபி போத்தவ்யம் போத்தவ்யம் ச விகர்மணஹ|**
**அகர்மணஸ்ச போத்தவ்யம் கஹனா கர்மணோ கதிஹி|| (17)**

**சொற்பொருள்:**

*கர்மணஹ அபி - சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களையும், (அதன் சொரூபத்தை) போத்தவ்யம் - தெரிந்து கொள்ள வேண்டும், விகர்மணஹ்ச - சாஸ்திரங்களில் விளக்கப்பட்ட கர்மங்களையும் போத்தவ்யம் - தெரிந்து கொள்ள வேண்டும். அகர்கமணஹ்ச - கர்மத்தைக் கடந்த நிலையையும் தெரிந்து கொள்ள வேண்டும். ஹி - ஏனெனில், கர்மணஹ - கர்மத்தின், கதிஹி - தத்துவம், கஹனா- மிகவும் ஆழமானது. (அறிவதற்குக் கடினமானது).*

**கருத்துரை:**

*சாஸ்திரங்களால் விதிக்கப்பட்ட கர்மங்களையும், விலக்கப்பட்ட விகர்மங்களைப் பற்றியும், கர்மத்தை கடந்த நிலையையும் நன்றாக அறிந்து கொள்ள வேண்டும். ஏனெனில் கர்மத்தின் உண்மையான தத்துவம் மிகவும் ஆழமானது (அறிவதற்கு மிகக் கடினமானது)*

**விளக்கம்:**

*கர்மா - செய்யத்தகுந்த கர்மா (விஹிதகர்மா)*
*விகர்மா- செய்யக் கூடாதவை (நிஷித்த கர்மா)*
*அகர்மா- செயலற்று இருக்கும் நிலை*

*கர்மா, விகர்மாவிற்கு இன்னுமொரு பொருளும் கொள்ளக்கூடும்.*

கர்மா - சாதாரணமான செயல்கள்.

விகர்மா - அச்செயல்களையே காமக் குரோதம் இவையன்றி நிஷ்காமமாக, தெய்வார்ப் பண புத்தியுடன் செய்தல்.

அகர்மா - அத்தகைய கர்மங்களை அநாயாசமாக செய்து வந்ததால் சித்த சுத்தியடைந்து 'நைஷ்கர்ம ஆத்ம ஸ்திதி, அதாவது, கர்ம விகர்மாவின் சேர்க்கையால் நேரும் கர்த்தா என்ற எண்ணமற்று செய்யப்படும் 'நிஷ்க்ரிய ஆத்ம ஸ்திதி'யே அகர்மா.

கர்மயோகத்தை நன்கு அனுசரிக்கவேண்டுமாயின் கர்மா, அகர்மா, விகர்மா இவற்றின் தத்துவத்தை நன்கு அறிந்திருக்க வேண்டும். கர்ம தத்துவம் மிகவும் ஆழமானது. எனவே பகவானே அதனை பிரித்துத் தெளிவாகச் சொல்வதற்குக் கருதினார்.

**18. கர்மண்யகர்ம யஹ் பச்யேதகர்மணி ச கர்ம யஹ|**
**ஸபுத்திமான் மனுஷ்யேஷு ஸயுக்தஹ் க்ருத்ஸன கர்மக்ருத்|| (18)**

**சொற்பொருள்:**

கர்மணி - கர்மத்தில், அகர்ம - அகர்மத்தில், யஹ - எவன், பச்யேத் - பார்க்கிறானோ, அகர்மணி ச - அகர்மத்தில், கர்ம - கர்மத்தை, யஹ - எவன், (பச்யேத் - பார்க்கிறானோ), ஸஹ - அவன், மனுஷ்யேஷு - மனிதர்களுள், புத்திமான் - விவேகமுடையவன், ஸஹ - அவன் யுக்தஹ - யோகி, க்ருத்ஸ்ன கர்மக்ருத் - எல்லாக் கர்மங்களையும் செய்தவன்.

**கருத்துரை:**

எவன் கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத்தையும் பார்க்கிறானோ, அவன் மனிதர்களுள் விவேகத்துடன் கூடியவன், யோகி. அவனே எல்லா கர்மங்களையும் செய்தவன் ஆவான்.

**விளக்கம்:**

*கர்மத்தில் அகர்மத்தைப் பார்த்தல்:*

கர்த்ருத்வம் இல்லாமலும், பலனைக் கருதாதும், எத்துணை கர்மாக்களைச் செய்திடினும், அது பந்தத்தை ஏற்படுத்துவதில்லை, அதனால் எந்தச் செயலையும் செய்ததாக ஆகாது. அதாவது, அது அகர்மாவேயாகும். கண்ணாடி பிம்பத்தை பிரதிபலிக்கும் செயலை நாள் முழுவதுமாக செய்து கொண்டிருப்பினும் அதனால் பிரதிபலிக்கப்படும் பொருள் அதனுடன் தொடர்பில்லாமல், தொடாமல் இருப்பதால் அது எதுவுமே செய்யாதிருப்பதைப் போல், நிர்மலமாக, செயலற்று இருக்கும். பெரிய மகான்கள். ஆன்மநிலையில் நிலைபெற்று தத்தம் தேக இந்திரியங்களால் பல உலக காரியங்களையோ அல்லது தம் வாழ்க்கைக்குத் தொடர்பான காரியங்களையோ செய்து கொண்டிருந்தாலும், கர்மா அகர்மாவாக, நிஷ்கர்மாவாக மாறி பந்தத்தை ஏற்படுத்தாது. இதனை அறிவதே, கர்மாவில், அகர்மத்தை பார்ப்பதாகும். அஹங்காரத்துடனும், கர்த்ருத்வ புத்தியுடனும், ஆசைகளுடனும், பற்றுடனும் செய்யப்படும், கர்மாவே பந்தங்களை. தோற்றுவிக்குமேயன்றி, ஆசையற்று, செய்யப்படும் கர்மா அன்று, அத்தகைய ஆசையற்ற கர்மா அகர்மாவேயாகும். அதாவது, கர்மங்களற்ற நிலையுடன் சமானமாகும். இவ்வாறு, கர்மாவில் கர்மமற்ற நிலையையும், அல்லது அகர்மத்தை எவரால் பார்க்க இயலுமோ அவன் மனிதரில் விவேகத்துடனும், யோகத்தை அறிந்தவனும் ஆவான். அவன் படிப்படியாக நிஷ்காம கர்மாவைப் பின்பற்றுவதால் சித்த சுத்தியை, ஆத்மநிலையையடைவதால், வாழ்க்கையின் இலட்சியத்தை அடைந்தவன் ஆதலால், எல்லா கர்மங்களின் பலனையும் அடைந்தவன் ஆவான். எனவேதான் அவன், 'புத்திமான்', 'யுக்தஹ', 'க்ருத்ஸ கர்மக்ருத்' என்று மூன்று சொற்களால் சிறப்பித்துச் சொல்லப்படுகிறான். அவ்வாறின்றி கர்மாவே தீமையானது, அதனால் பலன் இல்லை. எந்த விதத்திலும் அது கர்ம பந்தத்தை ஏற்படுத்துவது என்று எண்ணுவோர் கர்மாவில் அகர்மாவை பார்க்க

இயலாதவர். அவர்கள் புத்தியுள்ளவர்கள் அல்லர், புத்தி இல்லாதவர்கள்.

அகர்மாவில் கர்மாவைப் பார்த்தல்:- சிலர் வாசனைகளின் பாற்பட்டு, இயற்கையின் குணங்கள் எதுவும் மாறாது, தேக இந்திரியங்களால் செயல்களைப் புறக்கணித்து எவ்விதமான வேலையும் செய்யாது சோம்பேறிகளாக இருப்பர், அத்தகையவர் 'அகர்மாவில் மிகவும் பெரிய பந்தத்தை ஏற்படுத்தக்கூடிய கர்மா மறைந்திருக்கிறது. மேலாக கர்மாவைச் செய்யாதிருந்தாலும், மனதால் கர்மாவை செய்த வண்ணமே இருக்கின்றனர். இந்திரியங்கள் செயலற்று இருப்பினும், மனம், சங்கல்பங்கள் வாசனைகள் இவற்றின் தாக்கத்துடனேயே இருக்கிறது. சரீரம் ஒரு பக்கத்தே நிச்சலனமாக, செயலற்று இருப்பினும் மனம் மூன்று உலகங்களையும் சுற்றி வருகிறது. அத்தகையவர் அகர்மாவில் பந்தமெனும் பூதமாகவும், கர்மா மறைந்தும் இருக்கிறது. இவ்வாறு அறிதலே அகர்மாவில் கர்மாவைப் பார்த்தல். பந்தத்தின், பந்தமற்ற தன்மையை நிர்ணயிப்பவை, வாசனைகள். 'தான்' எனும் 'பாவம்' மனம் மட்டுமேயன்று இந்திரியங்கள், தேகம் இவையல்ல' என்று தெரிந்து கொள்ளவேண்டும். ஒருவேளை கர்மேந்திரியங்களை கட்டி, சித்தத்தினால் எல்லாக் கர்மங்களையும் செய்து வந்தால், அது வெளிவேஷம், பகட்டு என்று இதற்கு முன் அத்தியாயத்தில் பகவான் கூறியுள்ளார். இவ்வாறு அகர்மாவில் கர்மாவைக் காண்பவர் கூட விவேகமுடையவர்களே ஆவர் ஆதலால் அவர்க்கும். படிப்படியே உத்தமமான வழிகளை, நல்லமுறையில் செய்வதால் ஆத்மநிலையை அடைவதால் எல்லா கர்மங்களை அனுசரித்தவரே, செய்தவரே ஆவர்.

உலகில் அநேக. சிறந்த வித்வான்கள், பண்டிதர்கள், கவிகள் முதலான அனைவரும் இருந்த போதிலும், புத்தியுடையவர்கள் எனக் கூறுதல் இயலாது, ஏனெனில் உண்மையை அறிபவனே புத்திசாலி, மேற்சொன்ன தர்ம ரகசியத்தை அறிந்து நடப்பவனே புத்திமான் என்று பகவான் இச்சுலோகத்தில் தெரிவிக்கின்றார். எனவே அத்தகைய விவேகத்தை அடைதல் நன்மை பயக்க வல்லது.

**வினா:**

மனிதரில் புத்திமான் எவர்?

**விடை:**

கர்மாவில் அகர்மாவையும், அகர்மாவில் கர்மாவை பார்க்கக் கூடியவன்.

**வினா:**

அத்தகையோன் எத்தகைய பலனை அடைவான்?

**விடை:**

முறையாக ஆத்ம சாக்ஷாத்காரத்தை அடைவதால் எல்லா கர்மாக்களையும் செய்தவன் ஆகிறான்.

**முன்னுரை:**

அத்தகைய பற்றற்று கர்மாவைச் செய்வோரைக் குறித்தும், அவர்களின் மகிமையைக் குறித்தும் ஐந்து சுலோகங்களின் மூலம் தெரிவிக்கிறார்:

**19. யஸ்ய ஸர்வே ஸமாரம்பாஹ் காமஸங்கல்பவர்ஜிதாஹ!**
**ஞானாக்னிதக்தகர்மாணம் தமாஹுஹ் பண்டிதம் புதாஹா!!**
**(19)**

**சொற்பொருள்:**

யஸ்ய - யாருடைய, ஸர்வே - எல்லா, ஸமாரம்பாஹா - கர்மங்களும், காம சங்கல்ப வர்ஜிதாஹா - ஆசை, காமமும், சங்கற்பமும் இன்றி இருக்குமோ, ஞானாக்னி தக்த கர்மாணம்- ஞானத்தீயால் எரிக்கப்பட்ட கர்மத்தையுடைய, தம் - அவனை, பண்டிதம் - பண்டிதன் என்று, புதாஹா - ஞானிகள், ஆஹுஹு - சொல்லுகிறார்கள்.

**கருத்துரை:**

எவனது கர்மங்கள் எல்லாம் ஆசையும் சங்கற்பமும் அற்றனவோ, எவனது கர்மங்கள் ஞானத்தீயால் எரிக்கப் பட்டனவோ, அவனை பண்டிதன் என்று ஞானிகள் சொல்கிறார்கள்.

**விளக்கம்:**

பண்டிதர் யாவர் என்று இச்சுலோகத்தில் சொல்லப் பட்டுள்ளது. இறைவனின் பார்வையில் பாண்டித்யம் என்றால் வெறும் உலகில் காணப்படும் வித்தைகளனைத்தையும் கற்றுத் தேர்வது மட்டுமன்று. இதய சுத்தியுடன், காமம், சங்கற்பம் இவையின்றி ஆத்மஞானத்துடன் இருப்பதே பாண்டித்யம் ஆகும். எவனின் செயல்கள் ஆசை, சங்கற்பத்துடன் கூடியிருப்பதில்லையோ, எவனின் கர்மங்களனைத்தும் ஞானத்தினால் எரிக்கப்பட்டு விடுமோ அவனே பண்டிதன் என்று இங்கு சொல்லப்பட்டது.

"ஆரம்பாஹா" (கிரியைகள்) எனாது 'ஸமாரம்பாஹா' என்றதால் மகனீயர்கள் நற்காரியங்களையே செய்வர் என்று காட்டப்பட்டது. 'காமம்' என்றால் போகத் தொடர்பான கோரிக்கை. மனைவி, மக்கள், வீடு, தோட்டம், துரவு முதலானவற்றில் ஆசை என்று பொருள். இங்கு சங்கற்பம் என்றால் 'அகம்' பாவத்துடன் கூடிய சங்கற்பம் என்றே பொருள் ஏனெனில் சங்கற்பம் இல்லாத நிலையில் காரியங்கள் அல்லது செயல்கள் (ஸமாரம்பாஹா) என்பதே இராதல்லவா? எவர் தாம் செய்கின்ற அனைத்து செயல்களை ஆசையின்றி செய்கின்றனரோ, சங்கற்பமோ, கர்த்தா என்ற எண்ணமோ, 'அஹம்' என்ற பாவமோ இன்றி, நிஷ்காமபுத்தியுடன் செய்கின்றனரோ இவர்கள் சித்தசுத்தியடைந்து ஆத்மஞானத்தைத் தவறாது அடைவர். அத்தகைய ஞான அக்னியால் அவர்களது எல்லா கர்மங்களும் எரிந்துவிடும். அவர்களே ஜீவன் முக்தர்கள். அவர்களே பண்டிதர்கள். கர்மங்கள் பெரிய பஞ்சுப்பொதி போன்றது. அநேக கோடி ஜன்மங்களாக செய்யப்பட்ட கர்மங்களனைத் தும் ஆத்மஞானம் என்ற ஒரு நெருப்புப் பொறியினால், சாம்பலாகிவிடும். எனவே இத்தகைய ஞானத்தை அடைவதற்குக் காரணமான சித்த சுத்தி, அதற்கு காரணமான நிஷ்காம கர்மாவைப் பின்பற்றுதல் என்ற மகத்தான வழிமுறைகளைப் பற்றி நன்கு யோசித்தல் வேண்டும்.

"ஸர்வே ஸமாரம்பாஹா" - என்றதால் ஏதோவொரு செயல்மட்டுமன்று எல்லா செயல்களையும் காமம், சங்கற்பம் இவையின்றிச் செய்தல் வேண்டுமென்பது தெளிவாகிறது.

மேலும், இதற்குமுன்பு தெரியாமல் செய்த செயல்களைப் பற்றியும் மனிதன் திகிலடைவதனாலும் அதனால் ஏதும் பலன் இல்லை. அது எத்தகைய செயலாயினும் முயற்சியுடன் இப்போது நிஷ்காம கர்மாவைச் செய்யத் தொடங்கி ஞானத்தை பெற்றுவிட்டால் போதும். அவையனைத்தும் நசித்துப் போகும் என்ற உண்மை இச்சுலோகத்தின் மூலம் தெரிகிறது. மனிதன் தான் செய்யும் செயல்கள் காமம், சங்கற்பம் இவையன்றி இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டும். 'அஹம்' என்ற எண்ணத்துடன் கூடிய சங்கற்பமே பந்தம். சங்கல்பமின்மையே மோக்ஷம். அவ்வாறு காமஸங்கல்பமின்றி கார்யங்களைச் செய்பவனே பண்டிதன் என்று அறிஞர்கள் சொல்கிறார்கள். சாமான்யர்கள் சொல்லவில்லை. அத்தகையோன் எத்தகைய செயல் புரிந்தாலும் சாந்தியையேயடைவான். அவ்வாறின்றி காமம், சங்கற்பம் இவற்றுடன் கூடியவன் எந்தச் செயலும் செய்யாது வாளா இருப்பினும் அமைதியின்மையையே அடைவான். இதுவே கர்ம இரகசியம்.

பண்டிதனின் இலட்சனம் இச்சுலோகத்தில் தெரிவிக்கப் பட்டது. எனவே பகவான் இதன்மூலம் அருளும் பண்டிதன் என்ற விருதினைப் பெற முயலுவோர் தேவை.

**வினா:**

பண்டிதன் யார்?

**விடை:**

(1) எவனது காரியங்கள் அனைத்தும் காமம், சங்கல்பமின்றி இருக்குமோ (2) எவனது கர்மங்களனைத்தும் ஞானாக்கினி யால் எரிக்கப்பட்டுவிடுமோ அவனே பண்டிதன்.

**வினா:**

*கர்மாவை எவ்வாறு செய்தல் வேண்டும்?*

**விடை:**

*ஆசையின்றி, அவற்றை பற்றிய கர்த்ருத்துவத்துடன் அகம்பாவமின்றி, சங்கற்பமின்றி பின்பற்றுதல் வேண்டும்.*

**வினா:**

*கர்மங்களனைத்தும் எதனால் நசித்துப்போகும்?*

**விடை:**

*ஞானாக்னியால்.*

**20 த்யக்த்வா கர்மபலாஸங்கம் நித்யத்ருப்தோ நிராச்ரயஹ।**
**கர்மண்யபிப்ரவ்ருத்தோ அபி நைவ கிஞ்சித் கரோதி ஸஹ॥**
**(20)**

**சொற்பொருள்:**

*கர்மபலாஸங்கம். வினைப் பயனில் ஆசையை, த்யக்த்வா - விடுத்து, நித்ய த்ருப்தி - எப்போதும் திருப்தியடைபவன், நிராசயஹ - எதையும் சாராதவனாய், கர்மணி - கர்மத்தில், அபிப்ரவ்ருத்தஹ அபி - பிரவருத்தி இருந்த போதிலும், ஸஹ - அவன், கிஞ்சித் - சிறிதாயினும், (கர்மாவை), ந கரோதி ஏவ - செய்வதே இல்லை.*

**கருத்துரை:**

*எவன் வினைப்பயனில் பற்றற்றவனாய், எப்போதும் திருப்தியுடன், எதையும் சாராது இருக்கிறானோ, அவன், கர்மாக்களில் ஈடுபட்டாலும், சிறிதளவும் செய்யாதவனே ஆவான்.*

**விளக்கம்:**

*(1) கர்மபலனில் ஆசையற்றவன், (2) எப்போதும் திருப்தியுடையவன், (3) பொருள்களைச் சாராதவன்*

(ஆத்மாவையே சார்ந்திருப்பவன்) - இத்தகைய இலட்சணம் உடைய மனிதன் எத்துணை கர்மாக்களை ஆற்றினும் செயலின்றி இருப்பவனே ஆவான் என்று இங்கு சொல்லப்பட்டது. ஜீவன் முக்தர்களான மகனீயர்கள் இத்தகைய நிலையையடைந்த பின்னரே பல காரியங்களில் உலக நன்மைக்காக ஈடுபடுவர்.

(1) அவர்கள் கர்மாக்களை செய்பவரேயன்றி அவற்றின் பலனில் ஆசையில்லை; பலனைக் கருதாது ஈசுவரார்ப்பண புத்தியுடன் செயலாற்றுவர். (2) எப்போதும் திருப்தியுடையவர்களாயிருப்பர். அவர்கள் அடைய வேண்டிய அனைத்தையும் ஆன்மாவிடமிருந்தே பெறுகிறார்கள். எனவே எப்போதும் திருப்தியுடனேயே இருப்பர். 'நித்ய' என்ற சொல்லினால் ஏதோ ஒரு முறையோ, குறிப்பிட்ட காலத்திலேயோ திருப்தியடையாமல், எப்போதும் திருப்தியுடனேயே இருப்பர் என்பது தெரிகிறது. (3) இனி மூன்றாவது ஆசையின்மை. மகோத்தமர்கள் அழியக்கூடிய காட்சிப் பொருள்களின் மேல் ஒருகாலும் ஆசைப்படார். நிலையான ஆன்மாவையே எப்போது நினைத்த வண்ணம் இருப்பர். இவ்வாறு கர்மபலத்தின் பற்றின்மை, நித்ய திருப்தி, ஆசைகளற்ற தன்மை ஆகிய இம்மூன்றும் உள்ள மகனீயர்கள் பலவித கர்மாக்களை விரிவாகச் செய்தாலும் கர்மாக்களை செய்தவன் ஆகான். இதுவே கர்மாவில் அகர்மம். "ப்ரவ்ருத்தோ அபி' எனாது, 'அபிப்ரவருத்தோ அபி' என்றதால் ஞானி அதிகமான செயல்களைக்கூட நன்கு ஆற்றக் கூடியவர் என்பது தெளிவாகிறது.

**வினா:**

பல செயல்களைச் செய்தும் காரியமாற்றாதவன் எவன்?

**விடை:**

(1) கர்ம பலனில் பற்றில்லாதவன் (2) எப்போதும் திருப்தியுடன் இருப்பவன். (3) எதனையும் அண்டியிராதவன் - (த்ரிக் - வஸ்துவான ஆத்மாவையே சார்ந்திருப்பவன்)

**முன்னுரை:**

எத்தகைய நற்குணமுடையவனாய் இருப்பினும் எவ்வாறு கர்மாவை செய்து வந்தால் பாவம் தொடர்வதில்லை எனக் கூறுகிறார்.

**21. நிராசீர்யதசித்தாத்மா த்யக்தஸர்வபரிக்ரஹஹ|
சாரீரம் கேவலம் கர்ம குர்வன்னாப்னோதி கில்பிஷம்|| (21)**

**சொற்பொருள்:**

நிராசீஹி - ஆசையற்றவன் யதசித்தாத்மா - அடக்கப்பட்ட இந்திரியங்களையுடையவன், த்யக்த ஸர்வபரிக்ரஹஹ - எல்லா வித பொருள்களையும் துறந்தவன் (ஆகி), சாரீரம் கேவலம் கர்மா - சரீரத்தால் மட்டுமே (தேகப் பாதுகாப்பு, உலகைக் காப்பாற்றுதல் முதலான) கர்மங்களை, குர்வன் - செய்து கொண்டு (இருப்பினும்), கில்பிஷம் - பாவத்தினை, ந ஆப்னோதி - அடைவதில்லை.

**கருத்துரை:**

ஆசையற்றவனும், இந்திரியங்களைக் கட்டுப்படுத்திய வனும், உடைமைகளைத் துறந்தவனும் ஆன மனிதன் சரீரத்தால் மட்டுமே வினையாற்றுபவன் பாவத்தை அடையமாட்டான்.

**விளக்கம்:**

கர்மாவைச் செய்ய வேண்டிய முறையில் செய்தால் அது பந்தத்தையோ, பாவத்தையோ என்றும் ஏற்படுத்தாது. இச்சுலோகத்தில் மூன்று மகத்தான நற்குணங்கள் சொல்லப்பட்டுள்ளது. - (1) ஆசையற்றிருத்தல் (2) இந்திரியங்களை வசப்படுத்திருத்தல். (3) எப்பொருளின் மீதும் தனது என்ற எண்ணமற்றிருத்தல். இம்மூன்று இலட்சணங்கள் பொருந்தியவன் வெறும் சரீரத்தால் மட்டும் எத்துணை கர்மாக்களைச் செய்தாலும் பாவத்தை அடையமாட்டான். ஏனெனில் ஆசையற்றவனுக்கு மனம், வெளியுலக விஷயங்களில் போகாது, அந்தர் முகமாக, ஆத்மாவை நோக்கி இருப்பதால் அவன் கர்மாக்களைச் செய்தாலும் பலன்களின்

மீது ஆசையற்றிருப்பான். அவ்வாறே இந்திரியங்களை வசப்படுத்தியவனின் சித்தம் கர்மங்களின் மீது, கர்த்தா என்ற எண்ணமிராது பற்றற்று இருக்கும். இனி மூன்றாவதான 'அபரிக்கிரகம்' உடையவனது மனம்' எதன்மீதும் 'மமத்வம்' பற்று இவையின்றி இருக்கும். எனவே இம்மூன்று சத்குணங்கள் இருப்பவனின் கிரியைகள் அனைத்தும் பலனைக் கருதாதவையாக, பற்றற்றவையாக இருப்பதால் கர்த்தாவிற்கு பாவம் எதுவும் தொடராது. இத்தகைய இரகசியமே இச்சுலோகத்தில் தெரிவிக்கப்பட்டது.

"த்யக்த ஸர்வ பரிக்ரஹஹ" - 'ஸர்வ' என்ற அடைமொழியினால் ஏதோ ஒரு பொருளின் மீதுமட்டுமின்றி எல்லாவஸ்துக்களையும் துறந்தவன் எனப்பட்டது. ஏனெனில், பொருள்களைத் துறப்பதால் வஸ்துக்களுடன் தொடரும் கர்மாவைத் தானும் பற்றியது போலாகும். அக்கர்மத்தை தன் ஞானாக்கினியால் சாம்பலாக்கும் சக்தி தனக்கு இல்லாவிடில், அது சாதகனுக்கு அமைதியின்மையை உண்டாக்கும். எனவேதான் முமுக்ஷுவான அவனுக்கு பிற வஸ்துக்களைப் பெறுதல் கூடாது என 'அபரிக்ரகம்' நியமம் சாஸ்த்திரங்களில் விதிக்கப்பட்டுள்ளது.

"யமம், அகிம்சை, சத்யம், அஸ்தேயம் (திருடாமை), பிரம்மச்சரியம், அபரிக்கிரகம்".

**வினா:**

கர்மாவைச் செய்தாலும் பாவத்தை எவர் அடைவதில்லை?

**விடை:**

(1) ஆசையற்றவன் (2) இந்திரியங்களை வசப்படுத்தியவன். (3) பிறரிடமிருந்து எத்தகைய பொருளையும் பெறாதவன்.

**முன்னுரை:**

கர்மங்களைச் செய்தாலும் எவர் பந்தப்படுவதில்லை என்பதை தெரிவிக்கிறார்.-

**22. யத்ருச்சாலாபஸந்துஷ்டோ த்வந்த்வாதீதோ விமத்ஸரஹ|**
**ஸமஹ ஸித்தாவஸித்தௌ ச க்ருத்வாபி ந நிபத்யதே|| (22)**

**சொற்பொருள்:**

*யத்ருச்சாலாபஸந்துஷ்டஹ - தற்செயலாய் கிடைப்பதில் திருப்தியடைபவன், த்வத்வாதீதஹ - சீதம், உஷ்ணம், சுகதுக்கம் முதலான இருமைகளைக் கடந்தவன், (இலட்சியம் செய்யாதவன்), விமத்ஸரஹ - பொறாமை இல்லாதவன், ஸித்தௌ அஸித்தௌ ச - பலனின் வெற்றியாலோ தோல்வியாலோ, சமஹ - சமபுத்தியுடையவனாய், க்ருத்வா அபி - கர்மம் செய்தாலும், ந நிபத்யதே - பந்தப்படுவதில்லை.*

**கருத்துரை:**

*தற்செயலாய்க் கிடைப்பதில் திருப்தியடைபவன், இருமைகளைக் கடந்தவன், பொறாமையில்லாதவன், பலனின் வெற்றி தோல்விகளில் சமபுத்தியுடன் (நடுவு நிலையில் நிற்பவன்) ஆனவன் கர்மம் செய்யினும் பந்தப்படுவதில்லை.*

**விளக்கம்:**

*மேற் சொன்ன சுலோகத்தில் கர்மாவைச் செய்தாலும் பந்தப்படாதவனின் இலட்சணங்களில் மேலும் சிலவற்றை இங்கு எடுத்துக் கூறுகிறார். கிடைப்பதில் திருப்தியடைதல், இருமைகளை லட்சியம் செய்யாது இருத்தல், பொறாமை இன்றியிருத்தல், காரியங்களின் வெற்றி தோல்விகளில் சம பாவத்துடன் இருத்தல் என்ற இந்நான்கு குணங்களும் முன் சுலோகத்தில் சொல்லப்பட்ட மூன்று குணங்களும், ஞான குணங்களென்றும், ஜீவன் முக்தனின் இலட்சணமென்றும் தெளிவாகக் காட்டுவதால் ஞானத்தில் நன்றாக பயிற்சியடைந்தால் அன்றி கர்மாவைத் தூய்மையாக, பந்தப்படாது ஆற்றுதல் கடினம் என்பது தெரிகிறது. ஞானம், கர்மா என்ற இவ்விரண்டும் ஒன்றிற்கு ஒன்று பரஸ்பரம் உதவுகின்றன. நிஷ்காம கர்மாவினால் (சித்த சுத்தி அதனால்) ஞானம் ஏற்படுகிறது. ஞானம், ஏற்பட்டால்தான் நிஷ்காம கர்மாவை நன்றாகச் செய்வதற்கு இயலும். எனவேதான்*

'கர்மயோகம்' (3ஆவது அத்தியாயம்) கடைசியில் அகண்ட ஞானத்தைப் பற்றியும் 'ஞானயோகம்' (4ஆவது அத்தியாயம்) இடையில் கர்மாவைச் செய்வது பற்றியும் போதிக்கப் பட்டுள்ளது. முன் செய்வது பற்றியும் போதிக்கப்பட்டுள்ளது. முன் சொன்ன ஞான குணங்களையுடையவன் எப்போதும் சமநிலையிலேயே இருப்பான் ஆதலால் சரீரத்தால் அவன் கர்மாக்களைச் செய்தாலும் அதனால் கட்டுண்ணாது பற்றற்று இருப்பான். எனவே தான் அவன் அக்கர்மாக்களால் எக்காலத்தும் பந்தப்படுவதில்லை.

**வினா:**

காரியங்களைச் செய்தாலும் எவன் அவற்றால் பந்தப்படுவதில்லை?

**விடை:**

(1) தற்செயலாய் கிடைப்பவற்றில் திருப்தியடைபவன் (2) இருமைகளைக் கடந்தவன் (3) பொறாமையில்லாதவன் (4) செயல்களின் வெற்றி தோல்விகளில் சமபாவம் உடையவன்.

**முன்னுரை:**

கர்மாக்களை செய்தாலும் கர்மா எவனைத் தொடர்வதில்லை என்பதைக் கூறுகிறார்.—

**23. கதஸங்கஸ்ய முக்தஸ்ய ஞானாவஸ்திதசேதஸஹ!**
**யக்ஞாயாசரதஹ கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே!! (23)**

**சொற்பொருள்:**

கதஸங்கஸ்ய - எதன்மீதும் பற்றில்லாதவனும், முக்தஸ்ய - (விருப்பு, வெறுப்பு, காமம் குரோதம் முதலான) சம்சார பந்தங்களிலிருந்து விடுபட்டவனும், ஞானாவஸ்தித சேதஸஹ - ஞானத்திலே உறுதிபெற்ற மனத்தை உடையவனும், யக்ஞாய - இறைவனுக்கு பிரியமான, அல்லது சக உயிர்களின் நன்மைக்காக, அல்லது, தர்மத்திற்காக, ஆசரதஹ - கர்மாவைச் செய்பவனுமான மனிதனின், கர்ம - கர்மமானது, ஸமக்ரம்

- முழுமையாக, ப்ரவிலீயதே - கரைந்து போகும், (பந்தங்களை ஏற்படுத்தாது நசித்துப் போகும்).

**கருத்து:**

எதன்மீதும் பற்றில்லாது, விருப்பு வெறுப்பு, காமம் குரோதம் - முதலான சம்சார பந்தங்களினின்றும் விடுபட்டவனாய், ஆத்மஞானத்திலேயே மனம் நிலைபெற்றவனாய் இறைவனுக்குப் பிடித்தமான (அல்லது சக உயிர்களின் நன்மைக்காக, தர்மத்திற்காக) கர்மாவைச் செய்பவனும் ஆன மனிதனின் கர்மாவானது முழுவதுமாக கரைந்து போகிறது. (பிறப்பெனும் பந்தமில்லாது போகிறது).

**விளக்கம்:**

"கதஸங்கஸ்ய" - பற்று (attachment) டன், பலனைக் கருதிச் செய்தால், கர்மா, பந்தத்தை ஏற்படுத்தும். பிறப்பிற்குக் காரணமாகும். பற்றின்றி, பலனைக்கருதாது செய்து வரும் போது அச் செயல்களே ஜீவனின் முக்திக்கு வழிகாட்டும்.

உலகில் பல கோடி ஜீவராசிகள் இருப்பினும் இச் சுலோகத்தில் சொல்லப்பட்ட நான்கு நற்குணங்களையுடையவனின் கர்மாவே கரைந்து போகுமேயன்றி ஏனையோரது கர்மாக்கள் அன்று, அவர்களே கர்மாவினின்றும் விலகி, நைஷ்கர்ம நிலையை அடையவல்லவர்.

அவையெவையெனின் - (1) பற்றற்ற நிலை (2) விருப்பு வெறுப்பற்ற நிலை (3) ஆத்ம ஞானத்திலேயே எப்போதும் சித்தத்தை நிலைநிறுத்துதல். (4) இறைவனின் திருப்திக்கும் பிறர் நன்மைக்கும் கர்மாக்களைச் செய்தல்.

"ஞானாவஸ்திதசேதஸஹ" - ஞானத்தில் எப்போதும் நிலைத்த சித்தத்தை யுடையவனின் கர்மங்கள் நசித்துப் போகும் எனப்பட்டது. அவர்களை எத்துணை கர்மங்கள் செய்யினும் அவையனைத்தும் அஞ்ஞானக்கடலில் முழுகிப்போகும் என்பது பொருள். அத்தகைய ஞானம் இல்லாதவரின் சித்தம் காட்சிப்பொருள்களை உண்மையென நம்பி, அதிலேயே

முமுக்ஷி, பற்றுடன் கர்த்தா என்ற எண்ணத்துடன் இருப்பர் ஆதலால் அவர்களது கர்மா நசித்துப் போகாது பந்தத்தை ஏற்படுத்தும்.

"யக்ஞாயாசரத்ஹ" - "யக்ஞார்த்தா தகர்மனே அன்ய த்ரலோகோஅயம் கர்மபந்தைஹி' அதாவது யக்ஞம் தெய்வம், தர்மம், பரஹிதம் இவற்றிற்காக, அன்றி வேறு எவ்விதமாக செய்யப்பட்டாலும் கர்மா பந்தத்தை ஏற்படுத்தும் என்று பகவானால் இதற்கு முன்பே (3ஆவது அத்தியாயத்தில்) சொல்லப்பட்டது.

"ப்ரவிலீயதே" - 'லீயதே' என்றோ 'விலீயதே' என்றோ சொல்லாது 'ப்ரவிலீயதே' என்பதால் அவரது கர்மம் சிறிதளவேனும் தங்கிவிடாது முழுமையாக நசித்துப் போகும் என்று பொருள். மேலும் 'ஸமக்ரம்' என்று பிரயோகித்ததால், பலபிறவிகளாகத் தொடரும் கர்மங்களும் எவையும் சிறிதும் மிகுந்து விடாது மொத்தமாக கர்மாக்கள் ஞானமெனும் அக்னி குண்டத்தில் எரிந்து சாம்பலாகிவிடும் என்பது பொருள்.

சாதகர்களுக்கு, பக்தர்களுக்கு, முமுக்ஷுக்களுக்கு இத்தகைய வாக்கியங்களினால் தைரியம் ஏற்படும். ஏனெனில் ஒவ்வொருவரும் ஆசைப்படுவது கர்மாவினின்றும், பந்தங்களினின்றும் விடுதலையே அல்லவா! அத்தகைய உன்னதமான நிலையை எவ்வாறு அடைய முடியும் என்பது இச்சுலோகத்தில் நிரூபிக்கப்பட்டது. கர்மம் எதுவும் செய்யாது, வெறுமனே இருத்தல் இங்கு உபதேசிக்கப் படவில்லை. கர்மா எத்தனை அளவு செய்தாலும் பந்தத்தினின்று விடுபட்டு செய்தல் எங்ஙனம் என்பதே இங்கு கற்றுக் கொடுக்கப்பட்டது. எனவே இந் நான்கு இலட்சணங்களை ஒவ்வொருவரும் அனுஷ்டித்து கர்மபந்த விமுக்தர்களாதல் வேண்டும்.

**முன்னுரை:**

மேற் சொல்லப்பட்ட 'யக்ஞம்' என்னும் விஷயத்தைக் குறித்து ஏழு சலோகங்களில் விவரித்துச் சொல்கிறார்.

**24. ப்ரஹ்மார்ப்பணம் ப்ரஹ்மஹவிர் ப்ரஹ்மாக்னௌ ப்ரஹ்மணாஹுதம்|**
**ப்ரஹ்மைவ தேன கந்தவ்யம் ப்ரஹ்மகர்மஸமாதினா|| (24)**

**சொற்பொருள்:**

(யக்ஞத்தில்) அர்ப்பணம் - (ச்ருக், ச்ருவம் முதலான) ஹோமசாதனங்கள், ப்ரம்மஹ - ப்ரம்மமே, ஹவிஹ் - (அன்னம், நெய் முதலான) ஹோம திரவியங்கள், ப்ரம்ஹ - பிரம்மமே, பிரம்மாக்னௌ - பிரம்மமாகிய அக்னியில், பிரம்மணா - பிரம்மஸ்வரூபான யஜமானனிடம், ஹுதம் - ஹோமம் செய்யப்பட்டது, 'ப்ரஹ்மைவ - பிரம்மமே, ப்ரஹ்மகர்மஸமாதினா - அனைத்தும் பிரம்மசொரூப மேயென்றும் ஏகாக்ர எண்ணத்துடன் யக்ஞம் முதலான கர்மங்களை செய்யும், தேன - அவனால் (அந்த பிரம்ம நிஷ்டனால்) கன்தவ்யம் - அடையக்கூடிய பலனும், பிரம்மம் ஏவ - பிரம்மமேயாகும்.

**கருத்துரை:**

யக்ஞத்தின் ஹோமசாதனங்கள், ஹோம திரவியங்கள், ஹோமாக்னி, ஹோமம் செய்பவன், ஹோமம் செய்யப்படுவது - ஆகிய அனைத்துமே பிரம்ம சொரூபங்களே எனும் ஏகாக்கிர எண்ணத்துடன் யக்யாதி கர்மங்களைச் செய்பவன் பிரம்மத்தையே அடைவான்.

**விளக்கம்:**

இவ்வுலகில் அனைத்தும் பிரம்ம சொரூபமேயன்றி வேறல்ல. இவ்விஷயத்தை எப்போதும் நினைவில் வைத்துக்கொண்டு கர்மாக்களை செய்தல் வேண்டும். அதாவது, சித்தத்தில் பிரம்மபாவனை, தெய்வ பாவனையுடன் கர்மாக்களைச் செய்தல் வேண்டும். அப்போதே அக்கர்மாவானது யக்ஞமாக மாறிப் போகும்.

எல்லாம் பிரம்ம சொரூபம் எவ்வாறு ஆகும் எனில், இந்நாம ரூபமுடைய உலகமனைத்தும் பிரம்மத்தில் பொய்யாக

உருவகப்பட்டது. உருவகப்படுத்தப்பட்ட பொருள் உண்மைப் பொருளைவிட வேறாக இருக்கமுடியாது. பயத்தினால் கயிற்றைப் பாம்பாகக் கருதுகிறோம். எனவே அக்கற்பனை யான பாம்பு கயிற்றைவிட வேறாக இருக்க முடியாது. அது கயிறே ஆகும். அவ்வாறே அஞ்ஞானத்தினால் இவ்வுலகம் பிரம்மத்தில் உருவகப்படுத்தப்பட்டது. உருவகப்படுத்தப்பட்ட பொருள் உண்மைப் பொருளினின்றும் மாறுபட்டதாக இருக்க முடியாது. எனவே ஜகத்தனைத்தும் பிரம்ம ஸ்வரூபமே. இவ்வுலகில் உள்ள ஒவ்வொரு பொருளும், ஒவ்வொரு செயலும் இச்சுலோகத்தில் நிரூபிக்கப்பட்டுள்ளது.

இங்கு யக்ஞத்தில் ஹோமத்தினை கிரியையாகக் கொள்ளப்பட்டது. முன்காலத்தில், அதிலும் முக்கியமாக துவாபரயுகத்தில் யக்ஞம் முதலானவை விரிவாக செய்யப்பட்டுவந்ததால், 'ஹோம கார்யம்' அனைவருக்கும் தெரிந்த விஷயமானதால் அதனையே இங்கு பகவான் உதாரணமாக எடுத்துக்கொண்டார். எனவே இங்கு ஒரு ஹோமத்தைப் பற்றிச் சொல்லப்பட்டிருப்பினும் எல்லா காரியங்களும் அவ்வாறே ஊகித்தறிந்து கொள்ள முடியும். இங்கு ஹோமம் செய்யும் யஜமான், ஹவிஸ், அக்னி - ஆகிய அனைத்துமே பிரம்ம சொரூபமே என்றும், ஒவ்வொரு காரியத்தையும் செய்பவன், செய்யப்படுவது ஆகிய யாவையுமே பிரம்ம சொரூபமென்றும் கூறப்பட்டது. பல்லாயிரம் வருடங்களுக்கு முன்பே 'ஸர்வம்கல்விதம் ப்ரம்மா' (சாந்தோக்ய 111-14-1) என்று சாந்தோக்ய உபநிஷத் தெரிவித்தபடி இவ்வுலகமனைத்தும் பிரம்மமேயென்ற எண்ணம் கொண்டு வாழ்பவர் தன்யர்கள்.

'ஸமாதினா' - என்றதால் ஒருமுனைப்பட்ட மனத்துடன், அதாவது பிரம்ம பாவத்துடன் ஒவ்வொரு கர்மாவை செய்து வரல் வேண்டும் என்று உபதேசிக்கப்பட்டது. அதனால் கர்மா கர்மாவாக இராமல் தியானமாக, ஸமாதியாக மாறிப்போகும். கர்மா ஞான ரூபமாக மாறும் முறை இங்கு தெரிவிக்கப்பட்டது. பிரம்ம, பாவத்துடன், வைராக்கிய தெய்வச் சிந்தனையுடன் கர்மாக்களைச் செய்து வந்தால்,

கர்மத்வம் தொலைந்து ஞான ரூபத்தை, சமாதி நிலையை யடையும்.

இவ்வாறு அனைத்தும் பிரம்மமே என்ற திட எண்ணம் ஏற்பட்டு, பிரம்ம பாவனையுடன் செயலாற்றுபவன் அடையும் பலன் என்ன? "ப்ரஹ்மைவ தேன கந்தவ்யம்" என்பதால் அத்தகையோன் பிரம்மத்தையே அடைவான் என்று தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளது. மனிதன் எப்போதும் எதைக்குறித்துச் சிந்தனை செய்கிறானோ, அந்த ரூபத்தையே அடைகிறான். காரியங்களில் எப்போதும் பிரம்ம பாவத்துடன் இருப்பதால் பிரம்மமேயாகிறான். சாதாரணமான கர்மாவே ஜீவனை எவ்வாறு பிரம்மபிராப்திக்கு காரணமாகிறது என்பதை இச்சுலோகம் தெளிவாக்குகிறது.

எனவே எக்காரியமாயினும் செய்வதற்கு முன்பு இச்சுலோகத்தில் சொல்லப்பட்டப் பொருளை நன்கு புரிந்துகொண்டு செய்வதால் பிரம்ம பாவனையில் நற்பலன் தவறாது கிட்டும். சிலர் சாப்பிடும்போது கூட இச்சுலோகத்தை சொல்லும் பழக்கம் உள்ளது.

**முன்னுரை:**

பலவிதமான யக்ஞங்களைப் பற்றிக் கூறுகிறார்.

**25. தைவமேவாபரே யக்ஞம் யோகினஹ் பர்யுபாஸதே|**
**ப்ரஹ்மாக்னாவபரே யக்ஞம் யக்ஞேனைவோபஜுஹ்வதி|| (25)**

**சொற்பொருள்:**

அபரே - சில, யோகினஹ - யோகிகள், தைவம் - தேவதைகளுக்கு (தேவதாராதனரூபமான), யக்ஞம் ஏவ - யக்ஞத்தையே, பர்யுபாஸதே - செய்கிறார்கள், அபரே - இன்னும் சிலர், யக்ஞேனஏவ - ஜீவ பிரம்ம ஐக்கிய எண்ணத்துடனேயே, யக்ஞம் - ஜீவனை, பிரம்மாக்னௌ - பிரம்மமெனும் அக்னியில், உபஜுஹ்வதி - ஹோமம் செய்கிறார்கள்.

**கருத்துரை:**

*சில யோகிகள் தேவதைகளுக்காக யாகங்களையே செய்கிறார்கள். இன்னும் சிலர் ஜீவபிரம்ம ஐக்கிய பாவனையில் ஜீவனைப் பரபிரம்மம் எனும் அக்னியில் ஹோமம் செய்கிறார்கள் (ஆஹுதியாக்குகிறார்கள்).*

**விளக்கம்:**

*யக்ஞத்திற்காக கர்மாவைச் செய்பவனின் கர்மம் முழுவதுமாக கரைந்துபோகும் என்று ௨௩ஆவது சுலோகத்தில் சொல்லப்பட்டது. இனி யக்ஞங்களின் வகைகள் கூறப்படுகின்றன. சிலர் (1) தெய்வ யக்ஞத்தைச் செய்கின்றனர். அதாவது தேவதைகளை ஆராதித்தல், தியானம், உபாசனை, கைங்கர்யம், பிரார்த்தனை முதலான காரியங்களைச் செய்கின்றனர். இவர்கள் கர்மயோகிகள் அல்லது பக்த யோகிகள் (2) இன்னும் சிலர் பிரம்ம ஐக்கிய பாவனையுடன் சித்தத்தினை (ஜீவனின்) பிரம்மமெனும் அக்னியில் ஆஹுதி செய்கின்றனர். அக்னி அனைத்தையும் எரித்து தன்னிடம் ஐக்கியப்படுத்திக் கொள்கிறது. அவ்வாறே பிரம்மத்தின் முன் காணப்படும் பொருள்கள் எல்லாம் ஒடுங்கிப்போகும். சித்தம் (ஜீவன்) கூட காட்சிப் பொருள்களிலே அடக்கம் ஆதலால், ஜீவபிரம்ம ஐக்கிய பாவத்தினால் மகனீயர்கள் அவற்றை பிரம்மமெனும் அக்னியில் (ஆத்மாவில்) ஹோமம் செய்து வருகின்றனர். அதாவது லயிக்கச் செய்கின்றனர். இதுவே பிரம்ம யக்ஞம். இதனைச் செய்பவர்கள் ஞான யோகிகள் எனப்படுவர். இத்தகைய ஞானத்தினால் அவர்கள் (பிரமர கீட நியாயத்தை அனுசரித்து), பிரம்மத்துடன் ஐக்கியமடைகின்றனர். எந்தப் பொருள் அக்னியில் போடப்பட்டாலும் அது அக்னி ரூபத்தையே அடையும். அதுவே மோக்ஷஸ்திதி. ஆத்ம விசாரணையினாலும், விஷயங்களில் விரக்தியினாலும் தன்னிடமுள்ள வாசனைகள், காட்சிப் பொருள்களின் மீதுள்ள ஈடுபாடு இவை அழிக்கப்பட்டு அத்தகைய சுத்த சாத்விக சித்தம் பிரம்மாவில் ஐக்கியமாகிப் போகும். அதுவே பிரம்மயக்ஞம்.*

**வினா:**

யக்ஞங்களில் சிலவற்றைப் பெயரிடுக.

**விடை:**

(1) தெய்வ யக்ஞம் (தேவதைகளை ஆராதனை செய்தல், தேவதைகளை உபாசனை செய்தல் முதலியன) (2) பிரம்மயக்ஞம் - (விசாரணையினாலும், தூய்மையினாலும் சித்தத்தை பிரம்மத்தில் (ஆத்மாவில்) கலக்கச் செய்தல்.

**26. ச்ரோத்ராதீனீந்திரியாண்யன்யே ஸம்யமாக்னிஷு ஜுஹ்வதி|**
**சப்தாதீன்விஷயானன்ய இந்திரியாக்னிஷு ஜுஹ்வதி|| (26)**

**சொற்பொருள்:**

அன்யே - சிலர், ச்ரோத்ராந்த்ரியாணி - செவி முதலான இந்திரியங்களை, ஸம்யமாக்னிஷு - அடக்குதல் எனும் அக்னியில், ஜுஹ்வதி - ஹோமம் செய்கிறார்கள், அன்யே - இன்னும் சிலர், சப்தாதீன் - சப்தம் முதலான, விஷயான் - விஷயங்களை, இந்திரியாக்னிஷு - இந்திரியங்கள் என்ற அக்னியில், ஜுஹ்வதி - ஹோமம் செய்கிறார்கள்.

**கருத்துரை:**

சிலர் செவி முதலான இந்திரியங்களை அடக்குதல் என்ற அக்னியிலும், சிலர் சப்தாதி விஷயங்களை இந்திரியங்கள் என்ற அக்னியிலும் ஹோமம் செய்கிறார்கள்.

**விளக்கம்:**

(1) இந்திரியங்களை அடக்குதல் (2) சப்தாதி விஷயங்களைத் தியாகம் செய்தல் - என்ற இரண்டு வித யக்ஞங்கள் இங்கு தெரிவிக்கப்பட்டது.

இந்திரியக் கட்டுப்பாடு என்பது ஆன்மீக சாஸ்திரத்தில் மிகவும் முக்கிய ஸ்தானத்தை ஆக்ரமிக்கிறது. மோக்ஷமெனும் கட்டிடத்தின் மேல் ஏறுவதற்கு அது ஏணியைப் போன்றது. அதனால் தான் இதனைக் குறித்து 2ஆவது 3ஆவது

அத்தியாயங்களில் பகவான் விரிவாகப் போதிக்கிறார். 'தஸ்மாத்வமிந்திரியாண்யாதெள நியம்ய பரதர்ஷப' - என்று சொல்லி இந்திரியக் கட்டுப்பாட்டையே முதன்மையான சாதனையாக ஸ்ரீ கிருஷ்ணர் குறிப்பிடுகின்றார். இந்திரியங்களைக் கட்டுப்படுத்தாது சொல்லப்படும் வேதாந்த வசனங்கள் வீர்ய மற்றவையாகவும், ஒளியற்றவையாகவும், இருக்கும். அது வெறும் 'வாய் வேதாந்தமே' ஆகும். இந்திரியங்களை வென்று, அத்தகைய சீலர்கள் எதனைச் சொன்னாலும் அது வேதாந்த போதனையாகவே இருக்கும். அத்தகைய உன்னதமான இந்திரியக் கட்டுப்பாடு, இங்கு யக்ஞமாக வர்ணிக்கப்படுகிறது. மனதைக் கட்டுப்படுத்த வேண்டுமாயினும் இந்திரியங்களையும் கட்டுப்படுத்தியாக வேண்டும். எனவே முமுக்ஷுவிற்கு இந்திரியக் கட்டுப்பாடு மிகமிகத் தேவையானது. பல விரதங்களினாலும், கட்டுப்பாடுகளின் மூலமும், நியமங்களின்மூலமும், இந்திரியங்களனைத்தையும் வசப்படுத்திக் கொள்ள வேண்டும். அடக்குதல் எனும் அக்னியில் இந்திரியங்களை ஹோமம் செய்தல் என்றால் அதுவே, அநேக இந்திரியங்கள் இருப்பதால் ஒவ்வொன்றையும் தனித் தனியாக நன்கு அடக்குதல் வேண்டும் என்று தெரிவிப்பதற்காக 'அக்னிகள்' என்று பன்மையில் கூறுகிறார்.

இனி இரண்டாவது யக்ஞம் சப்தாதி விஷயங்களில் செல்லவிடாது தடுத்தலாவது மேற்சொன்ன யக்ஞத்துடன் தொடர்புடையதே யாகும். இந்திரியங்கள் சப்தாதி விஷயங்கள் எனும் (க்ஷேத்திரங்களில்) இருப்பிடங்களில் சஞ்சரித்துக் கொண்டிருக்கும். அவ்விஷயங்களில் உள்ள தோஷங்களை நன்கு அலசி ஆராய்ந்து அவற்றின் மீதுள்ள ஆசையை விடுதல் வேண்டும். இதுவே விஷயங்கள் எனும் ஹவிஸ், இந்திரியங்கள் எனும் அக்னியில் ஹோமம் செய்தல். விஷயங்களில் இத்தகைய தோஷங்களைக் காண்பதால் இந்திரியங்கள் அவ்விஷயங்களின் மீது செல்லாது, இந்திரியங்கள் எப்போதும் சலனமற்று இருக்குமோ, அப்போது சித்தவிருத்திகள் தடுக்கப்பட்டவையாகும். எப்போது சித்தவிருத்திகள் தடுக்கப்படுகின்றனவோ

அப்போது ஜீவன் தன் சுயரூபமான ஆத்மாவில் நிலைக்கிறான். அதுவே மோக்ஷம்.

**வினா:**

இன்னும் சில யக்ஞங்களைக் குறிப்பிடுக.

**விடை:**

(1) இந்திரியக் கட்டுப்பாடு (2) விஷயத் தியாகம்.

**27 ஸர்வாணீந்திரியகர்மாணி ப்ராணகர்மாணி சாபரே|**
**ஆத்மஸம்யமயோகாக்னௌ ஜுஹ்வதி ஞானதீபிதே|| (27)**

**சொற்பொருள்:**

அபரே - ஏனையோர் ஸர்வாணி - எல்லாவிதமான, இந்திரிய - கர்மாணி - இந்திரிய கர்மங்களையும், ப்ராணகர்மாணிச - பஞ்சபிராணங்களின் கர்மங்களையும், ஞானதீபிதே - ஞானத்தினால் ஒளிவிடுகின்ற, ஆத்மஸம்யமயோகாக்னௌ - மனதை அடக்குதல் என்ற யோகம் (சமாதி யோகத்தினை) என்ற அக்னியில், ஜுஹ்வதி - ஹோமம் செய்கிறார்கள்.

**கருத்துரை:**

இன்னும் சிலர் இந்திரியங்களின் கர்மங்களையும், பிராண கர்மங்களையும், மனதை ஆத்மாவின் கண் அடக்குதல் என்ற ஞானி ஒளி வீசும் யோகத்தீயில் ஆகுதியாகக் கொடுக்கின்றனர்.

**விளக்கம்:**

மோக்ஷத்தை அடைவதற்கு மனம் தடங்கலாக உள்ளது. பல பிறவிகளாகத் தொடர்ந்து கெட்ட நடவடிக்கைகளில் ஈடுபட்டு உள்ளது. அதனை அடக்க வேண்டுமெனினும் இந்திரியங்களைக் கட்டுப்படுத்தி, பிராணாயாமம் முதலானவை அவசியமாக உள்ளது. ஏனெனில் இந்திரியங்களின் வேகத்தினை, பிராணவேகத்தைக் கட்டுப்படுத்தினால் அன்றி மனதினை எவராலும்

வெற்றிகொள்ள முடியாது. எனவே மனதை அடக்குதலுக்கு உதவியாக இந்திரியக் கட்டுப்பாடு, பிராணாயாமம் முதலியவற்றைச் செய்தல் வேண்டும். அவ்விஷயமே இங்கு அலங்காரமான மொழியில், 'ஆத்மஸம்யம யோகமெனும் அக்னியில் இந்திரிய கர்மாக்கள், பிராண கர்மங்கள் ஆஹுதியாக்கப்படுகின்றன என்று சொல்லப்பட்டது.

"ஞானதீபிதே" - என்ற சொல் நன்றாக கவனிக்கப்பட வேண்டியுள்ளது. மனக் கட்டுப்பாடு, நியமங்கள் இவற்றால், ஆத்மஞானம் நன்றாக ஒளிவிடுகின்றது, தத்வ ஞானத்தின் உதவியில்லாவிடில், வாசனைகளற்றுப் போதல் (மனக் கட்டுப்பாடு) சித்தித்தல் கடினம். எனவேதான் 'ஞானதீபிதே' - ஞானத்தினால் விருத்தியடையக் கூடிய மனக்கட்டுப்பாடு' என்று இங்கு சொல்லப்பட்டது. மனசம்யமம் எனும் அக்னிக்கு தத்துவ ஞானம் (விசாரணை) விசிறியைப் போன்றது. அதனால் அது சம்யமாக்னி ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் - எனவே கட்டுப்பாட்டினை பயிற்சி செய்ய விரும்புவோர் தத்வ ஞானத்தின் உதவியை நாடுதல் வேண்டும்' 'இவ்வுலகமென்பதென்ன? விஷயங்கள் நிலையானவையா? நிலையானது எது? என்ற பல விசாரணைகளால் மனம் அழியக்கூடிய விஷயங்களின் மீது செல்லாது, நிலையான ஆத்மாவிடமே ஓடும். மேலும் 'ஞானதீபிதே' என்று சொன்னதால் சமாதி நிலை, 'மனம் கட்டுப்பட்ட நிலை, சூன்ய அவஸ்தையன்று என்றும், பிரக்ஞை மயமான, ஞான வடிவான, சின்மய ஸ்திதியேயென்றும் தெளிவாகிறது.

**வினா:**

மனக்கட்டுப்பாடு எதனால் கூடும்?

**விடை:**

ஞானத்தினால், தத்வ விசாரணையால்.

**28. த்ரவ்யயக்ஞாஸ்தபோயக்ஞா யோகயக்ஞாஸ்ததாபரே।**
**ஸ்வாத்யாய ஞானயக்ஞாஸ்ச யதயஹ ஸம்சிதவ்ரதாஹா॥(28)**

**சொற்பொருள்:**

அபரே - சிலர், த்ரவ்யயக்ஞாஹா - திரவியங்களை நல்ல விஷயங்களில் செலுத்துதலையே யக்ஞமாகக் கொண்டவர்களும், (அபரே - சிலர்), தபோயக்ஞாஹா - தவமே யக்ஞமாகக் கொண்டவர்களும், (அபரே - இன்னும் சிலர்) யோக யக்ஞாஹா - பிராணாயாமம் முதலான அஷ்டாங்க யோகத்தைச் செய்பவராகவும், ததா - அவ்வாறே, (அபரே - இன்னும் சிலர்) ஸ்வாத்யாய ஞானயக்ஞாஸ்ச - வேத அத்யயனத்தையும், வேதார்த்தங்களை அதாவது சாஸ்திரங்களைக் கற்றல், ஞானம் பெறுதல், ஆகியவற்றை யக்ஞமாகச் செய்பவர்களாகவும் (இருக்கிறார்கள் அவர்கள் அனைவரும்), யதயஹ - முயற்சி செய்யும் சீலர்கள், ஸம்சிதவ்ரதாஹா - கடுமையான விரதமுடையவர்களாக உள்ளார்கள்.

**கருத்துரை:**

சிலர் பொருளைத் (திரவியங்களை) தானம் செய்தல், நல்ல காரியங்களில் செலவிடுதல் இவையே யக்ஞமாகக் கொண்டுள்ளனர். சிலர் தவமே யக்ஞமாகவும், இன்னும் சிலர் (பிராணயாமம் முதலான) யோகமே யக்ஞமாகவும் கொண்டுள்ளனர். அவர்கள் அனைவரும் தன்னடக்கமும். உறுதியான விரதமுடையவர்களாகவும் கருதப்படுவர்.

**விளக்கம்:**

இன்னும் சில யக்ஞங்களை இங்கு விளக்குகிறார்.

(1) திரவியயக்ஞம்: அவரவர் தனங்களை, வஸ்துக்களை தகுந்தவர்களுக்கு தானம் செய்தல், நற்காரியங்களுக்குச் செலவிடுதல். இத்தகைய தான தர்மங்களும் ஒருவாறு யக்ஞமே எனலாம்.

(2) தபோயக்ஞம்: விரதங்கள், உபாசனைகள் இவற்றால் தேக இந்திரியங்களை எரித்து அவற்றைப் படிப்படியாகக் கட்டுப்படுத்துதலும் யக்ஞமே என்கிறார்.

3. யோகயக்ஞும்: யமம், நியமம் இவற்றுடன் கூடிய அஷ்டாங்க யோகம்; இதுவும் யக்ஞமே.

4. ஸ்வாத்யா யக்ஞானயக்ஞும்: வேத அத்யயனம், சாஸ்திரங்களைக் கற்றல், அவற்றின் பொருளை நன்கு தெரிந்துகொண்டு அனுஷ்டித்தல் ஆகியவையும் யக்ஞமே.

இவ்வாறு மக்கள் அவரவர் இயல்பு, ஈடுபாடு இவற்றை அனுசரித்து விதவிதமான வழிகளைப் பின்பற்றிப் பலவித யக்ஞங்களை ஆற்றி சித்த சுத்தியடைந்து இறுதியில் பரமாத்மாவை அடைகின்றனர். இவர்களனைவரும் முயற்சியை மேற்கொண்டுள்ள யதுக்கள் எனப்படுவர். மோக்ஷத்திற்காக. இறைவனின் சாக்ஷாத் காரத்திற்காக முயற்சி செய்வோரனைவரும் யதிகளே.

"ஸம்சிதவ்ரதாஹ" - என்று சொல்வதால் இவர்களனை வரும் திடமான விரத நிஷ்டைகளைக் கடைப்பிடித்து, மிகக் கடினமான நியமங்களைக் கைக்கொண்டு மனதில் பலப்பிறவிகளாகத் தொடர்ந்து வரும் வாசனைகள், காட்சிப் பொருள்களின் மீதான பற்று இவற்றை ஒதுக்கிவிடுகின்றனர் என்பது பொருள். சோம்பேறியானவன் மோக்ஷ மார்க்கத்தில் ஒரு அடி கூட முன் செல்லமுடியாது. கடையில் நாம் வாங்கும் பொருளுக்கான விலையைச் செலுத்துவதைப் போல மோக்ஷத்திற்கு அதற்கான விலையைக் கொடுக்க வேண்டும். அதுவே தியாகம். அற்பமான விஷயங்களின் மீதான சுகத்தைத் தியாகம் செய்தல். பிரம்மானந்தம் என்ற பொருள் கிடைக்க வேண்டுமாயின் இந்த விலையையாவது தவறாது செலுத்த வேண்டும். ஆரம்பத்தில் சிறிது உழைக்க வேண்டும், துன்பங்களை அனுபவிக்கத் தயாராதல் வேண்டும். யதிகளாக (முயற்சி செய்வோராக), நற்சீலத்துடன் விரதங்களை மேற்கொண்டு எவ்வாறேனும் சாதிக்க வேண்டும். இங்கு யதிகள் என்றால் சந்நியாசிகள் என்று பொருள் அல்ல; முயற்சி செய்வோர் என்பதே பொருள். மேலும் 'ஸம்சித வ்ரதாஹா' என்றதால் சாமான்ய விரதங்களினால், நியமங்களி னால் மாயை அடங்குவதில்லையென்றும், திடமான விரதங்கள், கடினமான நியமங்கள் இவற்றைப் பின்

பற்றினால்தான் அது வழிக்கு வரும் என்றும் முமுக்ஷுக்களுக்கு எச்சரிக்கை செய்கிறார். திடமாக வேரோடு நிலைத்துவிட்ட ஆலமரத்தை வெட்டுவதற்கு கத்தி மட்டும் போதாதல்லவா? இரும்பால் செய்யப்பட்ட கோடாலி வேண்டுமல்லவா?

**29. அபானே ஜுஹ்வதி பிராணம் ப்ராணே அபானம் ததாபரே।
ப்ராணாபானகதீ ருத்த்வா ப்ராணயாமபராயணாஹா॥ (29)**

**சொற்பொருள்:**

*ப்ராணயாமபராயணஹா - பிராணயாமம் செய்வதில் கருத்துடையவர்கள், அபரே - சிலர், பிராணாபானகதீ - பிராண அபான வாயுக்களின் போக்கை, ருத்வா - கட்டுப்படுத்தி (கும்பகம் செய்து), அபானே - அபான வாயுவில், ப்ராணம் - பிராணவாயுவை (பூரகம்), ததா - அவ்வாறே, ப்ராணே - பிராண வாயுவில், அபானம் - அபான வாயுவை (ரேசகம்), ஜுஹ்வதி - ஹோமம் செய்கிறார்கள்.*

**கருத்துரை:**

*பிராணயாமத்தைப் பின்பற்றுவோராகிய சிலர் பிராண அபான வாயுக்களின் போக்கை (மார்க்கத்தை) கட்டுப்படுத்தி அபான வாயுவில் பிராணவாயுவை, பிராணவாயுவில் அபான வாயுவை ஹோமம் செய்கிறார்கள். (பூரகம், கும்பகம், ரேசகங்கள் செய்கிறார்கள்).*

**விளக்கம்:**

*பிராணயாமம் கூட ஒருவிதமான யக்ஞமேயென்று இங்கு வர்ணிக்கிறார். பிராணாயாமம் அஷ்டாங்க யோகத்தில் உள்ள யமநியமாதிகளில் நான்காவதாகும். சரீரத்தின் ஆரோக்கியத்தைக் காப்பாற்றுவதற்காக, மனதின் சஞ்சலப் போக்கைத் தடுப்பதற்கு பிராணாயாமம் அவசியமானது. இது பூரகம், கும்பகம், ரேசகம் என்ற மூன்று பிரிவுகளை உடையது. இச்சுலோகத்தில் அபானத்தில் பிராணத்தை ஹோமம் செய்வது என்றால் பூரகம், பிராணத்தில் அபானத்தை ஹோமம் செய்வது என்றால் ரேசகம், பிராண அபான கதிகளைக் கட்டுப்படுத்துதல் என்றால் கும்பகம்.*

இம்மூன்றையும் அனுசரிக்கும்போது (பிரணவம் முதலான திவ்ய மந்திரங்களை மானசீகமாக சிந்தனை செய்வர் அல்லது இறை நினைவுடன் செய்வர். இப்பிராணாயாமத்தினால் மனம் வெளியுலகைவிட்டு சலனமின்றி இருக்கும். ஏனெனில் பிராணவாயுவிற்கும் மனதிற்கும் மிகவும் நெருங்கிய தொடர்புண்டு. மனக்கட்டுப்பாட்டினால் பிராணவாயு கட்டுப்பாடு, பிராணவாயு கட்டுப்பாட்டினால் மனக் கட்டுப்பாடு இவை நேரும். எனவே மனதின் சபலத்துவத்தைக் கட்டுபடுத்த சாதகன் முதலில் பிராணயாமத்தினைச் செய்தல் நல்லது. ஆயின் இதில் அனுபவம் உள்ளவர்களிடம் நன்கு பயிலல் வேண்டும். இத்தகைய பிராணாயாமமே இங்கு யக்ஞமாக கருதப்படுகிறது.

**30. அபரே நியதாஹாராஹ் ப்ராணான் ப்ராணேஷு ஜுஹ்வதி।**
**ஸர்வே அப்யேதே யக்ஞவிதோ யக்ஞ க்ஷபிதகல்மஷாஹா॥ (30)**

**சொற்பொருள்:**

அபரே - இன்னும் சிலர், நியதாஹாராஹா - ஆகார நியமத்தையுடையவராய், ப்ராணான் - பிராணன் முதலான வாயுக்களை, (அல்லது இந்திரியங்களை), ப்ராணேஷு - பிராணன்களிலேயே (வசீக்ருத இந்திரியங்களில்), ஜுஹ்வதி - ஹோமம் செய்கிறார்கள். ஏதே ஸர்வே அபி - இவர்களனைவரும் கூட, யக்ஞவிதஹ - யக்ஞத்தை அறிந்தவர்களே, யக்ஞக்ஷபிதகல்மஷாஹா - யக்ஞத்தினால் பாவம் நீங்கப் பெற்றவர்களாகிறார்கள்.

**கருத்துரை:**

இன்னும் சிலர் ஆகார நியமத்தில் கட்டுப்பாடுடைய வராய், பிராணன் முதலான வாயுக்களை பிராணவாயுவிலேயே ஹோமம் செய்கிறார்கள். (அல்லது இந்திரியங்களின் செயல்களை வசீக்ருதேந்திரியங்களில் இடுகின்றனர்) இவர்களும் யக்ஞத்தை அறிந்தவர்களாக, யக்ஞத்தினால் பாவம் நீங்கப் பெற்றவர்கள் ஆகிறார்கள்.

**விளக்கம்:**

ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா இச்சுலோகத்துடன் பலவித யக்ஞங்களின் வர்ணனையைப் பூர்த்தி செய்கிறார். மொத்தம் பன்னிரெண்டு சுலோகங்களில் யக்ஞங்களைப் பெயரிடுகிறார். அதில் கடைசியானது ஆகார நியமம். ஆகாரநியமம் யக்ஞமே என்கிறார். ஆகார நியமம் மிகவும் சாதாரண விஷயமாகச் சிலர் கருதக்கூடும். ஆயின் கீதாச்சார்யன் அதற்கு பகவத் கீதையில் தகுந்த நிலையைக் கொடுத்துள்ளார். பலவிடங்களிலும் அதனைக் குறிப்பிடுகிறார். அதனைச் சாமான்யமாகக் கருதாமல் மோக்ஷ சாதனையில் அதற்கும் முக்கியத்துவம் அளித்துள்ளார். ஏனெனில், ஆகாரத்தினால் தான் மனம் இயங்குகிறது. ஆகாரத்தின் தன்மையே சரீரத்தையும், சூக்ஷ்மமாக மனத்தையும் பாதிக்கிறது. ஆகாரத்தின் தூய்மையால் மனதும் சுத்தமாகிறது. ஆகாரம் சாத்வீகமாக இருந்தால் அச்சாத்வீக அணுக்களினால் மனதும் சாத்வீகமடைகிறது. ரஜோ குணத்தை உண்டாக்கக் கூடிய மாமிச ஆகாரங்களை உண்ணும் மனிதர்களிடத்தும், விலங்குகளிடத்தும் குரூரத்தன்மை வெளிப்படையாகத் தெரிகின்றதல்லவா?

பெரிய தொழிற்சாலையில் ஒரு சின்ன ஆயுதமோ அல்லது செய்பொருளோ சரியாக இல்லாவிடில், அந்தத் தொழிற்சாலையே எவ்வாறு ஆகிப் போகுமோ, இரயில் ·ண்டி ஓடும் தண்டவாளத்தில் ஒரு சின்ன ஆணி விலகினால் _ எவ்வாறு இரயிலுக்கு கோர விபத்து நேரிடுமோ, அவ்வாறே ஆகார நியமத்தில் ஒரு சின்ன விஷயம் சரியாக இல்லாவிடினும் மோக்ஷத்திற்காக செய்யும் சாதனை முயற்சிகள் அனைத்தும் வீணாகிப் போகும். ஆகாரம் தூய்மையாக இருப்பின் மனதும் தூய்மையாக இருக்கும். மனம் தூய்மையாக இருந்தால்தான் மோக்ஷம் சித்திக்கும். எனவே ஆகார விஷயத்தை பகவான் இங்கு ஒரு யக்ஞமாக விவரிக்கிறார். ஆகாரமே பலவிதமாக இருக்கும் - (1) மிதம் (2) சாத்வீகமாகவும் (3) நியாயார்ஜிதமாகவும் (4) பகவத்

அர்ப்பிதமாகவும் (5) நியமிக்கப்பட்ட காலத்திலும் இருத்தல் வேண்டும். இவ்வைந்து விதமான தூய்மை ஆகார விஷயத்தில் கவனத்தில் கொள்ள வேண்டும்.

இவ்வாறாக, இதுவரை அநேக மோக்ஷ சாதனைகளைக் குறித்து பகவான் இங்கு தெரிவித்தார். அச்சாதனைகளனைத் திற்கும் 'யக்ஞங்கள்' என்று புனிதமான நாமகரணம் செய்வித்தார். யக்ஞம் என்றால் அசாத்தியமான கர்மா செய்யவியலாத செயல் என்று பயப்படுவோர் அனைவருக்கும் அபயம் அளித்து உண்மையான யக்ஞ தத்துவம் என்றால் என்ன என்பதை விளக்கியுள்ளார். மேலும் பசு இம்சையுடன் கூடிய யக்ஞத்தைப்பற்றி தெரிவிக்கவில்லை. இங்கு மேற்கூறிய சாதனைகளை அறிந்தவரும், அவற்றை அனுஷ்டிப்பவரும் அனைவரும் யக்ஞத்தை அறிந்த அறிஞர்களே (யக்ஞ விதஹ) என்று பகவான் சொல்கிறார். அதாவது யக்ஞத்தை பற்றிய தத்துவத்தை (Science) அறிந்தவர்கள் என்பது பொருள்.

இந்த யக்ஞத்தினால் ஏற்படும் பலன் என்ன? அவற்றால் பாவம் நாசமடையும் (க்ஷபித கல்மிஷாஹா) பல பிறவிகளாகத் தொடரும் மனதிற்குப் பிடித்துள்ள பொறாமையெனும் பாசி விலகும். பாவம் விலகுவதற்கு யக்ஞ ரூபமான புண்ய ஆசாரங்களே அடைக்கலம். 'என் பாவம் எவ்வாறு விலகும்?' என்று பலரும் வினவுகின்றனர். அதற்கான உபாயத்தை பகவான் இங்கு தெரிவித்துள்ளார். யக்ஞம் எனப்படும் இப்புண்ய காரியங்களின் அனுஷ்டானமே பாவத்தைத் தொலைக்கும் வழி. பாவம் நசித்தால் அன்றி சுத்தியடையாது. சித்தம் சுத்தியடையாவிடின் ஆத்ம ஞானம் தோன்றாது. ஆத்மஞானம் ஏற்படாவிடில் மோக்ஷரூபமான சாந்தி கிடைப்பதில்லை. எனவே முதலில் பாவம் மறைந்து போகவேண்டும். அதற்கு இங்கு மேற்சொன்ன 12 யக்ஞங்களுடன் அனைத்தையுமோ அல்லது ஒன்றை மட்டுமாவது முமுக்ஷுக்கள் தவறாது பின்பற்றுதல் வேண்டும். பந்த முக்திக்கு வேறுவழி எதுவுமில்லை.

**வினா:**

யக்ஞங்களைச் செய்வதால் ஏற்படும் பலன் என்ன?

**விடை:**

பாவம் நசித்திப் போகும்.

**வினா:**

பாவம் நசிப்பதற்கான உபாயம் என்ன?

**விடை:**

யக்ஞங்களைப் பின்பற்றுதல், சத்கர்ம அனுஷ்டானம் ஆகியவை.

**முன்னுரை:**

யக்ஞங்களைச் செய்வதால் ஏற்படும் நற்பலனை. பின்பற்றாது இருப்பதால் ஏற்படும் துர்பலனையும் விவரிக்கிறார்.

**31. யக்ஞசிஷ்டாம்ருதபுஜோ யாந்தி ப்ரஹ்ம ஸநாதனம்।**
**நாயம் லோகோ அஸ்த்யயக்ஞஸ்ய குதோ அன்யஹ் குருஸத்தம॥**
**(31)**

**சொற்பொருள்:**

குருஸத்தம - குருவம்சத்தில் சிறந்தவனான அர்ஜுனா!, யக்ஞசிஷ்டாம்ருதபுஜஹ - (மேல் சொல்லப்பட்ட) யக்ஞங்களில் மிகுந்த அமிர்தரூபமான அன்னத்தைப் புசிப்பவர்கள், ஸநாதனம் - நிரந்தரமான, பிரம்ஹ - பிரம்மத்தை, யாந்தி - அடைகிறார்கள், அயக்ஞஸ்ய - இவ்யக்ஞங்களில் ஏதேனும் ஒன்றையாவது செய்யாதவனுக்கு, அயம் - இந்த, லோகஹ - உலகம், நாஸ்தி - இல்லை, அன்யஹ - பரலோகம், குதஹ - ஏது?

**கருத்துரை:**

குருவம்சத்தில் சிறந்தவனான அர்ஜுனனே! (மேற் சொன்ன) யக்ஞங்களைச் செய்து அதில் எஞ்சும் அமுதினை

உண்போர் அழியாப் பொருள் ஆகிய பிரம்மத்தை அடைகிறார்கள். யக்ஞம் செய்யாதவர்களுக்கு இவ்வுலகே இல்லையென்றால் பரலோகம் ஏது?

**விளக்கம்:**

இதுவரை பலவிதமான யக்ஞங்களைப் பற்றிக் கூறி இப்போது அவற்றின் மகத்துவத்தைக் கூறுகின்றார். மேற்சொன்ன யக்ஞங்களில் எல்லாவற்றையுமோ. சிலவற்றையோ, அல்லது ஒன்றைமட்டுமாவது செய்து, அல்லது ஏதோவொரு தெய்வகாரியமாவது. ஆன்மீக சாதனையாவது செய்து அதன்பின் உண்ணும் அன்னம் அமிர்தமாக மாறிப் போகும். அதனால்தான் அதனைப் புசிப்பவர், 'யாந்தி ப்ரஹ்ம ஸநாதனம்' - பிறப்பிறப்பு இல்லா நிலையான பிரம்மத்தை அடைவர் என்று இங்கு சொல்லப்பட்டது. இதற்கு முன் சுலோகத்தில் 'யக்ஞக்ஷபிதகல்மஷாஹா' - யக்ஞத்தினால் (தெய்வ காரியங்களால்) பாவம் நசித்துப் போகும் என்று சொல்லப்பட்டது, அதனால் சித்தம் தூய்மையடையும். சுத்தமான சித்தத்தில் உறையும் ஆத்மா ஒளிவிட்டுப் பிரகாசிக்கும். அதாவது சித்தம் ஆத்மாவில் லயிக்கையில் ஆத்மா மட்டுமே நிற்கும், அதுவே சநாதன பிரம்ம பதவி, ஆகவேதான் யக்ஞத்தில் மிகுந்ததைப் புசிப்பவர் பரபிரம்மத்தினை சேர்வர் எனப்பட்டது. ஆஹா! எத்தகைய அற்புதமான பலன்!

செயலின் மகிமை பலனின் சிறப்பில் அடங்கியுள்ளது. இங்கு யக்ஞம் என்னும் செயலின் பலன் சாக்ஷாத் பிரம்மமே ஆதலால் யக்ஞத்தின் மகிமை எத்தகையதென்பதை ஊகித்து அறிதல் இயலும். உலகில் எத்துணையோ துன்பப்பட்டால் சிறிதளவு செல்வமோ, இடமோ, புகழோ கிடைக்கிறது. ஆயின் அவை அழியக் கூடியவை. இச் சரீரத்துடன் அழியக்கூடியவை. ஆயின் பிரம்மமோ, சநாதனமானது. அமரத்வம் உடையது. ஒவ்வொருவரும் அடையக்கூடிய இறுதி நிலையும் அதுவே. அவ்வாறிருக்கையில் அதனை ஏன் இப்பிறவியிலேயே அடைதல் கூடாது? அதனை அடைவதற்கான வழியையும் பகவானே இங்கு காட்டியுள்ளார்

அல்லவா? அதாவது இறையுணர்வு, ஆன்மீக சாதனை, பிறருக்கு இதமளிக்கக்கூடியவற்றைச் செய்வது ஆகியவை. அத்தகைய யக்ஞங்களைப் பற்றியும் அதனை பலவித வகையில் இதற்கு முன்பே கூறப்பட்டது. அவற்றைப் பின்பற்றினால் போதும்.

அவ்வாறு ஏதோவொரு யக்ஞத்தையோ, நற்காரியங் களையோ ஆற்றாது உண்ணுதல் தகாது என்ற திடமான விரதம் மேற்கொள்ளுதல் வேண்டும். ஏனெனில் அத்தகைய நியமமே படிப்படியாக முக்திக்கு வழிகாட்டும். அத்தகைய யக்ஞத்தை ஆற்றாது உண்ணுபவன் பாவத்தை உண்பதற்கு ஒப்பாகும் என பகவான் இதற்கு முன்பே கூறியுள்ளார். அத்தகையோனுக்கு இவ்வுலகம் இல்லை, மேல் உலகும் இல்லை, பார்த்தீர்களா? யக்ஞம் செய்யாது, தெய்வ காரியம் செய்யாதவன் எத்தகைய அழிவை அடைகிறான்! மிகவும் உத்தமமான மனித இனத்தில் பிறந்தும், தெய்வ விசாரணை செய்யாது அழியக்கூடிய காட்சிப் பொருள்களையே பற்றித் திரிபவன் எத்தகைய விவேகமற்றவன்! எனவேதான் பகவான் இங்கு நற்காரியங்களில் ஈடுபடுதல் வேண்டும் என தீவிரமான எச்சரிக்கை விடுக்கிறார். - "ஜீவர்களே! உத்தமமான மனித பிறவியெடுத்தும். நற்காரியங்களில் ஈடுபடாது, ஆன்மீக சாதனை ஓரளவேனும் செய்யாது இருப்பின் உமக்கு இகலோக சுகம் கிடைப்பதில்லை. பரலோக சுகம் கிடைப்பது அதைவிட அரிது! எனவே பகவானின் வாக்கில் நம்பிக்கை வைத்து ஒவ்வொருவரும் இந்த யக்ஞங்களைத் தவறாது ஆற்றுதல் வேண்டும்.

"யக்ஞசிஷ்டாசினஹ" - 'யக்ஞத்தில் மிகுந்த அன்னத்தைப் புசிப்பவன்' என இங்கு சொல்லப்பட்டதல்லவா? பகவான் தெரிவித்த 'ஞானம்', இந்திரியக் கட்டுப்பாடு, தவம், பிராணாயாமம்' முதலான யக்ஞத்தில் அன்னம் என்பது எங்கிருந்து வரும்? எனவே இச் சொல்லிற்கு இங்கு இவ்வாறு பொருள் கொள்ளுதல் வேண்டும் - அதாவது, யக்ஞங்களைச் செய்த பின் உண்ணப்படும் ஆகாரம் அமிர்தம் போன்றதாகையால், அதனைப் புசிப்பவர் பாவத்தினின்றும்

விடுபட்டவர் ஆவர், அல்லது யக்ஞ ஆகாரத்தினால் ஏற்படும் அமிருத ரூபமான மனசாந்தி, சாத்வீக சுகத்தினை அவர்கள் அனுபவிப்பர் என்று பொருள் சொல்லக்கூடும்.

**வினா:**

பிரம்மம் எத்தகையது?

**விடை:**

நிரந்தரமானது, அழிவற்றது,

**வினா:**

அதனை எவர் அடைவர்?

**விடை:**

யக்ஞங்களையும் (நற்காரியங்களையும்) கடைப்பிடித்து அதில் மிகுந்த அன்னத்தைப் புசிப்பவர் அடைவர்.

**வினா:**

யக்ஞங்களைச் செய்யாதவர் எத்தகைய துர்கதியை அடைவர்?

**விடை:**

அவர்களுக்கு இவ்வுலக சுகமோ, பரலோக சுகமோ கிடைப்பதில்லை.

**32. ஏவம் பஹுவிதா யக்ஞா விததா ப்ரஹ்மணோ முகே|**
**கர்மஜான்வித்தி தான்ஸர்வானேவம் ஞாத்வா விமோக்ஷ்யஸே||**
**(32)**

**சொற்பொருள்:**

ஏவம் - இவ்வாறாக. பஹுவிதா - அநேகவிதமான, யக்ஞாஹா - யக்ஞங்களை, ப்ரம்மணோமுகே - வேதத்தில், விததாஹா - விவரமாக சொல்லப்பட்டிருக்கின்றன. தான்

ஸர்வான் - அவை அனைத்திலும், கர்மஜான் - கர்மத்தில் ஜனித்தவைகளென்று, வித்தி - அறிக, ஏவம் - இவ்வாறு, ஞாத்வா - அறிந்து, விமோக்ஷ்யஸே - விமுக்தி அடைவாய்.

**கருத்துரை:**

இவ்வாறாக பலவிதமான யக்ஞங்களைக் குறித்து விரிவாக வேதத்தில் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன. அவை அனைத்தும் கர்மத்தினால் ஜனித்தவை என்று அறிவாய். அவ்வாறு அறியின் நீ விமுக்தியடைவாய்.

**விளக்கம்:**

மேற்சொன்ன யக்ஞங்களைத் தவிர இன்னும் எத்துணையோ யக்ஞங்கள் வேதங்களில் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன என்று இங்கு தெரிவிக்கிறார். எனவே இங்கு குறிப்பிடப்பட்ட சில யக்ஞகங்களுடன் அதன் வரிசை முழுமையடைந்துவிட்டதாக எவரும் எண்ணிவிடக் கூடாது. வேதம் பரப்பிரம்மத்தினின்றும் தோன்றியதாதலால், 'பிரம்மத்தின் முகமாகக் கருதப்படுகின்றது.

"கர்மஜான்" - மனம், வாக்கு, இந்திரியங்கள் இவற்றின் முயற்சியால்தான் இந்த யக்ஞங்கள் ஆற்றப்படுகின்றன. இவை மனித முயற்சியினால் செய்யப்படுபவனவேயன்றி, சோம்பேறித் தனத்தினாலோ, வெறும் வாய்ப் பேச்சினாலோ அல்ல. ஆன்மீக வித்தை அனுபவத்தில் எழுந்த விஞ்ஞானமே (Practical Science). எனவே மக்கள் அவரவர் மனம், வாக்கு, காயம் இவற்றினால் முயற்சி செய்து இவ்வித்தையைச் சாதித்தல் வேண்டும். 'யக்ஞம், மோக்ஷம் இவை திடீரென நேர்வதில்லை, அவை கர்மாவினாலும், சுய முயற்சியினாலும் தான் சித்திக்கும் என்று பகவான் இங்கு சொல்கிறார்.

இந்த இரகசியத்தை அறிந்தால் நீ விமுக்தி அடையலாம்' என்ற வாக்கியத்தின் பொருள் - இவ்வாறாக தேக இந்திரியங்களின் செயலால். (முயற்சியால்தான்) யக்ஞங்களைச் சாதிக்க இயலும் என்றும், சோம்பேறித் தனத்தோடு இருந்தால்

இயலாதென்றும் அறிந்து உணர்பவன் தவறாது முயற்சியைத் தொடங்கி அந்த யக்ஞங்களை ஆற்றி அதன்வழி 'சநாதன பிரம்மத்தை அடைவான்' என்பதாகும்.

இங்கு 'கர்மஜான்' என்ற சொல்லின் பிரயோகத்தினால் பகவான் மெத்தனமாக இருத்தலைக் கண்டிக்கிறார். வெற்றுப் பேச்சைக் கண்டிக்கிறார்.

'விமோக்ஷ்யஸே' - 'மோக்ஷ்யஸே' எனாது விமோக்ஷ்யஸே என்றதால் யக்ஞங்களைச் செய்வதால் தவறாது விமுக்தன் ஆவான் என்று தெரிவிக்கப்பட்டது.

**வினா:**

இந்த யக்ஞங்களைப் பற்றி எங்கு கூறப்பட்டுள்ளது?

**விடை:**

வேதங்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

**வினா:**

அவை எதனால் சித்திக்கும்?

**விடை:**

தேக, இந்திரிய, மனத்தின் செயலால் அன்றி மெத்தனத்தி னால் அல்ல.

**வினா:**

இவ்வுண்மையை அறிவதால் பலன் என்ன?

**விடை:**

மனிதன் முயற்சியினால் யக்ஞங்கள் ஆற்றி அதனால் தவறாது விமுக்தனாவான்.

**வினா:**

இதுவரை சொல்லப்பட்ட, யக்ஞங்கள் அனைத்தையும் சேர்த்தால் மொத்தம் எத்தனை? அவை யாவை?

**விடை:**

மொத்தம் பன்னிரெண்டு, அவையாவன:

சுலோகம்-25
1. தெய்வ யக்ஞம்
2. பிரம்ம யக்ஞம்

சுலோகம்-26
3. இந்திரிய சம்யம யக்ஞம்
4. சப்தாதி விஷயங்களை ஒதுக்கும் யக்ஞம்

சுலோகம்-27
5. மனக்கட்டுப்பாடு

சுலோகம்-28
6. திரவிய யக்ஞம்
7. தபோ யக்ஞம்
8. யோக யக்ஞம்
9. ஸ்வாத்யாய யக்ஞம்
10. ஞான யக்ஞம்

சுலோகம்-29
11. பிராணாயாம யக்ஞம்

சுலோகம்-30
12. ஆகாரநியம யக்ஞம்

இந்த யக்ஞ விஷயங்களனைத்தும் ஜீவனின் பாவத்தினை யகற்றி, சித்த சுத்தியை ஏற்படுத்தி. அதனால் மோக்ஷத்தை அடையச் செய்கிறது. எனவே முமுக்ஷுக்கள் அனைவரும் இதனை நன்கு பின்பற்றுமாறு பகவான் தெரிவிக்கிறார்.

**முன்னுரை:**

யக்ஞங்களில் எது சிறந்தது எனக் கூறுகிறார்.

**33. ச்ரேயான்த்ரவ்யமயாத் யக்ஞாஜ்ஞானயக்ஞஃ பரந்தப|**
**ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஞானே பரிஸமாப்யதே|| (33)**

**சொற்பொருள்:**

பரந்தப - அர்ஜுனா! த்ரவ்யமயாத் - திரவியமயமான, யக்ஞாத் - யக்ஞத்தைவிட, ஞானயக்ஞஹ - ஞானயக்ஞம், ச்ரேயான் - சிறந்தது, பார்த்த - ஓ அர்ஜுனா!, ஸர்வம் கர்ம - கர்மம் எல்லாம், அகிலம் (சத்) - அழியாதவையாக (பலனுடன்) ஞானே - ஞானத்தில், பரிஸமாப்யதே - முற்றுப் பெறுகிறது, முடிவடைகிறது அல்லது மறைந்துவிடுகின்றது).

**கருத்துரை:**

ஓ அர்ஜுனா! திரவியத்தால் சாதிக்கப்படும் யக்ஞத்தைவிட ஞான யக்ஞம் சிறந்தது, ஏனெனில் எல்லா கர்மங்களும் அழிவற்ற (பலனோடு கூடிய) ஞானத்தில்தான் முற்றுப் பெறுகின்றது. (மறைகிறது).

**விளக்கம்:**

ஞானயக்ஞமென்றால் தத்வ விசாரணை, தத்வப் பொருளைச் சோதித்தறிதல், ஆத்மா அநாத்மா விவேகம், சிரவணம், மனனம் முதலான தியானங்கள், இந்திரிய மனக் கட்டுப்பாடு, வாசனைகள் ஒழித்தல் முதலானவை, திரவிய யக்ஞமென்றால் தன, தான்ய வஸ்துக்களுடன் செய்யப்படும் நற்காரியங்கள் முதலானவை. திரவிய யக்ஞத்தைவிட ஞான யக்ஞம் சிறந்ததாக இங்கு சொல்லப்பட்டது. ஏனெனில் ஒவ்வொரு ஜீவியின் இறுதி இலட்சியம் மறந்து விட்டாலும் தனது உண்மையான உருவை நினைவிற்குக் கொணர்தலேயாகும். அதாவது ஆத்ம ஞானம் பெறுதல். ஏனைய சாதனைகள் அனைத்தும், பரமார்த்த கர்மங்கள் அனைத்தும் இறுதியில் ஞானரூப இலக்கையே அடையச் செய்யும். அவற்றின் பலன்கள் அனைத்தும் ஞானத்தின் பலனான பிரம்மானந்தத்திலேயே அடங்கியுள்ளது. எனவேதான் ஞானயக்ஞம் இதர யக்ஞங்களைவிட, ஏனைய பரமார்த்த கர்மாக்களைவிட மிகச் சிறந்தது எனப்பட்டது.

ஞானமே எல்லா கர்மங்களின் இறுதிநிலை. ஆயின் பிற சாதனைகள், கர்மங்கள் முதலானவை வீணல்ல. அவை ஜீவனுக்கு சித்த சுத்தியை ஏற்படுத்தி, ஞானத்தை அடைவதற்கு

வழி காட்டுகிறது. கர்மமனைத்தும் ஜீவனின் ஞானத்தில் சேர்ந்து இறுதியில் நதி கடலில் கலந்து லயிப்பதுபோல ஞானத்தில் லயித்துவிடும். 'ஞானே பரிஸமாப்யதே' என்ற வாக்கியத்தின் பொருள் இதுவே. இதனை வைத்துப் பார்த்தால் கடலில் நதி மறைந்திருப்பதைப் போல ஞானத்தில் எல்லாக் கர்மங்களும், கர்மபலன்களும் அடங்கியே உள்ளன. ஆயின் அவை நசித்துப் போவதில்லை. நற்காரியங்கள் செய்யின் அவை ஒருபோதும் வீணாவதில்லை. எனவே தான் கர்மா 'அகிலம்' (ஸத்) – அழிவற்றதாகி, சிறந்து, பலனோடு கூடி ஞானத்தில் முற்றுப் பெறுகிறது.

எனவே ஒவ்வொருவரும் ஞானத்தைப் பெறுதல் எனும் இலக்குடன், அதனை அடைவதற்கான காரியங்களைச் செய்து வருதல் வேண்டும். எந்தச் சாதனையையாயினும், எவ்வழியை யாயினும், எம்முறையையாயினும் பின்பற்றினாலும் ஞானோதயமே இறுதிநிலை. ஒவ்வொருவரும் அஞ் ஞான நிலையை எய்திய பின்தான் மோக்ஷத்தை அடைய முடியும். இச்சுலோகத்தில் கர்ம சாதனையால் ஞானம் சாத்தியமாகும் என நிரூபிக்கப்பட்டது. கர்மா ஞானம் அடையும் வரை ஒரு ஜீவனை இட்டுச் செல்லும். அதன் பின்னர் ஞானமே அவனை மோக்ஷத்தில் சேர்க்கும். எனவே ஞானம் என்பது திடீரெனத் தோன்றும் பொருளல்ல, பரமார்த்த கர்மங்களைச் செய்து வரவர சித்த சுத்தி ஏற்பட்டு, ஞானம் உண்டாகும் என்பது தெளிவாகிறது. நிரந்தர தெய்வ சிந்தனை, நற்காரியங்களைச் செய்துவருதல், பகவத் ஆராதனை இவற்றால் பகவான் கருணை செய்து ஜீவனுக்கு ஞானத்தை அருளுவார். அதனால் அவன் முக்தி பெறுவான். ஞானத்தை இலக்காக வைத்துக் கொண்டு, அதற்கான கர்மாக்களைச் செய்து வருதல் வேண்டும். ஒருவேளை ஞானத்தைப் பெற்றுவிட்டால் கூட சில ஞானியர் உலக நன்மை கருதி கர்மாக்களைச் செய்து வருவர். இதில் ஞானத்தின் சிறப்பு, கர்மாவைச் செய்வதின் அவசியம் இரண்டும் இங்கு கூறப்பட்டது.

'ஸர்வம்' என்ற பதம் எல்லாக் கர்மங்கள், சாதனைகள், இதற்கு முன் சொல்லப்பட்ட யக்ஞங்கள் அனைத்தையும் குறிக்கும்.

**வினா.**

யக்ஞங்களனைத்திலும் எது சிறந்தது?

**விடை:**

ஞானயக்ஞம்.

**வினா:**

அப்படியெனின் ஏனைய யக்ஞங்கள், கர்மங்கள் இவை வீணானவையா?

**விடை:**

ஆகாது. அவை ஞானத்தை ஏற்படுத்தி, ஞானத்திலேயே அடங்கிவிடும், பின்னர் ஞானம் மோக்ஷத்திலே சேர்க்கும்.

**முன்னுரை:**

ஞானத்தை அடைவதற்கான வழி கூறப்படுகிறது.

**34. தத்வித்தி ப்ரணிபாதேன பரிப்ரச்னேன ஸேவயா|**
**உபதே க்ஷ்யந்தி தே ஞானம் ஞானினஸ் தத்வதர்சினஹ|| (34)**

**சொற்பொருள்:**

தத்ஞானம் - அத்தகைய ஞானத்தை, ப்ரணிபாதேன - சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தும், பரிப்ரச்னேன - சமயமறிந்து வினயத்துடன் கேட்டறிந்தும், சேவயா - சேவைசெய்தும், வித்தி - அறிக, தத்வதர்சனஹ - தத்துவம் அறிந்தவர்களான (பிரம்மானுபவம் அடைந்தவர்களான) ஞானினஹ - ஞானிகள், தே - உனக்கு உபதேக்ஷ்யந்தி உபதேசிப்பார்கள்.

**கருத்துரை:**

(ஓ அர்ஜுனா!) அத்தகைய ஞானத்தை நீ தத்துவ ஞானிகளிடம், சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து, சமயமறிந்து

*வினயத்துடன் கேட்டும், சேவைசெய்தும், அவர்களின் உதவியால் அறிவாய். அவர்கள் உனக்குத் தவறாது உபதேசிப்பர்.*

**விளக்கம்:**

*ஞானம் சிறந்தது என முன் சுலோகத்தில் சொல்லப்பட்டது. அத்தகைய ஞானத்தைப் பெறுவதெங்ஙனம் என இங்கு விளக்கப்படுகிறது.*

*"தத்வதர்சனஹ" - தத்துவ அறிஞர்களான ஞானிகளிடமிருந்து அஞ் ஞானத்தைப் பெற முடியாது. "தத்வதர்சனஹ" என்பதால் வெறும் வரட்டு வேதாந்திகளால் இயலாது என்பதும், பரமாத்ம தத்துவத்தை நேரில் உணர்ந்தவரால், (அனுபவித்தறிந்தவரால்) தான் இயலும் என்பதும் தெளிவாகிறது. வேதாந்தத்தைப் போதிப்பவர், சாஸ்திரஞானம் உடையவர் உலகில் பலர் இருக்கக்கூடும். ஆயின் நேரில் பரமாத்மாவை அனுபவித்து அத் தத்துவத்தைப் போதிப்பவர் மிகச் சிலரே. அத்தகைய அனுபவ ஞானிகளின் வாக்கிற்கே உலகில் மதிப்பு இருக்கும். அவர்களது சிறிய முயற்சியினாலோ, அல்லது அத்தகையோரை கண்ணா காண்பதனாலோ அத்தகைய அனுபூதியை நாமும் அடையக்கூடும் என்பது தெளிவாகிறது. ஆயின் பசு, சுவர் முதலான வஸ்துக்களைப் போல அவர் வேறாகத் தெரிவதில்லை. தன் சுயரூபத்திலேயே அவர் புலப்படுவார். ('தத்வதர்சனஹ' என்ற இச் சொல்லினால் முமுக்ஷுக்களுக்கு ஆத்ம தத்துவத்தைக் குறித்து தைரியம் ஏற்படுகின்றது. ஏனெனில் ஆன்மாவை முயற்சி செய்தால் ஒவ்வொருவரும் தரிசிக்க இயலும் என்பது இச் சொல்லால் நமக்கு விளங்குகிறது) தத்வ தரிசனம் பெற்ற அத்தகைய ஞானியர் மக்களுக்கு ஞானத்தை போதிப்பர். அப்படியாயின் அனைவருக்கும் போதிப்பரா? அல்ல, மூன்று விதிகளை மதித்து பின்பற்றுபவர்க்கு மாத்திரமே போதிப்பர்.*

***அவைவெவைவெனின்—***

*(1) "ப்ரணிபாதேன" - (பாதம் - படுதல், நிபாதம் - நன்றாகப் படுதல், ப்ரணிபாதம் - முழுவதுமாக நன்கு*

நமஸ்கரித்துப்படுதல்) சாதகன் மகாத்மாவான ஞானியரிடத்து பக்தியுடன், வினயத்துடனும், பணிவுடனும் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தல் வேண்டும். தனது கர்வம், அஹங்காரம், ஆடம்பரம். அங்கேயே முழுவதும் விட்டுவிடுதல் வேண்டும். அகங்காரமின்றி, கர்வமின்றி, தானே சிறந்தவன் என்ற எண்ணமின்றி இருத்தல் வேண்டும். ஏனெனில், தேகாபிமானம் மனத்தில் இருக்கும்வரை குருவின் போதனை மனத்தில் ஏறாது (அழுக்குத் துணியில் சாயம் ஏறாததைப் போல). சாஷ்டாங்க நமஸ்காரத்தால் பற்று மறையும். சாதகனுக்கு பற்றின்மை என்பது முதல் தேவையாகும். நின்றபடியோ, குனிந்தோ நமஸ்கரித்தால் போதாதா? போதாது. அஷ்டாங்கங்களும் பூமியின் மீது படியும்படி சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தே ஆக வேண்டும். இதன் உட்பொருள் என்ன? இது ஒரு பெரிய சாதனை. இதனால் உடலின் மீதுள்ள அகங்காரம் தொலையும். உண்மையில் மகனீயர்கள் தம்மை அனைவரும் வணங்குதல் வேண்டும் என ஒருபோதும் ஆசைப்படார். ஆயின் சாதகர்களிடம் பணிவு. மரியாதை இருக்கிறதா இல்லையா என்பதை இத்தகைய கிரியைகளினால் பரீட்சை செய்து. அதன் பின்னரே உபதேசிப்பர்.

உலகில் மனிதன் எத்தகைய உயர்ந்தவன் ஆயினும், அதிகாரம் பொருந்தியவராயினும், அரசன் ஆயினும் இறைவனின் எதிரில், குருவின் எதிரில், மகனீயர்களான தத்துவ அறிஞர்களின் எதிரில் அவனது அதிகாரம் செல்லாது. இறைவனின் பார்வையில் உலக நடைமுறையின் அதிகாரத்திற்கு மதிப்பு ஏதுமில்லை. உடல் பலமுடையவர் ஆயினும் ஆன்மீக பலமுடையவர் எதிரில் தலைவணங்க வேண்டியதே. பிரம்ம பலமே உண்மையான பலம். விசுவாமித்திரர். நல்ல தேக பலம் உடையவராயினும், (திக் பலம், க்ஷத்திரிய பலம், பிரம்மதேஜோ பலம் என்று சொல்லி வசிஷ்ட மகரிஷியின் முன் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து பிரம்மரிஷி என்று அவரால் போற்றப்பட்டமை அனைவரும் அறிந்ததே! எனவேதான் முன் காலத்தில், இக்காலத்தும் கூட அரசர்கள், தனவந்தர்கள் ஆகியோர் எங்கோ தனிமையில்

கோவணம் அணிந்த ஞானியரிடம் கைகட்டி நின்று, சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து உபதேசத்தைப் பெறுகின்றனர். ஒருவேளை கர்வத்துடன் சென்றால், நமது தேகாபிமானம், அகங்காரத்தை கண்டு உபதேசிக்காவிடில் நஷ்டமடைவது எவர்? எனவேதான் எல்லா மதத்தினரும் கோயில்களில், பெரியோர்களின் முன் காலணி, தலைப்பாகை இவற்றை நீக்கிவிடுவர்.

(2) "பரிப்ரச்னேன" - மேற்சொல்லப்பட்ட விதத்தில் பெரியோர்களுக்கு சாஷ்டாங்கமாக வந்தனம் செய்து பின் தன் சந்தேகங்களைப் பணிவுடன், காலம் பார்த்து கேட்கவேண்டும். ஆகவேதான் 'பிரச்ன" என்று சொல்லாமல், 'பரிப்ரச்னேன' என்றார். இனிய சொற்களுடன் பக்தியுடன் கேட்டறிதல் வேண்டும் என்பது பொருள்.

(3) ''சேவயா" - இனி மூன்றாவது சேவை, பெரியோர்களுக்கு சேவை செய்து அவர்களின் அனுகிரகத்தை பெறுதல் வேண்டும், குருசேவையினால் குருவின் இதயத்தில் இடம் பெறுதல் வேண்டும். அவரின் அனுகிரகம், அவரது அருள் இல்லாவிடின் ஆன்மீக அரங்கில் சாதகன் ஒரு அடிகூட முன்வைத்தல் இயலாது. ஆகவேதான் குருசேவை, தெய்வ சேவை மிகவும் அவசியமென்று சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளது. மாயையைத் தாண்டுதல் வேண்டுமாயினும் அல்லது அதனை வெல்லுதல் வேண்டுமாயினும் மகான்களை சரணடைதல் வேண்டும். குருவின் சேவையால் பெரிய பலன் உண்டு.

இவ்விதமாக (1) சாஷ்டாங்க நமஸ்காரம் (2) ஐயங்களைக் கேட்டறிதல் (3) சேவை - என்ற மூன்றையும் அனுசரிப்பின் மகனீயர்களின் அருள் பார்வையின் மகிமையால் உபதேசம் பெறுவர் என்று இங்கு கூறப்பட்டது. சிஷ்யன் தான் செய்யவேண்டியதை முறையாகச் செய்தால் குரு தான் சொல்லவேண்டிய முறையில் சொல்வார். சிஷ்யன் தன் கடமையைச் சரிவரச் செய்யாவிடின் குருவிடமிருந்து எந்நாளும் உபதேசம் பெறுதல் என்பது இயலாது.

குரு எதை உபதேசிப்பார்? ஞானத்தை. அஞ்ஞானத்தில் ஆழ்ந்திருப்பவர்க்கு இதைவிட வேறென்ன வேண்டும்? எது நிலையானதோ அதனையே அவர்கள் உபதேசிப்பர்.

ஆன்மீக வழியில் முன்னேறுவதற்கு குருவின் உதவி மிகவும் தேவை என்பதை இச் சுலோகம் வெளிப்படுத்துகின்றது. மேலும் குருவின் சந்நிதியில் சிஷ்யன் எவ்வாறிருக்க வேண்டும் என்பது இங்கு தெரிவிக்கப்பட்டது. இதனை முமுக்ஷுக்கள் நன்கு கவனத்தில் கொள்ளவேண்டும்.

ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா தான் அர்ஜுனனுக்கு ஆத்ம ஞானத்தை உபதேசிப்பினும் ஏன் மறுபடியும் தத்வஞானிகளிடம் சென்று அறியுமாறு சொல்கிறார்? (1) தான் உபதேசித்த ஞானம் நன்கு திடமாக மனத்தில் பதிய வேண்டுமென்பதற்காக, மகனீயர்களிடம் சென்று அறிக என்கிறார். (2) அல்லது குருசிஷ்ய முகமாக அறியும் சாதாரண முறையை உலகிற்குத் தெரிவிப்பதற்காக அங்ஙனம் சொல்லியிருக்கக்கூடும்.

**வினா:**

ஞானம் எவரால் கிடைக்கக்கூடும்?

**விடை:**

அனுபவம் பெற்ற தத்வ அறிஞர்களிடம் கிடைக்கும்.

**வினா:**

அத்தகைய சத்குருவினிடம் முமுக்ஷுக்கள் எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும்?

**விடை:**

(1) சாஷ்டாங்க வந்தனம் செய்தல் வேண்டும் (2) பணிவுடன் காலம் பார்த்து வினவி அறிதல் வேண்டும் (3) சேவை செய்தல் வேண்டும்.

**முன்னுரை:**

அத்தகைய ஞானத்தைப் பெறுவதால் ஏற்படும் நன்மையைப் பற்றிக் கூறுகிறார்.

**35. யக்ஞாத்வா ந புனர்மோஹமேவம் யாஸ்யஸி பாண்டவ|**
**யேன பூதான்யசேஷேண த்ரக்ஷ்யஸ்யாத்மன்யதோ மயி|| (35)**

**சொற்பொருள்:**

பாண்டவ! - அர்ஜுனா! யத் - எதனை (எந்த ஞானத்தை) ஞாத்வா - அறிந்து, புனஹ - மறுபடியும், ஏவம் - இத்தகைய, மோஹம் - மோஹத்தை (அஞ்ஞானத்தை), ந யாஸ்யஸி - அடையமாட்டாயோ, யேன - எதனால், பூதானி அசேஷேண - எல்லா பிராணிகளையும், ஆத்மனி - உன்னிடத்தில், அதோ - அப்படியே, மயி - என்னிடத்தில், த்ரக்ஷ்யஸி - பார்ப்பாயோ, (தத் - அத்தகைய, ஞானம், ஞானத்தை, வித்தி - அறிவாய்).

**கருத்துரை:**

ஏ அர்ஜுனா! எதனை அறியின் மறுபடியும் இத்தகைய மோஹத்தை நீ அடையமாட்டாயோ; மேலும் எதனால் எல்லா பிராணி கோடிகளையும் உன்னிலும், என்னிடத்திலும் காண்பாயோ அத்தகைய ஞானத்தை தத்வ அறிஞர்களிடத்தே அறிந்து கொள்வாய்.

**விளக்கம்:**

ஞானம் அடைவதால் இரண்டு பலன்கள் நேரும். (1) அதுவரை இருந்து வந்த மோஹம் (அஞ்ஞானம்) தொலையும். (2) எல்லா பிராணிகோடிகளையும் தன்னுள்ளும், பகவானிடத்தும் காணக்கூடும். இவை இரண்டையும் பற்றி சிறிது விளக்கமாக அறிவோம்.

(1) கண்கள் இருப்பதன் அடையாளம் கீழே விழுந்துவிடாமல் இருப்பதே, எவராவது கீழே விழுந்துவிட்டால் அவனுக்கு கண்ணில்லை என்று அர்த்தம்.

அவ்வாறே ஞானத்தை பெற்றதன் அடையாளம் மறுபடியும் முன்போலவே மோஹத்தை அடையாதிருப்பதேயாகும். ஆத்மாவொன்றே சத்யம், ஏனையவையனைத்தும் அழியக்கூடியவை என்பதே அத்தகைய ஞானம். அத்தகைய ஞானமுடையவன் மறுபடியும் காட்சிப் பொருட்களைக் குறித்து எதற்கு சோகமோ, மோஹமோ, துக்கமோ அடைகிறான்?

**'யஸ்மின் ஸர்வாணி பூதான்யா தைத்மவா பூத்விஜானதஹ!**
**தத்ர கோ மோஹஹ் கஹ்சோக ஏகத்வமனுபச்யதஹ!!**
**(ஈசாவாசோ உபநிஷத்)**

மாங்காய் பச்சையாக இருக்கும் போது துவர்ப்பாகவும், புளிப்பாகவும் இருக்கும். பக்குவமாக பழுத்தவுடன் எந்த பக்கம் ருசித்தாலும் இனிப்பாகவே இருக்கும். முன்னிருந்த புளிப்பு, துவர்ப்பு துளியும் இருப்பதில்லை. ஒரு வேளை சிறிது இருந்தாலும் அது இன்னும் சரியான பக்குவமடையவில்லை என்று அர்த்தம். அவ்வாறே இதுவரை அர்ஜுனன் பந்துக்கள் முதலானவரைக் கண்டு 'இவர்கள் என்னவர்' இவரோடு எவ்வாறு போரிடுவேன்? என்று மோஹத்தில் வீழ்ந்திருந்தான். ஞான பிராப்தியடைந்தபின் அத்தகைய மோஹத்தை அடைதல் கூடாது என்று பகவான் அர்ஜுனனுக்கு போதிக்கிறார்.

மக்களில் சிலர் தமக்கு ஞானம் வந்து விட்டதாகக் கூறிக் கொண்டாலும், அவர்களது அனுஷ்டானத்தில் விஷயங்களின் மீதான பிரவிருத்தி, முதலான குறைகளைக் காணலாகும். அத்தகையோர் இன்னும் ஞானத்தை அடையவில்லை என்றே பகவான் வாக்களித்துள்ளமையால் தெரிகின்றது. மறுபடியும், மோஹமடைதல், விஷயங்களின் மீதான ஆசை ஏற்படாதிருத்தல் இவையே ஞானம் அடைந்ததற்கான அடையாளம். பகவானின் இவ்வாக்கியத்தால் நடைமுறையில் எதனையும் பின்பற்றாத வெறும் வறட்டு வேதாந்திகளுக்கு இது சரியான அடி. எனவே அவர்கள் தமது நடைமுறை வழியை மாற்றிக் கொண்டு உலகிற்கு உதாரணமாகத் திகழ வேண்டும். சாதகன் ஒவ்வொரு சாதனையையும் அனுஷ்டித்து

வந்து, அவற்றை நன்றாகப் பின்பற்றியுள்ளோமா என்பதை தனக்குத் தானே பரிசீலித்துக் கொண்டு காமம் முழுவதும் தொலைந்ததா.? குரோதம் மறைந்ததா? பொறாமை குறைந்ததா? தெய்வ குணம் நிறைந்ததா என்பதை அவ்வப்போது ஆத்ம பரிசீலனை செய்து கொள்ளுதல் வேண்டும். உள் மனத்தில் மறைந்திருக்கும் வாசனைகளைத் தேடி அறிந்து அவற்றை வெளியே களைந்தெறிதல் வேண்டும். ஆத்ம ஞானம் அடைந்துவிட்டால். இத்தகைய காமம் முதலான துர்க்குணங்கள் நெருங்குவதற்கான வழியே இல்லை.

(2) இனி இரண்டாவது விஷயம் - ஞானம் அடைந்தவர் எல்லாப் பிராணி கோடிகளையும் தன்னிடத்தேயும், பரமாத்மாவிடத்தேயும் காண்பர் என்ற விஷயம். இந்த பிரம்மாண்டம் அனைத்தும். சராசரமனைத்தும் ஆன்மாவினால் ஏற்படுகின்றது. பாம்பு எங்கிருக்கிறது? கனவு எங்கிருக்கிறது? விழித்திருப்பவனிடத்தேதான் உள்ளது. மறைந்திருப்பது உள்ளதில் அடங்கியிருக்கிறது. எனவே அதிஷ்டானமான ஆன்மஸ்வரூபத்தை அனுபவித்த ஞானி மறையக்கூடிய இந்த உலகமனைத்தையுமே தன்னிடத்தேயே காண்பான். அல்லது, இதனையே இன்னுமொரு விதமாக ஆலோசித்தாலும், இந்த பிரம்மாண்டமனைத்தும் மனத்தின் கற்பனையே யாகும். அம்மனமானது ஆன்மாவில் (மறைந்து) நிலைத்துள்ளது. எனவே இவ்வுலகம், பிராணிகோடிகளனைத் தையும் ஞானியால் ஆன்மாவில் காணமுடியும் என்று இங்கு தெரிவிக்கப்பட்டது.

'அதோமயி' என்றதால் தன்னிடமும், பகவானிடமும் எல்லாப் பூதங்களையும் காணவல்லவன் என்று பொருள். ஆயின் பகவான் தன்னிலும் வேறானவன் என்பது பொருள் அல்ல. ஞானம் எப்போது ஏற்படுகிறதோ அப்போது தானே தெய்வமாகிறான் (ஞானீத்வாத்மைவ மேமதம்) எனவே தன்னில், தெய்வம். இவ்வுலகமனைத்தையும் காண்கில், அப்போது பகவானிலும் காண்பதாகத் தானே பொருள். ஆயின் இந்நிலை அஞ்ஞானம் இருக்கையில் ஏற்படுவதில்லை ஞானமேற்பட்டு தெய்வ சிந்தனையுடன் இருக்கையில் இது

சித்திக்கும். அதன்பின் குரு, சிஷ்யன், பகவான், பக்தன் ஆகிய இவர்களுக்கிடையே எவ்வித பேதமும் இன்றி ஏகத்வம் (ஒருமை) ஏற்படும்.

இங்கு அர்ஜுனன் = X - ஸ்ரீ கிருஷ்ணர் = Y அனைத்து பிராணிகோடிகள் = Z என்று வைத்துக் கொண்டால் -

'த்ரக்ஷ்யஸ்யாத் மன்யதோமயி' - என்ற வாக்கியத்தின் மூலம், ஆத்மனி - தன்னில் (அர்ஜுனனிடத்து) எல்லாப் பிராணிகோடிகளையும் காண இயலும் எனவே, X = Z ஆகின்றது. அவ்வாறே, மயி - ஸ்ரீ கிருஷ்ணரிடம் எல்லாப் பிராணிகளையும் காண்பான். எனவே Y = Z ஆகும்.

எனவே,

X = Y (அர்ஜுனன் - எல்லா பிராணிகோடிகள்)

Y = Z (ஸ்ரீ கிருஷ்ணர் - எல்லா பிராணிகோடிகள்)

ஆதலால், X = Y (அர்ஜுனன் — கிருஷ்ணர்)

என்பது தெளிவாகிறது.

எல்லாப் பிராணிகோடிகளும் இரண்டு பொருள்களில் வேறுவேறாக இருப்பது இயலாது. எனவே கணித சாஸ்திரப் பார்வையில் (Mathematical) பார்த்தால் இரண்டும் ஒன்றேயாகிறது. எனவே ஞானமடைந்தபின் ஜீவன் கிருஷ்ண பரமாத்மாவேயாகிறான் என்பது பொருள்.

இதனை வைத்துப் பார்க்கையில், ஞானம் எத்தகைய மகோன்னதமானது என்பது தெளிவாகிறது. உலகில் எத்துணையோ துன்பப்பட்டால் சிறிது பொருள், இடம், அதிகாரம் இவை கிடைக்கிறது. ஆயின் சிறிதளவு முயற்சியால், சாதனையால், இந்திரியக் கட்டுப்பாட்டினால், ஆன்ம விசாரணையால், பக்தியினால், பிரம்மாண்டம் அனைத்தையும் அடையக்கூடும். சாக்ஷாத் இறைவனே தானாகிறான். எத்தகையயொரு பதவி! எனவே ஸ்ரீ கிருஷ்ணரின் இவ்வாக்கியத்தில் முழு நம்பிக்கைவைத்து அத்தகைய மகோன்னத பதவியை அடைவதற்கு மகனீயர்களைச் சேவித்து கேட்டறிந்து ஆன்ம ஞானத்தைப் பெறுதல் வேண்டும்.

**வினா:**

ஞானத்தைப் பெறுவதால் பலன் என்ன?

**விடை:**

(1) மறுபடியும் ஜீவன் மோஹத்தில் (அஞ்ஞானத்தில்) வீழ்வதில்லை. (2) அதன்பின் எல்லா பிராணிகோடிகளையும் தன்னிடத்தேயும், பகவானிடத்தும் காண்கிறான்.

**முன்னுரை:**

ஞானத்தின் மேன்மையைப் பற்றி மேலும் கூறுகிறார்.

**36. அபி சேதஸி பாபேப்யஹ ஸர்வேப்யஹ பாபக்ருத்தமஹ|
ஸர்வம் ஞானப்லவேனைவ வ்ருஜினம் ஸந்தரிஷ்யஸி|| (36)**

**சொற்பொருள்:**

ஸர்வேப்யஹ, பாபேப்யஹ - பாபிகள் அனைவரையும் விட, (த்வம் - நீ) பாப க்ருத்தமஹ - அதிக பாபம் செய்தவன், அஸிசேத் அபி - ஆயினும் ஸர்வம் - எல்லாவிதமான, வ்ருஜினம் - பாவங்களையும், ஞானப்லவேன ஏவ - ஞானமெனும் தெப்பத்தாலேயே, ஸந்தரிஷ்யஸி - சுலபமாகக் கடக்கக்கடவாய்,

**கருத்துரை:**

(ஒருவேளை) பாபிகளனைவரையும் விட மிகுந்த பாவம் செய்தவனாயினும், எல்லாப் பாவங்களும் சேர்ந்தக் கடலை ஞானமெனும் தெப்பத்தாலேயே சுலபமாக கடப்பாய்.

**விளக்கம்:**

மகாபாவியாயினும் ஞானத்தால் பாவம் தொலைந்து போய் தன்யனாவான் எனப்பட்டது, ஞானத்தின் உன்னதமான சக்தி இதனால் வெளியாகின்றது. சிறிதளவான பாவம் மட்டுமல்ல, மலையளவு பாவம் புரிந்தாலும் அவற்றை எரித்து

சாம்பலாக்கக்கூடிய சக்தி ஞானத்திற்குண்டு. எனவேதான் பகவான் இங்கு உலகில் உள்ள பாவாத்மாக்கள் அனைவரையும் விட பாவம் செய்தவனை எடுத்துக் காட்டி, அத்தகையோன் கூட ஞானத்தினால் கடைத்தேறுவான் என்கிறார். (பாபக்ருத், பாபக்ருத்தரஹ - பாபக்ருத்தமஹ) 'தம' என்ற அடைசொல் உபயோகித்திருப்பதால் பாவத்தின் தீவிரத்தன்மை வெளியாகிறது. அத்தகைய கோரமான பாவிகூட ஞானத்தின் மகிமையால் பாவம் தொலைந்து முக்தியடைகையில், சிறிதளவே பாவம் செய்தவர் குறித்துச் சொல்லவேண்டுமா? எனவே பாவிகள் பயப்படத் தேவையில்லை. தாம் இதுவரை செய்த பாவத்திற்கு வருந்தி இனியும் பாவங்களைச் செய்யாமல், ஞானத்தை அடைவதற்கான சாதனைகளைச் செய்தால் போதும். கடைத்தேறுதல் திண்ணம்.

மகாபாவிகளும் கடைத்தேறுவர் என்றதால், பாவம் செய்யத் தூண்டுவதாக எண்ணிவிடுதல் கூடாது. அது பகவானின் உத்தேசமல்ல, இதுவரை அஞ்ஞானத்தினால், பாவங்கள் புரிந்திருப்பினும் இனியேனும் அவ்வாறு செய்யாமல் ஞானத்தை பெற்றால் முக்தியடைவான் என்றே சொல்லப்பட்டது. ஞானத்தின் பெருமையைச் சிறப்பித்துச் சொல்வதே இச்சுலோகத்தின் உட்பொருள். எனவெ, இனி பாவிகள் பயப்படத் தேவையில்லை. அவர்கள் தைரியத்துடன் நன்னெறியில் சென்றால் மேன்மையடைவர். கடல் விரிந்து பரந்திருப்பினும், ஒரு சின்ன தெப்பத்தால் அதனை முழுவதுமாகத் தாண்டிவிடமுடியும். அவ்வாறே பாவத்தின் அளவு எத்துணை பெரிதாயினும் ஞானம் என்னும் தெப்பத்தால் எளிதாகத் தாண்ட முடியும் என இங்கு சொல்லப்பட்டது. 'த்ரிஷ்யஸி' எனாது 'ஸந்தரிஷ்யஸி' என்றதால், ஞானத்தைப் பெறுவதால் பாவிகள்கூட சம்சாரமெனும் கடலை எளிதாகத் தாண்டுதல் இயலும் எனத் தெளிவாகிறது. வால்மீகியே இதற்கு முன் உதாரணம்.

“பாவியானவன் சாஸ்திரங்களைப் படித்தல் கூடாது, ஓம் காரத்தை உச்சரித்தல் கூடாது, கீதையைப் படித்தல் கூடாது என்று சொல்லப்படுவன யாவும் பொருளற்ற வாக்கியங்கள்

என்று இச்சுலோகத்தால் தெரிய வருகின்றது. வியாதிஸ்தனுக்கே மருந்து தேவையாயிருப்பது போல், பாபிகளுக்கே, விமுக்தியடைவதற்கான சாதனமான ஞானம் மிகவும் தேவைப்படுகிறது. எனவே துக்கமெனும் கடலைத் தாண்ட நினைப்பவர் பாவாத்மாக்களாயினும், புண்யாத்மாக்கள் ஆயினும் பயமின்றி ஞானத்தைப் பெறுவதற்கு முயன்று முக்தியடைதல் கூடும் என்று பகவான் இங்கு அனைவருக்கும் அபயக்கரம் நீட்டுகிறார்.

"சேத்" 'அபி' என்ற இரண்டு அடைகளின் வாயிலாக அர்ஜுனன் பாவியல்ல என்பது விளக்கப்பட்டுள்ளது. அவன் தெய்வீக குணம் நிறைந்தவன் என்பது இதற்கு முன்பே சொல்லப்பட்டுள்ளது. (மா சுசஹ் ஸம்பதம் தைவீமபிஜாதோ அஸி (16-5)

**வினா:**

பாவத்தைப் போக்கும் வழி என்ன?

**விடை:**

ஞானத்தைப் பெறுவதே.

**வினா:**

ஞானத்தின் மேன்மை எத்தகையது?

**விடை:**

மிகப் பெரிய பாவிகூட ஞானம் எனும் தெப்பத்தினால் பாவமெனும் கடலைத் தாண்டி விடுவான்.

**முன்னுரை:**

இனி, அக்னியை உதாரணமாகக் கொண்டு ஞானத்தின் மகிமையை எடுத்துரைக்கிறார்.

**37. யதைதாம்ஸி ஸமித்தோ அக்னிர் பஸ்மஸாத் குருதே அர்ஜுன।**
**ஞானாக்னிஹ் ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா॥**
**(37)**

**சொற்பொருள்:**

அர்ஜுன - ஓ அர்ஜுனா! ஸமித்தஹ - நன்றாகச் சுடர்விட்டு எரியும் அக்னிஹ - அக்னி, ஏதாம்சி - விறகுகளை, யதா - எப்படி, பஸ்மஸாத்குருதே - சாம்பலாக்குகிறதோ, ததா - அவ்வாறே, ஞானக்னிஹி - ஞானமெனும் அக்னி, ஸர்வகர்மாணி - எல்லா கர்மங்களையும், பஸ்மஸாத் குருதே - சாம்பலாக்கிவிடுகின்றது (அழிக்கின்றது).

**கருத்துரை:**

அர்ஜுனா! நன்கு சுடர்விட்டு எரியும் தீயானது விறகுகளை எவ்வாறு சாம்பலாக்கி விடுகிறதோ, அவ்வாறே ஞானமெனும் அக்னி எல்லா கர்மங்களையும் சாம்பலாக்குகின்றது.

**விளக்கம்:**

ஞானத்தினை அக்னியுடன் ஒப்பிட்டு அதன் மகிமையை இங்கு விளக்குகிறார். துக்க நிவாரணம் பிறப்பினின்றும் விடுபடுவதால் நேரும். பிறப்பின்மை கர்மங்கள் தொலைவதால் சித்திக்கும், கர்மங்கள் அழிதல் ஞானத்தைப் பெறுவதால் வந்து சேரும் மலையளவு விறகாயினும் அக்னி சாம்பலாக்கிவிடும். அவ்வாறே பிறவிதோறும் தொடரும் கர்மா எத்தனை இருப்பினும், அவையனைத்தையும் ஞானமெனும் அக்னி அழித்துவிடும். ஆயின் நன்றாகச் சுடர்விட்டு எரியும் அக்னியே அக்காரியத்தைச் செய்ய இயலும், சரியாக எரியாத அக்னி அல்ல, எனவேதான், 'ஸமித்தோஅக்னிஹி' என்ற பதத்தை உபயோகித்துள்ளார். எனவே ஞானம் முழுமையாக அடையாவிடில் கர்மாக்கள் அழிவதில்லை. நித்திரையில் கனவு கண்டு கொண்டிருக்கும் மனிதன் எழுந்தவுடன் எவ்வாறு கனவு கலைகிறதோ; அவ்வாறே ஞானமெனும் விழிப்பு நிலையில் சம்சாரமெனும் கனவுத் தொடர்பான கர்மாக்கள், கர்மபந்தங்கள் ஜீவனுக்கு அழிகின்றது. 'ஸர்வ கர்மாணி' என்றதால் எல்லாவிதமான கர்மங்களையும், பந்தங்களையும் மனிதன் கடக்க இயலும் என்பது தெளிவாகிறது. (ஞானமென்றால் ஆத்மா அநாத்மா விசாரணையால் காண்பதை மாயையாகக் கொண்டு ஒதுக்கி,

திரிக் ரூபமான ஆத்மாவை - மதித்தல்) எனவே பிறப்பு இறப்பெனும் கர்ம பலனை தவிர்க்க நினைப்பவர் ஞானத்தைத் தவறாது சம்பாதித்துக் கொள்ளவேண்டும் என்று இச்சுலோகத்தின் வழி உணரலாம். 'க்ஷீயன்தே சாஸ்ய கர்மாணி தஸ்மினத்ருஷ்டே பராவரே' (பரமாத்மாவை அண்டியவனின் கர்மங்களனைத்தும் நசித்துப்போகும்) என்று முண்டகோபநிஷத் வாக்கியம் இவ்வுண்மையையே விளக்குகிறது.

**வினா:**

கர்மத் தொடர்பு எங்ஙனம் அழியும்?

**விடை:**

ஞானத்தினால் (சுடர்விட்டு எரியும் அக்னி விறகுகளை எரிப்பதைப் போல் ஞானம் கர்மங்களை எரித்துவிடும்).

**வினா:**

ஞானத்தின் மகிமையை நிரூபிக்க.

**விடை:**

அது கர்மங்களை நிர்மூலமாக்கி ஜீவனை பந்தத்தினின்றும் விமுக்தியடையச் செய்கிறது.

**முன்னுரை:**

ஞானம் எங்ஙனம் பெறுவது என்பதை விவரிக்கின்றார்.

**38. ந ஹி ஞானேன ஸத்ருசம் பவித்ரமிஹ வித்யதே|**
**தத்ஸ்வயம் யோகஸம்ஸித்தஹ காலேனாத்மனி விந்ததி|| (38)**

**சொற்பொருள்:**

இஹ - இவ்வுலகில், ஞானேன - ஞானத்திற்கு, ஸத்ருசம் - சமானமாய், பவித்ரம் - புனிதமானது, ந வித்யதே ஹி (எதுவும்) இல்லவே இல்லையல்லவா, தத் - அத்தகைய ஞானத்தின், யோகஸம்ஸித்தஹ - (கர்மா) யோகசித்தியடைந்த வர்கள்,

காலேன - காலக் கிரமத்தில், ஆத்மனி - தன்னிடத்தில், ஸ்வயம் - தானாகவே, விந்ததி - அடைகிறான் (அனுபவிக்கிறான்)

**கருத்துரை:**

இவ்வுலகில் ஞானத்திற்கு ஈடானது எதுவுமில்லை. அத்தகைய ஞானத்தை (கர்ம) யோக சித்தியை அடைந்தவன் காலக்கிரமத்தில் தன் உள்ளத்திலேயே தானே அறிகிறான்.

**விளக்கம்:**

இவ்வுலகில் புனிதமான பொருள்கள் பலவுண்டு. ஆயின் அவையனைத்திலும் மிகவும் புனிதமானது, பரிசுத்தமானது ஞானமேயென்று கூறுகின்றார். மனிதனை பரிசுத்தமாக்கு வதில் ஞானத்தை விட உயர்ந்தது வேறொன்றுமில்லை. அது ஜீவனின் அஞ்ஞானமெனும் அழுக்கினை அகற்றி ஆத்மானுபூதியை அடையச் செய்கிறது. ஜீவனில் ஸ்தூல தேகத்திற்குத் தொடர்பான புறஅழுக்குகளைப் போக்குவதற்கு, சோப், சீயக்காய், தண்ணீர் முதலானவை பலவுண்டு. அவ்வாறே சூக்ஷ்மமான தேகமான சித்தத்தில் படிந்த அழுக்குகளைக் களைவதற்கு, கர்மா, உபாசனை, தியானம், யோகம், ஞானம் முதலான சாதனைகள் பல உண்டு. அவையனைத்திலும் ஞானமே மிகவும் சிறந்தது என்று பகவான் இங்கு குறிப்பிடுகின்றார்

"ஸ்வயம்" - அதாவது ஞானம் தானே வந்து சேரும்? - சுய முயற்சியினால்தான். தனக்குத் தானே உணர்ந்து அறிதல் வேண்டும். தன் பசியைத் தானே தீர்த்துக் கொள்ளவேண்டும். குரு, தெய்வம், பெரியோர் இவர்கள் சிறிதளவு உதவியே செய்வர். அதன்வழி நடப்பது நம் கடமையே. அனுபவிப்பது நாமே. சுயமுயற்சியினாலேயே ஞானத்தை சம்பாதித்துக் கொள்ள வேண்டும். எனவேதான் 'ஸ்வயம்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

"யோகஸம் ஸித்தஹ" - ஞானத்தை அடைவதற்கு முன் யோக சித்தியடைதல் வேண்டும். அதாவது கர்மயோகத்திலே

நன்கு அறிந்து பயிலல் வேண்டும். நிஷ்காம கர்மாவை அனுஷ்டித்து வந்து சித்த சுத்தியடைதல் வேண்டும். துணியில் அழுக்கு நீங்கினால்தான் சாயம் ஏறுவதைப் போல நிஷ்காம கர்மா முதலான சாதனைகளினால் சித்தசுத்தி பெறுதல் போன்ற முயற்சியால் இதயம் நிர்மலமான பின்பே ஞானம் தோன்றும்.

"ஆத்மனி" - அப்படியாயின் அத்தகைய ஞானம் எங்கு தோன்றும்? தன்னிடத்தே, தன் உள்ளத்திலேயே ஞானம் வெளிப்படுமேயன்றி வெளியில் அல்ல. அது இன்னொருவர் அனுபவிக்கக் கூடிய பொருள் அல்ல, தனக்குத் தானே அனுபவிப்பான். எனவேதான் 'ஆத்மனி' எனப்பட்டது. அஞ்ஞானம் எப்போது தோன்றும்?

"காலேன" - காலக் கிரமத்தில் (கர்மயோக சித்தியடைந்த பின்னர்) ஜீவனிடத்தே தோன்றும். 'மோக்ஷம் எப்போது சித்திக்கும்? ஞானம் எப்போது தோன்றும்?' என்ற வினாக்களுக்கு இங்கு பகவான் நல்லமுறையில் பதில் அளித்துள்ளார். மோக்ஷத்திற்கு கால நியமம் இல்லை. சித்தம் எப்போது பரிபக்குவம் அடைகிறதோ, அப்போதே அது கிடைக்கும். அவரவர் சாதனைகளின் தீவிரத்தைப் பொறுத்தது. சிலருக்கு மிகச் சீக்கிரத்திலேயே கிடைத்துவிடும். சிலருக்கு வாழ்நாளின் கடைசியிலேயே கிடைக்கும். எனவே மோக்ஷத்தைக் குறித்தோ, ஞானத்தைக் குறித்தோ உற்சாகமிழக்க வேண்டிய தேவையில்லை, அவரவரது முயற்சிக்குத் தகுந்தபடி காலக்கிரமத்தில் அனைவருக்கும் அது கிடைக்கும். ஆயின் முயற்சியை மட்டும் கைவிடுதல் கூடாது. காய் பழுப்பதற்கு சிலகாலம் பிடிக்கும். முறையாக அது காலக்கிரமத்தில் பக்குவமடைதல் வேண்டும். அதுவரை அதற்குத் தேவையான நீரை நாம் செடிக்கு ஊற்றி வர வேண்டும். ஒரு சிசு பிறப்பதற்கு தாய் ஒன்பது மாதம் காத்திருக்க வேண்டுமல்லவா? எனவே இடைவிடாது, சலனமின்றி நிஷ்காம கர்ம யோக முதலான சாதனைகளைச் செய்து வந்து இதய சுத்தியைப் பெற்றுவிட்டால், ஞானம் தானாகவே பகவத் அனுக்ரகத்தால் ஜீவனில் தோன்றும்.

'காலேன' என்ற சொல்லின் விளக்கம் இதுவே.

இவ்வாறாக, ஞானத்தின் சிறப்பை, அது எப்போது, எவ்வாறு, எங்கு தோன்றும் என்பது விளக்கமாக இச்சுலோகத்தில் கூறப்பட்டது. இதனை நன்கு கடைபிடித்து அனைவரும் ஞானியராதல் வேண்டும்.

**வினா:**

உலகில் மிகவும் புனிதமான வஸ்து எது?

**விடை:**

ஆத்மஞானம்.

**வினா:**

அது (1) எவ்வாறு (2) எங்கு (3) எப்போது ஜீவனுக்கு கிடைக்கும்?

**விடை:**

(1) கர்மயோக சித்தியினால் (2) தன்னிடத்தே (3) காலக் கிரமத்தில் கிடைக்கும்.

**முன்னுரை:**

அத்தகைய ஞானத்தை எவர் அடைவர், அடைந்தபின் பெறும் பலன் என்ன என்பதை அடுத்து விளக்குகிறார்-

**39. ச்ரத்தாவான் லபதே ஞானம் தத்பரஹ் ஸம்யதேந்த்ரியஹ|**
**ஞானம் லப்த்வா பராம் சாந்திமசிரேணாதிகச்சதி ||** **(39)**

**சொற்பொருள்:**

சிரத்தாவான் - சிரத்தையுடையவன், தத்பரஹ - ததேக நிஷ்டையில் கூடியவன், ஸம்யதேந்திரியஹ - இந்திரியங்களை யடக்கியவன், ஞானம் - (ஆத்ம) ஞானத்தை, லபதே - அடைவான், ஞானம் - ஞானத்தை, லப்த்வா - அடைந்து. அசிரேண - அதிவிரைவில், பராம் - சிறந்ததான, சாந்திம் - சாந்தியை, அதிகச்சதி - அடைகிறான்.

**கருத்துரை:**

(குரு, சாஸ்திர வாக்கியங்களில்) சிரத்தையுடையவனாய் (ஆன்மீக சாதனையில்) ததேக நிஷ்டையுடையவனாய், இந்திரியங்களை நன்கு வென்றவனாய் உள்ள மனிதன் ஞானத்தை அடைகிறான். ஞானத்தினால் பரம சாந்தியை அதிவிரைவில் அடைகிறான்.

**விளக்கம்:**

ஞானத்தை எவன் அடைகிறான் என்பது இங்கு கூறப்படுகிறது. ஞானத்தை அடைய வேண்டுமாயின் மூன்று நற்குணங்களைப் பெற்றிருத்தல் வேண்டும். அவையெனவயெனின். (1) சிரத்தை (2) ததேகநிஷ்டை (3) இந்திரியக் கட்டுப்பாடு, இவை இல்லாதவர் ஞானத்தைப் பெறமுடியாது. (1) சிரத்தை - எக்காரியத்திலும் சிரத்தை இருந்தால்தான் நற்பலன் கிட்டும். குருவின் முன்னர், தெய்வத்தின் முன், சாஸ்திரத்திலும் ஜீவனுக்கு எந்த அளவு சிரத்தை இருக்கிறதோ அந்த அளவு நற்பலன் அவர்களால் இவனுக்குக் கிட்டும்' என்ற தளராத மனநம்பிக்கையுடன் சாதனைகளைச் செய்து வரவேண்டுமேயன்றி, 'இது நமக்கு சித்திக்குமோ அல்லவோ, இதனால் நமக்கு நன்மையுண்டாகுமோ இல்லையோ' என்ற சந்தேகம் எழக்கூடாது. எனவே பகவான் 'சிரத்தை' யென்ற நற்குணத்தைப் பலவிடங்களில் வலியுறுத்திச் செல்கிறார்.

'தத்பரஹ' - இனி இரண்டாவது குணம், 'ததேக நிஷ்டை', பற்றுடன், ஒருமித்த எண்ணத்துடன், ததேக சிந்தனையுடன் இருப்பின் ஞானத்தினைப் பெறமுடியும். சரீரம், வாக்கு, மனம் என்ற திரிகரணங்களும் அக்காரியங்களிலேயே ஒன்றித்து இருத்தல் வேண்டும். பிறகாரியங்களை குறைத்துக் கொண்டு ஞானத்தைப் பெறுவது என்ற ஒரே காரியத்தில் சித்தத்தை செலுத்த வேண்டும். சித்தத்தின் சக்தியனைத்தும் சின்னா பின்னம் ஆகிவிடாமல், ஒரே பொருளிலேயே செலுத்தினால் அதனின்றும் அகண்ட சக்தி வெளிப்பட்டு இலக்கினை உள்ளங்கை நெல்லிக்கனியாக அடையச் செய்யும். எனவே

மனத்தினை காணும் பொருள்களினின்றும் திசை திருப்பி பரமார்த்த விசாரணையில் செலுத்தி ததேக நிஷ்டையால் அதனைச் சாதித்தல் வேண்டும். அப்போது ஞானம் விரைவில் சித்திக்கும்.

"ஸம்யதேந்திரியஹ" - ஞானத்தை அடைவதற்கான மூன்றாவது தேவை இந்திரியக் கட்டுப்பாடு. இந்திரியங்களின் மூலம் வெளி உலகப் பொருள்களில், விஷயங்களில் அலைந்து கொண்டிருப்பின் இதயத்தில் வீற்றிருக்கும் ஆத்மாவை எக்காலத்திலும் அறிந்து கொள்ள இயலாது, எனவே மனத்தை உள்முகமாகத் திருப்பவேண்டும். அது இந்திரியக் கட்டுப்பாடு இருந்தால் தான் சாத்தியமாகும், எனவே ஞானத்தை அடைவதற்கு, ஆன்மசாக்ஷாத்காரத்திற்கு இந்திரியக் கட்டுப்பாடு மிகமிக அவசியம். 'யதேந்ரத்ரியஹ' எனாது 'ஸம்யதேந்திரியஹ' என்றதால், இந்திரியங்களை நன்கு அடக்குதல் வேண்டு மென்பது காட்டப்பட்டது. சாதகனுக்கு இந்திரியங்கள் முதன்மையான எதிரி. நித்யவைரிகள். சத்ருக்களை வெல்லாவிடில் சாம்ராஜ்யம் (ஆத்மா) கிடைக்காது. எனவேதான் ஞானம் பெறுவதற்கு இந்திரியக் கட்டுப்பாடு மிக அவசியமென சொல்லுதற்குக் காரணமாகின்றது.

இவ்விதமாக சிரத்தை, ததேக நி,ஷ்டை, இந்திரியக் கட்டுப்பாடு இவற்றுடன் ஞானத்தை பெற்றுவிட்டால் அதன் பலன் யாது? 'பரமசாந்தி' (சாமான்யமான அமைதி இல்லை) ஞானத்தை அடைந்தவுடனேயே பரமசாந்தி ஜீவனுக்கு ஏற்படும்' அதுவே மோக்ஷஸ்திதி, ;அசிரேண' என்பதால் அத்தகைய பலன் ஞானத்தை அடைந்தவுடனேயே மிகவிரைவில் ஏற்படும் என்பது பொருள். சூரியோதயத் தினால் இருள் உடனேயே விலகி எங்கும் ஒளி உடனேயே நிறைவதைப் போல ஞானோதயத்தால் சம்சார சுக துக்கம் மறைந்து மோக்ஷ ரூபமான பரமசாந்தி உடனேயே கிடைக்கும் சாந்தி கிடைப்பதற்கான வழியென்ன என்று பலரும் வினவுகின்றனர். அதற்கான விடை இச்சுலோகத்தில் தெரியப்படுத்தியுள்ளார். 'ஓ, ஜீவர்களே! நீங்கள் பரமசாந்தியை

ஆசைப்படுவராயின் ஆத்ம ஞானத்தை அடைவதற்கு முயற்சிசெய்யுங்கள்!' என்று பகவான் எச்சரிக்கிறார். உலகில் காட்சிப் பொருள்களால் கிடைப்பது மிகவும் அற்பமான அமைதியே, பரமசாந்தியல்ல என்பதை மறந்துவிடக்கூடாது. எனவே அதன்மீது செல்லாமல் ஞானத்தினால் பிறக்கும் பரம சாந்தியையே பெற முயற்சிப்பீராக! சாந்தியின்றி பரிதவிக்கும் ஜீவர்கள் அதற்காக ஏன் முயலுதல் கூடாது?

**வினா:**

ஞானத்தை எவர் அடைய முடியும்?

**விடை:**

(1) சிரத்தையுடையவர் (2) ததேக நிஷ்டையுடன் கூடியவர் (3) இந்திரியக் கட்டுப்பாடுடையவர்.

**வினா:**

ஞானத்தை அடைவதால் ஏற்படும் பலன் என்ன?

**விடை:**

பரமசாந்தி.

**வினா:**

சாந்தியை அடைவதற்கான வழி எது?

**விடை:**

ஞானத்தைப் பெறுவது.

**முன்னுரை:**

சிரத்தையில்லாதவனுக்கு ஏற்படும் துர்க்கதியைப் பற்றி விவரிக்கிறார்.

**40. அக்ஞஸ்சாச்ரத்ததானஸ்ச ஸம்சயாத்மா விநச்யதி**
**நாயம் லோகோ அஸ்தி ந பரோ ந ஸுகம் ஸம்சயாத்மனஹ (40)**

**சொற்பொருள்:**

அக்ஞஸ்ச - ஞானமில்லாதவன், அச்ரத்ததானஸ்ச - சிரத்தையில்லாதவன், ஸம்சயாத்மா - (சாஸ்திரங்கள், குரு வாக்கியங்களையும்) சந்தேகிக்கும் மனமுடையவன், விநஸ்யதி - முழுமையாக நாசமடைகிறான், ஸம்சயாத்மனஹ - சந்தேகப்படுபவனுக்கு, அயம் - இந்த, லோகஹ - உலகம், நாஸ்தி - இல்லை, பரஹ - பரலோகமும், ந - இல்லை, ந சுகம் - சுகமுமில்லை.

**கருத்துரை:**

ஞானமில்லாதவன், சிரத்தை யில்லாதவன், சந்தேகமுடையவன் விநாசத்தையே அடைகிறான். சந்தேக எண்ணம் கொண்டவனுக்கு இகலோகமோ, பரலோகமோ, சௌக்கியமோ இல்லை.

**விளக்கம்:**

குருவின் வாக்கியத்தில், சாஸ்திரங்களின் வாக்கியத்தில், ஆன்மீக உண்மைகளில் நம்பிக்கை, சிரத்தையுடையவன் ஞானத்தை அடைவதால் பரமசாந்தியடைகிறான் என்று முன் சுலோகத்தில் கூறப்பட்டது. அத்தகைய சிரத்தை யில்லாதவன் ஞானமில்லாதவனாய் சம்சாரமெனும் இருட்குகையுள் அகப்பட்டு நாச மடைகிறான் இன்று இச்சுலோகத்தில் கூறப்படுகிறது. (1) அஞ்ஞானி (2) சிரத்தை யில்லாதவன் (3) சந்தேக எண்ணம் கொண்டவன் என்ற இம்மூவரும் கடைத் தேறுவதில்லை என்றும், விநாசத்தையே அடைவரென்றும் சொல்லப்பட்டது. இதில் அஞ்ஞானியானவன் ஆன்மீக விஷயங்களைப் பற்றி அறியாது, அறிவதற்கான முயற்சியும் செய்யாது, காண்பதையே உண்மையென நம்பி, பிறப்பு இறப்பு யெனும் சுழற்சியில் அகப்பட்டு நசித்துப் போவான். சிரத்தையில்லாதவன், சாஸ்திரங்களில் நம்பிக்கையற்று அவற்றில் ஈடுபாடு கொள்ளாமல், அதன் பலனான கெட்ட நடவடிக்கையை மேற்கொண்டு நசித்துப்போவான். இனி மூன்றாமவனான சந்தேக எண்ணமுடையவன் ஒவ்வொன்றையும் சந்தேகக் கண்ணுடனேயே பார்த்து,

எத்தகைய செயலிலும் ஈடுபடாமல், ஆன்மீக சாதனைகள் எதுவும் செய்யாது வாளாயிருந்து நசித்துப்போவான். 'நஸ்யதி' எனாது 'விநஸ்யதி' என்றதால் இம்மூவரும் கோரமான அழிவை அடைவர் என்பது தெளிவாகிறது.

இம்மூவரையும்பற்றி முதலில் கூறி மறுபடியும் சந்தேகப்படுபவனைக் குறித்து சொல்லி அவனுக்கு இகபரம் இரண்டும், சௌக்கியமும், மனசாந்தியோ கிடையாது என்கிறார் பகவான். சந்தேகம் மனதை உருக்குலைத்துவிடும். எனவே முமுக்ஷுக்கள் சாஸ்திரங்கள், குருவாக்கியங்கள் இவற்றின் மீது நம்பிக்கை, சிரத்தை வைத்து, சந்தேகத்தை நீக்கி ஆன்மீக பதத்தில் முன்னேறுதல் வேண்டும். அப்போதே முழுமையான சுகம் கிடைக்கும்.

**வினா:**

இவ்வுலகில் விநாசமடைவோர் எவர்?

**விடை:**

(1) அஞ்ஞானி (2) சிரத்தையில்லாதவன் (3) ஐயம் கொள்பவன்.

**வினா:**

சந்தேகமடைபவனுக்கு எத்தகைய துர்க்கதி நேரும்?

**விடை:**

அவனுக்கு இகலோகமோ, பரலோகமோ, மனவமைதியோ இல்லை.

**வினா:**

எனவே முமுக்ஷுவின் கடமை யாது?

**விடை:**

(1) அஞ்ஞானத்தை தொலைத்து ஞானத்தைப் பெறுதல் வேண்டும்.

(2) சாஸ்திரங்கள், குருவின் வாக்கு இவற்றில் சிரத்தையுடன் இருத்தல் வேண்டும்.

(3) ஆன்மீக உண்மையில் ஐயமடைதல் கூடாது.

**முன்னுரை:**

ஞானியை கர்மங்கள் கட்டுப்படுத்துவதில்லை என்று கூறுகிறார்.

**41. யோகஸந்யஸ்தகர்மாணம் ஞானஸம்சின்னஸம்சயம்।
ஆத்மவந்தம் ந கர்மாணி நிபத்னந்தி தனஞ்ஜய॥ (41)**

**சொற்பொருள்:**

தனஞ்ஜய! - அர்ஜுனா!, யோக ஸந்யஸ்த கர்மாணம் - நிஷ்காம கர்ம யோகத்தினால், கர்மபலனைத் துறந்தவர் அல்லது ஈசுவரார்ப் பணம் செய்தவர், ஞானஸம்சின்ன ஸம்சயம் - ஞானத்தினால் ஐயம் நீங்கினவனான, ஆத்ம வந்தம் - ஆத்ம சொரூபத்தில் திளைத்திருப்பவனை, கர்மாணி - கர்மங்கள், ந நிபத்னந்தி - கட்டுப்படுத்துவதில்லை.

**கருத்துரை:**

ஓ அர்ஜுனா! நிஷ்காம கர்ம யோகத்தினால் கர்மபலத்தைத் துறந்தவன். அல்லது அதனை ஈசுவரார்ப்பணம் செய்தவன், ஞானத்தினால் ஐயங்களை நீங்கியவன் ஆன ஆத்மாவில் நிலைத்திருப்பவனுக்கு (பிரம்ம ஞானிக்கு) கர்மங்கள் பந்தத்தை ஏற்படுத்துவதில்லை.

**விளக்கம்:**

கர்மாக்கள் எவனை பந்தப்படுத்துவதில்லை என்ற கேள்விக்கான விடை இங்கு சொல்லப்பட்டது. கர்மபலத்தைத் துறந்து, ஞானத்தினால் எல்லா விதமான ஐயங்களையும் போக்கிக் கொண்டு, ஆன்மாவில் திளைத்திருப்பவனுக்கு, ஞானிக்கு கர்ம பந்தம் ஏற்படுவதில்லை. கர்ம பலனைத் தியாகம் செய்து, ஆன்மாவில் திளைத்திருப்பவனுக்கு, காணப்படும் தேகத்தின் மீது 'அகம்' என்ற எண்ணம்

இருப்பதில்லையாதலால், கர்த்தா என்ற எண்ணம் இல்லாதிருப்பதால் கர்மாக்கள் அவனை பந்தப்படுத்துவதில்லை. அத்தகையோன் இடைவிடாது கர்மாக்களைச் செய்து கொண்டிருப்பினும் அதில் தளையுறுவதில்லை. ஏனெனில் பந்தம் என்பது கர்மாவைச் செய்வதிலோ, செய்யாதிருப்பதிலோ இல்லை, பலனின் மீதான ஆசையில், தானே கர்த்தா என்ற எண்ணத்தில், பற்றினால் மாத்திரமே தளை ஏற்படுகின்றது. மேலும், ஆத்மநிஷ்டனுக்கு எல்லாக் கர்மங்களும் ஞானாக்னியால் சாம்பலாகிவிடுவதால் அவனை அவை எவ்வாறு பந்தப்படுத்தும்?

"ஞானசம்சின்ன சம்சயம்" - ஞானம் அடையும் வரை ஜீவனின் ஐயங்கள் ஏற்பட்டுக் கொண்டேயிருக்கும். ஞானம் ஏற்பட்ட பின் ஐயங்கள் அதுவே விலகிவிடும். (சித்யன்தே ஸர்வஸம்சயாஹா).

"ஆத்மவந்தம்" - ஆத்ம நிஷ்டையில் இருப்பவன், பிரம்மஞானம் பெற்றவனுக்கு கர்மங்கள் எவையும் பந்திப்பதில்லை. உலகில் ஆத்மஞானியைத் தவிர ஏனையவர் அனைவரும். செல்வந்தராயினும் பலமுடையோர் ஆயினும், கற்றோராயினும், அழகுடையோராயினும்) கர்மங்கள் பந்தப்படுத்தும், எனவே ஆத்ம ஞானம் அடைந்து, ஆத்மஞானியராவதற்கு அனைவரும் முயலுதல் வேண்டும்.

**வினா:**

கர்மா எவனைப் பாதிப்பதில்லை?

**விடை:**

(1) நிஷ்காம கர்மயோகத்தினால் கர்ம பலனை தியாகம் செய்தவன், அல்லது ஈசுவரார்ப்பணம் செய்தவனை (2) ஞானத்தினால் ஐயங்கள் நீங்கியவனை (3) ஆத்ம நிட்டையில் இருப்பவனை கர்மாக்கள் பந்திப்பதில்லை.

**வினா:**

எனவே கர்மாக்களால் பந்திக்கப்படாதிருப்பதற்கு சாதகன் என்ன செய்யவேண்டும்?

**விடை:**

(1) கர்ம பலனைத் தியாகம் செய்யவேண்டும் (2) ஞானத்தைப் பெற்று ஐயங்களை நீக்கிக் கொள்ளுதல் வேண்டும். (3) ஆன்மாவில் நிலைத்திருத்தல் வேண்டும்.

**முன்னுரை:**

ஞானத்தினால் அஞ்ஞானத்தை போக்கிக் கொண்டு உலக நன்மைக்காக (நிஷ்காம) கர்ம யோகத்தினை செய்து வருமாறு பகவான் அர்ஜுனனுக்குப் போதிக்கிறார்.

**42. தஸ்மாதக்ஞானஸம்பூதம் ஹ்ருத்ஸ்தம் ஞானாஸினாத்மனஹ।
சித்த்வைனம் ஸம்சயம் யோகமாதிஷ்டோத்திஷ்ட பாரத॥ (42)**

**சொற்பொருள்:**

பாரத! - அர்ஜுனா! தஸ்மாத் - ஆகையினால், ஆத்மனஹ - உன், ஹ்ருத்ஸ்தம் - இதயத்தில் இருக்கின்றன அஞ்ஞானஸம்பூதம் - அஞ்ஞானத்தினால் உண்டான, ஏனம்ஸம்சயம் - இந்த சந்தேகத்தை, ஞானாசினா - ஞானமெனும் வாளினால், சித்த்வா - வெட்டி, யோகம் - (ஞானயோக சாதனையான) நிஷ்காம யோகத்தினை, ஆதிஷ்ட - கையாளுக, உத்திஷ்ட - எழுந்திரு!

**கருத்துரை:**

அர்ஜுனா! ஆகையால் உன் இதயத்தில் பீடித்திருக்கும், அஞ்ஞானத்தினால் ஏற்பட்ட ஐயங்களை, ஞானமெனும் வாளினால் வெட்டி, நிஷ்காம கர்மயோகத்தினைக் கைக்கொள்வாயாக! எழுந்திரு!

**விளக்கம்:**

இவ்வாறாக, இவ்வத்தியாயத்தில் ஞானத்தை, ஞானத்தின் மகிமையினை, ஞானயோகத்தின் உதவியால் நேரும் நிஷ்காம கர்மயோகத்தினை போதித்து, இறுதியில் அர்ஜுனனை செயல் புரியுமாறு கூறுகிறார். கடமையையாற்றுமாறு சொல்கிறார். எழுந்திரு (உத்திஷ்ட) செயலில் இறங்கு என்று உற்சாகப் படுத்துகின்றார்.

'அஞ்ஞான சமாப்தம்' - சந்தேகம், மோஹம் முதலானவை அஞ்ஞானத்திலேயே தோன்றுகின்றன. அவற்றிற்கு அஞ்ஞானம் தாய் போன்றது. எல்லா துர்க்குணங்களும், துர்வாசனைகளும், கெட்ட எண்ணங்களும், ஐயங்களும் அங்கேயே எழுகின்றன.

"ஞானாஸினா" - அஞ்ஞானத்தை அழிப்பதற்கு ஞானமே உதவுமேயன்றி வேறெதுவும் உதவாது. எனவேதான் அதனைத் தொலைப்பதற்கு ஞானமெனும் வாளினைப் பயன்படுத்துமாறு பகவான் உபதேசிக்கிறான். இருளையகற்றுவதற்கு ஒளி ஒன்றினால்தான் இயலும். அல்லவா? அவ்வாறே அஞ்ஞானமெனும் இருளை அகற்ற ஞானமெனும் ஒளி பயன்படுத்தப்படுகிறது.

"ஹ்ருத்ஸ்தம்" - என்றதால் அநாதி காலத்திலிருந்தே ஐயங்கள், மோஹம் இவை இதயத்திலேயே உறைந்திருக்கிறது என்பது தெளிவாகிறது. எதிரி தொலைவில் இல்லை. மிகவும் அருகிலேயே நம் இதயத்திலேயே இருக்கிறது என்பதை அறிய வேண்டும்.

"யோகமாதிஷ்ட" - ஞானமடைந்தபின் உலக நன்மைக்காக நிஷ்காம கர்மயோகத்தினைக் கடைப்பிடித்தல் வேண்டும் என்று பகவான் அர்ஜுனனுக்குப் போதிக்கிறார். ஞானிக்கு கர்மாவைச் செய்வதிலோ, ஒதுக்குவதிலோ, பற்று இருப்பதில்லை. எனினும் தர்மத்தைக் காப்பதற்கு, உலகக் காரியங்களை நிஷ்காம புத்தியுடன் செய்து வருவர். எனவேதான் பகவான் இங்கு அர்ஜுனனைக் குறித்து, 'அர்ஜுனா' முதலில் நீ ஞானத்தைப்பெறுக, ஞானமெனும் வாளால் அவித்தையெனும் இதயத்தில் உள்ள அஞ்ஞானத்தை வெட்டி எறி, பின்னர் உலக நன்மைக்காக கர்மாக்களை செய்க! என்கிறார்.

"உத்திஷ்ட" - 'எழுந்திரு' என்று ஸ்ரீ கிருஷ்ணர் தைரியத்தை ஏற்படுத்தக்கூடிய வாக்கியத்தை அருளுகிறார். மகாத்மாக்கள், உறங்கிக் கொண்டிருக்கும் மக்களை இத்தகைய வாக்கியங்களால் உற்சாகப்படுத்தி தட்டியெழுப்புகின்றனர்.

ஒதுங்கி நின்று கவலையுடன் இருப்பவருக்கு தைரியத்தை உண்டாக்கி செயலாற்றுதற்கு இறங்குமாறு செய்வர். இங்கு ரதத்தில் அமர்ந்து செயலாற்றாது கலங்கி நின்ற அர்ஜுனனுக்கு பகவான் தைரியத்தை ஏற்படுத்தி, 'உத்திஷ்ட' 'எழுந்திரு' என்கிறார்! - இவ்வாக்கியத்தை அனைவருமே ஏற்று, அர்ஜுனனைப் போன்று உள்ள அவித்தையெனும் முட்செடியை ஞானமெனும் வாளினால் அறுத்தெறிந்து செயலாற்றுதல் வேண்டும். எத்துணை சாதனைகள் செய்து வந்தாலும் இறுதியில் ஆத்மஞானம் ஒன்றே பந்தவிமுக்திக்கு கதி. ஆத்ம ஞானம் அடைந்த பின்னரே நிஷ்காமகர்ம யோகத்தினை இன்னும் சிறப்பாகப் பின்பற்றுதற்கு இயலும் என்பதை அறிதல் வேண்டும்.

**வினா:**

சந்தேகம், மோஹம் எங்கு உறைகின்றது?

**விடை:**

இதயத்தில்.

**வினா:**

அவை எதனின்றும் தோன்றுகிறது?

**விடை:**

அஞ்ஞானத்தினின்றும் தோன்றுகிறது.

**வினா:**

அஞ்ஞானம் எவ்வாறு அழியும்?

**விடை:**

ஞானமெனும் வாளினால்.

**வினா:**

அவ்வாறு அஞ்ஞானத்தினை அழியச் செய்தபிறகு மகனீயர்கள் என்ன செய்வர்?

**விடை:**

உலக நன்மைக்காக நிஷ்காம கர்மயோகத்தினைச் செய்து வருவர்.

**ஓம்**

**இது உபநிஷத்து பிரம்மவித்தையும், யோக சாஸ்திரமும் ஆன,**
**ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன விவாதமாகச் சொல்லப்பட்ட**
**ஸ்ரீ பகவத் கீதையின் ஞான யோகமெனும்**
**நான்காம் அத்தியாயம்**

**ஓம் தத் ஸத்**



# ஸ்ரீ பகவத் கீதை

# ஐந்தாம் அத்தியாயம்

# கர்ம ஸந்யாஸ யோகம்

**அத்தியாயத்தின் பெயர் விளக்கம்:**

*" கர்ம ஸந்யாஸயோகம்"- சந்யாஸம் என்றால் தியாகம். கர்மத்தியாகம் முதலிலேயே கைகூடாது என்பதும், கர்மபலனைத் தியாகம் செய்வதான நிஷ்காம கர்மயோகத்தை முறையாகப் பின்பற்றி வந்தால் சித்த சுத்தி ஏற்பட்டபின் விஷயங்களற்ற ஆன்மநிலையில், அல்லது அத்தகைய நிலை ஏற்படுவதற்கு கர்மதியாகமென்பது நேருமென்பதும், ஆகவே சாதகர்களுக்கு கர்மசந்நியாசத்தை விட கர்ம யோகமே சிறந்தது என்றும் இவ்வத்தியாயத்தில் கூறப்படுகிறது. இவ்வாறாக கர்மஸந்நியாசத்தைக் குறித்து விவரமாக போதிக்கும் அத்தியாயம் ஆதலால் இதற்கு கர்ம ஸந்நியாஸயோகம் எனப்பெயரிடப்பட்டது. அல்லது 'சந்நியாசம்' என்ற சொல் சாங்கியத்திற்கு, ஞானத்திற்கு மாற்றாகப் பயன்படுத்தப்படும். இவ்வத்தியாயத்தில் கர்ம யோகம், ஞானயோகம் இரண்டையும் பற்றி கூறப்பட்டுள்ளதால் கர்ம ஸந்நியாச யோகம் என்ற பெயர் ஏற்பட்டிருக்கலாம்.*

*இவ்வத்தியாயத்தில் காட்டப்பட்டுள்ள முக்கிய விஷயங்கள்:*

1. *சாங்கிய யோகம் (நிஷ்காம) கர்மயோகத்தைக் குறித்த நிர்ணயம் -(1 முதல் 6 சுலோகம் வரை)*

2. சாங்கியயோகம் கர்மயோக இலட்சணங்கள், அவற்றின் மகிமை -(7 முதல் 12 வரை)

3. ஞான யோகம் பற்றிய விவரணம் (13முதல் 26 வரை)

4. பக்தியுடன் கூடிய தியான யோகத்தின் வர்ணனை (27முதல் 29 வரை)

**முன் அத்தியாயத்திற்கும் இதற்குமுள்ள தொடர்பு:**

மூன்றாம் நான்காம் அத்தியாயத்தில் பகவான் நிஷ்காமகர்ம யோகத்தினை அங்கங்கு சிறிது விளக்கி வந்தார் அவற்றை பின்பற்றி வந்தால் முறையாக ஞானம் சித்திக்கும் என்றும் சொன்னார் (4-38) ஆயின் ஞானத்தைப் பற்றி பல விடங்களில் உதாரணம் காட்டியுள்ளார் அத்தகைய ஞானத்தை மகனீயர்களை சேவிப்பதன் மூலம் அறிதல் கூடும் என்று பகவான் கூறியுள்ளார். எனவே ஞானம், கர்மம் இரண்டிலும் எது சிறந்தது என்ற ஐயம் அர்ஜுனனுக்கு எழவே, அதனைப்போக்குவதற்காக ஸ்ரீ கிருஷ்ணரை உடனே வினவினார். அர்ஜுனனின் அவ்வினாவுடனேயே இவ்வத்தியாயம் தொடங்குகிறது.

**அர்ஜுன உவாச:**

**1. ஸந்யாஸம் கர்மணாம் கிருஷ்ண புனர் யோகம் ச சம்ஸஸி|**
**யச்ச்ரேய ஏதயோரேகம் தன்மே ப்ரூஹி ஸுநிஸ்சிதம்|| (1)**

*அர்ஜுன உவாச - அர்ஜுனன் சொன்னது -*

**சொற்பொருள்:**

*க்ருஷ்ண - ஏ கிருஷ்ணா! கர்மணாம் - கர்மங்களின், ஸந்யாஸம் - தியாகத்தையும், புனஹ - மறுபடியும், யோகம் ச - (கர்ம) யோகத்தினை, சம்ஸஸி - சொல்லுகிறீர், ஏதயோஹோ - இவ்விரண்டில், யத் - எது, ச்ரேயஹ - சிறந்ததோ, ஸுநிஸ்சிதம் தத்ஏகம் - நன்றாக நிச்சயிக்கப் பட்டுள்ள அவ்வொன்றையே மே ப்ரூஹி - எனக்கு சொல்லும்.*

**விளக்கம்:**

உண்மையில் ஸ்ரீ கிருஷ்ணர் எங்கும் கர்மத்தைத் தியாகம் செய்யும்படி கூறவில்லை. கர்ம பலனைத் தியாகம் செய்யும்படியே போதித்தார். எனவே இங்கு கர்ம சந்நியாசத்திற்குப் பொருள் கர்மத்தியாகத்துடன் கூடிய ஞானமென்பதே. எனவே அர்ஜுனனின் கேள்வி ஞானயோக, கர்மயோகங்களில் எது மேன்மையைத் தரவல்லது என்பதே. இக்கேள்வி ஐயத்திற்கிடமாகவேயுள்ளது. ஏனெனில் ஸ்ரீ கிருஷ்ணர் —

**கார்யம் கர்மஸமாசர (3-19)**

**யுத்யஸ்வ விகதஜ்வரஹ (3-30)**

**குரு கர்த்தைவ தஸ்மாத்வம் (4-15)**

**யேக மாதிஷ்டோத்திஷ்ட பாரத (4-42)**

முதலான வாக்கியங்களின் மூலம் கர்மயோகத்தினைப் பின்பற்றுமாறு அர்ஜுனனுக்கு சொல்லியுள்ளார். ஆயினும் சிலவிஷயங்களில் -

**ச்ரேயான் த்ரவ்யமயாத்யக்ஞாநாயக்ஞஹ பரந்தப -**

**ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஞானே பரிஸமாப்யதே (4-33)**

**தத்வித்தி ப்ரணிபாதேன (4-34)**

முதலான வாக்கியங்களில் ஞானயோகத்தின் சிறப்பினை வலியுறுத்தி, அதனைப் பின்பற்றுமாறு பகவான் அர்ஜுனனுக்கு ஐயத்திற்கு இடமின்றி கூறியுள்ளார். இரண்டையும் அக்கறையுடன் கேட்ட அர்ஜுனனுக்கு அவற்றில் எது சிறந்தது என்ற கேள்வி எழுந்தது. இதனைப் போன்றே அர்ஜுனனுக்கு ஐயம் எழுந்ததை மூன்றாம் அத்தியாயத்தின் ஆரம்பத்தில் நாம் காணலாகும்.

**முன்னுரை:**

அர்ஜுனனுக்கு பகவான் பதிலுரைக்கிறார்.

**ஸ்ரீ பகவானுவாச:**

**2. ஸந்யாஸஹ் கர்மயோகஸ்ச நிச்ரேயஸ்கராவுபௌ|**
**தயோஸ்து கர்மஸந்யாஸாத் கர்மயோகோ விசிஷ்யதே|| (2)**

**சொற்பொருள்:**

*ஸந்யாஸஹ - கர்மத்தியாகம் (கர்ம தியாகத்துடன் கூடிய ஞானயோகம்) கர்மயோகஸ்ச - கர்மயோகத்தினையும், உபௌ - இரண்டையும், நிச்ரேய ஸகரௌ - மோக்ஷத்தை அடையச் செய்பவை, தயோஸ்து - அவ்விரண்டிலும், கர்மஸந்யாஸாத் - கர்மஸந்நியாசத்தைவிட, கர்மயோகஹ - கர்மயோகம், விசிஷ்யதே - சிறந்தது.*

**கருத்துரை:**

*கர்மத்தியாகம் (ஞானயோகம்), கர்மயோகம் என்ற இரண்டும் மோக்ஷத்தைத் தருபவையே. ஆயினும் இவ்விரண்டிலும் (ஆரம்பநிலையில்) கர்மத்தியாகத்தை விட, கர்மயோகமே சிறந்தது.*

**விளக்கம்:**

*கர்ம சந்யாசத்துடன் கூடிய ஞானயோகம், கர்மத்தைச் செய்வதான நிஷ்காம கர்மயோகம் இரண்டும் சிறந்த மேன்மையைத் தருபவையே, இரண்டும் மோக்ஷபதத்தினை நல்குபவையே, ஆயினும் ஆரம்ப நிலையில் இருப்பவர் கர்மத்தினைத் தியாகம் செய்வதைவிட கர்மயோகமே சிறந்தது. அர்ஜுனன் விஷயங்களற்ற முழுமையான ஞான நிலையை இன்னும் அடையவில்லை என்பதால், அவனது பார்வையில், அவனது நிலையை கருத்தில்கொண்டு பகவான் இவ்வாறு சொல்லியிருக்கக்கூடும். மேலும் உலகில் ஞானியரைவிட அஞ்ஞானிகளே அதிக எண்ணிக்கையில் உள்ளனர். அவர்கள் அனைவரின் மேன்மையைக் கருதியும் பகவான் கர்ம சந்நியாசத்தினை, அதாவது கர்மத்தியாகத்தை இங்கு வலியுறுத்தவில்லை என்று ஊகித்துக் கொள்ளவியலும், இவ்வாறு சொன்னதால். ஒவ்வொருவரும் தாம் விஷயங்கள்*

அற்ற ஞான நிலையை அடைவதற்கு முன்பே கர்மங்களை செய்யாது, சோம்பேறிகளாக இருந்து, புத்தி, முக்தி என்ற இரண்டினின்றும் விலகிச் சென்று விடுவர். ஆகவே சாமான்ய மக்களின் மேன்மையைக் கருதி பகவான் இவ்வாறு கர்மயோகத்தின் சிறப்பினை வலியுறுத்துகிறார்.

**வினா:**

கர்மசந்நியாசத்துடன் கூடிய ஞானயோகம் சிறந்ததா, கர்மங்களைச் செய்வதான நிஷ்காம கர்ம யோகம் சிறந்ததா?

**விடை:**

இரண்டும் சிறந்தவையே. இரண்டும் முக்தியளிப்பவையே. ஆயினும் சாதகனுக்கு ஆரம்ப நிலையில் கர்மம் செய்வதே சிறந்தது.

**முன்னுரை:**

விருப்பு வெறுப்பற்ற நிஷ்காம கர்மயோகியைப் புகழ்கிறார்—

**3. ஜ்ஞேய ஸ நித்யஸந்யாஸீ யோ ந த்வேஷ்டி ந காங்க்ஷதி।**
**நிர்த்வந்த்வோ ஹி மஹாபாஹோ ஸுகம் பந்தாத் ப்ரமுச்யதே॥**
**(3)**

**சொற்பொருள்:**

மஹா பாஹோ - பெரும்புஜ பலம் உடைய ஏ அர்ஜுனா! யஹ - எவன், ந த்வேஷ்டி - வெறுப்பின்றி இருக்கின்றானோ, ந காங்க்ஷதி - எதற்கும் விருப்பு அடைவதில்லையோ (ஆசைப்படுவதில்லையோ) ஸஹ - அவன், நித்யஸந்யாஸீ - எப்போதும் சந்நியாசியே (என்று), ஜ்ஞேயஹ - அறியத் தக்கவன், ஹி - ஏனெனில், நிர்த்வந்த்வஹ - இருமைகளற்றவன், சுகம் - எளிதாக, பந்தாத் - பந்தத்திலிருந்து, (சம்சார பந்தம்), ப்ரமுச்யதே - விடுபடுகிறான்.

**கருத்துரை:**

மிக்க புஜபலமுடைய அர்ஜுனா! எவன் (எந்த கர்மயோகி) எவற்றின் மீதும் வெறுப்புக் கொள்ளாது, எதனையும்

விரும்பாது இருக்கின்றானோ, அத்தகையோன் எப்போதும் சந்நியாசியே (தியாகி) என்று அறிக, ஏனெனில், (விருப்பு வெறுப்பு முதலான) இருமைகளற்றவன் எளிதாக சம்சார பந்தத்தினின்றும் விடுபடுவான்.

**விளக்கம்:**

சந்நியாசமென்றால், விருப்பு வெறுப்புகள், சுக துக்கங்கள், முதலான இருமைகளை ஒதுக்குவதேயன்றி, கர்மங்களை ஒதுக்குவதன்று என்பது இங்கு தெளிவாக்கப்பட்டது, அவ்வாறு விருப்பு வெறுப்புகளை விட்டவனே 'நித்ய சந்நியாசி' ஆவான். ஏனையோர் 'அநித்ய சந்நியாசிகளே' என்பது பொருள். சந்நியாசிகள், (குடீசக, பஹூதக) என்ற பல தரப்பினரில் இங்கு இரண்டு வகுப்பினர் மட்டுமே சொல்லப்பட்டுள்ளனர் - (1) நித்ய சந்யாசிகள் (2) அநித்ய சந்நியாசிகள், விருப்பு வெறுப்பற்றவன், இருமைகளற்றவன் நித்ய சந்நியாசி, சந்நியாசி வேடம் மாத்திரம் தரித்து; உள்மனத்தில் விருப்பு வெறுப்பு, காமம், இருமைகள் இவைகளைக் கொண்டிருப்பவன் அநித்ய சந்நியாசி. அதாவது மனவளர்ச்சியின்றி வெளித் தோற்றத்தை மட்டும் மாற்றிக் கொள்பவன் - என்று பொருள். எனவே விருப்பு வெறுப்புகளை விடுத்தலே சந்நியாசம். பற்றினை விடுவதே சந்நியாசம். இருமைகளை துறப்பதே உண்மை சந்நியாசம். அவையில்லாதவன் சந்நியாசியாயினும் தாழந்தவனே, அவ்வாறு இல்லாதவன் சந்நியாசியாயினும் சம்சாரியே, அவைகளை ஒதுக்கியவன் கிருஹஸ்தனாயினும் சந்நியாசியே.

"சுகம் பந்தனாத்" - சம்சார பந்தம் மிகவும் இறுக்கமானது. அது திடமான, அது வெகுகாலமாக இறுகிக்கொண்டே வந்திருப்பது. எனவே அதனை வேறாக்கி, ஒதுக்குதல் மிகவும் கடினமானது. ஆயினும் விருப்புவெறுப்புகளை விடுத்தவன் அதனை எளிதாக; அநாயாசமாக வேறாக்குவர் என்று பகவான் இங்கு கூறுகிறார். எனவேதான் 'சுகம்' (எளிதாக) என்ற சொல்லை பயன்படுத்தியுள்ளார். சம்சாரபந்தம் அழிவதற்கு ஏதாவது எளிதான வழியுள்ளதா என்று பலரும்

வினவுகின்றனர். பகவான் இங்கு அதற்கான சரியான விடையை அளித்துள்ளார். விருப்பு வெறுப்புகளை விடுத்தலே அதற்கான வழி. அத்தகையோன் கிருஹஸ்தனாயினும், கர்மாக்களை செய்துவரினும், எப்போதும் சந்நியாசியே (நித்யசந்நியாசி) ஆவான்.

உள்மனத்தின் அழுக்குகளை விட்டுவிடுவதே உண்மையான சந்நியாசமென்றும், நித்ய சந்நியாசமென்றும் பகவான் சொல்வதால், இனி வேடதாரிகளான கபட சந்நியாசிகளின் லீலைகளை ஒடுக்குவதாகும். அத்தகையோர் அநித்யசந்நியாசிகளின் வரிசையில் சேர்க்கப்படுவர். எனவே செயற்கையை ஏற்றுக்கொள்ளாமல், பகவான் தெரிவித்த பந்த விமோசனத்தை அளிக்கும் புனிதமான வழியையே அனைவரும் அனுசரித்தல் வேண்டும்.

**வினா:**

'நித்ய சந்நியாசி' யார்?

**விடை:**

(1) எதனையும் வெறுக்காதவன் (2) எதற்கும் ஆசைப்படாதவன் (3) சுகதுக்கம் முதலான இருமைகள் அற்றவன்.

**வினா:**

அத்தகைய நித்ய சந்நியாசத்தினால் பலன் என்ன?

**விடை:**

அதனால் மனிதன் சம்சார பந்தத்தினை எளிதாக கடக்கவியலும்.

**வினா:**

சம்சார பந்தத்தினின்றும் எளிதாக தப்பிப்பதற்கான வழியென்ன?

**விடை:**

விருப்பு வெறுப்பற்றிருத்தல், இருமைகளை ஒதுக்குதல் ஆகியவை.

**முன்னுரை:**

கர்மயோக, ஞானயோகம் இரண்டின் பலனும் ஒன்றேயென்பதை இனிவரும் இரண்டு சுலோகங்களில் கூறுகிறார்.

**4. ஸாங்க்யயோகௌ ப்ருதக்பாலாஹ் ப்ரவதந்தி ந பண்டிதாஹா।**
**ஏகமப்யாஸ்திதஹ் ஸம்யகுபயோர்விந்ததே பலம்॥ (4)**

**சொற்பொருள்:**

ஸாங்க்யயோகௌ - ஞானயோக, கர்மயோகங்களை, ப்ருதக் - வேறு வேறென்று, பாலாஹா - விவேகமற்றவர்கள், ப்ரவதந்தி - சொல்கிறார்கள், பண்டிதாஹா - விவேகிகள், ந (ப்ரவதந்தி) - அவ்வாறு சொல்லார், உபயோஹோ - அவ்விரண்டிலும், ஏகம் அபி - ஒன்றையாவது, ஸம்யக் - நன்கு, ஆஸ்திதஹ - பின்பற்றுபவன், (உபயோஹோ) - பலம் - இரண்டின் பலனையும், (மோக்ஷம் எனும்) விந்ததே - அடைகிறான்.

**கருத்துரை:**

(கர்மசந்நியாசத்துடன் கூடிய) ஞானயோகம் கர்மயோகம் இவ்விரண்டும் வேறுவேறென்று (வெவ்வேறான பலனுடையவையென்று) விவேக மற்றவர்கள் கருதுகின்றனரேயன்றி, விவேகிகள் அல்ல. அவ்விரண்டிலும் எந்தவொன்றையாவது நன்கு அனுஷ்டித்தால் இரண்டின் பலனும் ஆன (மோக்ஷமெனும்) பதவியை மனிதன் அடைவான்.

**விளக்கம்:**

பண்டிதர்கள் என்றால் ஆன்மீக அனுபவம் அடைந்த மகனீயர்களென்பதே பொருளேயன்றி, காவ்ய அலங் காரங்களைப் பற்றிய இலக்கிய அறிவுடையோர் என்பதல்ல.

ஞானயோகம், கர்மயோகம் இரண்டும் வெவ்வேறாக பலனைக் கொடுப்பவையென்று குழந்தைகள் (பாலாஹா) சொல்வரேயன்றி பெரியோர்களல்ல என்று பகவான் இங்கு கூறுகிறார். ஏனெனில் எந்த யோகத்தைப் பின்பற்றினாலும் ஆத்மா சாக்ஷாத்காரமெனும் மோக்ஷமெனும் ஒரேவிதமான பலனே கிடைக்கிறது. சிலர் தத்தம் மனவியல்பிற்கேற்ப ஆன்ம விசாரணையுடன் கூடிய ஞானயோகத்தை அனுசரித்து காண்பவை, காட்சி இவற்றை ஒதுக்கி ஆத்மஸ்வரூபத்தை உணர்ந்து மோக்ஷ பலனை அடைவர். மற்றும் சிலர், நிஷ்காம கர்மயோகத்தினை பின்பற்றி எல்லாவிதமான செயல்களையும், ஈசுவரார்ப்பணம் செய்து, சுயநலமின்றி பலனைக் கருதாது, சித்த சுத்தியடைந்து அதன்வழி ஆன்ம சொரூப ஞானமடைந்து மோக்ஷத்தைப் பெறுகின்றனர். இவ்வாறாக இரண்டிலும் 'அகம்' எனும் பாவமின்மையே, தானே கர்த்தா எனும் புத்தியின்மையே, குறுகிய மனப்பான்மையின்மையே பொதிந்துள்ளது. ஜீவன் எனும் எண்ணம் மறைந்துவிடின் எஞ்சியிருப்பது சிவமேயல்லவா? எனவெ சாங்க்ய (ஞான)யோக, கர்மயோகங்களில். ஏதேனுமொன்றில் நன்கு ஊன்றி செயல்பட்டால் இரண்டின் பலனுமான மோக்ஷம் கிடைக்கும் என்று சொல்வதன் காரணம் இதுவே.

"ஸம்யக்" - எந்த யோகமாயினும் அதில் நன்கு திடமான எண்ணத்துடன் ஊன்றி ஈடுபட்டால் மாத்திரமே அத்தகைய மோக்ஷம் கிடைக்குமே அன்றி சிறிதளவு அனுபவத்திலேயே கிடைக்காது. எந்த வழியாயினும் அதில் பரிபக்குவமடைதல் வேண்டும். அதில் வல்லுனர் (Expert) ஆக வேண்டும். இதனைத் தெரிவிப்பதற்கே 'ஸம்யக்' எனும் சொல் இங்கு பயன்படுத்தப்பட்டுள்ளது.

உத்தமமான ஞானிகள் உலக நன்மைக்காக கர்மாக்களை (பலனைக் கருதாது) செய்து வருகின்றனர். உத்தம கர்மயோகிகள் சுயநலமின்றி, பலனை எதிர்பாராது, உள்மனத்தில் எல்லாம் இறைவனின் சொரூபமே (ஸர்வம கல்விதம் ப்ரஹ்ம) எனும் ஞானபாவத்துடன் கூடியிருக்கின்றனர். எனவே பரிபக்குவ நிலையில் ஞானயோக,

கர்மயோகம் இரண்டும் ஒன்றாகவே உள்ளது. ஒரே பலனை அளிக்கவல்லது. இரண்டின் இலக்கும் சித்த சுத்தியடைவதே; தனித்தன்மையை விடுத்து அனைத்தும் ஒன்றே என்ற சமநிலையை அடைவதே. இவ்வாறிருக்கையில் ஞானயோகம், கர்மயோகம் என்றும் வெவ்வேறானவை என்று சொல்பவர் சிறிய பாலர்களே ஆவர். அவர்களது அறிவு இன்னும் வளரவில்லையென்று பொருள்.

பரந்த மனம் உடையவரென்றும் எந்த வழியின் மீதும் வெறுப்புகொள்ளார், தூற்றார், எவ்வழியும் இறைவனின் சந்நிதிக்கு இட்டுச் செல்பவையே என எண்ணி எம்மதமும் சம்மதமாகக் கருதுவர். ஒரு வலயத்தின் (Circle) வெளிப்புறத்தினின்றும் உள்நோக்கிச் செல்லும் எந்த ஆரத்தின் (Radius) வழியாகச் சென்றாலும் வட்டத்தின் மையப்புள்ளியைச் (Centre) சேருமல்லவா? அவ்வாறே ஞானம், கர்மம் போன்ற எல்லா வழிகளும் முக்தி நிலைக்கு இட்டுச் செல்பவையே. இச்சுலோகத்தில் ஞான கர்மயோகத்தில் ஏதேனுமொன்றை பின்பற்றி அதனையே நன்கு அனுசரித்து வந்தால் இரண்டின் பலனும் கிடைக்கும் என்று பகவான் கூறுகிறார். இரண்டின் பலனும் ஒன்றாக இருந்தால்தான் அவ்வாறு நேரும். இவ்வாறாக, எல்லா வழிகளின், எல்லா மதங்களின் ஒருமைப்பாடும் இச்சுலோகத்தில் வெளிப்படுத்தப்பட்டது, மத விஷயத்திலும், மார்க்கங்களைப் போற்றுதலில் பரந்த மனப்பான்மை வேண்டுமென இங்கு கோருகின்றார். நதிகள் வெவ்வேறாகச் சென்றாலும் இறுதியில் கடலில் சென்றடைவதைப் போல ஞான, கர்ம, தியான பக்தி யோகங்களனைத்தும் ஆன்மாவை அடைதல் என்னும் ஒரே இலக்கை நோக்கியே செல்லுகின்றன.

**வினா:**

ஞானயோகம், கர்மயோகம் வெவ்வேறானவையா?

**விடை:**

அல்ல, நன்கு கடைபிடித்தால் இரண்டும் ஒரே பலனான முக்தியையே யளிக்கும்.

**வினா:**

எனவே, .முக்தியடைவதற்கான வழியென்ன?

**விடை:**

ஞானயோகத்தினையோ, கர்மயோகத்தினையோ இறுதிவரை நன்கு அனுஷ்டித்து வருதல் வேண்டும். அப்போது இரண்டின் பலனுமான மோக்ஷம் சித்திக்கும்.

**5. யத்ஸாங்க்யைஹ் ப்ராப்யதே ஸ்தானம் தத்யோகைரபி கம்யதே।
ஏகம் ஸாங்க்யம் ச யோகம் ச யஹ் பச்யதி ஸ பச்யதி॥ (5)**

**சொற்பொருள்:**

ஸாங்க்யைஹி - ஞான நிஷ்டர்களால், யத் ஸ்தானம் - எந்த நிலை, (மோக்ஷம்), ப்ராப்யதே - அடையப்படுகிறதோ, தத் - அது, யோகைஹி அபி - கர்ம யோகியர்களாலும், கம்யதே - அடையப்படுகிறது, ஸாங்க்யம் ச - ஞானயோகத்தினை யோகம் ச - கர்மயோகத்தினையும், ஏகம் - ஒன்றாக, (ஒரே பலனுடையதாக), யஹ - எவன், பச்யதி - பார்க்கிறானோ (அறிகிறானோ), ஸஹ - அவனே பச்யதி உண்மையை அறிந்தவனாவான்.

**கருத்துரை:**

ஞானயோகிகளால் எந்த நிலை (மோக்ஷம்) அடையப்படுகிறதோ, அந்நிலை கர்மயோகிகளாலும் அடையப்படுகிறது. ஞானயோகத்தையும், கர்மயோகத்தையும் ஒன்றாகக் (ஒரே பலனைத் தரக்கூடியதாக) கருதுபவனே உண்மையான பார்வை கொண்டவன் (அறிந்தவன்)

**விளக்கம்:**

முன்னைய சுலோகத்தின் பொருளையே இங்கும் கூறுகிறார். ஞானயோகம் கர்மயோகம் இரண்டும் ஒரே பலனை நல்குபவை என்று அறியக்கூடியவரே ஆன்மீக நெறியை அறிந்தவராகிறார். அவர்களே உண்மையை அறிந்தவர். ஏனையோர் கண்கள் இருப்பினும்

பார்வையற்றவரே ஆவர் என்பது பொருள். உண்மையை கண்டறிவதே கண்களைப் படைத்தவன் பலனாகும்; உண்மையை அறிந்துணர்வதே விவேகத்தின் சின்னம். எனவே விவேகமற்ற தன்மையென்னும் குருட்டுத்தனம் இன்றி, தூர திருஷ்டி, பரந்த மனப்பான்மை இவற்றுடன், செய்யின் எந்தவொரு யோகமாயினும் ஒரே பலனை (முக்தி) நல்க வல்லது என நிச்சயமாக எண்ணுதல் வேண்டும். எனவே இனி கர்மயோகிகள் தாம் கீழோர் என்று எண்ணாது, ஞானயோகிகள் தாமே உயர்ந்தோர் என்று எண்ணாது பயமின்றி அவரவர் வழியைப் பின்பற்றி இலக்கினை அடைதல் வேண்டும். இலக்கு இருவருக்கும் ஒன்றேயாதலால் (பரமாத்மா) சாதனைகளில் ஒருவேளை வேறுபாடு காணப்படினும் அது ஒன்றே என அறிவதே மனிதனின் விவேகம் - என்று இங்கு தெரிவிக்கப்பட்டது. அமெரிக்கா செல்ல வேண்டுமெனின். கிழக்காகப் பயணம் செய்யினும், மேற்காகச் செல்லினும் ஒன்றே. எவ்வாறாயினும் செல்ல வேணடிய இடத்தைச் சேர்வர் அல்லவா?

**வினா:**

உலகில் உண்மையாக பார்வையுடையவன் யார்? (விவேகமுடையவன் எவன்?)

**விடை:**

ஞானயோகம், கர்மயோகம் இரண்டும் ஒன்றே என்றும், (ஒரே பலனை அளிப்பவையென்ற) விவேகம் உடையவனே உண்மையாகப் பார்வையுடையவனாகிறான். (விவேக முடையவன்)

**முன்னுரை:**

கர்மயோகத்தினால் சித்த சுத்தியை அடையாவிட்டால் ஞானயோகத்தில் நிலைபெறுதல் கடினம் என்கிறார்.

**6. ஸந்யாஸஸ்து மஹாபாஹோ துஃகமாப்துமயோகத:|
யோகயுக்தோ முனிர்ப்ரஹ்ம நசிரேணாதி கச்சதி||** **(6)**

**சொற்பொருள்:**

*மஹாபாஹோ! - பெரும்தோள் பலம் பொருந்திய அர்ஜுனா! - ஸந்நியாஸஸ்து - ஞானயோகம் (கர்ம சந்யாசத்துடன் கூடிய ஞானநிட்டை) ஆயின், அயோகதஹ - கர்மயோகமின்றி, ஆப்தும் - அடைவதற்கு, துக்கம் - கடினமானது (இயலாது), யோகயுக்தஹ - கர்மயோகத்துடன் கூடிய, முனிஹி - (தெய்வ) மனனசீலர்கள், நசிரேண - விரைவாக, ப்ரஹ்ம - பிரம்மத்தை, அதிகச்சதி - அடைகிறார்கள்.*

**கருத்துரை:**

*தோள்வலிபடைத்த அர்ஜுனா! (கர்ம சந்யாச யோகமான) ஞானயோகமாயினும் கர்மயோகமின்றிப் பெறுதல் மிகவும் கடினமானது. கர்மயோகத்துடன் கூடிய முனிவர்கள் விரைவில் (இலக்கினை) பிரம்மத்தை அடைகிறார்கள்.*

**விளக்கம்:**

*கர்மயோகத்தின் உதவியின்றி கர்ம சந்நியாசத்துடன் கூடிய ஞானநிட்டையை கடைபிடிப்பது கடினமானது என்கிறார். அதாவது கர்மயோகத்தில் நன்கு கடைப்பிடித்துத் தேறினவர்க்கே ஞானயோகம் சித்திக்கும் என்பது பொருள். கர்மாக்களனைத்தையும் முழுமையாகத் துறந்து காணப்படும் பொருளான ஆத்மாவில் நிலைத்திருத்தல் எளிதான வேலை அல்ல. அத்தகைய ஞானநிலை அனைவர்க்கும் எளிதில் கிடைத்துவிடாது. அதற்கு சித்தசுத்தி பெறுவதற்கான சாதனைகள் எத்துணையோ செய்தல் வேண்டும். நிஷ்காம கர்மயோகத்தினைச் செய்தல் வேண்டும். கர்மயோகம் ஆரம்பக் கல்வி நிலை* (Elementary Course) *போன்றது. ஞானயோகம் கல்லூரி மேற்படிப்பு* (College Course) *போன்றது. எனவே முதலில் கர்மயோகத்தில் தேறினால்தான் ஞானமெனும் கட்டிடத்தில் கால் வைக்கமுடியும். எனவேதான் பகவான் இங்கு கர்ம சந்நியாசத்தை முதலில் ஏற்கவேண்டாமென்றும், கர்மயோகத்தினை நன்கு ஆற்றி, சித்த சுத்தியடைந்து ஞான மார்க்கத்தைப் பின்பற்றினால் மிக விரைவில் பரப்*

பிரம்மத்தைச் சேரமுடியுமென்னும் கருணையுடன் போதிக்கிறார். "ந சிரேண" என்றதால் அத்தகையோருக்கு பிரம்மத்தை அடைவதில் எவ்வித தடங்கலும் நேராது என்றும், விரைவிலேயே அவர்கள் இலக்கினை அடைவரென்பதும் தெளிவாகிறது. 'முனிஹி' - மனனசீலர்கள் என்று குறிப்பிட்டுள்ளதால் கர்மயோகத்துடன் கூட பகவத் சொரூபத்தினைக் கூட மனனம் செய்தல்கூட அவசியமென்று தெரிகின்றது. அதாவது கர்மயோகத்துடன் பரமாத்மா தியானம், பகவத் சிந்தனையையும் கூட செய்துவருபவன் விரைவிலேயே ஞானத்தையடைந்து பிரம்மத்தைக் காண்பான் என்பது பொருள்.

இவ்வாறு ஆரம்ப நிலையில் (நிஷ்காம) கர்மயோகத்தில் அனுபவம் பெறாது சித்தசுத்தியடையாது நேரிடையாக ஞானயோகத்தினை, கர்ம சந்நியாசத்தினைத் தொடங்கி விட்டால், சாதனையில் பலவிதமான கஷ்டங்கள் அடைய நேரிடும். ஏனெனில் கர்மஸந்நியாசம், ஞானநிஷ்டை - வாசனைகளற்ற நிலையிலேயெ நிகழும், வாசனைகள் இதயத்தில் இருக்கும்வரை, பாவம், மனவழுக்கு இவை சித்தத்தினை ஆக்ரமித்துக் கொண்டிருக்கும். சந்நியாசியாக வெளிவேடம் பூண்டாலும் உள்மனமானது குரங்காட்டம் ஆடி, ஜீவனுக்கு மனவமைதியின்மையையேத் தோற்றுவிக்கும். எனவே எச்சாதனையாயினும் முன்பு சித்த சுத்தி, பாவமின்மை மிகவும் தேவை. அதற்கு கர்மயோகம் நன்கு உதவும் என்று பகவான் இச்சுலோகத்தில் தெரியப்படுத்துகிறார். அஸ்திவாரத்தை முதலில் பலப்படுத்திக் கொள்ளவேண்டு மென எச்சரிக்கிறார். கர்மயோகமே அதற்கு அஸ்திவாரம். அதனைச் செய்யாவிடின் மோக்ஷமெனும் கட்டிடத்தை ஆரம்பித்தால் அது காலக் கிரமத்தில் விழுந்துவிடும். பலரும் அவ்வாறே அழிந்துபோனதற்கான உதாரணங்கள் சரித்திரத்தில் பலவுண்டு. எனவே முதலில் கர்மயோகத்தில் சாமர்த்தியத்தைச் சம்பாதித்தல் வேண்டும். வேதாந்த சாஸ்திரத்தில் இது ஒரு பரம இரகசியம். இது தெரியாமல் சிலர் 'எமக்கு ஞானமே வேண்டும்' என்று முதலிலேயே அடம்பிடித்து, சித்தபரிபக்குவம் இல்லாத காரணத்தால் அந்த

ஞானத்தை அடைவதில் வெற்றி பெறுவதில்லை. இவ்வாறு ஒருபக்கம் கர்மாவிற்கோ, மறுபக்கம் ஞானத்திற்கோ பயனின்றி இரண்டிற்கும் உதவாது போகின்றனர். இத்தகைய ஆபத்தினின்றும் தப்பிப்பதற்காக பகவான் இச்சுலோகத்தில் நல்லமுறையில் அறிவு புகட்டியுள்ளார். அவற்றை சிரமேற்கொண்டு சாதகர்கள் மேன்மையடைதல் வேண்டும்.

மருத்துவர்கள் வியாதியஸ்தனுக்கு மருந்து கொடுப்பதற்கு முன் மலம் கழிவதற்கான மாத்திரை கொடுப்பர். அதன் மூலம் சரீரம் சுத்தமாகி நல்ல முறையில் இருக்கும். அவ்வாறே நிஷ்காம கர்மயோகத்தினால். முதலில் சித்தத்தினை நன்கு தூய்மைப்படுத்திவிட்டால் ஞானத்தில் நிலைக்கும். எனவே கர்மயோகத்திற்கு 'சுத்தி' (Cleaning Process) யை அனைவரும் முதலில் செயல்படுத்த வேண்டுமென்று இச்சுலோகம் போதிக்கிறது.

**வினா:**

ஞானயோகம் எப்போது சித்திக்கும்?

**விடை:**

கர்மயோகத்தில் நன்கு பயின்று தேர்ந்தால் மாத்திரமே சித்திக்கும்.

**வினா:**

பிரம்மத்தைச் சீக்கிரமாக எவர் அடைவர்?

**விடை:**

கர்மயோகத்தினை அனுசரித்த மனனசீலர்கள் (முறையாக அதனால் சித்த சுத்தியை, ஞானத்தைப் பெறுவதால்) பிரம்மத்தைச் சீக்கிரமாக அடைகின்றனர்.

**7. யோகயுக்தோ விசுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்ரியஹ|**
**ஸர்வபூதாத்மபூதாத்மா குர்வன்னபி ந லிப்யதே||** **(7)**

**சொற்பொருள்:**

யோகயுக்தஹ - (நிஷ்காம) கர்மயோகத்தைக் கடைப் பிடிப்பவனை, விசுத்தாத்மா - பரிசுத்தமான இதயம் கொண்டவனை, விஜிதாத்மா - நன்கு வெல்லப்பட்ட மனத்துடன் கூடியவனை ஜிதேந்த்ரியஹ - இந்திரியங்களை வென்றவனும், ஸர்வபூதாத்மபூதாத்மா - எல்லாப் பிராணி கோடிகளிடத்தும் உள்ள ஆன்மாவும் தன்னிடத்துள்ள ஆன்மாவும் ஒன்றேயென்றும் அறிந்தவனும், குர்வன் அபி - கர்மாக்களை செய்து கொண்டிருப்பினும், ந லிப்யதே - கர்ம பந்தத்தினால் கட்டுப்படார்.

**கருத்துரை:**

(நிஷ்காம) கர்ம யோகத்தினைப் பின்பற்றுபவனும், பரிசுத்தமான இதயமுடையவனும் நன்கு கட்டுப்படுத்தப்பட்ட மனமுடையவனும், இந்திரியங்களை வென்றவனும், எல்லா பிராணிகோடிகளிடமும் உள்ள ஆன்மாவும் தனது ஆன்மாவும் ஒன்றேயென்று அறிந்து கொண்டவனுமான மனிதன் கர்மாக்களைச் செய்து வந்தாலும் அதனால் கட்டுறான்.

**விளக்கம்:**

கர்மாக்களை செய்து கொண்டிருப்பினும் கர்மபந்தத்தால் கட்டுறாமல் இருத்தல் வேண்டுமாயின் ஐந்து இலக்கணங்களைக் கொண்டிருத்தல் வேண்டுமென்கிறார். அவையெவை யெனின் (1) நிஷ்காம கர்மாவினைச் செய்தல் (2) நிர்மல இதயம் (3)மனத்தை வெல்லுதல் (4) இந்திரியங்களை வெல்லுதல் (5) அனைத்திலும் ஆன்மாவின் ஒருமையைக் காணுதல். இவையனைத்தும் உண்மை ஞானியின் இலட்சணங்களே யென்பது வெளிப்படை, இதன்படி, கர்மயோக, ஞானயோகங்கள் முற்றிய நிலையில் ஒன்றில் ஒன்று பொருந்தி ஒன்றாகவே தோன்றும் என்பது தெளிவாகிறது, இவ்வைந்து இலட்சணங்களும் பொருந்தி. கர்மாவைச் செய்து வருபவன் கர்மாவினால் கட்டுறான்,

அவ்வாறின்றி, காம்ய பாவத்துடனும், சித்த சுத்தியின்றி, தானே கர்த்தா வென்ற எண்ணத்துடனும், கட்டுப்படுத்தப்படாத இந்திரியங்களுடன் கர்மாவை செய்தால் அதனால் அவன் கட்டுறுவான்.

(அந்தக் கரணம்) உள்மனம் கெட்ட எண்ணங்களுடனும் துர்க்குணங்களுடனும், கெட்ட வாசனைகளுடனும் கூடியிருப்பின் அதனுடன் செய்யப்படும் கர்மாவும் கெட்டவையாகவே இருக்கும், எனவே அவன் அதனால் கட்டுறுகிறான். மேலும் எல்லாப் பிராணிகோடிகளிடத்தும் தன் ஆன்மாவேயுள்ளது என்ற எண்ணமில்லாவிடின் ஏனைய பிராணிகளுக்கு இம்சையைச் செய்வதற்குத் தொடங்குவான்; பிறரிடம் வெறுப்பு கொள்வான். தயை, அன்பு, கருணை போன்ற நற்குணங்கள் அவனது செயல்களில் இராது, எனவே அத்தகையோன் தன் குற்றமுள்ள செயல்களால் தவறாது கட்டுறுகிறான். எனவே கர்மாவினால் பந்தப்படாமல் இருப்பதற்கு அனைத்துயிரிலும் ஆன்மாவைக் காணுதல் மிகவும் தேவையே. அவ்வாறே இந்திரிய, மனக் கட்டுப்பாடும் கர்ம விமுக்திக்கு அவசியமே என்று பகவான் இங்கு தெரிவித்துள்ளார், இவ்வாறு மேற்சொன்ன ஐந்து இலட்சணங்களும் கொண்டு கர்மாவைச் செய்து வந்தால் ஜீவன் அவற்றால் பந்தப்படாது பற்றின்றி, பந்தமற்று ஒளிருவான். எனவே முமுக்ஷுக்கள் இந் நற்குணங்களைத் தவறாது வளர்த்துக் கொள்ள வேண்டும்.

**வினா:**

கர்மாவைச் செய்தாலும் அதனால் கட்டுறாது இருப்பவன் யார்?

**விடை:**

(1) நிஷ்காமகர்மாவைப் பின்பற்றுபவன் (2) நிர்மல இதயமுடையவன் (3) மனோஜயம் (4) இந்திரிய ஜயம் (5) அனைத்திலும் ஆன்மாவைக் காண்போன் - என்ற இவ்வைந்து இலட்சணங்கள் பொருந்தியவன் கர்மாவினால் கட்டுறான்.

**முன்னுரை:**

தத்துவ ஞானியான யோகி உலகில் எவ்வாறு நடந்து கொள்வரென்று பின்வரும் இரண்டு சுலோகங்களில் கூறுகிறார்.

**8. நைவ கிஞ்சித்கரோமீதி யுக்தோ மன்யேத தத்வவித்|**
**பச்யஞ் ச்ருண்வன் ஸ்ப்ருசஞ் ஜிக்ரன்னச்னன் கச்சன்**
**ஸ்வபஞ்ச்வஸன்|| (8)**

**9. ப்ரலபன் விஸ்ருஜன் க்ருஹ்ணன்னுன்மிஷந் நிமிஷன்னபி|**
**இந்த்ரியாணீந்த்ரியார்த்தேஷு வர்தந்த இதி தாரயன்| (9)**

**சொற்பொருள்:**

தத்வவித் - பரமாத்மா தத்துவத்தை அறிந்தவனாயினும், யுக்தஹ - யோகத்தில் நிலைத் திருப்பவனாயினும் (ஆன்மாவில் நிலைத்த சித்தத்தை உடையவன்) பச்யன் - பார்க்கிலும், ச்ருண்வன் - கேட்கினும், ஸ்ப்ருசன் - தீண்டினாலும், ஜிக்ரன் - மோப்பம் பிடித்தாலும், அச்னன் - அருந்தினாலும், கச்சன் - நடந்தாலும், ஸ்வபன் - உறங்கினாலும், ச்வஸன் - சுவாசித்தாலும் ப்ரலபன் - பேசினாலும், விஸ்ருஜன் - விடுப்பினும், க்ருஹ்ணன் - இரசித்துக் கொள்ளினும், உன்மிஷன் - கண் விழிக்கினும், நிமிஷன் மூடினாலும், இந்த்ரியாணி - இந்திரியங்கள் இந்திரியார்த்தேஷு - (சப்தாதி) விஷயங்களில், வர்த்ந்தோ + இதி - இயங்குகின்றன என்று, தாரயன் - உறுதிப்படுத்திக் கொண்டு, கிஞ்சித் - எது ஒன்றையும், நப் ரோமி இதி - நான் செய்யவில்லை யென்று, மன்யேத - நினைப்பான்.

**கருத்துரை:**

தத்துவம் தெரிந்த யோகி (ஆன்மாவில் நிலைத்திருக்கும் சித்தம் கொண்டவன்) பார்க்கினும், கேட்கினும், தீண்டினும், வாசனை பார்க்கினும், சுவாசித்தாலும், பேசினாலும், விடுத்தாலும், பிடித்தாலும், கண்திறப்பினும் கண் மூடினாலும் பொறிகள் (இந்திரியங்கள்) (அவ்வவற்றின்) செயல்களில்

பிரவர்த்திக்கின்றன என உறுதிப்படுத்திக் கொண்டு நான் எதனையும் செய்கிறேனில்லை என்று நினைப்பான். (அக்காரியங்களைத் தான் செய்வதாக நினையான்)

**விளக்கம்:**

ஆன்மா தேக இந்திரியங்களுக்கு அப்பாற்பட்டது. அவற்றிற்கு சாட்சியாய் நின்று அதனதன் செயல்களை கண்டு கொண்டிருக்கும். எனவே எக் காரியத்திற்கும் அது கர்த்தா ஆவதில்லை. அவித்தையின் காரணமாக ஜீவன் தன் சுயரூபத்தை மறந்து தேக இந்திரியங்களுடன் ஒன்றிப்போய், தானே தேகமென்று, தானே இந்திரியங்களென்று, மனமென்று எண்ணிக் கொண்டு அவ்வவற்றின் கிரியைகளை, விகாரங்களை தன்மீது வீணாக ஏற்றிக் கொண்டு துக்கத்தையடைகிறான். ஆயின் தத்துவஞானத்தினால் அவித்தையெனும் குறைபாடு நீங்கிய மகனீயர்கள், ஆன்மசொரூபத்தில் நிலைத்தவராய்! "அவ்விந்திரியங்கள் அவற்றின் செயல்களில் ஈடுபடுகின்றன, நான் அவற்றின் சாட்சி, நான் எதுவும் செய்வதில்லை' என்று உறுதியுடன் விகாரமின்றி இருப்பான், அவ்விந்திரியங்களினால் ஏற்படும் இன்பதுன்பங்களை தான் கருதாமல் நித்ய நிரதிசயவுலகிலேயே உலவுவான்.

ஆயின் சிலர், வறட்டு வேதாந்திகள் ஆத்மஞானம் அடைவதற்கு முன்பே, அவித்தை நசிப்பதற்கு முன்பே, தேகத்தின் தொடர்பு விடுவதற்கு முன்பே, விஷயங்களில் ஈடுபாடு கொண்டு, இந்திரியங்களினால் விஷய போகங்களை அனுபவித்துக் கொண்டு, 'நான் அவற்றின் சாட்சி' என்று கூறுகின்றனர். அது மிகவும் கோரமானது. இதனைக் கொண்டே பகவான் இதற்குமுன் 7ஆவது சுலோகத்தில் அத்தகைய ஞானிக்கு இருக்க வேண்டிய ஐந்து இலட்சணங்களை எடுத்துக் கூறினார். (யோகயுக்தோ விசுத்தாத்மா:) அக்குணங்களுடன் அவித்தை ஒழிந்தால் மாத்திரமே இத்தகைய சாட்சித்தவம் சித்திக்குமே தவிர வேறு நிலையில் இல்லை. ஒருபக்கம் காட்சிப் பொருள்களின் மீது ஒன்றிப்போய், வேறொரு பக்கம் 'நான் சாட்சி' என்பது

குழந்தைகளின் செயலேயன்றி அறிவாளிகளின் செயல் அல்ல. சாட்சி பாவத்தில் நிலைத்திருப்பவன் எப்போதும் இந்திரியங்களின் நடவடிக்கையில் ஈடுபடான். ஏனெனில், தமோகுணத்தின்றும், ரஜோ குணத்திற்கு, ரஜோ குணத்தினின்றும், சத்வகுணத்திற்கு, சத்வகுணத்தினின்றும் விசுத்த சத்வ குணத்திற்கு மாறிய விவேகிகளுக்கு மனம் கீழ்நிலைக்கு இறங்கி, ரஜோ, தமோகுணங்களுடன் போக விஷயங்களில் துர்வாசனைகளுடன் கூடிய சேஷ்டைகளில் ஒருகாலும் ஈடுபடாது, கடைந்த பின் வெண்ணை மோரில் முழுகியிருப்பதில்லை. அவ்வாறே சம்சாரசாகரம் என்னும் விசாரணையில் இறங்கி, பரமாத்மாவை வெளிக்கொணர்ந்து அதனை அனுபவித்துக் கொண்டிருக்கும் ஞானி மறுபடியும் மாயையின் உருவான சம்சார போகங்களில் முழுகிவிடமாட்டான். விழித்து கொண்டுவிட்டவன் மறுபடியும் கனவுலகில் சஞ்சரிக்க முடியாதல்லவா?

எனவே தத்துவ ஞானியாய், அவித்தை அழிந்து, காட்சி பொருள்களில் கருத்தினைச் செலுத்தாமல், ஆன்மாவுடன் ஒன்றிய மகான்களுக்கே இத்தகைய சாட்சித்வம் இயலும். எனவே அத்தகையோன் உண்பினும், அருந்தினும், பேசினாலும் தான் எதுவும் செய்வதில்லையென்று, எண்ணுவான் என்று பகவான் இங்கு எடுத்துரைக்கின்றார். அவர்களது இந்திரியங்கள் வாசனைகளற்று இருப்பதால் அவற்றால் அவர்கள் உலக நன்மைக்காகவும், தமது தேகத்தை பராமரிக்கவும் செயல்களையும் ஆற்றிக் கொண்டிருப்பர், அவ்வாறு செய்யினும் தானே கர்த்தா என்ற எண்ணமின்றி இருப்பர் அஞ்ஞானி தானே கர்த்தா என்ற எண்ணம்கொண்டு பந்தப்படுவான்.

எனவே முதலில் நிஷ்காமகர்மா, பக்தி, தியானம் ஆகிய சாதனைகளின் மூலம் சித்தத்தை தூய்மைப்படுத்திக் கொண்டு, (ஆன்ம) தத்துவத்தை நன்கு கிரகித்துக் கொண்டு தத்துவஞானிகளாக வேண்டும். அதன்பின் அவன் கர்மாக்களை செய்யாதிருப்பினும் எவ்விதமான பந்தத்திலும் கட்டுறான், அப்போது அவனது சித்தம் வறுத்த விதை

போன்றிருந்து விஷயங்களில் ஈடுபடாது இருக்கும். செயல்களில் சாட்சி பாவத்துடன் ஈடுபடுவான். அப்போது அவனது இந்திரியங்கள் தர்மத்திற்கு மாறான செயல்களில் ஈடுபடாது. அப்படி ஒருவேளை எவரேனும் தர்மத்திற்கு மாறாகச்செய்தால் அவர்கள் இன்னும் தத்வஅறிஞர்கள் ஆகவில்லையென்று அர்த்தம், ஒருவன் தத்வ ஞானியானால் தான் இவ்வுலக நாடகத்திற்கு, தேக இந்திரிய விவகாரங்களுக்கு சாட்சியாய் நின்று காணும் சக்தியைப் பெறமுடியும்

**வினா:**

*தத்வஞானி இந்திரியங்களின் உதவியால், தின்பது, அருந்துவது முதலான பல காரியங்களைச் செய்யினும் எத்தகைய எண்ணம் கொண்டிருப்பான்?*

**விடை:**

'நான் எதுவும் செய்வதில்லை. அவ்விந்திரியங்கள் அவ்வவற்றின் செயல்களை செய்கின்றன. நான் சாட்சி (நிர்விகார ஆன்மா நான்) என்ற எண்ணத்துடன் இருப்பான்.

**முன்னுரை:**

கர்மாக்களை செய்துவரினும், அதனால் கட்டுறாமல் இருப்பதற்கான வழியைக் கூறுகிறார்.

**10. ப்ரஹ்மண்யாதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா கரோதி யஹ|**
**லிப்யதே ந ஸ பாபேன பத்மபத்ரமிவாம்பஸா|| (10)**

**சொற்பொருள்:**

யஹ - எவன், கர்மாணி - கர்மங்களை, ப்ரஹ்மணி - பரமாத்விடத்தில், ஆதாய - அடைக்கலம் புகுந்து (ஒப்புவித்து) ஸங்கம் - பற்றுதலை, த்யக்த்வா - துறந்து, கரோதி - செய்கிறானோ, ஸஹ - அவன், அம்பஸா - நீரினால், பத்மபத்ரம் இவ - தாமரை இலைபோன்று, பாபேன - பாபத்தால், ந லிப்யதே - பந்தப்படுவதில்லை.

**கருத்துரை:**

எவனொருவன் தான் செய்யும் கர்மங்களை, இறைவனிடம் அர்ப்பித்து, பற்றுதலைத்துறந்து செய்கிறானோ, அத்தகையோன் தாமரை இலைத் தண்ணீரைப் போன்று, பாவத்தினால் பந்தப்படுவதில்லை

**விளக்கம்:**

தான் செய்யும் அனைத்து செயல்களையும் பிரம்மத்தில் (ஆன்மாவில்) ஒப்புவித்து. காட்சி, கர்மா, விவகாரம் இவையனைத்தையும் கண்ணாடியில் பிரதிபலிக்கும் பிம்பத்தைப் போன்று பிரம்மத்தில் கற்பனைப் பொருளாய் உள்ளன என்று பாவித்து, அகம்பாவம். கர்த்ருத்துவ புத்தி இவையின்றி, ஒட்டுதலின்றி (Non-Attachment) கர்மாக்களை செய்பவனின் கர்மாக்களால் பந்தமோ, பாவமோ ஒட்டுவதில்லை, இவ்வுண்மையினை நிரூபிப்பதற்கு இங்கு தாமரை இலையை உவமானக்கொண்டார். தாமரை இலை நீரிலேயே இருப்பினும், அந்நீர் அதன் மீது ஒட்டுவதில்லை. அவ்வாறே பலவித கர்மாக்களை செய்யினும், அதன்மீது பற்றின்றி, ஆசையின்றி, கர்த்த்ருத்வம் இன்றி இருப்பவர்க்கு, பாவங்களினால் பந்தங்களினால் கட்டுப்படுவதில்லை. எனவே ஜீவன்முக்தர்களான மகான்கள் தாமும் கடைத்தேறி ஏனையோரையும் கடைத்தேற்றுவதற்காக, எத்துணையோ செயல்களை எப்போதும் செய்துவரினும், கர்மபந்தம் ஒருபோதும் இருப்பதில்லை, கர்மயோகத்தின் இரகசியம் இதுவே.

பலனைக்கருதாது, ஈசுவரார்ப்பண புத்தியுடன் ஆசையின்றி செய்து வந்தால் கர்த்தாவிற்கு அவற்றினால் பந்தம் ஏற்படாது. பற்றே பந்தத்திற்குக் காரணம். பற்றின்மையே முக்திக்குக் காரணம். தாமரை இலையைத் தவிர மற்றைய இலைகள் யாவற்றிலும் நீர் ஒட்டும். அவ்வாறே கர்த்தா என்ற எண்ணத்துடன் பற்றுடனும் கர்மாக்களைச் செய்பவர்களனைவருக்கும் பாவம் தொடரும். எனவே பந்தத்தினின்றும் விடுபடுவதற்கு கர்மாக்களை பற்றின்றி, நிஷ்காமமாக பகவத் அர்ப்பண புத்தியுடன் செய்து வருதல்

வேண்டும்.

இங்கு 'பாபேன' என்ற சொல்லிற்கு 'கர்மபந்தத்தினால்' என்ற பொருள் பொருத்தமுடையதாயிருக்கும்.

**வினா:**

கர்மாவைச் செய்தலும் பாவத்தினால் எவர் தொடர்புறார்?

**விடை:**

(1) தாம் செய்யும் செயல்களை பகவானுக்கு அர்ப்பணம் செய்பவர் (2) பற்றைத்துறந்து செயல்களை செய்பவர் கர்மாவினால் பந்திக்கப்படார்.

**வினா:**

எவ்வாறு?

**விடை:**

தாமரை இலைத் தண்ணீரைப் போல.

**முன்னுரை:**

மகான்கள் பற்றை விடுத்து கர்மாக்களை செய்வர் என்கிறார்.

**11. காயேன மனஸா புத்த்யா கேவலைரிந்த்ரியைரபி।**
**யோகினஹ் கர்ம குர்வந்தி ஸங்கம் த்யக்த்வாத்மசுத்தயே॥**

**(11)**

**சொற்பொருள்:**

யோகினஹ - (நிஷ்காமகர்ம) யோகிகள், ஆத்ம சுத்தயே - சித்தசுத்திக்காக, ஸங்கம் பலசக்தியை, த்யக்த்வா - விடுத்து, காயேன - சரீரத்தினால், மனஸா - மனத்தால், புத்த்யா - புத்தியினால், கேவலைஹி - வெறும் (மமத்வம், அபிமானமின்றி), இந்திரியைஹி அபி - இந்திரியங்களினாலும், கர்ம - கர்மாவை குர்வந்தி - செய்கிறார்கள்.

**கருத்துரை:**

(நிஷ்காம கர்ம) யோகிகள் சித்த சுத்திக்காக, பற்றைத் துறந்து, சரீரத்தாலும், மனதாலும், புத்தியினாலும், இந்திரியங்களாலும் கர்மம் செய்கிறார்கள்.

**விளக்கம்:**

நிஷ்காம கர்மாவைச் செய்வதால் சித்த சுத்தி எற்படும் என்கிறார். யோகிகள் தம் சித்தசுத்திக்காக சரீரம், புத்தி, இச்சையெனும் குற்றமில்லாத தம் இந்திரியங்களினாலும், பற்றற்று, பலனைக் கருதாது கர்மாக்களைச் செய்வர். மமத்வம், அபிமானம் விருப்பு வெறுப்பு இவையன்றி இருக்கும் இந்திரியங்கள் கேவல இந்திரியங்கள் எனப்படும். அத்தகைய குற்றமற்ற இந்திரியங்களால் அவர்கள் காரியமாற்றுவர். இந்தக் 'கேவலம்' என்ற சொல்லை. மனம், புத்தி இவற்றிற்கும் ஏற்றி பொருள் கொள்ளலாம் - அதாவது யோகி அபிமானமின்றி அக்காரியங்களைச் செய்வான் என்பது பொருள்.

இத்தகைய பற்றின்மையால் சித்தம் நிர்மலத்துவத்தை யடையும். மோக்ஷத்தைப் பெறுவதற்கு அவசியமான ஞானம் தோன்றுவதற்கு அத்தகைய நிர்மலமான மனம் மிக அவசியம். ஏனெனில் குற்றமுள்ள மனத்தில் ஞானம் தோன்றாது. ஆகவேதான் அத்தகைய சித்த நிர்மலத்திற்காக யோகிகள் பற்றின்றி காரியங்களை செய்து வருவரென்று சொல்லப்பட்டது. ஞானமடைந்த பின்னரும் மகான்கள் கேவல இந்திரியங்களினாலேயே, தத்தம் வாழ்க்கையை, உலக நன்மைக்காக காரியங்களை ஆற்றுவர். எனவே முமுக்ஷு பலனைக் கருதாது, ஆசையின்றி தன் தேக இந்திரியங்களால் கர்மாவைச் செய்து வந்து சித்தசுத்தியை அதன்மூலம் ஞானத்தை அடைந்து விமுக்தி அடைதல்வேண்டும்.

**வினா:**

சித்தசுத்தி எவ்வாறு வந்தடையும்?

**விடை:**

*பலனைக்கருதாது (பற்றற்று), அதன்மீது ஆசையின்றி, தேக இந்திரியங்களின் கரணங்களால் செயல் புரிபவர்க்கு சித்த சுத்தி வந்தடையும்.*

**வினா:**

*நிஷ்காம கர்மயோகிகள் கர்மாவை எவ்விதமாக செய்வர்?*

**விடை:**

*(1) பற்றின்றி (2) மமத்வம் முதலானவை இல்லாத இந்திரிய, தேகங்களால் கர்மாக்களைச் செய்வர்.*

**வினா:**

*அவ்வாறு செய்வதால் பலன் என்ன?*

**விடை:**

*சித்த சுத்தி.*

**முன்னுரை:**

*நிஷ்காம, சகாம கர்மாக்கள் இரண்டின் பலனையும் வேறாகக் கூறுகிறார்.*

**12. யுக்தஹ் கர்மபலம் த்யக்த்வாசாந்தி மாப்னோதி நைஷ்டிகீம்|**
**அயுக்தஹ் காமகாரேண பலே ஸக்தோ நிபத்யதே|| (12)**

**சொற்பொருள்:**

*யுக்தஹ - யோகியானவன் (நிஷ்காமகர்மயோகி), கர்மபலம் - கர்ம பலனில், த்யக்த்வா - பற்றற்று, நைஷ்டிகீம் - ஆன்மநிஷ்டை தொடர்பாக நிலையான, சாந்திம் - அமைதியை, ஆப்னோதி - அடைகிறான், அயுக்தஹ - யோகியல்லாதவன் (பலனைக கருதி கர்மம் செய்பவன்), காமகாரேண - ஆசையினால் தூண்டப்பெற்று, பலே - கர்மபலனில், ஸக்தஹ - பற்றுடையவனாய், நிபத்யதே - (கர்மபந்தத்தினால்) கட்டுப்படுகிறான்.*

**கருத்துரை:**

யோகியானவன் (நிஷ்காமகர்மயோகி) கர்மாக்களின் பலனைவிடுத்து (சித்த சுத்தியினால்) ஆன்மநிட்டை சம்பந்தமான நிலையான சாந்தியை அடைகிறான். யோகியல்லாதவன் (பலனைக் கருதி கர்மாக்களைச் செய்கிறவன்) ஆசையினால் தூண்டப்பெற்று கர்ம பலனில் பற்றுகொண்டு பந்தத்தில் கட்டுப்படுகிறான்.

**விளக்கம்:**

பந்தத்திற்குக் காரணம் ஆசை, மோக்ஷத்திற்குக் காரணம் ஆசையின்மை என்று இச்சுலோகத்தில் தெளிவாகக் கூறுகிறார். பலனைக் கருதாது செயல் புரிபவனுக்கு சித்தம் தூய்மையுறுவதால் ஆன்மநிட்டை தோன்றி நிலையான சாந்தி கிடைக்கின்றது. இதனால் கர்மயோகம், ஞானயோகம் இரண்டும் ஆத்மசாந்தியெனும் ஒரே பலனைத் தருகிறது என்பது தெரிகிறது. கர்மயோகம் எந்தவிதத்திலும் குறையுடையதல்ல என்பதும், அதன்பலன் ஆன்ம நிட்டையால் ஏற்படும், பரமசாந்தியேயென்றும் இச்சுலோகம் தெளிவாக்குகிறது.

மோக்ஷத்தின் உருவான பரமசாந்திக்கு பற்றின்மை எவ்வாறு காரணமாகின்றதோ, அவ்வாறே பந்தத்திற்குக் காரணம் ஆசை என்று இங்கு சொல்லப்பட்டது. பலனைக் கருதுவதே பந்தம். 'பத்யதே' எனாது 'நிபத்யதே' என்றதால் பலனைக் கருதுபவன் சம்சார பந்தத்தில் நன்கு சிக்கிக் கொள்வான் என்பது தெரிகிறது. எனவே சாதகர்கள் இவ்விஷயத்தில் மிகவும் எச்சரிக்கையுடன் இருந்து அவர்கள் ஆற்றும் செயல்கள் யாவற்றையும் ஈசுவரார்ப்பண புத்தியுடன் செய்து பலனில் அக்கறை கொள்ளாது இருத்தல் வேண்டும். அப்போதே பரமசாந்தி கிடைக்கும்.

சாந்தி பெறுவதற்கான உபாயத்தை இச்சுலோகத்தில் பகவான் நிரூபிக்கின்றார். ஒவ்வொருவரும் அமைதிக்காகப் போராடுகின்றனர். ஆயின் அது எவ்வாறு கிடைக்கக்கூடும் என்பதறியாமல் திக்கு முக்காடிப் போகின்றனர். பலனைக்

கருதாது நிஷ்காமமாக கர்மாக்களைச் செய்வதே சாந்திக்கான வழி என இங்கு தெரிவிக்கப்பட்டது. இவ்வாறாக நிஷ்காம கர்மநிட்டையினால், ஞான நிஷ்டையினால் ஏற்படும் அமைதி ஜீவனுக்கு வந்துசேர்கின்றது. அவ்வாறே பந்தத்திற்குக் காரணமும் இச்சுலோகத்தில் தெரிவித்து இவ்விஷயத்தில் மிகவும் எச்சரிக்கையாக இருத்தல் வேண்டும் என பகவான் கூறுகிறார். காமமே பந்தத்திற்குச் காரணம். ஆசையே, பலனைக் கருதுவதே, பற்றே துக்கத்திற்கு, அமைதி யின்மைக்குக் காரணம். எனவே அவற்றை நம் வழிக்கு வராது தடுத்தல் வேண்டும். சாதகர்கள் பகவானின் இவ்வெச் செரிக்கைகளை மனதில் கொண்டு வாழ்க்கையை நிஷ்காம வழிக்குத் திருப்பி நிரந்தரமான சாந்தியை அனுபவித்தல் வேண்டும்.

**வினா:**

நிஷ்காம கர்மயோகி எத்தகைய பலனை அடைவான்? எதனால்?

**விடை:**

ஆத்மநிட்டையினால் ஏற்படும் பரமசாந்தியையடைவான். பலனைக்கருதாத காரணத்தினால்.

**வினா:**

காம்யகர்மாக்களைச் செய்பவன் எத்தகைய பலனை அடைவான்? எதனால்?

**விடை:**

சம்சார பந்தத்தில் நன்கு சிக்கிக் கொள்வான். பலன் கருதிச் செய்வதால்.

**வினா:**

இதனை வைத்துப் பார்த்தால் பந்தத்தினின்றும் விடுபடுவதற்கு காரணம் எதுவென்று தெரிகிறது.

**விடை:**

கர்மாக்களின் பலனைக் கருதுவதே பந்தம். அது இல்லாமையே (பற்றின்மையே) மோக்ஷம்).

**வினா:**

*பரமசாந்திக்கான வழி எது?*

**விடை:**

*ஆசைகள் இல்லாதிருத்தல். கர்மபலனில் ஆசையினை ஒழித்தல்.*

**வினா:**

*பந்தத்திற்கான காரணம் என்ன?*

**விடை:**

*காமமே கர்மபலனில் ஆசையே.*

**முன்னுரை:**

*இந்திரியக் கட்டுபாடுடையவனான யோகியின் நிலையை வர்ணிக்கிறார்.*

**13. ஸர்வ கர்மாணி மனஸா ஸந்யஸ்யாஸ்தே ஸுகம் வசீ|**
**நவத்வாரே புரே தேஹீநைவ குர்வன்ன காரயன்|| (13)**

**சொற்பொருள்:**

*வசீ - இந்திரியக் கட்டுப்பாடுடையவனான, தேஹீ - தேகியானவன் (ஜீவன்), மனசா - மனத்தினால், ஸர்வகர்மாணி - எல்லா கர்மாக்களையும், (கர்மபலனை), ஸந்யஸ்ய - விலக்கி, ந ஏவகுர்வன் - ஒன்றும் செய்யாதவனாக, ந காரயன் - ஒன்றையும் செய்விக்காதவனாக, நவத்வாரே - ஒன்பது துவாரங்களையுடைய, புரே - தேகத்தில், சுகம் - சுகமாக, ஆஸ்தே - வீற்றிருக்கின்றான்.*

**கருத்துரை:**

*இந்திரியக்கட்டுப்பாடுடைய தேகியானவன் கர்மங்களனைத்தையும் மனத்தால் (பலனை) விலக்கிவிட்டு, எதுவும் செய்யாதவனாய், செய்விக்காதவனாய், ஒன்பது துவாரங்களையுடைய பட்டணமான தேகத்தில் நிம்மதியாக வீற்றிருக்கிறான்.*

**விளக்கம்:**

வாழ்க்கை ஆனந்தமயமாக இருக்கும் வழி இங்கு சொல்லப்படுகிறது. முதன்முதலில் மனிதன் தன் இந்திரியங்களை தன் வசப்படுத்திக் கொள்ள வேண்டும்.

'வசீ' என்பதற்கான பொருள் இதுவே. இந்திரியங்கள் தம் வசத்து இல்லாவிடில் உலகமனைத்தையும் வசப்படுத்திக் கொள்ளினும் பலன் ஏதுமில்லை. முழுமையான சுகம் இந்திரியக் கட்டுப்பாடுடையவனுக்கே கிடைக்குமென்று இங்கு தெரிவிக்கப்பட்டது. ('வசீ சுகம் ஆஸ்தே'). எனவே சுகத்தைப் பெற நினைப்பவன் முதன் முதலில் தன் இந்திரியங்களை, மனதை வசப்படுத்திக் கொள்ளவேண்டும்.

அவ்வாறு வசப்படுத்தியவன் மனத்தால் எல்லாச் செயல்களின் பலனையும் விடுத்து. இத்தேகமெனும் நகரத்தில் தான் எதுவும் செய்யாதிருப்பினும், செய்விக்காமலிருப்பினும், சுகமாக இருக்கிறான். எப்போது கர்ம பலனைத் துறக்கிறானோ, கர்மாக்களைச் செய்யினும் அதில் ஒட்டாமல் இருப்பதால் செய்யாமல் இருப்பதைப் போன்றதே. இந்திரியங்கள் அவ்வவற்றின் செயல்களைச் செய்யினும், தான் பற்றின்றி சாட்சியாய் நிலையாய் நிற்பான். இங்கு 'மனஸா' என்றதால் தேகத்துடன் கர்மாக்களைச் செய்யினும், கர்மபலனைத் துறந்துச் செய்வதால் மனத்தினால், கர்ம பரித்தியாகம், கர்ம சந்நியாசம் மேற்கொண்டதைப் போன்றதேயாகும். தேகத்துடன் கர்மாக்களைத் துறத்தல் மேன்மையன்று. அது உண்மையில் நடக்காது. நடக்க இயலாது. மனதார துறப்பதே மேலானது. எல்லாவற்றையும் மனதார துறக்கும்படியே பகவான் இங்கே கூறுகின்றார். பலனை எதிர்பார்த்து, அதில் பற்று இன்மையே மனதால் மேற்கொள்ளும் கர்மசந்நியாசம். 'ஸர்வ கர்மாணி' எனச் சொல்வதால், நிஷ்காம புத்தியுடன் இருப்பதால், தேகத்தினால் எத்துணை கர்மாக்களைச் செய்து வந்தாலும் மனதால் அதன் பலனை துறந்தவர், சரீரத்தால் பல காரியங்களைச் செய்தாலும், நவ துவாரத்தையுடைய இத்தேகத்தினால்

எக்காரியத்தையும் செய்யாதிருப்பினும், செய்விக்காதிருப்பினும் சமநிலையில் சாட்சி பாவத்தில் நிலைபெற்று, ஆன்மாவால் ஒளிர்வர் என்று இங்கு போதிக்கப்பட்டது.

இதற்கு இன்னுமொரு பொருளும் சொல்லப்படுகின்றது. (இந்திரியக்கட்டுப்பாடுடைய யோகி ஆன்மாவில் நிலைபெற்று மனதினால் உடன் காட்சி பொருளான எல்லாக் காரியங்களையும் விட்டுவிட்டு தான் எதுவம் செய்யாது, செய்விக்காது சாட்சியாய் இருந்து கொண்டு இந்த தேகமெனும் பட்டணத்தில் சுகமாக வசிக்கிறான்.

மேலும் இன்னுமொரு பொருள் - மனதினால் எல்லா காரியங்களையும் (காட்சிப்பொருள்களான) தேக பட்டணத்திற்கு விட்டுவிட்டு தான் அதனைப்பற்றிய சிந்தனையின்றி ஆன்மாவில் நிலைத்திருக்கிறான்.

சுகத்தை வேண்டுபவன் இரண்டு சாதனைகளைத் தவறாது பின்பற்றவேண்டுமென்று இச்சுலோகத்தின் மூலம் தெரிகின்றது. அவையெவையெனின் (1) இந்திரியக் கட்டுப்பாடு. மனோஜயம் (2) சர்வ கர்ம பலத்தியாகம்.

'நவத்துவாரங்கள்' - கண்களின் துவாரங்கல் 2 + செவித் துவாரங்கள் 2 + மூக்குத்துவாரங்கள் 2 + நாக்கு 1 + மூத்திரத்துவாரம் 1 + மலத்துவாரம் 1 – 9 (ஸ்பர்ச துவாரம் உடலெங்கும் வியாபித்திருக்கும். அதனையும் சேர்த்தால் 10 துவாரங்கள் ஆகும்) முன் காலத்தில் பெரியபெரிய நகரங்களுக்கு துவாரங்கள் (வாயில்கள்) இருக்கும். அந் நகரத்தினுள் அரசன் இருப்பான். அவ் வாயில்கள் காக்கப்பட்டால்தான் அரசன் சுகமாக இருக்க முடியும். அவ்வாறே நவத் துவாரத்தினுள் இருக்கும் தேகத்தில் அரசனான ஜீவன் இந்திரியக் கட்டுப்பாட்டுடன் இருந்தால் மாத்திரமே சுகமாக இருக்கமுடியும். இல்லாவிடில் ஜீவனுக்கு எப்போதும் அமைதியின்மையே. (எதிரியால் ஆக்ரமிக்கப்பட்ட வாயில்களையுடைய பட்டணத்தில் வசிக்கும் அரசனைப் போல)

**வினா:**

மனிதனுக்கு சுகம் எவ்வாறு கிடைக்கும்?

**விடை:**

(1) இந்திரியங்களை வசப்படுத்தி (2) எல்லாக் காரியங்களையும் அல்லது அவற்றின் பலனையாவது மனதினால் துறந்துவிடின் சுகம் கிடைக்கும்.

**வினா:**

கர்மாக்களை சரீரத்தினால் ஒதுக்க வேண்டுமா? - மனத்தினாலா?

**விடை:**

சரீரத்தால் அல்ல மனத்தினால் மட்டுமே.

**முன்னுரை:**

கர்மா, கர்த்த்ருத்வம், இயற்கை (மாயை)யினால்தான் ஏற்படுகின்றது என்கிறார்.

**14. ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபுஹு꞉।**
**ந கர்மபலஸம்யோகம் ஸ்வபாவஸ்து ப்ரவர்ததே॥ (14)**

**சொற்பொருள்:**

ப்ரபுஹு꞉ - பரமாத்மா (ஆத்மா), லோகஸ்ய - உலகிற்கு (பிராணிகளுக்கு), கர்த்ருத்வம் - கர்த்த்ருத்வத்தை, ந ஸ்ருஜதி - உண்டு பண்ணுவதில்லை, கர்மாணி - கர்மங்களை, ந - உண்டுபண்ணுவதில்லை, கர்மபலஸம்யோகம் - கர்மபலத்துடன் தொடர்பு, ந ஸ்ருஜதி - உண்டு பண்ணுவதில்லை, ஸ்வபாவஸ்து - (தேகாபிமானவாசனைகள் மூலமான), ப்ரக்ருதியே - (ஜன்மவாசனையே), ப்ரவர்த்ததே - பிரவிருத்திக்கின்றது, (அத்தகைய கர்த்ருத்வம் முதலானவற்றை ஏற்படுத்துகின்றது).

**கருத்துரை:**

பரமாத்மா ஜீவன்களுக்கு கர்த்ருத்வமோ, கர்மாக்களையோ, கர்மபலனையோ, அவற்றுடன் தொடர்பையோ ஏற்படுத்துவதில்லை, இவற்றை இயற்கையே (இயற்கையுடன் தொடர்புடைய ஜன்மத்தொடர்பே) அக்கர்த்ருத்வம் முதலானவற்றை ஏற்படுத்துகிறது.

**விளக்கம்:**

சிருஷ்டி கர்த்தாவான பரமேசுவரன் எவற்றுக்கும் கர்த்ருத்வம் முதலியவற்றை சிருஷ்டிப்பதில்லை. இயற்கையில் பிறக்கும் அவரவர் ஜன்மாந்தர தொடர்பை அனுசரித்து மக்கள் அக்கர்மாக்களைச் செய்து, கர்த்ருத்வம் கொண்டவராய், அக்கர்மாக்களின் பலனை அனுபவிக்கின்றனர். 'அவரவர் எதனை விதைக்கின்றனரோ அதனையே அறுவடை செய்வர்' (Who Sow must reap) என்பதைப் போல அவரவர் விதைத்ததை விளைக்கின்றனர். மாங்காய் விதையை இட்டால். இனியபலனை அனுபவிக்கின்றனர். குங்குடிக்காய் விதை விதைத்தால் கசப்பான பலனை அனுபவிக்கின்றனர். பாவத்துடன் தொடர்பிருப்பின் கெட்ட வழியில் சென்று துக்கத்தை அனுபவிப்பர். புண்யத்துடன் தொடர்பிருந்தால் நல்ல காரியங்களை ஆற்றி இன்பத்தை அனுபவிப்பர். எனவே மக்கள் தத்தம் பூர்வ ஜன்ம பாவத்தினை இப்போது முயற்சி செய்து புண்யத்துடன் தொடர்பு கொண்டு அப்பாவத்தை வென்று சன்மார்க்கத்தில் முன் இடம் பெறுதல் வேண்டும். பாவம் எவ்வாறு பயிற்சியினால் தொடர்கிறதோ அவ்வாறே புண்ணியத்தையும் பயிற்சியினால் பெறமுடியும், எனவே 'என் அதிர்ஷ்டம் இப்படியுள்ளது.' என்று திகிலடையாமல், முயற்சி செய்து ஆன்மீக வழியில் நடந்து முன்னேறுதல் வேண்டும். எனவே ஜீவன். தான் மேன்மையுறுவதோ அழிவதோ. அவன் கையிலேயேயுள்ளது என்பது தெரிகிறது. இவ்விஷயம் இன்னொருவர் தொடர்பினால் ஏற்படுவதன்று. எனவே மேன்மையடைவதற்கு நிறைய வாய்ப்புகள் உள்ள இம்மனிதபிறப்பினை. ஆன்மாவை அடைவதற்கு நல்ல

வழியில் பயன்படுத்துதல், ஒவ்வொரு மனிதனின் கடமையுமாகும்.

**வினா:**

ஜீவனின் கர்மாக்களுடன் பரமாத்மாவிற்கு என்ன தொடர்பு?

**விடை:**

அவற்றுடன் பரமாத்மாவிற்கு எவ்வித தொடர்பும் இல்லை.

**வினா:**

அப்படியானால் எதனால் அவை ஜீவனுக்கு ஏற்படுகின்றன?

**விடை:**

இயற்கையினால் (தத்தம் பூர்வ ஜன்ம தொடர்பால்).

**முன்னுரை:**

ஜீவனின் புண்யபாவங்களினால் இறைவனுக்கு தொடர்பில்லை என்பதைப்பற்றி மேலும் கூறுகிறார்.

**15. நாதத்தே கஸ்யசித் பாபம் ந சைவ சுக்ருதம் விபுஹு।**
**அக்ஞா னேனாவ்ருதம் ஞானம் தேன முஹ்யந்தி ஜந்தவஹ॥**
**(15)**

**சொற்பொருள்:**

விபுஹு - எங்கும் நிறைந்துள்ள இறைவன் (ஆத்மா), கஸ்யசித் - எவனுடைய, பாபம் - பாவத்தை, ந ஆதத்தே - வாங்கிக் கொள்வதில்லை, ஸுக்ருதம் ச ஏவ - புண்ணியத்தையும், ந - வாங்கிக் கொள்வதில்லை, அஞ்ஞானேன - அஞ்ஞானத்தினால், ஞானம் - ஞானம். ஆவ்ருதம் - மூடப்பட்டிருக்கின்றது, தேன - அதனால், ஜந்தவஹ - ஜந்துக்கள், முஹ்யந்தி - மோகமடைகின்றன.

**கருத்துரை:**

பரமாத்மா எவரின் பாவத்தையோ, புண்ணியத்தையோ வாங்கிக் கொள்வதில்லை, அஞ்ஞானத்தினால் ஞானம் மூடப்பட்டிருக்கின்றது. அதனால் ஜீவர்கள் மயக்கமடைகிறார்கள் (பிரமை).

**விளக்கம்:**

ஒருவனின் புண்யத்துடனோ, பாவத்துடனோ ஈசுவரனுக்கு எவ்விதத் தொடர்பும் இல்லை. அப்பாவ புண்ணியங்களோ, அவற்றின் பலனையோ அவன் ஸ்வீகரிப்பதில்லை. அவன் சமன்வயன், சாட்சி, சர்வ பூதங்களின் சாட்சியாய் நின்று அவர்கள் செய்யும் பாவபுண்ணியங்கலைக் காண்கிறான். அப்படியாயின், ஜீவர்கள் எக்காரணத்தால் மோகமடைகிறார்கள் என்ற கேள்விக்கு ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா இரண்டாம் பாதத்தில் இவ்வாறு விடையளித்துள்ளார்.

ஒவ்வொரு ஜீவனும் சச்சிதானந்த ரூபமான ஆன்மாவேயன்றி காணப்படும் காட்சிப் பொருள்களல்ல. அழிவற்ற பரபிரம்மமேயன்றி அழியக் கூடிய உபாதியல்ல. ஆயின், அவ்வுண்மை பல பிறப்பாகத் தொடர்ந்துவரும் அஞ்ஞானத்தினால் மறைக்கப்பட்டு ஜீவனுக்குப் புலப்படாமல் இருக்கின்றது. தன் உண்மை உருவான ஆன்மாவை அவன் மறந்து தன்னை தேகம் முதலான வேற்றுப்பொருளாகக் கருதுகிறான். அதன் காரணமாக பிறப்பு இறப்புடன் கூடிய சம்சார பந்தத்தில் சிக்கி துக்கத்தை அடைகிறான். ஆயின் இந்த பந்தம் நிலையல்ல, (இவ்விஷயம் அடுத்த சுலோகத்தில் சொல்லப்பட்டுள்ளது) எந்த கணத்தில் ஜீவன் முயற்சி செய்து ஆத்மஞானம் பெறுகிறானோ, அந்தக் கணத்திலேயே அஞ்ஞானம் விலகி உண்மையான ஆத்ம ஸ்வரூபம் புலப்படும். அதுவே மோக்ஷம். எனவே தன்னை மறைத்துள்ள அவித்தையை, அஞ்ஞானத்தை விலக்குவதே ஜீவனின் முதல் பணியாகுமேயன்றி புதிதாக ஆத்மாவையோ தெய்வத்தையோ அடைவதில்ல.

ஜீவர்கள் அவரவர் புண்யபாவங்களை அவர்களே செய்துவிட்டு அதன் பலனைகளையும் அவர்களே அனுபவிக்கின்றனர். இதில் இறைவனுக்கு எந்தவிதமான சம்பந்தமும் இல்லை. அப்பாவ புண்ய பலன்களை அவர் ஏற்பதில்லை. எனவே இறைபக்தியுடன் தன்னை மூடியுள்ள அஞ்ஞானத்தை ஞானத்தால் விலக்கி சுய முயற்சியால் அகற்றி ஜீவன் முக்தியடைதல் வேண்டும்.

ஜீவன் எதனால் துக்கமடைகிறானோ அதற்கான காரணம் இச்சுலோகத்தில் சொல்லப்பட்டது, அத்துக்க நிவாரணத்திற்கான உபாயம் அடுத்துவரும் சுலோகத்தில் சொல்லப்படுகிறது.

**வினா:**

ஜீவர்கள் துக்கமடைவதற்கான காரணம் யாது?

**விடை:**

அஞ்ஞானத்தினால் அவர்களின் ஞானம் (சின்மய ஆத்மரூபம்) மறைக்கப் பட்டிருக்கிறது. அதனால் ஜீவர்கள் துக்கமடைகிறார்கள்.

**முன்னுரை:**

ஜீவர்களின் அஞ்ஞானம் எவ்வாறு விலகும் என்பதை விவரிக்கிறார்.

**16. ஞானேன து ததஜ்ஞானம் யேஷாம் நாசிதமாத்மனஹ|**
**தேஷாமாதித்யவஜ்ஞானம் ப்ரகாசயதி தத்பரம்|| (16)**

**சொற்பொருள்:**

ஆத்மனஹ - ஆத்மாவைப் பற்றிய, ஞானேன து - ஞானத்தினால், யேஷாம் - யாருடைய , தத்ஞானம் - அந்த ஞானம், நாசிதம் - நாசமாக்கப்படுகிறதோ, தேஷாம் - அவர்களுக்கு, ஞானம் - ஞானம், ஆதித்யவத் - சூரியனைப் போன்று, தத்பரம் - அந்த பரப்பிரம்மத்தை, ப்ரகாசயதி - பிரகாசிக்கச் செய்கிறது (சுயரூப அனுபவத்தைப் பெறச் செய்கிறது).

**கருத்துரை:**

ஆத்ம ஞானத்தினால் எவரின் அஞ்ஞானம் அழிக்கப் படுகின்றதோ, அவரின் ஞானம் சூரியனைப் போல பரப்பிரம்ம சொரூபத்தைப் பிரகாசிக்கச் செய்கின்றது. (சுஸ்வரூப அனுபவத்தை பெறச்செய்கின்றது)

**விளக்கம்:**

முன் சுலோகத்தில் ஜீவனைப் பாதிக்கும் 'ரோகம்' சொல்லப்பட்டது, இச்சுலோகத்தில் அதற்கான மருந்து சொல்லப்படுகிறது துக்கமே அந்த வியாதி, ஞானமே அதற்கான மருந்து. துக்கத்திற்குக் காரணம் அஞ்ஞான மென்று இதுவரை சொல்லப்பட்டது; துக்கம் மறைய வேண்டுமாயின், அஞ்ஞானம் அழிய வேண்டும். அது எவ்வாறு நீங்கும்? ஞானத்தினால், தத்துவ விசாரணையினால், மகா வாக்கியங்களின் விசாரணையினால், 'ஆத்மனஹ் ஞானேன' என்று சொல்வதால், ஆத்மஞானத்தை முயற்சிசெய்து சிரவணம், மனனம், தியானம் இவற்றால் எவர் பெறுகிறார்களோ அத்தகையோரது அக்ஞானம் ஞானத்தினால் அழிகின்றது என்பது தெளிவாகின்றது.

"ஆதித்யவத்" - கருமையான மேகத்தால் சூரியன் சூழப்பட்டிருக்கும் போது, உலகம் இருளில் மூழ்கியிருக்கிறது. ஆயின் பெருங்காற்றால் அம்மேகம் விலகிப் போனால் சூரியன் ஒளிவிட்டு பிரகாசிக்கின்றது, அதனால் இருள் மறைகிறது. அவ்வாறே ஆன்ம வஸ்து சூரியனைப் போன்று சுயப்பிரகாசமாய் ஒளிவிட்டுக் கொண்டிருக்கிறது. அஞ்ஞானம் எனும் மேகம் அதனை மறைத்திருப்பதால் ஆன்மா புலப்படுவதில்லையாதலால் ஜீவன் அநாதி காலத்தினின்றே துக்கமடைகின்றான், ஜீவன் செய்ய வேண்டியதென்ன வெனின், ஆத்மாவைப் புதிதாக சிருஷ்டி செய்யவேண்டிய தில்லை, அதனை மறைத்துள்ள அஞ்ஞான மேகத்தை ஆத்மஞானமெனும் பெருங்காற்றால் விலக்க வேண்டுவதே, அதன்பின் ஆத்ம ரூபம் சூரியனைப் போன்று தானே ஒளிவிட்டு பிரகாசிக்கும். அதுவே மோக்ஷ நிலை.

அல்லது, சூரியன் எல்லாப்பொருள்களையும் பிரகாசிக்கச் செய்வதைப்போல், ஞானத்தினால் அஞ்ஞானம் விலகியவர்களிடம், அத்தகைய ஞானம் பரமாத்மாவை பிரகாசிக்கச் செய்கிறது. அனுபூதி அடையச் செய்கிறது, ஞானம் பரமாத்மாவை பிரகாசிக்கச் செய்கின்றது என்றல்ல பரமாத்மா ஜடம் என்று பொருளல்ல, அது சுயம் பிரகாசமானது, அதனை பிரகாசிக்கச் செய்ய வேறொன்று தேவையில்லை, 'தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி' என்றபடி அதனால் தான் எல்லாமே பிரகாசிக்கின்றது. எனவே ஞான ரூபமான புத்திவிருத்தியினால் அஞ்ஞான விருத்தி அழிந்து அதிஷ்டானத்தில் உள்ள ஆத்மா ஜீவனுக்குப் அனுபூதி அளிக்கின்றது. எனவே 'ஞானம் ஆன்மாவை பிரகாசிக்கச் செய்கின்றது' என்பது அதன் பொருள், தீபத்தின் மேல் பானையை கவிழ்த்தால் அதன் ஒளி வெளியே தெரிவதில்லை. இதுவே அஞ்ஞான நிலை. கழியால் பானையை உடைத்துவிட்டால் தீபம் அதுவே ஒளி விட்டுப் பிரகாசிக்கும். இதுவே ஞானநிலை. ஞானமெனும் மலையால் அஞ்ஞானமெனும் வலயத்தினால் ஆன குடத்தை அழித்துவிட்டால் ஆத்மா எனும் ரூபம் அதுவே ஒளிவிட்டு புலப்படும். எனவே ஜீவர்கள் அநாதி காலமாகத் தொடரும் மோகத்தினின்றும் தப்பித்துக் கொண்டு, துக்கமற்றவர்களாக வேண்டுமெனின் ஆத்ம ஞானம் மிகவும் தேவையென்று இச்சுலோகத்தால் புலப்படுகிறது. அதனால் நிஷ்காமகர்மா, பக்தி, தியானம், வைராக்கியம் முதலான சாதனைகளால் எவ்வாறேனும் அதனைப் பெறுவதற்கு முயற்சி செய்வதே மோக்ஷத்திற்கு வழி.

"யேஷாம்" - எனப்பட்டதால், எந்த சாதியினராயினும், அத்தகைய ஞானத்தைப் பெற்றுவிட்டால் மேன்மையடைவர் எனத் தெளிவாக்கப்பட்டதால் ஒவ்வொரு ஜீவியின் இதயத்திலும் ஆத்மா தானே ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் என்பது தெரிகின்றது. (Each soul is potentially divine) அஞ்ஞானமெனும் வலயத்தினால் அது மூடப்பட்டிருக்கிறது. அவ்வலயத்தை எவர் முயற்சியினால் ஞானத்தினால்

விலக்குகிறார்களோ அவருக்கு ஆன்மசொரூப அனுபவம் ஏற்படும். (அவர் எக்குலத்தவராயினும் சரியே.)

ஒவ்வொரு ஜீவியும் ஒரு சூரியனுக்கு ஒப்பாவான். 'ந தத்ர ஸூர்யோ பாதி' என்பதைப் போல் காட்சிப் பொருளான சூர்யன் ஆன்மா எனும் சூரியனிடம் அழிந்துவிடுவான். ஆயினும் மக்கள் இருளில் அகப்பட்டு அவதியுறுகின்றனர். இதுவே ஜகன்மாயை, எனவே சத்குருவான மகான்களினால், சத்சாஸ்திரங்களின் மூலம், சர்வேசுவரனிடம் கொண்ட பக்தியினாலும் அம் மாயையை அழிக்கும் ஆத்ம ஞானமெனும் உபாயத்தினை அறிந்து மக்கள் ஆன்மசாக்ஷாத் காரமடைந்து தன்மயமடைதல் வேண்டும். 'தத்பரம்' - அப்பரப்பிரம்ம சொரூபம். (தத் - அந்த) பரம் - பரபிரம்மஸ்வரூபம். (2) அல்லது, தத் - அந்த அஞ்ஞானத்தைவிட, பரம் - வேறான ( பரமாத்மாவை).

**வினா:**

அஞ்ஞானம் எவ்வாறு விலகும்?

**விடை:**

ஆத்ம ஞானத்தினால்.

**வினா:**

அதன்பின் என்னவாகும்?

**விடை:**

சித்ரூபனான ஆத்மா (ஆன்ம சூரியன்) ஒளிவிட்டு பிரகாசிக்கும் (அனுபூதி அளிக்கும்).

**முன்னுரை:**

அத்தகைய ஆத்மஞானம் எவ்வாறு கிடைக்கும், அதனைக் கூறுகிறார்.

**17. தத்புத்தயஸ் ததாத்மானஸ் தந்நிஷ்டாஸ் தத்பராயணாஹா।
கச்சந்த்யபுனராவ்ருத்திம் ஞானநிர்தூதகல்மஷாஹா॥ (17)**

**சொற்பொருள்:**

தத்புத்தயஹ - அப்பரமாத்மாவினிடத்தேயே புத்தியை வைப்பார்கள், தத் ஆத்மானஹ - பரமாத்மாவிடத்தேயே மனத்தை செலுத்துபவர்களும், தந்நிஷ்டாஹா - பரமாத்மாவிடத்தேயே நிஷ்டையுடன் இருப்பவர்களும், தத்பராயணாஹா - அப் பரமாத்தமாவையே புகலிடமாகக் (சரணடைந்து) கொண்டவர்க்கும், ஞான நிர்தூத கல்மஷாஹா - (ஸன்தஹ) ஞானத்தால் பாவங்களை தொலைத்தவர்களும், அபுனராவ்ருத்திம் - திரும்பவும் பிறவாமை நிலையை (மோக்ஷத்தை), கச்ந்தி - அடைகிறார்கள்.

**கருத்துரை:**

பிரம்மத்தில் புத்தியை வைப்பவர், மனதை நிலைநிறுத்தியவர், பிரம்ம நிட்டையுடையவர், அவரையே புகலிடமாகக் கொண்டு சரணடைந்தவர், ஞானத்தால் பாவங்களை தொலைத்தவர் ஆகியோர் மீண்டும் பிறவாத (புனர் ஜன்மம் இல்லாத) நிலையான மோக்ஷபதவியை அடைகிறார்கள்.

**விளக்கம்:**

இச்சுலோகத்தில் பகவான் ஆத்ம ஞானத்தை அடைவதற்கான நல்ல சாதனை முறைகளைக் கூறுகிறார். மோக்ஷ பதவியை வெறும் வாய் வார்த்தைகளால் பெற்றுவிட முடியாது. தீவிரமான சாதனை, தொடர்ந்த பயிற்சி இவற்றால் மாத்திரமே அதனை அடைய முடியும். இதற்குமுன் சுலோகத்தில் ஞானத்தினால் அஞ்ஞான மேகம் மறைந்து ஆத்மாவான சூரியன் தோன்றும் எனப்பட்டது. அத்தகைய ஞானம் எவ்வாறு கிடைக்கும் என்ற வினாவிற்கு விடையை இங்கு பகவான் அருளுகின்றார்.

எக்காரியமாயினும் ஒருமுனைப்பாடு, தீவிர எண்ணம், தன்வயப்படுதல் இவற்றால் எளிதாக சாதிக்கமுடியும், அவ்வாறே ஆன்மா எவனும் இலக்கைச் சாதித்துப் பெற நினைப்பவர், அவ்வான்மாவிடத்திலேயே புத்தியுடன்,

மனத்துடனும், நிட்டையுடன் அதனையே சரணடைந்து, அதன் மீதே ஈடுபாட்டுடன் நடந்து கொள்ளவேண்டும் என்று இங்கு போதிக்கப்பட்டுள்ளது. (ப்ரமரகீட நியாயத்தின்படி கீடகம் (பூச்சி) வண்டு என்ற சிந்தனை செய்து 'ததாகார' நிலையை' அடைதல் உலக வழக்கு. அவ்வாறே மனதும் எதனைக் குறித்து மிகத் தீவிரமான எண்ணம் கொண்டுள்ளதோ, அதிலேயே தன்வயப்படுகின்றது. மகனீயர்கள் அனைவரும் இத்தகைய தீவிரசாதனை செய்தே ஐக்கிய நிலையை விரைவாக அடைகின்றனர். அவ்வாறின்றி, மனதினுள் ஒரு பாகத்தை காட்சிப் பொருள்களின் சுகங்களின் மீதும், இன்னுமொரு பாகத்தை தெய்வ சிந்தனையில் செலுத்தினால் ஒருமுனைப்பாடு, ததேகநிட்டை இல்லாத காரணத்தால் பகவத் சாக்ஷாத்காரம் உடனே நேர்வதில்லை. எனவே பரமாத்மாவை அடைவதற்கு சாதகன் தன் சித்தத்தினை முழுமையாக ஆன்மசொரூப இலக்கிலேயே ஈடுபடுத்தி, தன் அனைத்து சக்தியையும் ஒருங்கிணைத்து அதிலேயே செலுத்த வேண்டும்.

'அபுனராவ்ருத்தம்' - புனராவ்ருத்தம் என்றால் மறுபடியும் பிறத்தல். மீண்டும் சம்சார பந்தத்தில் சிக்குதல். அது இல்லாமை அபுனராவ்ருத்தி. அதாவது மரணமில்லாத பெருவாழ்வான கைவல்ய பதவி, அத்தகைய உயர்ந்த பதவி எவருக்குக் கிடைக்கும்? மனதில் உள்ள மாசு நீங்கியவர்க்கு, பாவம் தொலைந்தவர்க்கு, அஞ்ஞானம், அவித்தை நீங்கியவர்க்கு, அம்மாசு எவ்வாறு நசித்துப் போகும்? ஞானத்தினால். எனவேதான் 'ஞான நிர்தூ கல்மஷாஹா' எனப்பட்டது. ஆத்மஞானத்தால் மாயா தோஷம் (மாசு) எளிதாக நசித்துப்போகும். ஜீவனிடத்து பாவமோ, குற்றமோ இருக்கும்வரை, ஆன்மஞானம் ஏற்படாது. எனவே அவற்றை முதலில் ஞானத்தினால் போக்கிக் கொள்ளவேண்டும். அத்தகைய ஞானமோ, நிரந்தரமான ஆன்மசிந்தனையால், ஆன்மநிட்டையால், கிடைக்கும்.

எனவே சோர்வின்றி பெருமுயற்சியுடன் ஆத்மபதவியை நம் கைவசம் வைத்துக் கொள்ளவேண்டும். நிலையற்ற உலகப்

பொருள்களை சம்பாதிப்பதில் சாமான்ய மனிதர்கள் எத்துணையோ மன ஒருமைப்பாட்டுடன் இரவும் பகலும் முயற்சி செய்கின்றனர் அல்லவா? அவ்வாறிருக்கையில் நிலையான, துக்கமற்ற, மறுபிறப்பற்ற மோக்ஷபதவிக்காக, தெய்வத்திற்காக, ஒருமுனைப்பாட்டுடன் தீவிரமுயற்சியை ஏன் மேற்கொள்ளலாகாது? தன் சக்தியை, யுக்தியை, பலத்தினை, நிஷ்டையை காட்சியினின்றும் கடவுளிடத்து மாற்றினால் போதும். மோக்ஷம் உள்ளங்கை நெல்லிக்கனியாகும் எனவும் தெய்வத்தினிடத்தில் (ஆத்மாவில்) மிகுந்த ஈடுபாடு, அக்கறை இவற்றுடன் ததேக நிட்டையுடன் தத்வ விசாரணைகள் செய்தவரின் ஆத்ம ஞானத்தைப் பெறுதல் வேண்டுமென பகவான் வேண்டிக் கொள்கிறார். எனவே முமுக்ஷுக்கள் பகவானின் எண்ணப்படி நிரந்தரப்பயிற்சியினால் ஆன்ம நிட்டையை அடைந்து பிறவாமையெனும் கைவல்ய பதவியை கைப்பற்றுதல் வேண்டும்.

இங்கு 'தத்' என்றால் முன் சுலோகத்தில் 'தத்பரம்' என்று வர்ணிக்கப்பட்ட பரமாத்மா என்று பொருள். கீதையில் அப்பரமாத்மா நிலை (1) அக்ஷய சுகம் (2) நிர்வாண பிரம்மம் (3) உத்தம சுகம் (4) பரமகதி (5) பரமதாமம் (6) அவ்யய பதம் - முதலான பெயர்களால் வர்ணிக்கப்பட்டுள்ளது.

**வினா:**

மோக்ஷத்தின் சொரூபம் எத்தகையது?

**விடை:**

மறுபிறவியற்ற நிலை - பிறப்பற்ற நிலையான ஆனந்த பதவியே அது.

**வினா:**

அது எவருக்குக் கிடைக்கும்?

**விடை:**

அஞ்ஞானமெனும் மாசு நீங்கியவர்க்கு, பாவந் தொலைந் தவர்க்கு மாத்திரமே அது கிடைக்கும்.

**வினா:**

பாவம் எவ்வாறு நசித்துப்போகும்?

**விடை:**

ஆத்மஞானத்தினால் பாவம் ஒழியும்.

**வினா:**

ஆத்ம ஞானம் எவ்வாறு கிட்டும்?

**விடை:**

ஆன்மாவிலேயே புத்தியுடன், ஆன்மாவைப் பற்றிய சிந்தனையுடன் இருத்தல், ஆன்மாவிலேயே மனத்தை நிலை நிறுத்துதல், ஆன்மாவிலேயே நிட்டையுடன் இருத்தல் ஆன்மாவையே புகலிடமாக்க கொண்டிருத்தல் ஆகியவற்றின் மூலமாக அவை கிடைக்கும்.

**முன்னுரை:**

அத்தைகைய ஞானிகளின் சமநோக்கினை பற்றி வர்ணிக்கின்றார்.

**18. வித்யா வினயஸம்பன்னே ப்ராஹ்மணே கவிஹஸ்தினி|**
**சுனி சைவ ச்வபாகே ச பண்டிதாஹ் ஸமதர்சினஹ|| (18)**

**சொற்பொருள்:**

வித்யாவினயஸம்பன்னே - கல்வியும், பணிவும் பொருந்திய, ப்ராஹ்மணே - பிராம்மணனிடத்தும், கவி - பசுவினிடத்தும், ஹஸ்தினி - யானையிடத்தும், சுனி ச ஏவ - நாயினிடத்தும், ச்வபாகே ச - நாயினைச் சமைத்து உண்கின்ற சண்டாளனிடத்தும், சமதர்சினஹ - சமதிருஷ்டியுடையவராய் இருக்கின்றனர். (அவர்களைச் சமமாகக் கருதுகின்றனர்), பண்டிதாஹா - ஞானிகள் (எனச் சொல்லப்படுகின்றனர்).

**கருத்துரை:**

கல்வி, பணிவு இவற்றுடன் கூடிய பிராம்மணனிடத்தும், பசுவினிடத்தும், யானையிடத்தும், நாயினிடத்தும், நாயினைச்

சமைத்து உண்ணும் சண்டாளனிடத்தும் சமதிருஷ்டி யுடையவரே (அவர்களைச், சமமாகக் கருதுபவரே) ஞானிகள் (ஆத்ம பாவம் உடையவர்) என்று சொல்லப்படுகின்றனர்.

**விளக்கம்:**

ஞான நிட்டையர் எல்லாவற்றையும் ஆன்மசொரூப மாகவே காண்பர். எனவே எல்லாப் பிராணிகளிடத்திலும் ஆத்மாவையே கண்டு சமபாவத்துடன், அன்பை, தயையைப் பொழிவர். ஞானிகளின் 'சர்வபூதங்களிடத்தும் சமதிருஷ்டியைத் தெரிவிக்கும் முகமாக இங்கு மனிதர்களிலும், சில பிராணிகளையும் உதாரணமாகக் காட்டுகிறார், மனிதர்களில் உத்தம வர்க்கத்தினரின் பிரதிநிதியாக கல்வியும் பணிவும் நிறைந்த பிராம்மணன் உதாரணமாக கூறப்பட்டான். அவ்வாறே கீழ்மக்களாக கருதப்படும், நாயைச் சமைத்து உண்ணும் சண்டாளர்களைக் கூறினார். இவ்விருவரையும் மனித சமூகத்தில் உயர்ந்தவரையும் தாழ்ந்தவரையும் காட்டியதால் மனித சமூகமனைத்தும் நிரூபிக்கப்பட்டது போலாகும். அவ்வாறே விலங்குகளில் உயர்ந்த பசு உத்தம வர்க்கத்தையும், யானை மத்திய வர்க்கத்தையும், நாய் கீழ் வர்க்கத்தையும் காட்டும், எனவே அம்மூன்றையும் எடுத்துக்காட்டுவதால் விலங்கினம் அனைத்தையும் தெரிவித்ததாகும். இவர்களனைவரையும் சமமாகக் கருதுபவனே ஞானி, பண்டிதன். சாதாரணமாக பண்டிதன் என்றால் கல்வி கேள்விகளில் சிறந்தவன் என மக்கள் கருதுவர். ஆயின் பகவான் இங்கு சமநோக்கு உடைவனையே பண்டிதன் என்கிறார். இத்தகைய சமநோக்கு உடையவன் கல்வியற்ற வராயினும் மகாபண்டிதனே யாவான். அத்தகைய நோக்கு இல்லாதவன் எத்தகைய அறிவு உடைவனாயினும் 'ஆன்மீக நோக்கில் அஞ்ஞானியே யாவான்.

மக்களில் சிலருக்கு தேகதிருஷ்டி., சிலருக்கு மனோதிருஷ்டி மேலும் சிலருக்கு ஆன்மதிருஷ்டி இருக்கும். தேகதிருஷ்டியுடையவன், அதமன், ஒரு பிராணியைப் பார்க்கையில் அப்பிராணியின் தேகஅழகு, அளவை இவற்றையே பார்ப்பர். மனோதிருஷ்டி உடையவர்

இடைத்தரத்தினர். இவர்கள் பிராணியின் மனோபாவம், வித்தை, கவித்வம் இவற்றைப் பார்ப்பர். இனி ஆன்ம திருஷ்டியுடையவர்கள் மேலோர். அவர்கள் எவ்வுயிரைப் பார்க்கினும் அவற்றின் உள்ளிருக்கும் ஆன்மாவையே பார்க்கின்றனர். தேகம், மனம் இவை வெவ்வேறாயினும், மாற்றங்களை அடைவதாயினும் எல்லா ஜீவர்களுக்கும் ஆன்மா ஒன்றே, எனவே அத்தகையோர் எல்லா பிராணிகோடிகளிடத்தும் சமநோக்கு உடையவராய் இருப்பர். மக்களில் பலரும் முன் சொன்ன, மத்திம, அதம நிலையைச் சேர்ந்தவராகவே உள்ளனர். உத்தம வர்க்கத்தைச் சேர்ந்தவரான ஞானிகள் மிகவும் அரிதாகவே உள்ளனர். அத்தகைய ஞானியரைப் பற்றியே இச் சுலோகத்தில் குறிப்பிடப்பட்டது.

பிரேமையென்னும் தெய்வ குணத்தினை மனிதர்களிடத்து மட்டுமே காட்டாமல், விலங்கினத்திடமும் அதனை விரிவாக்க வேண்டுமென இச்சுலோகம் தெரிவிக்கின்றது. அதுமட்டுமன்று, எல்லாப் பிராணி கோடிகளிடத்தும் அன்பினைச் செலுத்துதலே ஆதர்ச மனிதனின் சின்னம். எனவேதான் இங்கு விலங்கினத்தில் சிலவற்றையும் சேர்த்துக் கூறினார். பசுவினிடத்தும், யானையிடத்தும், நாயினிடத்தும், கிருமிகளிடத்தும், புழு பூச்சிகளிடத்தும், அன்பு, தயை இவை ஏற்பட வேண்டும். இதுவே பரந்த நோக்கு. இதுவே ஆன்ம திருஷ்டி. இத்தகைய விரிந்த நோக்கையே கீதை போதிக்கின்றது. விரும்புகின்றது. எனவே முமுக்ஷுவானவன் பகவான் தெரிவித்த இத்தகைய விசாலமான ஆன்ம திருஷ்டியை வழக்கப்படுத்திக் கொள்ளவேண்டும். எந்தப் பிராணியை நோக்கினும் அதன் உள்ளிருக்கும் ஆத்மாவையே காணுதல் வேண்டும். அப்போதே எல்லாப் பிராணிகளிடத்தும் முழுமையான தயை உண்டாகும். எல்லா மனிதர்களிடத்தும் சகோதரத்துவம் (Fraternity) நல்லதேயாயினும் அதுமட்டும் போதாது. இன்னும் ஒருபடி மேலே சென்று ஸர்வாத்ம திருஷ்டியை வழக்கப்படுத்திக் கொள்ளவேண்டும். அதாவது எல்லாப் பிராணிகளிடத்தும் தன் ஆன்மாவையே காண்பதற்கு முயல வேண்டும். இத்தகைய உலக அன்பே இச்சுலோகத்தில் தெரிவிக்கப்பட்டது. ஒரு சரீரத்தில் கண், மூக்கு, செவி

முதலான வெவ்வேறு அவயவங்கள் இருப்பினும், அனைத்தின்மீதும் மனிதனுக்குச் சமமான பிரேமை, ஆசை எவ்வாறு இருக்கின்றதோ, அதில் ஏதேனும் ஒன்றிற்கு குறை ஏற்படினும் தனக்கே ஏற்பட்டாற்போல் பாவித்து அவ்வலியைத் தீர்ப்பதற்கு முயற்சிப்பானோ அவ்வாறே உலகமனைத்தும் ஒரே ஆன்மாவின் சரீரமென்று பாவித்து எல்லா ஜீவர்களிடமும் சமநோக்கு கொண்டு இருத்தல் வேண்டுமென்றும், அத்தகையோனே ஞானியென்றும் இங்கு கூறப்பட்டது.

ஒருவன் ஞானியா, இல்லையா, பண்டிதனா இல்லையா, என்று பரிசீலித்துக் கொள்ள இச்சமநோக்கே ஒரு அடையாளம். 'ஆத்மா ஸர்வ வியாபி' என்னும் கொள்கையைக் கூறுவோர் சர்வபூத தயை, சமத்துவம் இன்றி யிருப்பின் அவர்களது 'வரட்டு வேதாந்தமே' ஆகும். எனவே சமநோக்கினை பயிற்சி செய்து, அனுஷ்டான வேதாந்திகளாக மாறுதல் வேண்டும். இச்சுலோகத்தில் நடைமுறை வேதாந்தம் (Practical Vedanta) நன்கு தெளிவாக்கப்பட்டுள்ளது.

**வினா:**

பண்டிதன் யார்?

**விடை:**

(1) வித்தை, பணிவு உடைய பிராம்மணர்களிடம் (2) பசுவினிடத்து (3) யானையிடத்து (4) நாயினிடத்து (5) நாயைச் சமைத்து உண்ணும் சண்டாளனிடத்து - சமநோக்கு கொண்டிருப்பவனே பண்டிதன், ஞானி.

**19. இஹைவ தைர்ஜிதஹ் ஸர்கோ யேஷாம் ஸாம்யே ஸ்திதம் மனஹ!**
**நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம தஸ்மாத் ப்ரஹ்மணி தே**
**ஸ்திதாஹா!! (19)**

**சொற்பொருள்:**

யேஷாம் - யாருடைய, மனஹ - மனது, ஸாம்யே - சமநோக்குடன (நிச்சல சம நிலையில், அல்லது ஸர்வ

பூதங்களிடத்தும் ஆன்மாவை சமமாகப் பார்ப்பதில்) ஸ்திதம் - நிலையாக இருக்கின்றதோ, தைஹி - அவர்களினால், இஹஏவ - இம்மையிலேயெ, (இந்த சரீரம் உள்ளபோதே), ஸர்கஹ - பிறப்பு இறப்புடன் கூடிய சம்சாரம், ஜிதஹ - வெல்லப்பட்டது, ஹி - ஏனெனில், ப்ரஹ்மா - பிரம்மம் (ஆத்மா), நிர்தோஷம் - தோஷமற்றது, சமம் - சமமானது, தஸ்மாத் - ஆகையினால், தே - அவர்கள், ப்ரஹ்மணி - பிரம்மத்தில், ஸ்திதாஹா - நிலைத்தவர்களாகிறார்கள்.

**கருத்துரை:**

எவரின் மனம் சமநோக்குடன் (சலனமற்ற சமநிலையில், அல்லது எல்லாப் பிராணிகளிடத்தும் ஆன்மாவைக் காணுவதில்) நிலைத்திருக்கிறதோ, அத்தகையோர் இம்மையிலேயே பிறப்பிறப்பெனும் சம்சாரத்தை வென்றவராகின்றனர். ஏனெனில் பிரம்மம் தோஷமற்றது, சமமானது. எனவே (சமத்துவத்தில் நிலை பெற்றவர்) அவர்கள் பிரம்மத்தில் நிலைத்தவரேயாவர்.

**விளக்கம்:**

பிறப்பிறப்புடன் கூடிய சம்சாரத்தைத் தாண்டுவதற்கு, பந்தத்தினின்றும் விடுபடுவதற்கான உபாயம் இங்கு காட்டப்படுகின்றது. பந்தத்திற்கோ, மோக்ஷத்திற்கோ மனதே காரணம். மனம் மாசுற்று இருப்பின் பந்தம், தூய்மையாக இருப்பின் மோக்ஷம். மனம் சபலமுற்றால் பந்தம். சலனமற்றிருப்பின் மோக்ஷம் - எனவேதான் பகவான் எவர் மனது சமமாக (In the state Equilibrium) எல்லாப் பிராணிகோடிகளினிடத்தும் சமநோக்குடன் இருக்கிறதோ அத்தகையோர் இயற்கையை வென்றவரே என்று கூறுகின்றார். ஏனெனில் பரப்பிரம்மம் தோஷமற்றது, சமமானது' (நிர்தோஷம் ஹி ஸமம்); எவர் மனம் அவ்வாறு தோஷமற்று, சமமாக இருக்குமோ, அவர்கள் தவறாது அப்பிரம்மத்திலேயே நிலைத்தவராவர் (ப்ரஹ்மணி தே ஸ்திதாஹா) அதாவது மோக்ஷத்தை அடைவர். நல்ல ஒரே ரகப் பொருளினால் செய்யப்படின் ஒரே ரகப் பொருளே கிடைக்குமேயன்றி வேற்று

ரகப் பொருள் அல்ல. நீரில் நீரே கலக்கமுடியுமே தவிர. எண்ணை கலவாது, எண்ணையில் எண்ணைகலக்குமே தவிர, நீரல்ல, அவ்வாறே பிரம்மத்துடன் ஒன்றவேண்டுமெனின், அல்லது பிரம்மத்தில் லயித்தல் வேண்டுமாயின் அப்பிரம்மத்தின் இலட்சணங்கள் உடைய வஸ்துவே வேண்டும். அப்பரப்பிரம்மத்தின் இலட்சணங்கள் இரண்டு இங்கு கூறப்பட்டுள்ளது. (1) தோஷமற்றது (2) சமத்துவம் எனவே மனதை அவ்விரண்டு நற்குணங்களை பெற முயற்சித்து, அவற்றை அடைந்து அதன்பின் அப்பிரம்மத்தில் லயிப்பதற்கு அருகதையுடையதாகிறது. இவ் வுண்மையையே பகவான் இச்சுலோகத்தில் விவரிக்கின்றார்.

**"சத்வபுருஷயோஹ் சுத்திஸாம்யே கைவல்யம்"**

என்று பதஞ்சலி மகரிஷி கூறுகின்றார். அதாவது தூய்மையில், விஷயமற்ற தன்மையில், சமத்துவத்தில் மனம், பிரம்மத்துடன் சமான நிலையில் எப்போது அடைகிறதோ அதுவே மோக்ஷநிலையென்று பொருள், மனம் எப்போதும் நிர்மலமாய், முறையாக ஆத்மாவைப் போன்றே (பிரம்மத்தைப்போன்று) மிகமிகத் தூய்மையாக, தோஷங்கள் எதுவுமின்றி, சமத்துவத்தை அடைகின்றதோ அப்போதே மனிதன் கைவல்யத்தை அடைவான் என்பது பொருள். மோக்ஷத்தை அடைவதற்கு அதுவே நல்லவேளை.

**ந மோக்ஷோ நபஸஹ் ப்ரஷ்டே பாதாளேந பூதலே**
**மோக்ஷோ ஹி சேதோ விமலம் ஸம்யக் ஞான விபோதிதம்!!**

**(வசிஷ்ட கீதை)**

என்று வசிஷ்ட மகரிஷி கூறியுள்ளார்.

மோக்ஷமென்பது ஆகாசத்திலோ, பாதாளத்திலோ பூதத்திலோ இல்லை சம்யக் - ஞானத்தினால் ஏற்படும் நிர்மல சித்தமே மோக்ஷம்' என்பது அதன் பொருள். எனவே ஒவ்வொருவரும் அவரவர் மனத்தை முயற்சியினால் தூய்மைப்படுத்திக்கொண்டு, சமநோக்குடன் (எல்லா வற்றையும் சமமாகப் பார்த்தல்) இருந்தால் மோக்ஷம் அடையக் கூடும். சம்சாரத்தை வெல்லமுடியும்.

"இஹைவ" - என்று சொல்வதால், மேற்சொன்ன குணங்களையுடையவர் இப்பிறவியிலேயே இங்கேயே கடைத்தேறுதல்கூடும் என்பது தெளிவாக்கப்பட்டது. எனவே இப்போது சாதனை செய்தால் எப்போதோ எப்பிறவியிலேயோ மோக்ஷம் சித்திக்கும் என்று எவரும் திகில் அடைய வேண்டியதில்லை. அதன்பலன் இப்போதே கைக்குக் கிடைத்துவிடும். மோக்ஷத்திற்கு, கால நியமமோ, தேசநியமமோ இல்லை. எந்த சமயத்திலாவது எந்த இடத்திலாவது மனம் மாசற்ற சலனமற்ற நிலையை, எப்போது அடைகிறதோ அந்தசமயத்திலேயே மனிதன் முக்தனாகிறான் என்று இங்கு சொல்லப்பட்டது.

"ஸாம்யே ஸ்திதம்" - என்பதற்குப் பொருள் சித்தம் அலைவுறாமல் சலனமற்று இருத்தல், சர்வபூதங்களிலும் சரிசமமாக, வியாபித்திருக்கும் ஆன்மாவைப் பார்த்தலாகும். பிராணிகளைப் பார்க்கும்போது தேகதிருஷ்டியோ, மனோதிருஷ்டியோ அன்றி ஆன்மதிருஷ்டியே உடையவன் சர்வ பூதங்களையும் சமமாக நோக்க இயலும். அத்தகைய சமநோக்குடன், சித்தத்தில் எத்தகைய நிலையிலும் கலக்கம் இன்றி சலனமற்று இருக்குமாறு பார்த்துக் கொள்ளவேண்டும்.

இவ்வாறு மோக்ஷத்தை அடைவதற்கு சம்சார பந்தத்தை ஒழிப்பதற்கு, மாயை வெல்வதற்கு பகவான் ஜீவர்களுக்கு நல்ல ராஜமார்க்கத்தைக் காட்டியுள்ளார். மேலும் இச்சரீரம் உள்ளபோதே அத்தகைய கைவல்ய நிலையை அடையமுடியும் என்று வாக்கு அளித்துள்ளார். 'யேஷாம்' என்றதால் ஒவ்வொருவரும் அத்தகைய நிலையை அடையமுடியும் என்ற தைரியம் கூட ஏற்படுகிறது.

**வினா:**

இச் சம்சாரத்தை எவரால் வெல்ல முடியும்?

**விடை:**

எவரின் மனம், தோஷமற்று, சமநோக்குடன் இருக்கிறதோ அவர்களால் வெல்ல இயலும்.

**வினா:**

பவதுக்கத்தினைத் தாண்டுவதற்கான உபாயம் எது?

**விடை:**

(1) மனதில் எந்தவிதமான பாவம், தோஷம் இன்மை (2) சலனமற்று, சர்வபூதங்களிடத்தும் சமநோக்குடன் (ஆன்மதிருஷ்டி) இருத்தல்.

**வினா:**

பிரம்மம் எத்தகையது?

**விடை:**

(1) தோஷமற்றது (2) சமமானது.

**வினா:**

ஜீவர்கள் மோக்ஷத்தை எப்போது அடைகிறார்கள்?

**விடை:**

எந்த கணத்தில் அவர்களது மனம் மலமற்றதாகச் செய்துகொள்கிறார்களோ. சமநோக்குடன் சமநிலையை காப்பாற்றிக்கொண்டு சமதிருஷ்டியுடன் இருக்கிறார்களே அந்தக் கணமே மோக்ஷத்தை அடைவர்.

**முன்னுரை:**

பிரம்ம ஞானியின் வேறு சில இலட்சணங்களைக் கூறுகிறார்.

**20. ந ப்ரஹ்ருஷ்யேத் ப்ரியம் ப்ராப்ய நோத்விஜேத் ப்ராப்ய சாப்ரியம்।**
**ஸ்திரபுத்திரஸம்மூடோ ப்ரஹ்மவித் ப்ரஹ்மணி ஸ்திதஹ॥ (20)**

**சொற்பொருள்:**

ஸ்திரபுத்திஹி - சலனமற்ற புத்தியுடையவனும், அஸம்மூடஹ - மோகமற்றவனும், ப்ரஹ்மணி - பிரம்மத்தில்,

ஸ்திதஹ - நிலைத்தவனும் ஆன, ப்ரம்மவித் - பிரம்மஞானி, ப்ரியம் - பிரியமானதை ப்ராப்ய - அடைந்து, ந ப்ரஹ்ருஷ்யேத் - மகிழ்வடைவதில்லை, அப்ரியம் ச - பிரியமற்றதை, ப்ராப்ய - அடைந்து, ந உத்விஜேத் - துன்பப்படுவதில்லை.

**கருத்துரை:**

நிலையான புத்தியுடையவனும், மோகமற்றவனும், பிரம்மத்தில் நிலைத்தவனும் ஆன பிரம்மஞானி தனக்குப் பிரியமானதை அடைந்தபோது மகிழ்ச்சியோ, பிரியம் இல்லாததை அடைந்தபோது துக்கமோ அடைவதில்லை.

**விளக்கம்:**

பிரம்ம சாக்ஷாத்காரம் அடைந்தவர்க்கு அடையாளம் எது என்று இங்கு காட்டப்படுகிறது. அஞ்ஞானிக்கும், ஞானிக்கும் இடையே உள்ள பேதம் அவர்களது நடவடிக்கையிலேயே புலப்படும். குருடனுக்கும், கண்ணுள்ளவனுக்கும் புலப்படும் வேறுபாடு அவர்கள் நடையிலேயே தெரிந்துவிடும். பிரம்மஞானி எத்தகைய ஆபத்தான நிலையிலும்கூட, தனக்குப் பிரியமல்லாதவை நிகழ்ந்தாலும். விசனமடையான். அவ்வாறே எத்தகைய சுகத்தை அனுபவித்துக் கொண்டிருந்தாலும் அதற்காக மகிழ்ச்சியால் பொங்கிப் போவதில்லை. இரண்டின் மீதும் அவன் சித்தம் ஏற்ற இறக்கங்களின்றி சமபாவத்துடன் கூடியிருக்கும்.

ஏனெனில், பிரம்மத்தை அறிந்தவனுக்கு இவ்வுலகம் கனவுகளாக, மாயையாகப் புலப்படும், அத்தகைய மாயவுலகில் பிரியமான பொருள்களை அடைவதினால் மகிழ்ச்சியோ, பிரியமல்லாதவற்றை அடையும் போது துக்கமோ அவர்களுக்கு ஏது? இவ்வுலகம் நிலையானது என எண்ணுபவர்க்கு சுக துக்கங்கள் எனும் பாவம் இருக்கும்.

'ஸ்திரபுத்திர் அஸம்மூடோ" - பிரம்மஞானியின் புத்தி வேறுபாடின்றி நிலையாக இருக்கும். அஞ்ஞானியின் புத்தி காமம் இவற்றுடன் கூடி சலனமுற்றிருக்கும். ஒளியில்

இருப்பவன் இருளை விரும்பாதது போல, பிரம்மஞானிக்கு மோகமோ, பற்றோ என்றும் இருப்பதில்லை. எனவே அவன் 'அஸம்மூடன்' - மோகமற்றவன் என்று சொல்லப்பட்டான். 'இவை கானல் நீர் என்று தெரிந்தவன் அதற்காக ஓடமாட்டான். மோகமடையமாட்டான். அது தெரியாதவனே அதற்காக ஓடி துக்கத்தை அடைவர்.

இதனால் மேற்சொன்ன மூன்று இலட்சணங்களை (சமபாவம், நிலையான புத்தி, மோகமின்மை) நன்கு பயிற்சிசெய்து வருபவனுக்கு காலக்ரமத்தில் பிரம்மத்தில் நிலைபெறுதல் நேரிடும் என்பது தெளிவாகிறது.

**வினா:**

பிரம்மஞானியின் இலட்சணம் என்ன?

**விடை:**

(1) பிரியமானவை கிடைத்தபோது மகிழ்ச்சி அடைவதோ. பிரியமற்றவை கிடைத்தபோது துன்பமடைவதோ இல்லாமல் இருத்தல் (2) நிலையான புத்தியுடைமை (3) மோகமின்றி இருத்தல்.

**முன்னுரை:**

அத்தகைய பிரம்ம நிலையில் நிலைத்திருப்பதற்கான வழியை அடுத்துக் கூறுகின்றார்.

**21. பாஹ்யஸ்பர்சேஷ்வஸக்தாத்மா விந்தத்யாத்மனி யத்ஸுகம்।**
**ஸ ப்ரஹ்மயோகயுக்தாத்மா ஸுகமக்ஷயமச்னுதே॥ (21)**

**சொற்பொருள்:**

பாஹ்யஸ்பர்சேஷு - வெளி விஷயங்களான சப்தாதி விஷயங்களில், அஸக்தாத்மா - மனப்பற்று இல்லாதவன், ஆத்மனி - ஆத்மாவில், யத்சுகம் - எந்த சுகம் உள்ளதோ, (தத் சுகம்) விந்ததி - அத்தகைய சுகத்தை அடைகிறான். ஸஹ - அவன், பிரம்மயோக யுக்தாத்மா - பிரம்ம நிஷ்டையெனும்

சமாதியில் நிலைத்தவனாய், அக்ஷயம் - அழியாத, சுகம் - சுகத்தினை, அச்னுதே - அடைகிறான்.

**கருத்துரை:**

வெளிப்புறத்தே சப்தாதி விஷயங்களில் பற்றில்லாதவன் ஆத்மாவில் எத்தகைய (நிரதிசய) சுகம் உள்ளதோ. அத்தகைய சுகத்தையே அடைகிறான். அவன் பிரம்மநிட்டையெனும் சமாதியில் நிலைத்தவனாய் (பிரம்மத்தில் திளைத்தவனாய்) அழியாத சுகத்தை அடைகிறான்).

**விளக்கம்:**

ஆன்மாவில் நிலைபெற வேண்டுமாயின் சப்தாதி விஷயங்களின்றும் மனம் மாறுதல் வேண்டும். வெளி விஷயங்களில் பற்றற்ற மனம் அந்தர்முகமாகி (உள்திரும்பி) ஆன்மாவில் நிலைபெற்று அழியாத சுகத்தையடைகிறது எனப்பட்டது.

அழியாத சுகம் வெளியில் எங்கும் இல்லை. அது ஆன்மாவிலேயே இருக்கின்றது. உலகில் விஷயங்களினால் ஏற்படும் சுகம் அழியக்கூடியது. நிலையற்றது. துக்கத்துடன் கூடியது. வருவதும் போவதுமாக இருப்பது (ஆகமாபாயினஹ) அது பிரதிபிம்ப சுகம். பிம்பத்தின் ரூபமான சுகம் ஆன்மாவில் மட்டுமே உண்டு. சுகத்தின் தலைமை அலுவலகம் (Head Quarters) நம்மிடத்திலேயே உள் மறைந்திருக்கிறதே தவிர வெளியில் இல்லை. ஆன்ம சுகமே பொருள்களின் மீது பிரதிபலித்து விஷய சுகமாகத் தோன்றுகிறது. இவ்வுண்மையை அறிய இயலாமல் விவேகமற்றவர்கள் சுகம் வெளியில் இருக்கின்றது என்று எண்ணி எலும்பை கடிக்கும் நாய் தன் வாயினின்றும் வரும் இரத்தத்தையே விரும்பி அது எலும்பினின்றும் வந்ததாக எண்ணி, பிரமித்து நிற்பதைப் போன்று மக்கள் சப்தாதி விஷயங்களுக்காக அலைந்து கானல் நீரைப்போன்று அதனைத் தேடி, வாழ்க்கையை வீணாக்கிக் கொள்கின்றனர். பிரதிபிம்பம் போன்றதான கணநேரத்தில் அழியக் கூடிய சுகத்தினை நிலையான சுகமெனக் கருதி ஆபத்தில் சிக்கிக் கொள்கின்றனர்.

ஆயின் பிரம்மஞானியானவன் வெளி விஷயங்களில் பற்றின்றி நிலையான ஆன்ம சுகத்திற்காகவே அலைந்து, அதனை அடைந்து மகிழ்கிறான். விஷங்களின்மீது விரக்தி ஏற்படாவிடின் மனம் அதனின்றும் மீண்டும் உள்முகமாகத் திரும்பாது. தியானத்தில் மனம் சரியாக ஈடுபட முடியாது. எனவே அந்தர் ஆத்ம சுகானுபவத்திற்கு முதலாக வெளிவிஷயங்களில் பற்று நசித்து, காட்சி பொருள்களின் மீது விரக்தி தோன்றவேண்டும். எனவேதான் பகவான் இங்கு 'பாஹ்யஸ்பர்சேஷு அஸக்தாத்மா" என்ற கட்டுப்பாட்டினை முதன் முதலிலே விதிக்கிறார். ஆன்மசுகம் அனுபவிக்க வேண்டுமென்றாலும், முதலில் வரி (Tax) செலுத்துதல் வேண்டும். அதுவே விஷய சுகங்கலைத் தியாகம் செய்தல் என்னும் வரி. அதிகமான சுகத்திற்காக மிகவும் அற்பமான சுகத்தினை மனிதன் தியாகம் செய்ய இயலும். 'தியாகேனை கே அம்ருதத்வமானசுஹு", என்னும் ஸ்மிருதிகளின் வாக்கியம் இந்த உண்மையையே எடுத்துக் காட்டுகிறது. எனவே இந்திரியங்களை விஷயங்களின் மீது செல்லவொட்டாது கட்டுப்படுத்தி 'துக்கதோஷனுதர்சனம்' என்று பகவான் தெரிவித்தபடி விஷயங்களின் மீது, அழியக்கூடிய விஷயங்கள் முதலான தோஷங்களைப்பற்றி அவ்வப்போது சிந்தித்து, அவற்றின் மீது விரக்தி ஏற்படுமாறு பயிற்சி செய்தல் வேண்டும். அப்போதே ஆத்மதியானம் இடையூறின்றி நடைபெற்று அழிவற்ற சுகானுபவம் கிடைக்கும்.

உலகில் எல்லா ஜீவர்களும் தமக்கு நிரதிசய சுகம் தேவையென்றே கருதுவர். ஆயின் அதனை எவ்வாறு அடைவது என்பது தெரியாது பலவித துன்பங்களை அனுபவிக்கின்றனர். பகவான் கருணையுடன் இங்கு இடைவிடாத சுகத்திற்கான வழியைக் காட்டியுள்ளார். அதுவே விஷயவிரக்தி. அதனைக் கடைபிடித்து நிரதிசய சுகத்தினை அடைந்து ஜன்மத்தினை தியானமாகக் கருதிக் கொள்ளுதல் வேண்டும்.

இச்சுலோகத்தின் மூலம் கீழ்கண்ட விஷயங்கள் தெரிவிக்கப்பட்டன:

(1) சுகம் வெளியில் இல்லை; நம்முள்ளேயே (ஆத்மாவிலேயே) இருக்கிறது.

(2) வெளியில் காணப்படும் சுகம் கணநேரமே இருக்கக்கூடியது (அழிவுடையது); துக்கத்துடன் கூடியது.

(3) சப்தாதி விஷயங்கள் ஆன்ம சுகத்திற்கு தடையானவை. எனவே அவற்றின் மீது பற்றுவைத்தல் கூடாது. அதற்காக அலைபவர் ஆத்ம சுகத்தினை அனுபவிக்க முடியாது.

**வினா:**

ஆத்ம சுகம் எத்தகையது?

**விடை:**

நிலையானது (அழிவற்றது).

**வினா:**

அது எவ்வாறு சித்திக்கும்?

**விடை:**

சப்தாதி விஷயங்களின்மீதான பற்றினை விடுத்து ஆன்மநிட்டையுடன் இருப்பதால் (பிரம்மயோகத்தில் நிலைப்பதால்) கிடைக்கும்.

**முன்னுரை:**

விஷய போகங்கள் துக்ககரமானவை, பந்தத்தை ஏற்படுத்தக் கூடியவை ஆதலால் அவற்றை ஒதுக்குதல் வேண்டுமென போதிக்கிறார்.

**22. யே ஹி ஸம்ஸ்பர்சஜா போகா துஹ்கயோனய ஏவ தே|**
**ஆத்யந்தவந்தஹ் கௌந்தேய ந தேஷு ரமதே புதஹ|| (22)**

**சொற்பொருள்:**

*கௌந்தேய - அர்ஜுனா! ஸம்ஸ்பர்சஜா - (இந்திரிய) விஷயங்களினால் தோன்றிய, போகாஹா - போகங்கள், யே - எவை, (உள்ளனவோ), தே - அவை, துக்கயோனயஹ ஏவஹி - துக்கத்திற்கு காரணமாகின்றன. (மேலும்) ஆத்யந்தவந்தஹ - முதலும், முடிவும், உள்ளவை (சிறிது காலமே இருப்பவை), (ததஹ - எனவே), புதஹ - ஞானியானவன், தேஷு - அவைகளின் மீது, ந ரமதே - இன்புறுவதில்லை (ஆசைப்படுவதில்லை).*

**கருத்துரை:**

*அர்ஜுனா! (இந்திரிய) விஷயங்களில் தோன்றிய போகங்களே துக்கத்திற்கு காரணமானவைகளாம். அவை சிறிது காலமே நிலைப்பவை எனவே ஞானியர் அவற்றினால் இன்புறுவதில்லை (பற்றுக்கொள்வதில்லை)*

**விளக்கம்:**

*விஷய விரக்தியுடன் இருத்தல் வேண்டுமென முன் சுலோகத்தில் சொல்லப்பட்டது. எதற்காக அவ்வாறிருத்தல் வேண்டுமென்பதற்கான விடை இங்கு சொல்லப்படுகிறது. விஷயங்களின் மீது இந்திரியங்கள் நாட்டமுறுவதால் ஏற்படும் சுகம் உண்மையான சுகமல்ல. அது சுகமாக ஒருசமயம் தோன்றினாலும் அதன் பின் பெரிய துக்கமும் தொடர்கிறது. எனவே அவற்றை "துக்கயோனி" - என்று பகவான் வர்ணிக்கின்றார்.*

**ஸௌக்யந்து பிந்துமாத்ரேண துக்கம் பர்வதமேவ ச11**

*முதலில் சிறிது சுகம்போலத் தோன்றினாலும் உடனேயே மலைபோன்ற துக்கம் தொடர்கிறது என்று விஷயசுகங்களைக் குறித்து பெரியோர்கள் கூறுவர். அவை கணநேரம் இருப்பவை. மேற்போக்கான இன்பம் அளிப்பவை. முதலும் முடிவும் கொண்டவை. எனவே விவேகிகளானவர் அவற்றின்மீது பற்று கொள்ளார், ஈடுபடார் என்று சொல்லப்பட்டது.*

"துக்கயோனயஹ" - விஷயசுகம் தன் கர்ப்பத்தில் துக்கமென்பதைத் தாங்கி இருப்பதால் விஷயங்களை அனுபவிக்க விரும்புவோர் அச்சுகங்களில் உள்ள துக்கத்தினைக் கூட அனுபவிக்க வேண்டியே வரும். இவையனைத்தும் தெரிந்தே விவேகிகளானவர் அவற்றின் வழிக்கே செல்வதில்லை. அவற்றின் மீது விரக்தியுடன் இருப்பர். சரீரத்தின் மீது 'எக்ஸ்-ரே' கிரணங்கள் ('X'-Ray) செலுத்தினால், உள்ளிருக்கும் எலும்புகள் முதலானவை தெரிவதைப் போல, விவேகிகள், காட்சி பொருள்களைப் பார்க்கும்போதே விவேகம் என்ற கிரணங்களை அவற்றின் மீது செலுத்தி உள்ளிருக்கும் துக்கத்தினைக் கண்டு அவற்றின் மீது விரக்தி கொள்வர். (உபேக்ஷா பாவம்) ந தேஷு ரமதே புதஹ என்பதன் பொருள் இதுவே, அஞ்ஞானியோ, மேற்போக்கான ஆடம்பர சுகத்தை மட்டுமே பார்த்து, அதன்மீது மோகம் கொண்டு அவ்விஷயசுகங்களை அனுபவித்து அதலபாதாளத்தில் விழுகின்றார்கள்.

தூண்டிலில் அகப்பட்ட மீன்போல விநாசத்தை அடைகிறார்கள். எவ்வாறெனின், மீன் மாமிசத் துண்டைப் பார்த்து ஆனந்தம் கொண்டு அதன் அருகில் வந்து உண்ணும் ஆயின் அதில் மறைந்துள்ள வலையை அது அறிவதில்லை. அதன் பலனாக அது சாகின்றது. 'துக்கயோனயஹ' என்ற சொல்லின் உட்பொருள் இதுவே.

இச்சுலோகத்தின் வழி காட்சி பொருள்களின் சுகத்தில் உள்ள இரண்டு பெரிய குற்றங்கள் எடுத்துச் சொல்லப் பட்டுள்ளது · (1) மேலுக்கு சுகம் போலத் தோன்றினாலும் உள்துக்கத்தினை கொண்டுள்ளவை (2) முதலும், முடிவும் உள்ளவையாதலால் அவை கணநேரமே நிலைப்பவையா யிருத்தல். அதாவது துக்கமுடைமை; கணநேரமே இருப்பவை இரண்டும் அதன் மூலமான குற்றங்கள் விஷயபோகங்களில் உள்ளன. ஆன்ம சுகமோ அவ்வாறில்லை அதில் துக்கம் சிறிதும் எங்கும் இல்லை. தைல தாரையைப் போன்று இடைவிடாது நிரந்தர சுகம் அது நிலையானது விஷய சுகங்களை ஒரு சிறிய தீபத்திற்கு உவமித்தால் ஆன்மசுகத்தை

அஸ்தமனம் ஆகாத சூரியனுக்கு உவமித்துக் கூறலாம். தீபம் அணையக்கூடியது. ஆயின் ஆத்ம சூரியனோ எப்போதும் அஸ்தமிக்காதது. இந்திரிய சுகங்கள் சிறிய நீர்தேக்கம் போன்றது. க்ஷணநேரத்தில் கருகிப்போகும். ஆத்ம ஆனந்தம் கடலைப்போன்றது. அது எக்காலத்தும் வறண்டு போவதில்லை. இப் பேதத்தினை அறிந்தே மகான்கள் விஷய போகங்களின் மீது விரக்தி ஏற்பட்டு ஆத்மானந்தத்தையே விரும்புவர். 'புதஹ' - அறிவுடையவன் காட்சிபொருள்களின் சுகங்களில் ஈடுபாடு கொள்ளமாட்டான் என்பதால் அதில் ஈடுபாடுடையவன் அறிவற்றவன் என்பது தெளிவு. எத்தகைய செல்வந்தனாயினும், அதிகாரமுடையவனாயினும், கல்வியில் வல்லவனாயினும், பலவானாயினும் விஷயங்களின் மீது நாட்டம் கொள்வான் ஆயின் அவன் பகவானின் திருஷ்டியில் அறிவற்றவனே (அபுதஹ்) என்பது தெரிகின்றது.

**வினா:**

விஷய சுகங்களின் இயற்கை எத்தகையது?

**விடை:**

அவை துக்கத்துடன் கூடியவை. (2) சிறிது காலமே இருப்பவை.

**வினா:**

எனவே விவேகமுடையவன் என்ன செய்வான்?

**விடை:**

அத்தகைய அழியக்கூடிய சுகங்களின் மீது ஈடுபாடு கொள்ளாமல், ஆன்ம சுகத்தையே நாடுவான்.

**வினா:**

விஷயங்களின் சுகத்திற்காக அலைபவன் எவன்?

**விடை:**

அறிவற்றவன், அஞ்ஞானி.

**முன்னுரை:**

அத்தகைய விஷயங்களின்மீது மோகத்தினை ஒழிப்பதே சுகமடைவர் என்கிறார்.

**23. சக்னோதீஹைவ யஹ் ஸோடும் ப்ராக்சரீரவிமோக்ஷணாத்|**
**காமக்ரோதோத்பவம் வேகம் ஸ யுக்தஹ் ஸ ஸுகீ நரஹ||**
**(23)**

**சொற்பொருள்:**

யஹ - எவர், சரீரவிமோக்ஷணாத் - சரீரத்தை விடுவதற்கு, ப்ராக் - முன்பு, இஹ ஏவ - இம்மையிலேயே, (இவ்வுலகிலேயே), காமக்குரோதோத்பவம் - காமக் குரோதங்களினால் ஏற்பட்ட, வேகம் - வேகத்தை, (தீவிரத்தை), - சோடும் - சகித்துக் கொள்வதற்கு (வெல்வதற்கு), சக்னோதி - வல்லவனாகிறானோ, ஸஹ - நரஹ - அம்மனிதன், யுக்தஹ - யோகி, , ஸஹ - அவன், ஸுகீ - ஆனந்தத்தை அடைகிறான்.

**கருத்துரை:**

எவனொருவன் இம்மையில் (இப்பிறவியிலேயே) சரீரத்தை விடுவதற்கு முன்பே காமக்குரோதங்களின் வேகத்தை அடக்குவதற்கு இயன்றவனாகின்றானோ, அவனே யோகி, சுகவான் ஆகிறான்.

**விளக்கம்:**

மோக்ஷத்திற்கு வேண்டிய சாதனைகள், வழிமுறைகள் இவற்றை இப்பிறவியிலேயே தெரிந்து கொள்ளவேண்டும். இன்னுமொரு உலகிலோ, அல்லது வேறு பிறவியிலேயோ அது நிறைவேறாது. இப்பூவுலகம் கர்மபூமி. சாதனை செய்வதற்கு அனுகூலமான பிரதேசம். சுவர்க்கம் முதலான மேல் உலகத்திலோ, பாதாளம் முதலான கீழ் உலகத்திலோ ஆன்மீக சாதனைக்கு அதிகமான நேரம் கிடைக்காது. (அவை கர்ம, பூமியல்லவாதலால்). எனவே 'இஹைவ' என்னும் சொல் இங்கு பயன்படுத்தப்பட்டது. இதற்கு முன்பே 19ஆவது சுலோகத்தில் 'இஹைவ தைர்ஜிதஹ ஸ்வர்கஹ' என்று

சொல்லப்பட்டது. இவ்வாறாக 'இஹைவ' என்னும் சொல்லை ஒரே அத்தியாயத்தில், ஒரே சந்தர்ப்பத்தில் இரண்டுமுறை பயன்படுத்தியதைப் பார்த்தால் 'இங்கேயே' இவ்வுலகிலேயே இப்பிறவியிலேயே ஆன்மீக சாதனையை விரைவாக செய்து முடிக்க வேண்டுமென பகவான் வலியுறுத்தி சொல்லியதைப் போல் உள்ளது.

'ப்ராக்சரீர விமோக்ஷணாத்' - மேலும் சரீரத்தை விடுவதற்கு முன்பே, அதாவது மரணத்திற்கு முன்பே காமக்குரோதம் முதலானவற்றை வெல்ல வேண்டும் என எச்சரிக்கிறார். ஏனெனில், இனிவரப்போகும் பிறவியில் மனிதப் பிறவியே எடுப்போம் என்பதோ ஒருவேளை எடுத்தாலும் மோக்ஷ சாதனைக்குத் தேவையான அவகாசம் கிடைக்கும் என்பதோ எவராலும் சொல்ல முடியாது. எனவே இப்பிறவியையே நல்லமுறையில் பயன்படுத்திக்கொண்டு எப்போதும் பரமார்த்த இலக்கிற்காக முயற்சி செய்து வருதல் வேண்டும்.

"சீர்யதே" - இதி சரீரம் - சிதைந்து போவதே சரீரம். எனவே அது நிறைய நாட்கள் இருப்பதில்லை. அது நீர்க்குமிழியைப் போன்றது. மேலும் இறப்பு என்பது எப்போது வரும் என்பதை எவராலும் சொல்ல இயலாது. வயோதிகத்தில் மட்டுமின்றி இளவயதில், சிறுவயதில் கூட மக்கள் இறக்கின்றனர். எனவே சாதனையை வயோதிக வயதுவரை ஒத்திப் போடுதல் விவேகமின்மையே. மேலும் வயோதிகத்தில் சக்தி குறைந்து போவதால் தியானம், மனம் இந்திரியக் கட்டுப்பாடு இவை நன்கு நடக்காது. எனவே சரீரம் மூப்படையும் முன்னரே காமம் முதலானவற்றின் வேகத்தைக் கட்டுபடுத்தி தியானம் முதலானவற்றைச் செய்க என்று பகவான் வேண்டுகின்றார். அவ்வாறு செய்பவனே சுகவான் என்கிறார் (ஸ ஸுகீ). அவ்வாறு செய்யாவிடின் பெரும் கேடு விளையும் என்று சாஸ்திரங்கள் கோஷிக்கின்றன.

**'ந சேதி ஹாவேதின்மஹதி விநஷ்டிஃ"(கேனோபநிஷத்)**

**"ஆயுஷஃ க்ஷண ஏகோஅபி ஸர்வ ரதைன்ன ர்ன லப்யதே|**
**நியதே தத்வ்ருதா யேன ப்ரமாதஃ ஸுமஹானஹோ||**

**(வசிஷ்டகீதா)**

எனவே, சுகத்தை விரும்புவோர் முதலில் தன்னிடத்தில் உள்ள முக்கிய எதிரிகளான காமக் குரோதங்களை வெல்லுதல் வேண்டுமென்பது தெளிவாகிறது. அரிஷட்வர்க்கங்களான இக் காமக்குரோதங்கள் முதன்மையானவை ஆதலால் அவ்விரண்டு மாத்திரமே இங்கு சொல்லப்பட்டிருப்பினும், ஏனைய தோஷங்களைக்கூட அவற்றுடன் சேர்த்துக்கொள்ள வேண்டும். அதாவது எல்லாவற்றையும் வெல்லுதல் வேண்டும் என்பது பொருள். அவை முக்கியமான எதிரிகள், நித்ய வைரிகள் ஆதலால் சாதகன் ஒரு கண்ணால் எப்போதும் எச்சரிக்கையாக பார்த்த வண்ணமே இருத்தல் வேண்டும்.

'ஜீவர்களே! சரீரத்தை விடுவதற்கு முன்பே இந்திரியங்களை, மனதினை, காமக் குரோதம் முதலான அறுவகை மலங்களை மனிதன் வெல்வதற்கு முயல்க! மரணம் எப்போது வருமென்பதை எவரும் அறியாராதலால். எப்போதும் சாதனையில் ஊன்றியிருக்கும் விலைமதிப்பற்ற இம்மனிதப் பிறவியை போகங்களில் செலுத்தி வீணாக கழித்தல் வேண்டாம். இவ்வாறு உம் மன விகாரங்களை வெல்வதற்கு இயலுமானால் அபாரமான சுகத்தை (ஆத்மானந்தத்தை) அடைவீர்! என்று பகவான் இச்சுலோகத்தின் மூலம் ஜீவர்களுக்கு எச்சரிக்கை செய்துள்ளார்.

ஆன்மீக வழியில் மெத்தனம், சோம்பல் சரியல்ல, ஆயுளில் ஒவ்வொரு கணமும் கடந்துபோனால், எத்துணை கோடி ரத்னங்களை அளித்தாலும் அது மறுபடியும் கிடைக்காது. எனவே அதனை வீணாகக் கழிக்காமல் இந்திரியங்களை வெல்வதன்மூலம் ஆன்மீகத் தேடலை கைக் கொள்ள வேண்டும்.

'வேகம்' - என்றதால் அக் காமக்குரோதங்கள் விரைவாகச் செய்ல்படும் என்பது தெரிகின்றது.

"ஸ நரஹ" - என்பதற்கு 'இவ்வாறு காமம் முதலானவற்றை வெல்பவனே நரன் (மனிதன்) என்று சொல்லலாம்' - என்று பொருள் கொள்ளலாம்.

'சத்னோதி' - என்ற சொல்லினால் 'பக்தி வைராக்யம் முதலியவற்றால் காமம் முதலானவற்றை எளிதாக கட்டுப்படுத்த் முடியும்' என்பது தெளிவாகிறது.

இச்சுலோகத்தின் மூலம் கீழ்க்கண்ட விஷயங்கள் தெளிவாகின்றன:

(1) சரீரம் அழிவதற்கு முன்பாகவே மோக்ஷத்தை அடைவதற்கான முயற்சியில் இறங்கவேண்டும்.

(2) மோக்ஷ சாதனையில் முக்கியமானது காமக் குரோதங்களை வெல்லுதல்.

(3) அவ்வாறு அவற்றை வென்றவனே பூரண சுகத்தை அடைவானே தவிர மற்றையோரால் அல்ல.

**முன்னுரை:**

இவ்வாறாக காமம் முதலானவற்றை வென்று உள்முகமான நோக்குடையவன் பிரம்மானுபூதியினை அடைவான் என்கிறார்.

**24. யோஅந்தஹ் ஸுகோ அந்தராராமஸ் ததாந்தர்ஜ்யோதிரேவ யஹ|**
**ஸயோகீ ப்ரஹ்மநிர்வாணம் ப்ரஹ்மபூதோ அதிகச்சதி|| (24)**

**சொற்பொருள்:**

யஹ - எவன், அந்தஹ் ஸுகஹ - அந்தராத்மாவில் சுகம் அடைகிறானோ, அந்தராராமஹ - ஆன்மாவிலேயே கிரீடிக்கிறானோ (விளையாடுகிறானோ) ததா - அவ்வாறே, யஹ - எவன் அந்தர்ஜ்யோதிஹி, ஏவ - ஆன்மாவிலேயே உள்ளொளி காண்கிறானோ, ஸஹயோகீ - அந்தயோகி (பிரம்மநிஷ்டன்), ப்ரஹ்மபூதஹ - பிரம்மசொரூபமாகி, ப்ரஹ்மநிர்வாணம் - பிரம்ம நிர்வாணத்தை (பிரம்மானந்தத்தை அல்லது மோட்சத்தை) அதிகச்சதி - அடைகிறான்.

**கருத்துரை:**

எவனொருவன் உள்ளிருக்கும் ஆத்மாவிலேயே சுகித்து, ஆத்மாவில் கிரீடித்து, அதனாலேயே உள்ளொளி

காண்கிறானோ, அத்தகைய யோகி தானே பிரம்மமாகி பிரம்ம நிர்வாணத்தையடைகிறான்.

**விளக்கம்:**

பிரம்ம சாட்சாத்காரத்தினை, (பிரம்மானந்தத்தை) எவன் அடைகிறானோ, அவனைப் பற்றி இச்சுலோகம் விவரிக்கின்றது. மிகவும் உன்னதமான பிரம்ம நிர்வாண நிலையை, முயற்சியினால் அனைவரும் அடையமுடியும். அது எதுவெனில் வெளிப்படையான சுகத்தை விரும்பாது, நமது மனதை ஆன்மசுகத்திலேயே திருப்பி அதனையே தேடும் முயற்சியில் இறங்குதல் (இந்திரியார்த்தங்களில் அவற்றை செல்ல வொட்டாது தடுத்து ஆன்மாவிலேயே நிறுத்துதல்) ஆகும். அதாவது இந்திரியங்களை, மனதை விஷயங்களின் மீது, போக சுகங்களின் மீது அலையவிடாது கட்டுப்படுத்தி, விவேகம், வைராக்கியம் இவற்றால் அவற்றை சுயரூபமான ஆன்மாவில் நிலை நிறுத்துதலேயாகும்.

இச்சுலோகத்தில் மூன்று விஷயங்களைப் பற்றிக் கூறப்படுகின்றது.-

(1) சுகம் (2) விளையாட்டு (3) ஜோதி இம் மூன்றையும் பற்றி இனி விரிவாகக் காண்போம்.

(1) 'சுகம்' - சாதாரண மனிதர்கள் சுகத்திற்காக வெளியுலகில் காணப்படும் பொருள்களின் மீதே நாட்டம் செலுத்துகின்றனர். அதன்மூலம் அவர்கள் பிரதிபிம்பமான அற்பசுகத்தையேக் காண்கின்றனர். அதனையே பெரிதாகக் கருதுகின்றனர், திருப்தியடைகின்றனர். ஆயின் உண்மையில் சுகமென்பது வெளியில் இல்லை. சுகமிருக்கும் இடம் உள் ஆன்மாவே. அதுவே நிலையான சுகம். பிரம்மானந்தம், வெளிப்படையான சுகம் நிலையற்றது, கணநேரமே இருக்கக் கூடியது. இவ்வுண்மை அறிந்த விவேகிகள் தம் சக்தியை உள்முகமாகத் திருப்பி ஆன்ம சுகத்தையே நாடுவர். அத்தகையோர் மதிப்பிற்குரியோர். அவர்கள் பிரம்மானுபூதி யடைந்து ஒளிர்வர்.

(2) 'க்ரீடா' (விளையாட்டு) - அஞ்ஞானிகள் வெளியில் உள்ள, பொருட்களின் மீதே ஆசைப்படுவர். விஷய சுகங்களிலேயே நாட்டம் கொள்வர். அவர்களுக்கு அதுவே விளையாட்டரங்கம். ஆயின் ஞானிகளோ காட்சிப்பொருள்கள் சலனமுடையவையென உணர்ந்து அவற்றை விரும்பாது. ஆன்மாவிலேயே காலம் கடத்துவர். அவர்களுக்கு அதுவே தங்குமிடம், உத்தியானவனம், விளையட்டரங்கம், உல்லாசப் பயணம். வெளிப்புற நோக்குடையவர்க்கு அதன் மதிப்பு தெரிவதில்லை. அத்தகைய விலைமதிப்பற்ற பொருள் உண்டென்பதையே அவர் அறியார். விவேகிகள் அதன் நற்பலனையறிந்து அதன்மீதே நிலைபெற நற்பலனை பேரமைதியை அடைவார்.

(3) 'ஜோதி' - சாதாரணமாக வெளியில் காணப்படும் சூரிய சுக்கிரர்களே ஜோதிகள். அவற்றைவிட ஒளிவிட ஜோதி இன்னுமொன்று உண்டு, (தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி) அதுவே ஆன்மா, சூரியன் கண்களை ஒளிவிடச் செய்யும் கண்கள் புத்தியை பிரகாசிக்கச் செய்யும் புத்தியை ஆன்மா பிரகாசிக்கச் செய்யும். அது ஒளிகளுக்கெல்லாம் ஒளியான பரஞ்சோதி, ஞானிகள் அத்தகைய ஆன்ம ஜோதியையே விரும்புவர். நிலையான பிரகாசத்துடன் ஒளிர்வர், ஜீவன் முக்தர்களாக விளங்குவர்.

இவ்வாறு காட்சியின் மீதான மோகத்தினை விடுத்து, ஆன்மாவையே சுகநிலையாக, விளையாட்டரங்கமாக, ஒளிமிகுந்த க்ஷேத்ரமாகக் கருதுபவர் எப்போதும் ஆத்மதியான நவ நாராயணர்களேயாகி, பிரம்மானுபூதியடைந்து பிரம்ம நிர்வாணத்தை அடைகின்றனர்.

**வினா:**

*பிரம்ம சாயுஜ்ய பதவியை எவர் அடையக்கூடும்?*

**விடை:**

(1) வெளிப்படையான சுகத்தினை விடுத்து ஆன்மாவிலேயே சுகத்தினை காண்பவர்.

(2) வெளியுலகப் பொருள்களில் ஆசையின்றி ஆன்மாவிலேயே திளைத்திருப்பவர்.

(3) வெளிப்புற ஒளிகளில் நாட்டமுறாது ஆன்மாவிலேயே பிரகாசத்தினைக் காண்பவர் பிரம்ம நிர்வாணத்தையடைவர்.

**முன்னுரை:**

அவ்வாறு பிரம்மசாட்சாத்காரமடைந்தவரின் இலட்சணங்கள் பின்வரும் இரண்டு சுலோகங்களில் விவரிக்கப்படுகிறது.

**25. லபந்தே ப்ரஹ்மநிர்வாணம் ருஷயஹ க்ஷீணகல்மஷாஹா।**
**சின்னத்வைதா யதாத்மானஹ ஸர்வபூதஹிதே ரதாஹா॥(25)**

**சொற்பொருள்:**

க்ஷீணகல்மஷாஹா - பாவங்களை போக்கிக் கொண்டவர்கள், சின்னத்வைதாஹா - சந்தேகங்களை அகற்றியவர்கள், யதாத்மானஹ - இந்திரியங்களை அடக்கியவர்கள், ஸர்வபூதஹிதே - எல்லா உயிர்களின் நன்மையில், ரதாஹா - மகிழ்ச்சியுடையவர்கள் (ஆன) ரிஷயஹ - ரிஷிகள், (ஞானிகள்), ப்ரஹநிர்வாணம் - பிரம்ம சாயுஜ்யத்தை (மோக்ஷத்தை), பிரம்மானந்தத்தை, லபந்தே - அடைகிறார்கள்.

**கருத்துரை:**

பாவங்களை களைந்து, ஐயங்களை அகற்றி, இந்திரியங்களை அடக்கி, எல்லா உயிர்களின் நன்மையில் மகிழ்வடையும் ரிஷிகள் பிரம்ம நிர்வாணம் அடைகிறார்கள்.

**விளக்கம்:**

பிரம்ம சாயுஜ்யமானமோட்சத்தை எவர் அடைகிறார்கள் என்பதை இச் சுலோகம் இன்னும் விவரமாக எடுத்துரைக்கிறது. ரிஷிகள் மோட்சத்தின் வாயிலை அலங்கரிக்கிறார்கள் எனச் சொல்லப்பட்டது. ரிஷிகள் யார்?

'ஹ்ரீஷீகங்கள்' (இந்திரியங்களை) வென்று மனதினை பரமாத்மாவிடத்தில் நிலைநிறுத்தியவர்களே ரிஷிகள், ரிஷிகளின் பதவி மிகவும் உன்னதமான பதவி. அது (பி.ஏ; எம்.ஏ; போன்று) ஒரு 'டிகிரி' (DEGREE) போன்றது. அதனை முயற்சித்தால் அனைவரும் பெறலாம். நேற்று அஞ்ஞானியாய் இருந்தவன் நாளை ரிஷியாக முடியாது. கல்லூரிகளில் பள்ளிகளில் 'டிகிரி' பட்டங்களுக்காக 10 அல்லது 15 வருடங்கள் நாள் தவறாது எப்போதும் மாணவர்கள் படித்துக்கொண்டே இருக்கின்றனர். அவ்வாறே 'ரிஷித்துவம்' பெறுவதற்காக சிறிதுகாலம் இடைவிடாது சாதனைபுரிய வேண்டும்'. அவ்வாறான சாதனைகளில் ஈடுபட்டு முதிர்ந்த பெரியோர்கள் சாதாரண மனிதர்களைப் போன்று இரார். அவர்கள் ரிஷிகளாக மாறிப்போவார்கள். உலகிற்கே உரியவர்களாக அவர்கள் ஆகிவிடுகிறார்கள். சாட்சாத் இறைவனாகவே மாறிப்போகிறார்கள். (ப்ரம்மவித் ப்ரு ஹைந்தவ பவதி) அச் சாதனையில் முக்கியமானவை நான்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. (1) பாவங்களை போக்கிக் கொள்ளுதல் (2) சந்தேகங்கள் இருமைகள் இல்லாதிருத்தல் (3) இந்திரிய மனக் கட்டுப்பாடு (4) சர்வபூத தயை. இவை சாதகனுக்கு மிகவும் விலைமதிப்பற்றவை யாதலால் இவற்றைக் குறித்து ஒருவாறு ஆராய்தல் அவசியம்.

(1) 'பாவங்களைத் தொலைத்தல்' - ஒவ்வொரு ஜீவியின் சித்தத்திலும் பல ஜன்மங்களின் பாவங்கள் சங்கிலியாய் தொடர்கின்றன. அது ஆன்மீக நிலையில் சுவரைப் போன்று தடங்கலாக குறுக்கே நிற்கின்றன. பாவ சித்தத்தில் ஆத்மஞானம் தோன்றுவதில்லை. எனவே புண்ய காரியங்களினாலும், நிஷ்காம கர்மாவைச் செய்வதாலும், பக்தி, தியானம் இவற்றாலும் அப்பாவத்தைப் போக்கடித்து, துணிகளைத் துவைப்பதைப் போல துவைத்து சித்தத்தினை மாசற்ற தூய்மையாக்குதல் வேண்டும்.

(2) "ஐயமின்மை" - சந்தேகங்கள், இருமைகள் முதலானவற்றை விவேகத்தின் உதவியால் நீக்கிக் கொள்ளவேண்டும். 'சித்யன்தே ஸர்வசம்சயாஹா' என்பதைப்

போல ஆன்மீக ஞானத்தினால், தத்துவ விசாரணையினால் போக்கிக் கொள்ளல் வேண்டும்.

*(3)* "இந்திரிய மனக்கட்டுப்பாடு" - காட்சிப் பொருள்களின் மீது நாட்டம் கொள்ளும் இந்திரியங்கள், மனம் இவை மோக்ஷத்திற்கு முன்னேற உதவக் கூடியவை. எனவே விவேகம், வைராக்கியம் இவற்றின் உதவியால் அவற்றை தன்வயப்படுத்திக் கொண்டு ஆன்மாவில் அவற்றைச் செலுத்துதல் வேண்டும். இந்திரியத்தை வெல்லாது மோக்ஷமார்க்கத்தில் ஒருஅடிகூட முன்னேற முடியாது. நல்ல குதிரைகள் இல்லாத ரதம் எப்படி போக வேண்டிய இடத்திற்குப் போய்ச் சேரும். அவ்வாறே சந்தேகங்கள் தீராத இந்திரியங்களையுடைய மனிதன் முக்தியின் இலக்கை அடையமுடியாது. எனவே அவற்றை தன் கட்டுக்குள் கொணர்தல் வேண்டும்.

*(4)* "ஸர்வபூததயை" - "ஸர்வபூதஹிதே ரதாஹா" - என்ற வாக்கியம், அதன்பொருள் கீதையில் பலவிடங்களில் காணப்படுகிறது. அது அனுஷ்டான வேதாந்த சூத்திரம். 'அனைத்தும் பிரம்மமே' என்பது சித்தாந்தம். 'ஸர்வபூததயை' என்பது அச்சித்தாந்தத்தின் நடைமுறைச் செயல். ஒரு உயிரின்மேல் வெறுப்புகொண்டு, தூஷித்துக் கொண்டு, அனைத்தும் பிரம்மமே என்று நினைப்பவன் ஒருபோதும் இரான். அவ்வாக்கியத்தினை, அதன் பொருளை நன்குணர்ந்தவன் எந்த உயிருக்கும் தீங்கு செய்யான். நன்மையே செய்வான். ஏனெனில் உலகமனைத்தையும் ஆத்மசொரூப மாகக் (தன் உருவாகவே) காண்பவன் ஒரு உயிருக்குத் தீங்கு செய்யினும் தனக்குத் தானே தீங்கு செய்து கொள்வதைப் போலவேயாகும். எனவே சர்வாத்மா பாவனையுடைய வனிடத்து எப்போதும் 'ஸர்வபூததயை' பத்தியம் போன்றது எனலாம். மருந்து தின்று, அதற்கான பத்தியத்தை கடைபிடிக்காமல் இருப்பதால் நோய் எப்படி தீர்வதில்லையோ, இறை தியானம் செய்துகொண்டு, பூததயை, ஜீவகாருண்யம் இவை இல்லாவிட்டால் அந்த தியானம் சரியான முறையில் இருக்காது, ஆதலால் 'பவரோகம் தீராது'

இங்கு 'ஸர்வ பூதே ஹிதேரதாஹா' என்பதால் ஏதாவதுவொரு பிராணியின்மீது தயைகொண்டால் மட்டும் போதாது. அனைத்து பிராணிகளின் மீதும் கருணை காட்டவேண்டும். அவற்றின் நன்மைக்காகப் பாடுபட வேண்டுமென்பது எடுத்துச்சொல்லப்பட்டுள்ளது.

இவ்வாறு மேற்சொன்ன நான்கு இலட்சணங்கள் பொருந்தி ரிஷியாக பரிணமிப்பவன் பிரம்ம நிர்வாணமான மோக்ஷத்தையடைகிறான்.

**வினா:**

*பிரம்ம சாட்சாத்காரத்தினை (மோக்ஷத்தை) எவர் அடைகிறார்கள்?*

**விடை:**

*(1) பாவங்கள் தொலைந்தவன், (2) சந்தேகங்கள், இருமைகள் இல்லாதவன் (3) இந்திரிய, மனக் கட்டுப்பாடுடையவன் (4) 'ஸர்வ பூதஹிதம்' அனைத்துப் பிராணிகளின் நலனையும் விரும்புவோன், பிரம்மசாயுஜ்ய பதவியை (மோட்சத்தை) அடைவான்.*

**வினா:**

*ரிஷிகள் என்போர் யார்?*

**விடை:**

மேற்சொன்ன நான்கு குணங்களும் பொருந்தியவர்.

**26. காமக்ரோதவியுக்தானாம் யதீனாம் யதசேதஸாம்।**
**அபிதோ ப்ரஹ்ம நிர்வாணம் வர்த்ததே விதிதாத்மனாம்॥(26)**

**சொற்பொருள்:**

*காமக்ரோத வியுக்தானாம் - ஆசை, சினம் இவற்றினின்றும் விடுபட்டவர்கள், யத சேதஸாம் - கட்டுப்படுத்தப்பட்ட மனமுடையவர்கள், விதித ஆத்மனாம் - ஆன்ம தத்துவத்தை அறிந்தவர்கள் (ஆன), யதீனாம் - ஸந்நியாசிகளுக்கு, பிரம்ம நிர்வாணம் - பிரம்மசாயுஜ்யம் (பிரம்மானந்தம், மோட்சம்),*

அபிதஹ - அடைவதற்கு (தேகமிருக்கும்போதும், இல்லாதிருக்கும்போதும், எப்போதும்) வர்ததே - இருக்கின்றது.

**கருத்துரை:**

காமக்குரோதங்களற்றவரும், மனக்கட்டுப்பாடுடைய வர்களும், ஆத்ம தத்துவத்தையறிந்தவர்களும் ஆன சந்நியாசிகளுக்கு பிரம்ம ஸாயுஜ்யம் (மோக்ஷம், பிரம்மானந்தம்) யாண்டும், எப்போதும் இருக்கின்றது. (சரீரம் இருக்கும் போதும், இல்லாதிருக்கும் போதும் எப்போதும்).

**விளக்கம்:**

மோக்ஷம் எங்குளது? அதனை எவர் அடையக்கூடும்? என்ற வினாக்களுக்கு விடை இங்கு சொல்லப்பட்டது -

(1) காமக்குரோதங்கள் நீங்குதல் (வாசனைகளற்றதன்மை)

(2) சித்தத்தினை தன்வயப்படுத்தல் (மனோநாசம்)

(3) ஆத்மாவையறிதல் (தத்வஞானம்)

என்ற மூன்று நல் இலட்சணங்கள் பொருந்தியவர்களைச் சுற்றி மோக்ஷம் எப்போதும் ஒளிர்ந்து கொண்டேயிருக்கும் என்று சொல்லப்பட்டது. அதாவது வேதாந்த சாஸ்திரங்களில் வலியுறுத்திச் சொல்லப்பட்ட வாசனைகளற்ற, மனம் அழிந்த, தத்துவ ஞானங்களை முக்கியமான சாதனைகள் மூன்றையும் கடைபிடிப்பவர் எப்போதும் மோக்ஷமே உருவானதாய் இருப்பான் என்பது அதன் பொருள். இம்மூன்று சாதனைகளைக் குறித்தும் கீதையில் பகவான் பலவிடங்களில் எடுத்துக் காட்டுகிறார். இதில் தத்துவ ஞானத்தின் உதவியால் காமம் முதலான வாசனைகள் அழிந்தால், மனோநாசம் தானாகவே சித்திக்கும். இம்மூன்று சாதனைகளும் ஒன்றுக்கொன்று பின்னிப் பிணைந்திருப்பதனால், அவற்றைப் பிரிப்பது இயலாததொன்றாகும். எனவே, அவை மூன்றையும் ஒரே காலத்திலேயே சாதிக்க வேண்டும் என சாஸ்திரங்கள் கூறுகின்றன. முயற்சி செய்பவருக்கே மோட்சம் கிடைக்குமே அன்றி முயற்சியின்றி சோம்பியிருப்பவர்க்கல்ல.

இத்தத்துவத்தை தெரிவிப்பதற்காகவோ என்னவோ 'யதீனாம்' என்று சொல் பயன்படுத்தப்பட்டது. 'யதிகள்' என்றால் யத்தனிப்பவர், முயற்சிப்பவர் என்பது பொருள். 'உத்யோகினம் புருஷஸிம்ஹமுபைதி லக்ஷ்மீஹி" - என்றதைப் போல முயற்சி சீலர்களையே லக்ஷ்மி வந்தடைவாள். தனலக்ஷ்மி, மோக்ஷலக்ஷ்மி, எவராயினும் சரி, எனவே பகவானின் மீது, நற்குருவின் மீது, சாஸ்திரங்களின் மீது முழுமையான நம்பிக்கை வைத்து சாதனை செய்துவர வேண்டும். மோக்ஷமடைவதற்கு மேற் தெரிவிக்கப்பட்ட மூன்று சாதனைகளையும் பொறுமையுடன் அனுஷ்டித்து வர வேண்டும்.

இதில் முதல் சாதனை காமம் முதலானவற்றைத் தியாகம் செய்தல். ஆன்ம சொரூபத்தைக் குறித்து மனனம் செய்தல், காட்சிப் பொருள்களை மாயை என உணர்வதாலும் காமக் குரோதம் முதலான துர்குணங்கள் நீங்கும். இரண்டாவது மனக்கட்டுப்பாடு. மனதை தன்வயப்படுத்திக் கொள்ள வேண்டுமாயின் அதில் உள்ள ரஜோ, தமோ, குணங்கள் முதலில் அழிதல் வேண்டும். இரும்பு கெட்டியாய் இருக்கும் போது அதனை எவராலும் வளைக்க முடியாது. அதனை நெருப்பில் இட்டு உருக்கினால் மென்மையானபின் எவராயினும் எளிதில் வளைக்க முடியும். அவ்வாறே ஞானாக்னியால் சித்தம் நன்கு புடம் வேயப்பட்டு, பாவங்கள், ரஜோதமோ குணங்கள் இவற்றை விலக்கி தள்ளுதல் வேண்டும். அப்போதே அதனை தன்வயப்படுத்த இயலும். இச் சம்சார சக்கரமனைத்திற்கும் முதன்மையான காரணம் (நாபி) சித்தமேயாகும். சித்தம் அசைந்தால் இவ்வுலகமனைத்தும் அசையும். சித்தம் அடங்கினால் இவ்வுலகமும் அடங்கும். அச்சித்தத்தை அடக்குவதற்கு வெல்வதற்கு மிகவும் உத்தமமான உபாயம் அதற்கும் மேலான ஆத்மாவை பற்றுதலே. 'ஏவம் புத்தேஹ் பரம் புத்வா" என்பதைப் போல ஆத்மாவில் நிலைபெறுவதால் சித்தம், இந்திரியங்கள் இவை மிக எளிதாக வசமாகின்றன. (3) இனி மூன்றாவது சாதனை ஆத்மஞானம் ஆத்மாவின் சொரூபத்தை அறிந்துகொண்டு அதனையே எப்போதும் மனனம் செய்து

வருதல் வேண்டும். தான் சரீரம், இந்திரியங்கள், மனம், புத்தி இவையல்ல, அதற்கும் மேலான சாட்சியாய் நிற்கும் ஆத்மாவென்னும் பிரக்ஞையுடன் அத்தகைய சாட்சி நிலையில் நிலைத்து நிற்பதை பயிற்சி செய்யல் வேண்டும். தான் அழிவுடையவன் அல்லன், அழிவடைவது இப்பஞ்ச பூதங்களால் ஆன தேகமேயென்றும், காண்பதனைத்தும் விகாரமுடையவையென்றும், தான்மட்டும் விகாரமற்றவன் என்றும் சிந்தனை செய்து வருதல் வேண்டும். இதுவே தத்வஞான அப்பியாசம்.

இவ்வாறு மேற்சொல்லப்பட்ட மூன்று சாதனைகளை நன்கு அனுசரிப்பவன் மேன்மையுறுவான். மோக்ஷம் (பிரம்ம நிர்வாணம்) அவர்களைச் சுற்றி ஒளிரும். அவர்கள் உண்மையில் மோக்ஷசொரூபம் உடையவர்களே. பிரம்ம சொரூபமேயாவர். மோக்ஷம் எங்கோ ஆகாசத்திலோ, பாதாளத்திலோ இருக்கிறது என நினைப்பவரது ஐயத்தினை இச்சுலோகத்தினால் பகவான் தீர்த்து வைத்து நிர்மலமான சித்தத்தையுடையவனிடத்தே மோக்ஷம் எப்போதும் ஒளி தந்து கொண்டே இருக்கும் என்கிறார்.

**வினா:**

பிரம்ம நிர்வாணத்தை எவர் அடையக்கூடும்?

**விடை:**

(1) காமக் குரோதங்களை அழித்தவர். (2) சித்தம் நிலையாக தன்வயப்படுத்தியவர். (3) ஆன்மாவை அறிந்தவர் - இவர்கள் மாத்திரமே அடைய முடியும்.

**வினா:**

மோட்ச நிலையை சோம்பேறிகள் அடையக்கூடுமா?

**விடை:**

முடியாது. முயற்சி செய்தால்மட்டுமே அடையமுடியும்.

**வினா:**

மோக்ஷம் எங்குளது?

மேற்சொல்லப்பட்ட நற்குணங்கள், இலட்சணங்களை உடையவர்கள் எங்கு இருக்கின்றனரோ, அவர்களைச் சுற்றி மோக்ஷம் இருக்கும். எனவே மோட்சத்திற்காக இன்னுமொரு இடத்திற்குச் செல்லவேண்டியதில்லை. தன் சித்தத்தைத் தூய்மையாக்கிக் கொண்டால் மோட்சம் நம்மிடத்திற்கே வந்து சேரும்.

**முன்னுரை:**

*அடுத்து தியான நிலையை விவரித்து அந்நிலையில் இருப்பவர் முக்தர்களே என்கின்றார்.*

**27. ஸ்பர்சான் க்ருத்வா பஹிர்பாஹ்யாம்ஸ் சக்ஷுஸ்சை வாந்தரே ப்ருவோஹோ|**
**ப்ராணாபானௌ ஸமௌ க்ருத்வா நாஸாப்யந்தரசாரிணௌ|| (27)**

**28. யதேந்த்ரியமனோபுத்திர் முனிர்மோக்ஷபராயண|**
**விகதேச்சாபயக்ரோதோ யஹ் ஸதாமுக்தஏவஸஹ|| (28)**

**சொற்பொருள்:**

*யஹ* - எவனொருவன், *பாஹ்யான் ஸ்பர்சான்* - வெளி விஷயங்களான சப்தஸ்பர்சாதி விஷயங்களை, *பஹிஹ் க்ருத்வா* - வெளியிலேயே தள்ளி நிறுத்தி, *சக்ஷுஹு* - கண்களை (பார்வையை), *ப்ருவோஹோ அந்தரே ஏவ* - இரு புருவங்களுக்கும் இடையில், (*க்ருத்வா* - நிறுத்தி), *நாஸா அப்யந்தர சாரிணௌ* - நாசியின் வழியாக சஞ்சரிக்கின்ற, *ப்ராணாபானௌ* - பிராணஅபான வாயுக்களை, *ஸமௌ க்ருத்வா* - சமப்படுத்தி, *யதேந்திரிய மனோபுத்திஹி* - கட்டுப் படுத்தப்பட்ட இந்திரிய, மனம், புத்தி இவைகளை யுடையவனாய், *விகத இச்சா பயக்ரோதஹ* - இச்சை பயம், குரோதம் இவைகளை விட்டவனாய், *மோக்ஷ பராயணஹ* - முக்தியைக் குறிக்கோளாகக் கொண்டவனாய், *முனிஹி* - (ஆத்ம) மனை சீலனாய்) (*வர்த்ததே* - இருக்கிறானோ),

ஸஹ - அவன், ஸதா - எப்போதும், முக்தஹ ஏவ - முக்தனேயாவான்.

**கருத்துரை:**

எவனொருவன் வெளியில் உள்ள சப்தஸ்பர்சாதி விஷயங்களை, வெளியிலேயே நிறுத்தி, (உள்ளே நுழையவிடாமல் தடுத்து), கண்களை புருவங்களுக்கிடையில் நிறுத்தி, மூக்கில் இயங்கும் பிராண, அபான வாயுக்களை சமப்படுத்தி, இந்திரியங்கள், மனம், புத்தி இவைகளையடக்கி, ஆசை, அச்சம், சினம் இவைகளை விட்டு, மோக்ஷத்தை நாடியிருப்பவனாய், (ஆத்ம) மனன சீலனாய் இருக்கின்றானோ. அத்தகையோன் எப்போதும் முக்தனேயாவான்.

**விளக்கம்:**

'ஸ்பர்சான் க்ருத்வா பஹிர் பாஹ்யான்' - சப்தாதி விஷயங்களின் இருப்பிடம் வெளியுலகம். ஜீவனின் உள்ளிடமான இதயத்தில் நுழைவதற்கு அவற்றிற்கு என்ன உரிமை இருக்கிறது? என்பதை விவேகி ஆலோசித்து 'அவை எங்கிருக்கிறதோ அங்கேயே இருப்பதாக' என்று நிச்சயித்துக் கொண்டு, வெளி விஷயங்களை உள்ளே நுழையவிடாமல். தடுத்து, ஒருவேளை அவ்வாறு நுழைந்துவிட்டாலும் முயற்சியால் வெளியில் தள்ளிவிடுவான். விவேக மற்றவனோ அவற்றை அதன் இச்சைப்படி உள்நுழையவிடுவான். அதன் பலனாய் விஷயங்களில் ஈடுபட்டு, சம்சார பந்தத்தில் விழுந்துவிடுவான். எனவே விவேகியானவன் இந்திரியம், மனம் முதலான வாயில்களில் காப்பாளானை ஏற்படுத்தி (உள்ளே நுழைவு இல்லை (No Admission) - என்று விஷயங்களை கட்டளையிட்டு, காட்சிப் பொருளான வேற்று தேசத்தில் இருக்கும் இந்திரியார்த்தங்களை இதய சாம்ராஜ்யத்தின் உள் நுழையவிடாமல் எப்போதும் எச்சரிக்கையாக இருப்பான்.

"சக்ஷு" சைவாந்தரே ப்ருவோஹோ" - இவ்வாறாக சப்தாதி விஷயங்களை ஒதுக்கி, தியான நிட்டையில் இருப்போன் நோக்கை இரு புருவங்களின் மத்தியில் நிறுத்துவான். இதனையே 'கேசகீமுத்திரை' என்பர். தியானம் செய்வோனது

கண்கள் திறந்து இருப்பினும் சுற்றியுள்ள பொருள்களை காண்பதில்லையாதலால் சித்தம் சலனம் ஏற்படும். கண்கள் மூடியிருப்பின் (தாமத குணத்தில்) நித்திரையில் மூழ்கிவிடக்கூடும். எனவே அவன் இரண்டிற்கும் இடையிலுள்ள வழியைப் பின்பற்றி கண்கள் மூடியவண்ணம் புருவங்களின் மத்தியில் கண்களை நிறுத்தி தியானிப்பான். புருவங்களின் மத்தியில் ஆக்ஞா சக்கரம் இருக்கின்றது. கண்களுக்கு மிக அருகில் இருப்பதால் புருவங்களின் மத்தியில் பார்வையைச் செலுத்தி தியானித்தல் சாதகர்களுக்கு மிக அனுகூலமானது. ஆயினும் சிலர் நாசியின் நுனியில், சிலர் இதயத்தில், இன்னும் சிலர் ஸஹஸ்ராரத்தினுள் கூட பார்வையைச் செலுத்தி தியானிப்பர். எவருக்கு எது அனுகூலமோ அவ்வாறு செய்யக் கூடும். சித்தம் வெளியில் சிதறவிடாமல் செய்வதே மிகவும் அவசியம்.

“ப்ராணாபானௌ ஸமௌக்ருத்வா” - சாதாரணமாக மக்கள் பிராண, அபான வாயுக்களை சமமாக வெளிப்படுத்துவர். பிராணயாமப் பயிற்சியினால் அவற்றை முறையாக வெளிப்படுமாறு செய்தல், உடல் ஆரோக்கியத்திற்கு, சித்தம் ஒருமுனைப்படுவதற்கு மிகவும் தேவையானது. எனவேதான் பிராணயாமம் என்பது அஷ்டாங்க யோகத்தில் ஒரு பகுதியாகச் சேர்க்கப்பட்டுள்ளது. பிராண வாயுவிற்கும், மனதிற்கும் மிகவும் நெருங்கிய தொடர்புள்ளது. ஒன்றை ஒதுக்கினால் இன்னுமொன்றும் தானே ஒதுங்கிவிடும். எனவே மிகவும் சூட்சுமமான மனதை கட்டுப்படுத்துவதற்கு உதவியாக பிராணாயாமத்தை சாஸ்திரங்கள் விதித்துள்ளன. பிராண, அபான வாயுக்களைச் சமமாக வழிப்படுத்துவதனால் மனமும் சபலமனைத்தையும் விடுத்து ஒருமுனைப்படுகிறது.

“யதேந்திரியமனோபுத்திஹி” - இந்திரியங்கள், மனம், புத்தி - இவையனைத்தையும் சாதகன் தன் கட்டுக்குள் வைத்திருத்தல் வேண்டும். அவை சொன்னபடி தான் ஆடுதல் கூடாது. தான் சொன்னபடி அவைகேட்குமாறு வைத்திருத்தல் வேண்டும். இதுவே இந்திரியக் கட்டுப்பாடு. அஞ்ஞானி அவற்றிற்கு தான்

அடிமையாகிவிடுகிறான். ஞானி அவற்றைக் கட்டுப்படுத்தி தன் வயத்தில் வைத்திருக்கிறான். உண்மையில் அவை யாவற்றிற்கும் மேலான ஆத்மாவே தானென்றும், அவற்றிற்குக் கட்டுப்பட்டவன் அல்லன் என்றும் அவன் உணர்கிறான். இவ்வுண்மையை அறிந்து, பயிற்சி, வைராக்கியம், விசாரணை இவற்றால் இந்திரியங்கள், மனம் இவற்றை தன்வசப்படுத்திக் கொள்ள வேண்டும்.

'மோக்ஷ பராயணஹ' - அஞ்ஞானிகள் போகங்களின் மீது மோகம் கொள்வர். முமுக்ஷுக்கள் மோக்ஷத்தின் மீது மோகம் கொள்வர். அதனையே எண்ணியிருப்பர். கைவல்யம் அடைவதற்கு தீவிரமான முமுக்ஷுத்வம் மிகமிகத் தேவை. மோக்ஷத்திற்காக, தாபம் கொள்வோனுக்கு பரிதவிப்போனுக்கு மோக்ஷலக்ஷ்மி வந்தடைவாள். எப்போது நான் பந்தங்களின்றும் விடுபடுவேன், எப்போது பிறப்பிறப்பற்ற நிலையான பெருவாழ்வு எனக்குக் கிடைக்கும்?, என்று பரிதவிப்போனுக்கு முக்தி அருகிலேயே இருக்கின்றது இறைவனின் தரிசனம் கிடைக்கவில்லையே என்று இரவும் பகலும் கண்ணீர் பெருக்கிய வண்ணம் ஏங்கும் எப்போதும் தெய்வசிந்தனையுடன் இருந்த மகான்களைப் பற்றிய சரித்திரம் பலவும் நாம் அறிவோம் அல்லவா? அவர்களே மோக்ஷத்தை விரும்புவோர். அத்தகையோர் முக்தி சாதனைகளை மிகவும் சிரத்தையுடனும், அக்கறையுடனும் பின்பற்றி வருவர்.

"விகத இச்சா பயக்ரோதஹ" - காமம் முதலான துராசைகளை ஒதுக்குதலைக் குறித்து இதுவரை பலமுறை பகவான் எச்சரித்துள்ளார். இனியும் பலமுறை வரப்போகும் அத்தியாயங்களிலும் கூறப்போகின்றார். அவை மாசின்மைக்கு, இதயத்தூய்மைக்கு, ஆத்ம ஞானமேற் படுவதற்கு மிகமிக அவசியமாதலால் பலமுறை அவற்றைக் கூறுகின்றார். காமம், குரோதம், பயம் - இம்மூன்றும் துர்குணங்களுள் தலைமையானவை. தலைவர்களை வென்றுவிட்டால் ஏனையோர் மிகவிரைவில் சரணடைந்து விடுவர். இம்மூன்று குணங்களும் இதயத்தை விட்டுச் சென்றுவிட்டால், பாசி இல்லாத குளத்தைப்போன்று,

மசிதுடைக்கப்பட்ட சிம்னி விளக்கைப் போன்று இதயம் மாசற்று ஒளிரும். நிர்மல ஹ்ருத முனிஹி - மனன சீலர்களாய் இருப்போர்.

'ஸதாமுக்தஹ' - என்றதால் மேற்சொன்ன நற்குணங்களினால் ஒளிர்வோன், எப்போதும் முக்தனேயாவான் என்பது பொருள். மோக்ஷத்திற்காக வேறோர் உலகத்திற்கு போகவேண்டிய தேவையில்லை. வேறோர் தேகத்தினை எடுக்கத் தேவையில்லை. எப்போது கிடைக்கும் என்று மனக்கவலைப்படத் தேவையில்லை. இச்சாதனைகளைப் பயின்று தேறிய மறுகணமே மனிதன் முக்தனாகிறான் என்று பகவான் இங்கு அபயமளிக்கிறார்.

**வினா:**

மோக்ஷமடைவதற்கான வழியென்ன?

**விடை:**

(1) சப்தாதி விஷயத்தியாகம் (2) ஒருமுனைப்பட்ட தியானம் (3) பிராணாயாமம் (4) இந்திரிய, மனோ, புத்திகளைக் கட்டுப்படுத்துதல் (5) மனன சீலத்வம் (6) மோக்ஷத்திற்காக ஏங்குதல், சிந்தித்திருத்தல் (7) காமம், குரோதம், பயம் இவை இன்மை.

**முன்னுரை:**

மோக்ஷமடைவதற்கு பக்தி மார்க்கம் என்று எளிய வழியைப் பற்றிக் கூறுகிறார்.

**29. போக்தாரம் யக்ஞதபஸாம் ஸர்வலோகமஹேச்வரம்।**
**ஸுஹ்ருதம் ஸர்வபூதானாம் ஞாத்வா மாம் சாந்திம்ருச்சதி॥ (29)**

**சொற்பொருள்:**

யக்ஞதபஸாம் - யக்ஞம், தவம் இவைகளுக்கு, போக்தாரம் - போக்தா (அனுபவிப்பவன்) என்றும், ஸர்வலோக மஹேச்வரம் - எல்லா உலகங்களுக்கும் ஈசுவரன் என்றும் (நியமனன், தலைவன்), ஸர்வபூதானாம் - எல்லா

உயிர்களினுடைய; ஸுஹ்ருதம் - பலனை எதிர்பாராது நன்மையைக் கோருபவன் என்றும், மாம் - என்னை, ஞாத்வா - அறிந்து (மனிதன்), சாந்திம் - சாந்தியை, ருச்சதி - அடைகிறான்.

**கருத்துரை:**

யக்ஞம், தவம் இவைகளின் பலனை அனுபவிப்பவன் என்றும், எல்லா உலகங்ளுக்கும் ஈசுவரன் (தலைவன், ஆள்பவன்) என்றும், எல்லா உயிர்களின் நன்மையைக் கோருபவன் என்றும் என்னை அறிந்த மனிதன் சாந்தியை அடைகிறான்.

**விளக்கம்:**

சாந்தியையடைவது எங்ஙனம்? துக்க நிவாரணத்துடன் கூடிய பரமசாந்தியின் உருவான மோக்ஷம் எவ்வாறு சித்திக்கும்? என்ற வினாக்களுக்கு இங்கு விடையளிக்கப் படுகிறது. எவனொருவன், பகவானை (ஆத்மாவை) அறிகிறானோ, அவனே சாந்தியைப் பெறுகிறான் எனப்பட்டது. அப்படியாயின் அவ்விறைவன் எத்தகையோன்? அவனது இலட்சணங்கள் இங்கு சில சொல்லப்பட்டுள்ளன - (1) எல்லா யக்ஞங்களின், தவங்களின் பலனையும் அனுபவிப்பவன். பரமாத்மா இச்சராசரமனைத்தும் உள்ள எல்லா உயிர்களிடத்தும் வியாபித்திருப்பதால், எல்லா புண்யகாரியங்களின், தர்ம காரியங்களின் கர்த்தாவாகவும், பலனை அனுபவிக்கும் போக்தாவாகவும் அவனே ஆகிறான். (2) மேலும் அவன் எல்லாவுலகத்திற்கும் தலைவன். ஆள்பவன், நியமனன். எல்லா உலகத்திற்கும் தலைவன். அவன் 'ஈசுவரன்' மட்டுமல்லன் - 'மஹேஸ்வரன்' அவனுக்கும் மேலானவன் இன்னொருவன் இல்லை. (3) இவ்வாறு எல்லா உலகிற்கும் நியமனனாக இருப்பினும் அவனது இதயம் மிகமிக கனிவானது. ஏனெனில், எல்லா உயிர்களுக்கும் அவன் மிக நெருங்கிய நண்பன்; உதவியாளன், நன்மையையே நாடுபவன் 'ஸுஹ்ருத்' - (பலனை எதிர்பாராத நல்லிதயம் கொண்டவனை

'ஸுஹ்ருத்' என்பர்) "ஸர்வபூதானாம்" என்றதால் ஒருவருக்கல்ல, சிலருக்கேயல்ல எல்லா உயிர்களின் நன்மையையும் நாடும், அதற்காகவே உறுதிபூண்டவன் என்பது பொருள். ஜீவர்களை சம்சார துக்கத்தினின்றும் விலக்கி, மேன்மையைச் செய்வதற்காக இந்த கீதா ஞானத்தை இவ்வுலகிற்கு அளித்தமையே அவனது வாத்ஸல்யத்திற்கு, பலனை எதிர்பாராத குணத்திற்கு உதாரணம். மேலும் வேத சாஸ்திரங்களை ஏற்படுத்தி. மக்களுக்கு பேருபகாரத்தைச் செய்துள்ளார். 'தேஷாமஹம் சமுத்ததரா' என்பதைப் போல் பக்தர்களைக் காப்பதற்காக அவர் எப்போதும் தயாராக உள்ளார். இத் தேகத்தினையோ இவ்வுலகினையோ அவன் படைத்துக் காக்கும் தன்மையை நன்கு நாம் அலசி, ஆராய்நது, உணர்வோமாயின் அவனது தயை, காருண்யகுணம் நன்கு புலப்படும். இத்தகைய இலட்சணங்களையுடையவன் பரமாத்மா என்று இங்கு தெரிவிக்கப்பட்டது.

இறைவனின் மகிமையை இவ்வாறு உணர்பவன், எப்போதும் அவனையே தியானித்த வண்ணம், பக்தியுடன் சேவித்த வண்ணம் இருப்பான் ஆதலால் அதன் பலனாய் அவன் பரமசாந்தியை யடைவான். 'தேஷாம் சாந்தி சாஸ்வதீ நேதரேஷாம்' - அவ்விறைவனையுணர்ந்தவர்க்கே நிலையான சாந்தி கிடைக்குமென்றும், ஏனையோர்க்கில்லை யென்றும் உபநிஷத்துக்கள் கூறுகின்றன. ஒவ்வொருவரும் சாந்தியையும், சுகத்தையுமே நாடுகின்றனர். அத்தகைய சாந்தியைப் பெறுவதற்கு ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா இங்கு நல்ல வழியினைக் காட்டியுள்ளார். அவற்றை நன்கு கிரகித்து, அதாவது இறை தத்துவத்தை நன்குணர்ந்து ஒவ்வொருவரும் சாந்தியை பெறுதல் வேண்டும். பரமாத்மா எல்லா உலகங்களுக்கும் தலைவன் எனவறிந்து அவனை தியானிப்பதே ராஜமார்க்கம். பக்தியே சாந்திக்கு வழி. 'ஞாத்வா' என்றதால் முதலில் இறைவனின் பல உருவங்களையும், இறை தத்துவத்தையும் நன்கறிந்து கொள்ளுதல் வேண்டும் என்பது பொருள். அப்போதே (த்யேய) தேயப் பொருளான பரமாத்மாவிடம் பக்தி ஏற்படும். ஒரு பொருளைப் பற்றி நன்கு அறிந்தாலொழிய அதன்மீது நம்பிக்கை ஏற்படாதல்லவா?

சாதாரணமாக, உலகில் ஒரு சிறிய அதிகாரி தன் கிராமத்திற்கு வரநேரிட்டால் மக்கள் அவனுக்கு எத்தகைய வரவேற்பு அளித்து கௌரவிக்கிறார்கள். ஒரு அரசன் வந்தால் இன்னும் அதிகமான மரியாதைகள் காட்டுவர். ஆயின் அரசனுக்கெல்லாம் அரசனான, பேரரசனுக்கும் பேரரசனான, பிரம்மாண்டமனைத்திற்கும் நியமனன் தலைவனான ஸர்வேசுவரன் அருகில் இருக்கும்போது கூட சிலர் அவன்மீது நம்பிக்கை இல்லாமல் இருப்பது மிகவும் வருந்தத் தக்க விஷயம். இத்தகைய தெய்வ நம்பிக்கையின்மையே ஜீவனின் அழிவிற்கு, மனச்சாந்தியின்மைக்குக் காரணம். எனவே இறைவனின் மகிமைகளையறிந்து பக்தியுடன் அவனை எப்போதும் சேவித்து வருவதே, தியானித்து வருவதே சாந்திக்கும், சுகத்திற்கும் பிறவியற்ற பெருவாழ்விற்கும் ஒரே வழி. இவ்வுண்மையையே இச்சுலோகம் நிரூபிக்கின்றது.

இதுவரை இவ்வத்தியாயத்தில் இந்திரியக் கட்டுப்பாடு, தத்வ விசாரணை முதலான பல சாதனைகள், முதலானவை சொல்லப்பட்டாலும், அத்தியாயத்தின் இறுதியில் பக்தி மார்க்கத்தை உபதேசிப்பதால், ஒவ்வொருவரும் மிகவும் எளிய வழியான அப்பக்தி மார்க்கத்தையே முதன்முதலில் கடைபிடித்து. பரமசாந்தியை அடையக்கூடும் என்பது தெளிவாகின்றது.

**வினா:**

சாந்தியினை அடைவதற்கான வழியென்ன?

**விடை:**

இறைவனின் சொரூபத்தை நன்கு அறிந்து, பக்தியுடன் அவனை ஆராதித்து வருதலே தியானித்தலே சாந்திக்கு வழி.

**வினா:**

இறைவனின் சொரூபம் எத்தகையது? அவன் எத்தகையோன்?

**விடை:**

*அவன் (1) எல்லா யக்ஞங்களின், தவங்களின் பலனை அனுபவிப்பவன். (2) எல்லா உலகிற்கும் தலைவன், நியமனன். (3) எல்லா உயிர்களின் நண்பன், நன்மையை நாடுபவன்.*

**ஓம்**

**இதி ஸ்ரீமத் பகவத்கீதாஸூபநிஷத்ஸு**

**ப்ரஹ்மவித்யாயாம் யோகசாஸ்த்ரே**

**ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதே ஸந்யாஸ**

**யோகோ நாம பஞ்சமோ அத்யாயஹ||**

*இது பகவத் கீதையெனும் உபநிஷத்தின் கண், பிரம்மவித்தையைப் புகட்டுவதும், யோக சாஸ்திரமானதும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமாக வந்துள்ளதுமாகிய 'ஸந்யாஸயோகம்' என்ற ஐந்தாம் அத்தியாயம்.*

**ஓம் தத் ஸத்**

